ஓம்

ஓம் தத் ஸத்

ஸ்ரீ சங்கரபாஷ்யத்தின் ஸாராம்சங்களடங்கிய

# த்வாதசோபநிஷத்



தமிழ் மொழிபெயர்ப்பு

---

நா. சு. ராஜாராமையர்

---

கலைமகள் ஆபீஸ்,
மயிலாப்பூர், சென்னை.

ஓம்

# முகவுரை

---

ஸுக துக்கங்களின் பற்றிலிருந்து விடுபடுதல் முக்தி. இஃது உண்மை யறிவினுல் கைகூடும். 'உண்மை யறிவு' என்பதும், 'பிரம்ம வித்யை' என்பதும் ஒரே பொருள்படும். பிரம்மம் உண்மை, வித்யை யென்பது அறிவு. இந்த அறிவுக்கிடமாகிய நூல்கள் அனைத்திலும் நம் நான்கு வேதங்களிலுள்ள உபநிஷத்துக்கள் சிறந்தவை. இதுபற்றியே இவை வேதங்களின் 'ஞானகாண்டம்' எனப்படும்.

இவ்வுபநிஷத்துக்கள் நூற்றெட்டிருந்தாலும், இவற்றுள் பன்னிரண்டைத் தலைமையாகப் பெரியோர் கொண்டிருக்கின்றனர். மேற்கூறிய பிரம்மவித்யையை அடைய இப்பன்னிரண்டைப் போன்ற ஸாதனம் இஹலோகத்திலே வேறில்லை. மேலும் அத்வைத ஸித்தாந்தத்தை நிலைநிறுத்திய ஸ்ரீசங்கரபகவத் பூஜ்ய பாதரும் இப்பன்னிரண்டுக்குத் தான் பாஷ்யம் செய்தருளி யிருக்கின்முர்.

ஸம்ஸ்க்ருத பாஷையின் பயிற்சி இக்காலத்தில் மிகவும் மலினமாய்விட்டது. இதனுல், நம்மவர்களுக்கு இந்நூலினிடத்தே அளவிறந்த பக்தி விச்வாஸமிருந்தபோதிலும், இதன் ஆராய்ச்சி மிகவுங் குறைந்துபோயிருக்கின்றது. பிரம்மவித்யைக்கு ஊன்றுகோலாகிய இந்நூல் நம்மவர்களுக்குப் பயன்படவேண்டுமென்ற கருத்துக்கொண்டே காலஞ்சென்ற என் பிதா செய்திருந்த இவ்வுபநிஷத்துக்களின் மொழிபெயர்ப்பைச் சுத்தப்படுத்திப் பிரசுரிக்கத் துணிந்தேன்.

அடியில் அச்சிட்டிருக்கும், ஸ்ரீகாஞ்சீ காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீசங்கராசார்யர் அவர்களால் எனக்கு ஆசீர்வாதத்துடன் கொடுக்கப்பட்டிருக்கும் ச்லாகா பத்திரத்தால், இம்மொழி

பெயர்ப்பின் வரலாறும், உபயோகமும் பிழையின்றித் தெளிவாக முதநூலின் கருத்துக்கு முற்றிலும் ஒத்திருப்பதும் நன்கு விளங்கும்.

இவற்றை ஸாதாரண வழக்கின்படி, ஈச, கேந, கட, ப்ரச்ன முதலாக வெளியிடாமல், ரிக், யஜுஸ், ஸாம, அதர்வண என்ற நான்கு வேதங்களின் கிரமப்படி அவ்வவ் வேதங்களைச் சேர்ந்த உபநிஷத்துக்களைச் சேர்த்து வெளியிடப்பட்டிருக்கிறது. மொழி பெயர்ப்புக்கிடையே ஸ்ரீ சங்கரபாஷ்யத்தின் ஸாரங்களை ( ) இவ்விதமான இரட்டைவளைவுக்கு நடுவிலும், அவரது தாத்பர்யா திகளைச் சிறு எழுத்திலும் அச்சிட்டிருக்கிறது.

இவைகளில் முதல் நான்கு உபநிஷத்களையும் சேர்த்து, முதல் பதிப்பாக அச்சடித்த 500 ப்ரதிகளும், ஸ்ரீமான் பெத்தாச்சி செட்டியார் உதவியால் இரண்டாம் பதிப்பாக, முதல் ஐந்து உபநிஷத்துக்களைத் தனித்தனியாக அச்சடித்த 1000 ப்ரதி களும், நம் சக்ரவர்த்தி டில்லி பட்டாபிஷேக சின்னமாய் முமுக்ஷுக்களுக்கு இனமாகக் கொடுக்கப்பட்டன.

இப்பொழுது பன்னிரண்டு உபநிஷத்துக்களையும் சேர்த்து வெளியிடுகிறேன்.

சிதம்பரம்,<br>18-10-1913.

என். எஸ். ராஜாராம்

# பொருளடக்கம்

—— ;o; ——

ஸ்ரீ ஜகத்குரு காஞ்சிகாமகோடி பீடாதிபதி

ஸ்ரீசங்கராசார்யர் அவர்கள் அருளிய

# ச்லாகா பத்திரிகை

---

ஸ்ரீசந்திரமௌளீச்வராய நம:

ஸ்ரீமத் பரம ஹம்ஸ பவ்ராஜகாசார்யவர்யரும், ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதிகளும், ஜகத்குருவுமான, ஸ்ரீமத் சங்கர பகவத்பாதாசார்யர்களுடைய அதிஷ்டானமான ஸிம்ஹாஸநத்தி னில் அபிஷேகம் பெற்ற ஸ்ரீமத்மஹாதேவஸரஸ்வதீஸம்யமீந்திரர் களுடைய சிஷ்யவர்யரான ஸ்ரீமத் சந்திரசேகர ஸரஸ்வதீ ஸ்ரீபாதர் களால், ஸமஸ்த கல்யாண குணங்களால் அலங்கரிக்கப்பட்டவரும், வேதோக்தமான ஆசாரத்தில் ஆழ்ந்தவரும், ஸ்ரீஸாம்பசிவ சரணாரவிந்தங்களை ஆராதிப்பதில் லக்ஷ்மீ கடாக்ஷ வீக்ஷணத்தை யடைந்து அலங்கரிக்கப்பட்டவரும், நம் பிரிய சிஷ்யருமான ராஜாராம சர்மாவிற்கு நாராயண ஸ்மரணபூர்வமாக அநுக்ரஹிக் கப்பட்ட

## ச்லாகா பத்திரிகை

நம் முக்ய பிரிய சிஷ்யரான நாகப்பட்டணம் வக்கீல் என். பி. ஸுப்ரஹ்மண்ய சர்மா, ஞானம், பக்தி, வைராக்யம் முதலிய ஸத்குண ஸம்பன்னராய், நம் பூர்வாசார்யர்களும், அத்வைதம் முதலிய ஷண்மத ப்ரவர்த்தகர்களும், ஸாக்ஷாத் ஸ்ரீமத் இந்து சேகரருடைய அவதாரபூதர்களுமான ஸ்ரீமத் சங்கரபகவத்பாதர் களுடைய மதத்தை அவலம்பித்து, ஸதாசார்யமுகமாய், விதிப் படி, உபநிஷத், பிரம்மஸூத்ரம், கீதை என்ற ப்ரஸ்தானத்ரயத்தை காலக்ஷேபஞ்செய்து, தன் ச்ரத்தையாலும், ஞானத்தாலும், முயற்சியாலும் அடைந்த இந்த அத்வைத சாஸ்திர ஞானத்தை, ச்ரத்தையுள்ள மற்றவர்களும் அடையவேண்டுமென்ற கருத்துடன் வேதாந்த சாஸ்திரங்களை திராவிட பாஷையில் (தமிழில்) மொழி பெயர்த்தார்.

அவருடைய புத்ரரான என். எஸ். ராஜாராம சர்மா, அவை
களில் ஐதரேயம், தைத்திரீயம், கடம், சுவேதாசுவதரம், ஈசம்,
என்ற ஐந்து உபநிஷத்துக்களை, வெகு ரமணீயமாய் அச்சிட்டு
லௌகிக ப்ரயோஜனத்தை உத்தேசிக்காமல் 1500 ப்ரதிகளை
வித்வான்களுக்கும், வித்யார்த்திகளுக்கும் கொடுத்திருக்கிறார்;
இன்னும் கொடுக்க உத்தேசித்திருக்கிறார்.

மேலும், ஆங்கிலேய மஹாராஜனும், ஆர்யவர்த்த ஸார்வ
பௌமரும், நம்மால் எப்பொழுதும் அவருடைய க்ஷேமலாபத்
தைக் கோரப்பட்டவரும், ஆஸ்திக மதத்தை ரக்ஷிப்பதில் கீர்த்தி
பெற்றவருமான ஸ்ரீமான் ஜார்ஜ் பூபாலர், தம் சக்ரவர்த்தினி
யுடன் ஹஸ்தினபுரியில் பட்டாபிஷேக மஹோற்சவம் பெற்ற
பொழுது, விஞ்ஞாபனஞ் செய்யப்பெற்று, ராஜாராம சர்மாவின்
லோகோபகாரார்த்தமான ப்ரயத்னத்தை பஹுமானத்துடன்
அங்கீகரித்து, அந்த விஷயத்தில் தனக்குண்டான ப்ரீதியை வெளி
யிடும் ஒரு ச்லாகா பத்திரிகையை அவருக்கு அனுப்பினார்.

ஒப்பாரும் மிக்காருமில்லாத நமது சக்ரவர்த்தி யிடத்திலி
ருந்து கிடைத்த பத்திரிகை நம்மால் பார்க்கப்பட்டது. இப்படி
உபநிஷத் முதலிய வேதாந்தக்ரந்தங்களை மூலத்திற்கிணங்க வெகு
அழகான தமிழ் நடையில் மொழிபெயர்த்திருப்பது, அத்வைத
மதவிவரங்களை அறிய விரும்புவோர்களுக்கு அத்யந்தம் உபகார
மாயிருக்குமென்றும், நமது ஆர்யமத ஸித்தாந்தத்திற்கு ஸநாதன
மான நிதியும், ஸமஸ்த ஜனங்களுக்கும் பரமபுருஷார்த்தங்களைக்
கொடுக்கக்கூடியதுமான ஸ்ரீமத் பிரம்மவித்யையை உபதேசிக்கும்
உத்தம கிரந்தங்களை விதிப்படி ஸதாசார்யமுகாய் காலக்ஷேபம்
செய்வதில் இதைப் படிக்கும் ஆஸ்திகர்களுக்கு தீவ்ரமான விருப்
பத்தை உண்டாக்குமென்றும் அபிப்பிராயப்படுகிறோம்.

ஆகையால் நமக்கு பரமஸம்மதமான இந்தக் காரியத்தில்
ப்ரவிருத்தித்திருக்கும் இவரை ஆஸ்திக சிரோமணிகளும், நமது
சிஷ்யவர்க்கங்களும் யதாசக்தி ஆதரிக்கவேண்டுமென்று

முகாம்
மஹேந்திரமங்கலம்,
19-6-12.

நாராயண ஸ்மிருதி:

மஹாமஹோபாத்யாயர்

# ரா. சந்திரசேகர சாஸ்திரிகள்

ப்ரதான அத்யாபகர்

ஸம்ஸ்கிருத கலாசாலை, மயிலாப்பூர்

———

"ஸம்ஸ்கிருத பாஷையில் திறமையுள்ளவர்கள் எங்கேயோ ஆயிரத்தில் ஒருவர் இருக்கிறார். அப்படியிருக்கையில் உபநிஷத்துக்களில் உபதேசிக்கப்படும் விஷயங்களை விசாரிக்கத்தகுந்த அதிகாரி கிடையவே கிடையாதென்று ஆலோசித்து, ராஜாராம சர்மா, பண்டிதர்களின் பூர்ண ஸஹாயத்தை யடைந்து வேதத்தில் உபதேசிக்கப்படும் அர்த்தத்தை யறிய விரும்புவோரின் ஸௌகர்யத்திற்காக ஸ்ரீ சங்கர பகவத்பாதர்களால் வெளியிடப்பட்ட உபநிஷத்தின் கருத்தை ஸுலபமான தமிழ்நடையில் மொழிபெயர்த்து அச்சிடுகிறார். இதைப் படிப்பவர்களுக்கு ஸம்ஸ்கிருத பாஷா ஞானமில்லாமலே வேதாந்தார்த்தங்களெல்லாம் நன்றாய்ப் புலப்படும். இதில் ஸந்தேஹமில்லை யென்று சந்திரசேகர சாஸ்திரீ தன் ஸம்மதியைத் தெரிவிக்கிறார்."

1-2-1913.

ஓம்

ஓம் தத் ஸத்

ருக்வேதீய

# ஐதரேயோபநிஷத்

---

## சாந்தி

(இனிச் சொல்லப்படப்போகிற ப்ரம்மவித்யா ப்ராப்திக்கு இடையூறு நேராவண்ணம் சாந்தி சொல்லப்படுகிறது)

என்னுடைய (இவ் வுபநிஷத்தைப் படிக்கும் விஷயத்தில் பிரவர்த்தித்த) வாக் எக்காலத்திலும் மனதில் ஸ்திரமாக விருக்கட்டும்; என் மனதும் வாக்கில் ஸ்திதியை அடைகின்றது (வாக் மனங்கள் ஒன்றற்கொன்று உதவிபுரிய வேண்டுமென்று பிரார்த்திக்கப்படுகிறது). ஹே, ஜோதி ரூபமான பரமாத்மாவே! எனது அக்ஞானத்தைப் போக்கடித்து பிரகாசத்தை அடையும்படி செய்க. ஹே, மனோவாக்குகளே! எனக்குக் கீழ்ச்சொல்லிய பிரம்ம ஞானத்தை வெளியிடுங் கிரந்தத்தைத் தருவதற்கு ஸமர்த்தராகுங்கள். என்னால் கேட்கப்பட்ட கிரந்தம், அதனர்த்தம், இவைகளை நான் மறவாமலிருப்பேனாக; அத்தியயனஞ் செய்யப்பட்டு மறவாமலுமிருக்கிற கிரந்தத்தை நான் இரவும் பகலும் அநுஸந்தானஞ் செய்வேனாகுக. (படிக்கப்பட்ட கிரந்தத்தில்) யதார்த்தமான வஸ்துவை (பிரம்மத்தை) சொல்லப் போகின்றேன். நீரே ஸத்தியம் (மனதால் வாஸ்தவ பதார்த்தத்தை விசாரித்து வாக்கால் உண்மையைச் சொல்லுவேன்). மேற்கூறிய பிரம்மமானது என்னையும் எனக்கு உபதேசிக்கின்ற குருவையும் ரக்ஷிக்கட்டும்.

**ஸ்ரீ சங்கர பாஷ்யப் பிரதீக ஸங்கிரஹம்.**—இந்த ஐதரேயோபநிஷத் ருக்வேதத்தின் ஐதரேய ப்ராஹ்மணத்தினுடைய இரண்டாவது ஆரண்யகத்திலுள்ளது. இதன் முன்னே வெறுங் கர்மா மட்டுஞ் சொல்லப்பட்டு முடிந்தது.

"ஞானத்துடன் கூடிய கர்மாவுக்குப் பரமான கதி யாதெனில், அதுவும் பிரணவத்தை யறிவதுடன் முடிந்தது. பிராணனென்ற ஒரே தேவன் இருக்கின்றான்; அத்தேவனுக்கு வாக் முதலிய இந்திரியங்களாகின்ற தேவர்கள் விபூதிகளாம். விஸ்தாரங்களாம். ஒரு புருஷன் இந்தப் பிராணாத்மாவாக ஆகின்றான்; இவ்விதம் தேவதை யாகின்றதே புருஷார்த்தம். இதுதான் மோக்ஷம். ஞானத்துடன் கூடிய கர்மாவால் இதைவிட அதிகமாக ஒன்றுங் கிடைக்காது" என்று சிலர் கூறுங் கக்ஷியை மறுத்துக் கேவலமான ஆத்ம ஞானமே மோக்ஷ ஸாதனமென்று ஸாதிக்கும்பொருட்டு இந்த உபநிஷத் ஆரம்பிக்கப்படுகிறது. கர்ம ஸாதன மின்றிக் கேவல ஞானமட்டில் போதுமா வென்ற கக்ஷியை விஸ்தாரமாக எடுத்துப்பேசி, முடிவில் கேவல ஞானமே போதிய தென்று சித்தாந்தப்படுத்துவதற்காகவே இந்த உபநிஷத் சொல்லப்பட்டதென்று பிரதீகத்தில் கூறப்படுகிறது.

ஓம்

ஓம் தத்ஸத்

# ஐதரேயோபநிஷத்

## முதல் அத்தியாயம்

### கண்டம் I.

1. (நாம ரூபங்களாக விகாரப்பட்டுக் காணப்படுகின்ற) இந்த ஜகத்தானது, சிருஷ்டிக்கு முன் ஒரே ஆத்மாவாக இருந்தது. அவரை யன்றி வேறொன்று மில்லை; அந்த ஆத்மா லோகங்களைச் சிருஷ்டிப்போ மென்று ஆலோசித்தனர்.

2. அங்ஙனம் ஆலோசித்து இவ்வுலகங்களைச் சிருஷ்டித்தனர்; அவைகளாவன, அம்பஸ்: சுவர்க்கலோகமும், அதன் மேலுள்ள மஹஸ், ஜந, தபஸ், ஸத்ய முதலிய இந்த உலகங்களும்; மரீசி: சூரிய கிரணங்களால் வியாபிக்கப்பட்ட அந்தரிக்ஷ லோகம்; மரம்: ஜீவர்கள் நாசமுறும் பூமி, பூலோகம்; ஆபஸ்: ஜல ஸம்பந்தமான பூமிக்குக் கீழ்ப்பட்ட உலகங்கள். இந்த உலகங்களை, ஜலத்தைப் பிரதானமாகவுடைய பஞ்சபூதங்களைக் கொண்டு சிருஷ்டித்தனர்.

3. இப்பொழுது அவர் 'நம்மால் சிருஷ்டிக்கப்பட்ட உலகங்கள் பரிபாலிக்கப்படாவிடின் நாசமுறும். ஆதலால், லோக பாலர்களைச் சிருஷ்டிப்போ மென்று மீண்டும் ஆலோசித்தார். அங்ஙனம் யோசித்து, மேற்கூறிப் போந்த பஞ்சபூதங்களினின்றும் ஒரு புருஷாகாரமாகத் திரட்டி அதைப் பிண்டமாக ஆக்கினார்.

4. அப்பிண்டத்தைக் குறித்துச் சங்கற்பஞ் செய்தார். அதினின்றும் முகமுண்டாயிற்று, பக்ஷியின் முட்டைபோல், அம் முகத்தினின்று வாக் இந்திரியம் உண்டாயிற்று. அதினின்

றம் அக்நி தேவதை உற்பவித்தது. பிறகு நாசிகள் - அவைகளிலிருந்து க்ராணேந்திரியம் உண்டாயிற்று; அதினின்றும் எங்குமுள்ள வாயு தேவதை உண்டாயிற்று. பிறகு கண்கள் - அவைகளின்றும் சக்ஷுரிந்திரியம்; அதினின்றும் ஆதித்ய தேவதை. பிறகு காதுகள் - அவைகளினின்றும் சுரோத்திரேந்திரியம்; அதினின்றும் திக் தேவதை. பிறகு தோல் - அதினின்றும் லோமங்களாகிற ஸ்பர்சனேந்திரியம்; அதினின்றும் ஔஷதி முதலியவற்றிக்கு அதிஷ்டான தேவதையாகின்ற வாயு தேவதை. பிறகு அந்தக்கரணத்திற்கு அதிஷ்டானமாயிருக்கின்ற ஹிருதய கமலம் - அதினின்றும் மன இந்திரியம்; அதினின்றும் சந்திர தேவதை. பிறகு நாபி (கொப்பூழ்)-அதினின்றும் பாயுவிந்திரியம்; அதினின்றும் மிருத்யுதேவதை. பிறகு சிச்னம்-அதினின்றும் ரேதஸாகின்ற உபஸ்தேந்திரியம்; அதினின்றும் அப் தேவதை (வருணன்). இங்ஙனமாக லோகபாலர்களைச் சிருஷ்டித்தனர்.

---

## கண்டம் II.

1. இந்த (அக்நி முதலிய இந்திரிய) தேவதைகள் மகத்தான இந்த ஸம்ஸாரஸாகரத்தில் விழுந்தார்கள்; (ஸமுத்திர லக்ஷணம்-அவித்யா காம கர்ம இவைகளாலுண்டான துக்கமாகின்ற ஜலமுள்ளது; ரோகம், ஜரை, மரணம் முதலிய பெரிய முதலைகளால் சூழப்பட்டது; அநாதி; முடிவற்றது; கரையற்றது; பிடிப்பில்லாதது; விஷயேந்திரியங்களாலுண்டாகுஞ் ஸுகலேசத்தால் க்ஷணகாலம் ஆறுதலுள்ளது; ஐந்து இந்திரியங்கள் அர்த்தம், ஆசை இவையாகிற காற்றினலைக்கப்பட்டு எழுகின்ற அநேக அநர்த்தங்களாகின்ற அலைகளையுடையது; வியஸனத்தாலுண்டான ரோதனங்களாகிற பெருங் கூச்சலையுடையது; ஸத்தியம், நேர்மை, தானம், தயை, அஹிம்ஸை, தம, சம, திருதி முதலிய ஆத்ம குணங்களாகின்ற கட்டுச்சோறு நிறைந்த ஞானமாகின்ற ஓடத்தைக்கொண்டே கடக்கத் தக்கது. அக்கரை

சேர்வதற்கு ஸத்ஸங்கம், ஸர்வத்தியாகம் இவையாகும் மார்க்க முள்ளது ; மோக்ஷமாகின்ற அக்கரையுள்ளது).

அந்த ஆத்மாவானவர் மேற்கூறிய பிரகாரம் முதலில் சிருஷ்டிக்கப்பட்ட புருஷ பிண்டத்தைப் பசி தாகம் இவைகளுடன் சேர்த்துவைத்தனர். இதனால் மேற்படி பிண்டத்தினின்றும் வெளிப்பட்ட தேவதைகளுக்கும் பசி, தாகம் உண்டாயிற்று. அப்பொழுது நாங்கள் எவ்விடமிருந்து அன்னஞ் சாப்பிடுவோமோ அவ்விடத்தை எங்களுக்கு ஏற்படுத்த வேண்டுமென்று அத்தேவதைகள் பிரம்மத்தை நோக்கி வினவினார்கள்.

2. அதற்கு ஈசுவரன் பசுவின் உருவைப்போல் ஒரு பிண்டத்தைச் சிருஷ்டித்து இதில் இருங்களென்று காண்பித்தனர். தேவதைகள் இஃது எங்களுக்குப் போதியதல்லவென்று சொன்னார்கள். பிறகு ஒரு குதிரையைச் சிருஷ்டித்து அதைக் காண்பித்தனர். அதுவும் போதாதென்றார்கள்.

3 அதன் பிறகு ஒரு புருஷனைக் காண்பித்தார். இது போதுமென்று ஒப்பினார்கள். அப்படியானால், அதனுள் பிரவேசியுங்களென்று சொன்னார்:

அக்நி-வாக் ரூபமாய் முகத்திலும், வாயு-க்ராணமாக மூக்கிலும், ஆதித்யன்-சக்ஷுரிந்திரியமாகக் கண்களிலும், திக்குகள்-சுரோத்ரேந்திரியமாகக் காதுகளிலும், ஓஷதி வனஸ்பதிகள்-ஸ்பர்சனேந்திரியமாகத் தோலிலும், சந்திரன்-மனஸாக இருதயத்திலும், மிருத்யு-பாயுவிந்திரியமாக நாபியிலும், ஜலம்-உபஸ்தேந்திரியமாக உபஸ்தத்திலும் பிரவேசித்தார்கள்.

5. பசி, தாகம் இவ்விரண்டும் எங்களுக்கு இருப்பிடம் ஏற்படுத்த வேண்டுமென்று ஈசுவரனைக் கேட்டன ; அதற் கவர் இந்தத் தேவதைகளிடம் இருங்களென்றார் ; அவர்கட்குக் கிடைக்கும் ஆகாரத்தில் உங்களுக்கும் பாக முண்டென்றார் ; ஆதலால் எந்தத் தேவதைக்கு ஹவிஸ் கொடுக்கப்படினும் அதில் பசி, தாகம் இவைகளுக்கும் பாகமுண்டு. (அஃதாவது பசி, தாகமிருப்பதால் இந்திரிய தேவதைகளும் அன்னத்தைக் கிரகிக்கின்றார்கள்.)

(ஜீவனுக்கே போக்த்ருத்துவம்; இந்திரிய தேவதைகள் பசி, தாகம் இவர்கட்குப் போக்த்ருத்துவ மில்லை யென்று சொல்லப்பட்டிருந்தபோதிலும், அது தோஷமாகாது; உண்மையாகவே பிரம்ம ஸ்வரூபமாகிற ஜீவனுக்குப் போக்த்ருத்துவமில்லாவிடினும், இந்திரிய தேவதைகள், பசி, தாகம் இவர்களாகின்ற உபாதியினால் ஜீவனுக்குப் போக்த்ருத்துவஞ் சொல்லப்பட்டது.)

---

## கண்டம் III.

1. இவ்விதம் நம்மால் சிருஷ்டிக்கப்பட்டிருக்கின்ற உலகங்களுக்கும் லோகபாலர்களுக்கும், பசி, தாகங்களை ஏற்படுத்தியிருப்பதால் அவர்கட்கு அன்னத்தைச் சிருஷ்டிப்போ மென்று ஈசுவரன் ஆலோசித்தார்.

2. ஜலத்தை நோக்கிச் சங்கல்பஞ் செய்தார். அதினின்றும் ஓர் உருவமாக உண்டாயிற்று; அது கனரூபாயுங் கரங்களால் எடுக்கத்தக்கதாயும், சராசர லக்ஷண மமையப்பட்டதாயுமுள்ள அன்னம். (ஆகாரத்துக்குத்தக்க ஜந்துக்கள் சரம்; நெல் முதலியன அசரம்.)

3. இங்ஙனஞ் சிருஷ்டிக்கப்பட்ட அன்னம் பின்பட்டு ஓடத்தொடங்கிற்று. (அஃதாவது தேவதைகளால் உண்ணப்படாமலிருந்தது.) அப்பொழுது ஆதியில் சிருஷ்டிக்கப்பட்ட மேற்கண்ட புருஷன் வாய்ப்பேச்சால் அன்னத்தைக் கிரகிக்க உத்தேசித்தான்; முடியவில்லை. அது முடியுமாயின் ஒருவன் அன்னத்தைப் பற்றிப் பேசுவதினாலேயே திருப்தியடையக்கூடும். (அஃது அஸம்பாவிதமென்பது கருத்து.)

4. பிறகு க்ராணேந்திரியத்தால் அன்னத்தைக் கிரகிக்க இச்சித்தான்; அதுவும் பயன்படவில்லை; அவ்விதமானால் முகர்தலினாலேயே திருப்தியடையக்கூடும். (அதுவும் அஸம்பாவிதம்.)

5. பிறகு சக்ஷுரிந்திரியத்தால் அன்னத்தைக் கிரகிக்க விருப்பமுற்றான்; அதுவும் பயன்படவில்லை; அவ்விதமானால் பார்ப்பதினாலேயே திருப்தியை அடையமுடியும். (இதுவும் அஸம்பாவிதம்.)

6. சுரோத்திரேந்திரியத்தால் (கேட்பதனுல்);

7. ஸ்பர்சனேந்தியத்தால் (தொடுவதனுல்);

8. மனத்தால் (நினைப்பதனுல்);

9. சிச்னத்தால் (விஸர்ஜனத்தினுல்) அன்னத்தைக் கிரகிக்க இச்சித்தான். மேற்சொல்லப்பட்டவைகளினுலும் முடியவில்லை.

10. பிறகு அபானவாயுவால் அன்னத்தைக் கிரகிக்க இச்சித்தபொழுது கிரகிக்க முடிந்தது. இந்த வாயுவே அன்னத்தைக் கிரகிக்கத் தகுந்தது. இந்த வாயு அன்னத்தைக்கொண்டு ஜீவித்திருக்கின்றதென்பது பிரஸித்தம்.

11. வாக்கால் பேசப்படினும், க்ராணத்தால் முகரப்படினும், கண்களால் பார்க்கப்படினும், சுரோத்திரத்தால் கேட்கப்படினும், த்வக்கால் தொடப்படினும், மனதால் த்யானிக்கப்படினும், அபானத்தால் கிரகிக்கப்படினும், சிச்னத்தால் விஸர்ஜனஞ் செய்யப்படினும், இந்தக் காரியகாரணக் கூட்டமானது நம்மையன்றி எவ்விதம் நிலைபெற்றிருக்கக்கூடும்? நாம் எவ்வித வடிவுடனிருக்கின்றோம். (அஃதாவது இவைகளை நாம் ஏவாவிடில் இவைகள் தத்தம் தொழில்களை எவ்வாறு நடத்தும்? ஒருபொழுதும் நடத்த முடியாது.) ஆனதுபற்றி இவைகளுள் நாம் பிரவேசிக்க வேண்டும். 'தலை கால் இவ்விரண்டு மார்க்கங்களுள் எவ்வழியாய்ப் பிரவேசிப்போம்' என்று ஈசுவரன் ஆலோசித்தார்.

12. பிறகு, அவர், இந்த உச்சியைப் பிளந்து அதன் வாயிலாகப் பிரவேசித்தார். இதற்கு விதிருதி (பிளப்பு, துவாரம்) என்று பெயர்; இஃது ஆநந்த மயமான துவாரம்; இவ்வழியாக உட்புகுந்த அவருக்கு மூன்று இருப்பிடங்களுண்டு; ஜாக்ரதவஸ்தையில் வலது கண்; ஸ்வப்னுவஸ்தையில் மனது; ஸுஷுப்தி அவஸ்தையில் ஹிருதயாகாசம்; இம்மூன்றும் ஸ்வப்னங்கள். (அஃதாவது ஜாக்ரத், ஸ்வப்ன, ஸுஷுப்தி ஆகிய இம்மூன்றும் நசுவரங்களானதால் ஸ்வப்வனம்போல் இருக்கின்றபடியால் ஸ்வப்னங்களென்றே கூறப்பட்டன.)

13. இவ்விதமுண்டான (இவ்விதங் காரியகாரண கூட்டமா கின்ற உபாதியுடன் சேர்ந்த) ஜீவன் அகங்காரமடைந்து, "இச் சரீரத்தில் வேறு யாதிருக்கிறது, எல்லாம் நாம்" என்று அபிமானங்கொண்டு ஆரோபித்துக்கொள்ளுகின்றான். இவ்விதம் நீடிழிகாலம் அறியாமையால் உறக்கமுற்று, பிறகு ஒரு ஸமயம் பரம கிருபாநிதியாகிய ஆசாரியருடைய உபதேசத்தால் விழித்துக்கொண்டு, மேற்குறித்த இந்தப் புருஷனை (பிரம்மத்தைத்) தன்னிடத்திற்றானாகவே பார்க்கின்றான்.

14. ஆதலால் இந்தப் புருஷனுக்கு இதந்திரனென்று பெயர். (இந்திரன் இவனைப் பார்க்கிறவன்; இந்த அபரோக்ஷமா யிருக்கின்ற பிரத்யகாத்மா சரீரத்தில் இருப்பதாகக் காணப்படுகிற ஆத்மாவையே பார்க்கின்றார். (அஃதாவது பிரத்யகாத்மாவாகவே யிருக்கின்றார்.) அவரை இந்திரனென்று பரோக்ஷமாகச் சொல்லுகின்றார்கள். (பூஜ்யர்களின் பெயரை நேரில் கூறுவதைக்காட்டிலும், பரோக்ஷமாகச் சொல்வது மரியாதையாம்; பூஜ்யர்களுக்கெல்லாம் பூஜ்யராயுள்ள ஈசுவரனை அங்ஙனம் மரியாதை செய்யத் தடை என்ன?)

இவ்வத்தியாயத்தின் முக்கிய தாத்பரியம். — உலகத்தை ஆக்கி, அளித்து, அழிப்பவன், அஸம்ஸாரி, ஸர்வக்ஞன், ஸர்வ சகதன், ஸர்வ வித்தாகிய பரமாத்மா. இந்த எல்லா ஜகத்தையும் யாதொரு உபாதான காரணமின்றி ஆகாசாதிக் கிரமமாகத் தானே சிருஷ்டித்துத் தனது ஆத்மாவைத் தானே அறிந்துகொள்ளும்பொருட்டு, ஸகல பிராணிகளின் சரீரங்களிலுந் தானே பிரவேசித்து, தனது ஆத்மாவைப் பிரம்மம் நானாகவே யிருக்கிறே னென்று அறிந்துகொள்ளுகிறார். ஆதலால் எல்லாச் சரீரங்களிலும் ஒரே ஆத்மாவே யன்றி வேறில்லை என்பது இதன் தாத்பரியம்.

சிருஷ்டிக் கிரமத்தில் அநேக விஷயங்களில் அஸம்பாவித மிருக்கிறதென்ற ஆக்ஷேபத்துக்கு ஸமாதான மிரண்டு சொல்லப்பட்டிருக்கின்றன. (1) சிருஷ்டிக்கிரமஞ் சொல்லியது அர்த்தவாதம். அஃதாவது இந்த ஜகத்தின் லக்ஷணத்தை எளிதில் போதிப்பிக்கவேண்டிய நிமித்தம் உலக வியவகாரம்போல் ஒரு கட்டுக்கதையாகக் கூறப்பட்டது. ஆத்மாவை யறிய வேண்டியது முக்கியமே தவிர சிருஷ்டிக்கிரமந் தெரிந்துகொள்வதில் யாதொரு பயனுமில்லை. (2) அங்ஙன மில்லாவிடினும், மாயாவியா யிருக்

கின்ற ஈசுவரனுக்கு யாதுதான் செய்ய வியலாது? மாயைக்கு யாதும் அஸம்பாவிதமில்லை; யாவும் கூடும். ஆத்மாவை அறிவதற்குச் சாஸ்திரோபதேசமே விதி யென்க; வேறொன்று மில்லை. ஆதலால் ஆத்மரூபத்தைப் போதிக்க உபநிஷத் முதலிய சாஸ்திரங்கள் பிரவிர்த்தித்திருக்கின்றன. எதுவரை தன் ஆத்மாவை யறியாமலிருக்கின்றானோ அதுவரை அவித்தை யாலுண்டான உபாதி தர்மங்களைத் தனக்கென்று கருதி பிரமன் முதல் ஸ்தம்பப் பூச்சி ஈறுகவுள்ள ஜன்மங்களை அடிக்கடி மீண்டு மீண்டு மெடுத்து அவித்யா காம கர்ம வசத்தால் ஸஞ்சரிக்கின்றான். இவ்விதம் ஒவ்வொரு தடவையிலு மடைந்த தேகேந்திரியக் கூட்டத்தை விட்டொழிகின்றான். பிறகு வேறு கூட்டத்தை யடைகிறான். இவ்விதம் அடிக்கடி ஜனன மரண துக்கத்துக்குள் இடர்ப்பட்டு உழல்கின்றான். இத்தகைமை வாய்ந்தவன் எப்படிப்பட்ட அவஸ்தைகளுடன் இருக்கிறான் என்பதைப்பற்றிச் சுருதி பின்னே மொழிகின்றது.

---

# இரண்டாம் அத்தியாயம்

## கண்டம் IV.

இந்த ஜீவன் வைராக்கியத்தால் அவித்தியா காம கர்மவானாக யக்ஞாதி கர்மாக்களை யியற்றி இவ்வுலகத்தினின்றுந் தூமாதி மார்க்கமாய்ச் சந்திர லோகத்தை யடைந்து, அங்கு கர்ம பலன் குறைவுற்றவுடன் விருஷ்டி யாதிக் கிரமமாக இவ்வுலகத்தைப் பெற்று அன்ன ரூபமாகி புருஷாக்நி யில் வீழ்த்தப்படுகின்றான். அப்புருஷனிடம் முதல் முதல் ரேதஸ் ரூபமாகக் கர்ப்பமாக விருக்கின்றான். இவ்விஷயம் விவரமாக இந்த அத்தி யாயத்தில் எடுத்துரைக்கப்படும்.

1. இந்த ஜீவன் முதலில் புருஷனிடங் கர்ப்பமாயிருக்கின் றான். யாங்ஙன மெனின், அன்னமயமான தேகத்தின் எல்லா அங்கங்களினின்றும் ஸாரமாக உண்டாகின்ற ரேதஸ் ரூபமாகிற தனதாத்மாவைத் தன்னிடமே பிதா தரிக்கின்றான். அந்த ரேத ஸை ஸ்திரீயினிடம் எப்பொழுது ஸம்யோக காலத்தில் வெளி விடுகிறானோ அப்பொழுது அந்த ஜீவனுக்கு முதல் ஜன்ம முண் டாகின்றது. (அஃதாவது முதலிலுண்டாகிற அவஸ்தை.)

2. அத்தகைய ஸ்திரீயினிடம் விடப்பட்ட ரேதஸானது அவளையே சார்ந்ததாக ஆகிவிடுகின்றது. (அஃதாவது தன் சொந்த அங்கமாகிய ஸதனம் முதலாயின எவ்விதந் தன் தேகத் துடன் ஒத்தானவா யிருக்கின்றனவோ அப்படியே யென்க.) ஆதலால் அந்தக் கர்ப்பம் இவளை ஹிம்ஸிக்கின்றதில்லை. அவள் இவ்விதம் உண்டான கர்ப்பத்தைப் பாதுகாக்கின்றாள்.

3. அங்ஙனங் கர்ப்பத்தைப் பாதுகாக்கின்ற அவளுங் காப் பாற்றப்படவேண்டியவள். அவள் கர்ப்பத்தைத் தரிக்கின்றாள். பத்தாவது மாதத்தில் குமாரன் ஜனிக்கின்றான்; பிதாவுடைய ஆத்மாவே புத்திர ரூபனாக உண்டாகின்றான். அவ்வித முண் டான குமாரனை பிதா ஜாதகர்ம முதலான கிரியைகளால், தன்னைப்போலப் பாவிக்கின்றான். அங்ஙனஞ் செய்வது எதற்

கெனின் உலக ஸந்ததிகள் விருத்தியாகும்பொருட்டு. (அஃதாவது புத்திரோத்பத்தியானது ஸந்ததி விருத்திக்குமட்டுமேயன்றி மோக்ஷத்திற்கல்ல.) இவ்விதம் மாதாவின் கர்ப்பத்திலிருந்து வெளிப்பட்டு வருவது இந்த ஜீவனுடைய இரண்டாவது ஜன்மம் (அஃதாவது இரண்டாவது அவஸ்தை.)

4. இவ்வித முண்டான புத்திராத்மா, பிதாவிற்குப் புண்ணிய கர்மாக்களைச் செய்யப் பிரதிநிதியாகிறான். (அஃதாவது பிதாவுக்குப் பிரதியாக இருந்து புண்ணிய கர்மாக்களைச் செய்கின்றான்.) அப்பொழுது இந்தப் பிதாவான ஆத்மா கிருதகிருத்யனாக வயோதிகத்தை யடைந்து மரிக்கின்றான். (அஃதாவது இத்தேகத்தை விடுகின்றான்.) அங்ஙனம் விட்டவன் கர்மவசத்தால் வேறு ஜன்மத்தை யடைகின்றான். இது ஜீவனுடைய மூன்றாவது ஜன்மம் (அஃதாவது மூன்றாவது அவஸ்தை.)

5. "கர்ப்பத்திலிருந்துகொண்டே, இந்த வாக் அக்நியாதி தேவர்களின் எல்லா ஜன்மங்களையு மறிந்துகொண்டேன்; முன்னர் என்னை இரும்பைப்போலத் தகர்க்கப்படாதனவாகிய அநேக சரீரங்கள் கீழே (அஃதாவது நிகிருஷ்ட உலகங்களில்) ரக்ஷித்தன; இப்பொழுது பருந்து வலையினின்றும் அறுத்துக்கொண்டு தப்பி ஓடுவது போலத் தத்வ ஞானத்தாலுண்டான ஸாமர்த்தியத்தினால் இந்த ஸம்ஸாரத்தைப் பிளந்துகொண்டு வெளிக்கிளம்புகின்றேன்" என்று கர்ப்பத்தி லிருந்துகொண்டே வாமதேவர் சொன்னார்.

6. இப்படிப்பட்ட ஞானியான வாமதேவர், இச்சரீரத்தை விட்டுக் கிளம்பி, ஸ்வர்க்கத்தில் எல்லாக் காமங்களையும் பெற்று அமிருதரானார்.

# மூன்றும் அத்தியாயம்

---

## கண்டம் V.

1. முமுக்ஷுக்களா யிருக்கின்ற பிராமணர்கள் ஒருவர்க் கொருவர் பிரச்னம் பண்ணிக்கொள்ளுகின்றதாவது :

எவரை இவர் ஆத்மாவென்று ஸாக்ஷாத்தாக நாம் உபாஸிக்க வேண்டுமோ அவர் யார்? இருவருக்குள் எவர் ஆத்மா? (தேகத்தில் செய்கைக் கருவிகளா இருப்பதா? அல்லது செய்பவனாக இருப்பதா?) எதனால் ரூபத்தைப் பார்க்கின்றானோ, எதனால் சப்தத்தைக் கேட்கின்றானோ, எதனால் கந்தங்களை முகர்கின்றானோ, எதனால் வசனங்களைப் பாஷிக்கின்றானோ, எதனால் இது நல்லது, இது கெட்டது என்றறிகின்றானோ அக்கருவி யாதெனில் :

2. ஹிருதயமென்று கூறப்பட்டதெதுவோ, மனதென்று உரைக்கப்பட்டதெதுவோ, அவைகளிரண்டுமேயாம். (இவ் விரண்டு கரணங்களின் சேர்க்கை பிராணனென்றுஞ் சொல்லப் படும்; இந்தக் கரண ஸம்ஹதியானது நாம் உபாஸிக்கவேண்டிய ஆத்மா வாகுமா? ஆகாது. மற்று யாது? இந்த ஹிருதய மனோ ரூபமான கரணத்தைக்கொண்டு எவன் உபலப்தியை அடைகின்றானோ, எவனுடைய கரணத்திற்கு அடியிற்கண்ட ஸம்க்ஞானாதிகள் அந்தக்கரண விருத்திகளா யிருக்கின்றனவோ, அத்தகைய வஸ்து உபாஸிக்கத்தக்க ஆத்மாவென்று நிச்சயித்துக்கொண்டார்கள்.) அவ்விருத்திகளாவன :—ஸம்க்ஞானம் (சேதன பாவம், பிராணித்வம்); ஆக்ஞானம் (ஈசுவர பாவம்); விக்ஞானம்

லௌகிகஞானம்); ப்ரக்ஞானம் (அறிவு); மேதா (படித்ததை (மறவாத ஸாமர்த்தியம்); திருஷ்டி (இந்திரியமூலமாக எல்லா வற்றையுமறிவது); திருதி (தைரியம்); மதி (நினைவு); மநீஷா (நிச்சயபுத்தி); ஜூதி (மனதிற்கு வருந் துக்காவஸ்தை); ஸ்மிருதி (ஞாபகம்); ஸங்கல்பம் (ஏற்பாடு); (க்ருது தீர்மானம்); அஸு (ஜீவித்துக்கொண்டிருக்கும்படியான விருத்தி); காமம் (கிட்டாததில் ஆசைவைத்தல்); வசம் (ஸ்திரீ முதலியவர்களிடத்தில் இச்சை); இவைகளெல்லாம் பிரக்ஞானத்தின் பெயர்கள் (அஃதாவது, சுத்தப் பிரக்ஞானமாக விருப்பது பிரம்மம்; அப் பிரம்மத்துக்கு மேற்கூறப்பட்ட ஸம்க்ஞாஞதி அந்தக்கரண விருத்திகள் நாமதேயங்கள், உபாதிகளாக விருக்கின்றன. இவ் வுபாதிகளுடன் சேரின் நாம ரூபாத்மகமாக விருக்கும் பிரம்மா கின்றது).

3. (இத்தகைய பிரக்ஞான ரூபமாக இருப்பதே பிரம்மம்; இவ்வித பிரம்மம் எல்லாச் சரீரங்களிலும் புகுந்து, அந்தக்கரணோ பாதிகளிற் சேர்ந்து பல ஜலாசயங்களில் ஓரே ஸூரியன் பலஸூரிய பிம்பங்களாகத் தோன்றுவதுபோல, ஒவ்வொரு பிராணியினிடத் தும் பின்னமாகவே காணப்படுகின்றார்.) இவரே இந்திரன், பிரஜாபதி (முற்கூறியபடி முதன் முதல் உண்டானவர்), இவரே தேவர்கள் (மேலே படைப்புற்ற அக்நியாதி தேவர்கள்); இவரே பிருதிவி முதலான பஞ்சபூதங்கள்: இவரே க்ஷுத்ர மிசி ரங்கள் (ஸர்ப்பாதி ஜந்துக்கள்); இவரே பீஜங்கள் (காரணங்கள்). இன்னும் மற்றுமுள்ளவைகளாவன:—அண்டத்திலுண்டாகின்ற ஜந்துக்கள், கர்ப்பப் பையிலுண்டாகின்ற ஜந்துக்கள், வியர்வையி லுண்டாகிற ஜந்துக்கள், முளைக்கின்ற விருக்ஷங்கள், அசுவங்கள், கோக்கள், புருஷர்கள், யானைகள், இன்னும் மற்றுமுள்ள பிராணி கள் யாவும், பக்ஷிகள், ஸ்தாவரம் (கல் முதலியன) எல்லாம் பிரம்மம். யாவும் பிரக்ஞா நேத்திரம் (அஃதாவது பிரக்ஞை யையே நேத்திரமாக-அஃதாவது நடத்துகிற கர்த்தாவாக வைத் துக்கொண்டிருப்பன). யாவும் பிரக்ஞானத்தில் ஸ்தாபிக்கப்பட் டிருக்கின்றன. உலகமே பிரக்ஞா நேத்திரம்; பிரக்ஞையே பிரதிஷ்டை; பிரக்ஞானமே பிரமம்.

4. முற்கூறப்பட்ட வாமதேவரும், மற்றப் பிரம்ம வித்துக்களும் இந்தப் பிரக்ஞாநாத்மாவை யறிவதால் இவ்வுலகத்தை விட்டு ஸ்வர்க்கத்தில் எல்லாக் காமங்களையும் பெற்று அமிருதத் தன்மையை அடைகின்றார்கள்.

ஓம். சாந்தி: சாந்தி: சாந்தி:

---

ஐதரேயோபநிஷத் முற்றிற்று

# (II) யஜுர்வேதம்

(க்ருஷ்ண யஜுர்வேதம்)

2. தைத்திரீயோபநிஷத்
3. கடோபநிஷத்
4. சுவேதாசுவதரோபநிஷத்

(சுக்ல யஜுர்வேதம்)

5. ஈசோபநிஷத்
6. பிருகதாரண்யகோபநிஷத்

## சாந்தி

### இவ்வுபநிஷத்தின் முதல் வல்லி முதல் அநுவாகமே இதற்குச் சாந்தியாகும்.

**ஸ்ரீ சங்கர பாஷ்ய ப்ரதீகச் சுருக்கம்.**—துரித க்ஷயார்த்தங்களாக விருக்கின்ற நித்ய கர்மாக்களைப்பற்றியும், காம்யார்த்தங்களா யிருக்கின்ற நைமித்திக கர்மாக்களைப்பற்றியும் கர்மகாண்டத்தில் கூறப்பட்டிருக்கின்றது. கர்மாக்களுடைய பலன் ஸம்ஸாரமே. இந்தப் பலத்தில் ஸுக துக்கங்கள் இரண்டு மிருக்கின்றன. நித்ய ஸுகம் வேண்டுமாயின் கர்மாக்கள் போதா. ஆதல்பற்றிக் கர்மாக்களுக்கு ஹேதுவாயிருப்பதை நிவர்த்தி செய்யும்பொருட்டு இப்பொழுது பிரம்ம வித்யையைப்பற்றி இங்குப் பேசப்படுகிறது. கர்மாவுக்கு ஹேது காமம்-இச்சை. இச்சையே கர்மா செய்யும்படி தூண்டுகிறது. இச்சை யில்லாதவனுக்குப் பிரவிருத்தியில்லை. மற்றப் பதார்த்தங்களில் ஞாபகம் வைக்காமல் தன்னிடத்திற்றானே யிருக்கின்றான்.

தன் ஆத்மாவை யறிய விரும்பினாற்றான் மற்ற விஷயங்களில் விருப்பமற்றுப்போகும். தன் ஆத்மா என்றது பிரம்மம். அதை யறிந்தவன் உத்தமமான கதியை யடைகிறான். ஆகையால் அவித்யையைத் தள்ளித் தன்னிடத்திலேயே தானிருப்பது பரப்பிராப்தி என்பது. காம்யங்களாகவும், பிரதிஷித்தங்களாகவு மிருக்கிற கர்மாக்களை ஆரம்பிக்காமலும், அங்ஙனம் ஆரம்பிக்கப்பட்ட மேற்படி கர்மாக்களுடைய பலனை அநுபவித்து நசிக்கும்படி செய்தும், விரோதத்தைப் பயக்காத நித்ய கர்மாக்களை அநுஷ்டானஞ் செய்துகொண்டு மிருந்தால் யாதொரு முயற்சியுமில்லாமலே ஸ்வாத்மந்யவஸ்தானம் (தன்னிடத்திற்றானிருத்தல்-பிரவிருத்தியில்லாமை) உண்டாகும். அது மோக்ஷம். கர்மாவால் ஸ்வர்க்க ஸுகமே கிடைக்கும். அதனால் மோக்ஷம் உண்டாகிறதென்று கூறுதலமையாது. ஏனெனின், கர்மாக்களுள் பலவிதமுண்டு; அவைகளின் பலன்களும் அங்ஙனமே. அநேக ஜன்மாந்தரங்களில் செய்யப்பட்ட கர்மாக்களின் விருத்த பலன்கள், ஒரே ஜன்மாவில் அநுபவிக்கப்படுவதனால் தொலையா. அஃதாவது, கர்மாக்கள் மேன்மேலுஞ் செய்யப்படின், பலன்களும் அங்ஙனமே விருத்தியாகும். முடிவு காலம் ஸம்பவிக்காது. அந்தந்த கர்மாவின் பலனை அந்தந்த நிமித்த சரீரங்கள் உண்டாக்கிக்கொண்டே வரும். அஃதாவது ஜனன மரணங்கள் முடிவின்றி ஸம்பவிக்கும். அப்பொழுது மோக்ஷம் ஸித்திக்காது. நித்தியகர்மாக்கள் ஆரப்த கர்ம பலன்களை நிவர்த்தி செய்யமாட்டா. அநாரப்த பல கர்மாக்களை அழிக்கவுமாட்டா. ஆதல்கொண்டே நித்தியகர்மாக்கள் மோக்ஷத்துக்குப் போதாவாம். ஞானமில்லாவிடின் கர்மஹேதுக்களாயிருக்கிற காமங்களுக்கு

ஒழிவு நேரிடாது. ஆத்மாவை அறியாதவனுக்குக் காமம் இருந்து கொண்டே யிருக்கும். தன் ஆத்மாதான் பரப்பிரம்மம். ஆனால், மோக்ஷ ஸாதனமாக விருக்கவில்லை யென்று கருதி நித்தியகர்மாக்களைச் செய்யாம லிருக்கவுங் கூடாது. செய்யாவிடின் கெடுதியுண்டு. உலகத்தில் எதற்கு ஆரம்பமுண்டோ அது நசிக்கும். ஆதலால் கர்ம ஆரம்பத்தினால் மோக்ஷ முண்டாகாது. வித்யையுடன் கூடின கர்மாக்களுக்கு நித்ய மோக்ஷா ரம்ப ஸாமர்த்திய முண்டென்பது அமையாது. இது முற்றும் விரோதம்; ஆரம்பமுள்ளதற்கு நித்யத்வமில்லை. மோக்ஷம் ஆரம்பம் என்று கூறுதல் பொருந்தாது. ஏனெனின், மோக்ஷம் பாவ ரூபமுள்ளது. (எப்பொழுதுமுள்ளது.) இல்லாதது உண்டானால் அஃது ஆரம்பம் என்று சொல்லலாம். ஆதல்பற்றி அவித்யா காம கர்மோபாதான ஹேது நிவிருத்தியானால் ஸ்வாத்மந்யவஸ்தான மென்ற மோக்ஷம் ஸித்திக்கும். தன் ஆத்மாவே பிரம்மம்; அதை யறிந்தாற்றான் அவித்யா நிவிருத்தி யுண்டாகும்; அவ்விதம் வித்யையை உபதேசிப்பதற்காகவே உபநிஷத் பிரவிருத்தித்தது. பிரம்மத்தின் ஸமீபத்தில் கொண்டுபோய்ச் சேர்ப்பதால் உபநிஷத் என்ற நாமஞ் ஸித்தித்தது.

---

# சீக்ஷாவல்லீ

என்ற

# முதல் அத்தியாயம்

## அநுவாகம் I.

(வித்தியார்த்தியாகிய சிஷ்யன் தொடக்கத்தில் பிரார்த்தித்துக்கொள்ளுவது):—எங்களுக்கு (எனக்கும், குருவுக்கும்) (பிராணவிருத்திக்கும், பகலுக்கும், அபிமான தேவதையாயிருக்கிற) மித்திரனும் (ஸூரியனும்); (அபான விருத்திக்கும், இரவுக்கும் அபிமான தேவதையாகிய) வருணனும்; (நேத்திரத்திலும், ஆதித்ய மண்டலத்திலும் அபிமான தேவதையாகிய) அர்யமாவும் (ஸூரியனும்); (பலத்தில் அபிமான தேவதையாகிய இந்திரனும்; (வாக்கிலும், புத்தியிலும் அபிமான தேவதையாகிய) பிருஹஸ்பதியும்; (பாதங்களில் அபிமான தேவதையாகிய) விஸ்தீரணக் கிரமமுள்ள விஷ்ணுவும், ஸுகத்தைக் கொடுக்கட்டும். பிரம்மத்தின்பொருட்டு நமஸ்காரஞ் செய்கிறேன். ஹே, வாயுவே! (பிராணனே) உமக்கு நமஸ்காரம். நீரே பிரத்யக்ஷமாயிருக்கிற பிரம்மம். உம்மையே அவ்விதஞ் சொல்லப்போகிறேன். நீரே, ருதம் (ருஜுமார்க்கம், சாஸ்திரப்படி கிரமமாக விருத்தல்). நீரே ஸத்யம். ஸர்வாத்மகமான மேற்படி வாயுவென்ற பெயருள்ள பிரம்மமானது என்னையுங் குருவையும் ரக்ஷிக்கட்டும். ('ஓம் சாந்தி:' என்று மூன்று தடவை கூறுவதின் பயன் யாதெனின், வித்தியாப்பிராப்திக்கு ஆத்தியாத்மக, ஆதிபௌதிக, ஆதிதைவிகங்களாயிருக்கிற விக்னங்கள் ஒழிவுறட்டுமென்று.)

---

## அநுவாகம் II.

இனி சீக்ஷாத்தியாயம் (உபநிஷத்திற்கு அர்த்தக்ஞானம் பிரதானமானபடியால் அதை யறிந்துகொள்வதற்காக வர்ணாதி உச்சாரண லக்ஷணமுள்ள சாஸ்திரம்) கூறப்படுகிறது.

1. எழுத்து, 2. ஸ்வரம் (உதாத்தம் முதலியன), 3. மாத்திரை (ஹ்ரஸ்வம் முதலியன), 4. பலம் (ப்ரயத்ன விசேஷம்), 5. ஸமதை, 6. சேர்க்கை—இவை அவச்யந் தெரியவேண்டும்.

---

## அநுவாகம் III.

இப்பொழுது ஸம்ஹிதோபநிஷத் சொல்லப்படுகிறது. ஸம்ஹிதாவெனின், அக்ஷரங்களுடைய சேர்க்கை-அஃதாவது சப்தங்கள்; இந்த உபநிஷத் கிரந்தத்திலுள்ள சப்தங்கள் அர்த்த க்ஞான விஷயத்தில் கிரந்த பாவத்தை யறியும்படியான புத்தி ஸுலப ஸாத்தியமன்றாகையால், அர்த்த விசாரணைக்கு முன்னரே சப்தங்களை உபாஸித்தால் அதற்குப் பலன்கள் உண்டென்று அந்தச் சப்த உபாஸனைக் கிரமஞ் சொல்லப்படுகிறது. அந்த ஸம்ஹிதா உபநிஷத் ஸம்பந்தமான யசஸும் எங்களிடத்திலிருக்கட்டும் என்று சிஷ்யன் பிரார்த்திக்கின்றான்.

1-3. ஸம்ஹிதா விஷயமான தர்சனத்தைப்பற்றி இங்கெடுத்துக் கூறுவோம். ஞான விஷயமாயிருக்கிற ஐந்து ஆசிரயங்களுண்டு; அவற்றிற்கு அதிகரணங்களென்று பெயர். (ஒரு விக்ரகத்தை விஷ்ணுவாகப் பாவித்து, நாம் தர்சனஞ் செய்வதுபோல அக்ஷரங்களில் இதனடியிற் கூறப்புகும் லோகாதி ஐந்து மொத்த பதார்த்தங்களால் விசேஷிக்கப்பட்ட—அஃதாவது அந்தப் பாதார்த்தங்களின் விஷயமான-ஞானம் இருக்கிறதென்று பாவித்து உபாஸிக்கவேண்டும்.)

மேற்கூறிய ஐந்து அதிகரணங்களாவன:—1. அதிலோகம், (உலக ஸம்பந்தமுள்ளது). 2. அதிஜ்யோதிஷம். (ஜ்யோதிஸ் ஸம்பந்தம்). 3. அதிவித்யம், (வித்யா ஸம்பந்தம்), 4. அதிப்ரஜம், (பிரஜா ஸம்பந்தம்); 5. அத்யாத்மம், (ஆத்ம ஸம்பந்தம்); இவ்வைந்தும் மஹா ஸம்ஹிதா: (பெரிய சேர்க்கைகள்) என்று பெரியோர்கள் கூறுவார்கள். (இவைகளுள் ஒவ்வொன்றிற்குமுள்ள அடக்கமான பதார்த்தங்கள் சொல்லப்படுகின்றன.) முதலாவதற்குப் பிருதிவி பூர்வ ரூபம் (முந்தின வர்ணம்); (அஃதாவது ஒரு ஸம்ஹிதையின் சப்தத்தில் முதல் அக்ஷரத்தைப் பிருதிவியாகக் காணவேண்டும்). ஸ்வர்க்கலோகம் உத்தர ரூபம்

(பின்வர்ணம்); ஆகாசமே (அந்தரிக்ஷம்) ஸந்தி; (மேற்படி பிருதிவியும், ஸ்வர்க்கலோகமும் எதில் ஸந்திக்கிறதோ அந்தவிடம்), வாயு ஸந்தானம் (மேற்படி இரண்டும் எதனுல் ஸந்திப்பிக்கப்படுகிறதோ அந்தப் பதார்த்தம்). அதிஜ்யோதிஷம்:-பூர்வ ரூபம்-அக்நி; உத்தர ரூபம்-ஆதித்யன்; ஸந்தி-ஜலம்; ஸந்தானம்-மின்னல். அதிவித்யை:-பூர்வ ரூபம்-குரு; உத்தர ரூபம்-சிஷ்யன்; ஸந்தி-வித்தை; ஸந்தானம்-உபதேசித்தல். அதிப்பிரஜை:-பூர்வ ரூபம்-மாதா; உத்தர ரூபம்-பிதா; ஸந்தி-பிரஜை; ஸந்தானம்-பிறப்பு. அத்யாத்மம்:-பூர்வ ரூபம்-கீழ் வாய்; உத்தர ரூபம்-மேல் வாய்; ஸந்தி-வாக்கு; ஸந்தானம்-நாக்கு. இவ்விதம் வர்ணங்களில் மேற் கூறப்பட்டுள்ள பிருதிவி முதலிய பதார்த்தங்களென்று பாவித் துணரவேண்டும். இங்ஙன மறிந்தவனுக்குப் பலன்:- பிரஜை, பசுக்கள், பிரம்மதேஜஸ், அன்னம், ஸ்வர்ணம், நல்லுலகம்—இவைகளுடன் சேர்க்கப்படுகிறுன். (பலனை யிச்சித்து உபாஸிக்கிறவனுக்கு மேற்கூறியபடி பலன் கிடைக்கிறது. இச்சியாமல் உபாஸிக்கிறவனுக்குப் பிரம்ம வித்யைக்குரிய ஞானஸித்தியாகின்றது.)

---

## அநுவாகம் IV.

ஸ்ரீ காமனுக்கும் (ஸம்பத்தை இச்சிக்கிறவனுக்கும்), மேதா காமனுக்கும் (ஞானுபேக்ஷை உள்ளவனுக்கும்) ஜப ஹோம கர்மாக்கள் சொல்லப்படுகின்றன.

1. மேதா காமன் செய்யும் ஜபம் யாதெனின், "எது வேதங்களுக்கெல்லாஞ் சிலாக்யமா யிருக்கிறதோ, ஸர்வ ரூபமாயிருக்கிறதோ, வேதங்களுக்கெல்லாம் வேதமாகிய அமிருதத்தினின்றும் உண்டாயிற்றே, ஸர்வ காமத்தையும் பயக்கிறதோ, அந்த ஓங்காரமானது எனக்கு ஞானத்தைக் கொடுக்கட்டும்: ஹே, தேவ! அமிருதத்துவத்துக்கு ஹேதுவாயிருக்கிற பிரம்ம ஞானத்தைத் தரித்துக்கொண்டவனுக நானுகுக; என்னுடைய சரீரம் அந்த ஞானத்தைக் கைப்பற்ற யோக்கியமாகட்டும்; என்னுடைய நாக்கு மதுரமான வார்த்தையை உச்சரிக்கட்டும்; என் காதுகள் மிகுந்த பொருள்களைக் கேட்கட்டும்; ஹே, ஓங்காரமே!

நீ பிரம்மத்துக்குப் பிரம்தீகமாக (விக்ரகமாக) இருக்கின்றனே; லௌகிகப் பிரக்ஞையால் மூடப்பட்டிருக்கிறாய். ஆத்ம க்ஞானார்த்தம் நான் கேட்டிருப்பதை ரக்ஷி. (கேட்டதை மறவாமலிருக்கச் செய்.)''

2. ஸ்ரீ காமன் செய்யும் ஹோமமாவது: "எந்த ஸ்ரீயானவள் (ஸம்பத்) எனக்கு வஸ்திரங்களையும், கோக்களையும், அன்னபானாதிகளையுஞ் சீக்கிரமாகத் தருவித்துக் கொடுக்கின்றனளோ, விஸ்தாரமாகச் செய்து கொடுக்கின்றனளோ, அந்த ஸ்ரீயைப் பசு முதலியவைகளுடன் எனக்குக் கொடு.''

(இது "ஸ்வாஹா'' வென்று ஹோமஞ் செய்யுங்கால் சொல்லப்படுகிறது.)

"பிரம்மசாரிகள் (பிரம்மவித்துக்கள்) என்னிடம் அணுகட்டும். (அஃதாவது அவர்களை நான் தரிசனம் பண்ணும்படி செய்க); அவர்கள் விசேஷமாக வரட்டும்; அவர்க ளதிகமாக வரட்டும்; (அஃதாவது அநேகம் பெரியோர்களை நான் பார்ப்பேனாக); அவர்கள் என்னைத் தமப்படுத்தட்டும் (பஹிரிந்திரிய நிக்ரஹமுள்ளவனாக என்னைச் செய்யட்டும்); அவர்கள் என்னைச் சமப்படுத்தட்டும்; (அந்தரிந்திரிய நிக்ரஹமுள்ளவனாகச் செய்யட்டும்.)

3. "ஜனங்களுக்குள் யசஸ்வியாவும் மஹாதைசுவரியவானாகவும் நானாகிறேன்; உன்னிடத்தில் நான் பிரவேசிக்கின்றேன்; நீ என்னிடம் பிரவேசி; (அஃதாவது உன்னிடத்தில் நான் ஐக்கியப்படுக); மிகவும் பேதமுள்ள உன்னிடத்தில் சோதிக்கின்றேன்; (என் பாபத்தைப் போக்கடிக்கின்றேன்.) எவ்விதம் உலகத்தில் பள்ளங் கண்டவிடத்தில் ஜலம் போகுமோ, (ஜனங்களை ஜரைக்குட்படுத்தி) எப்படி மாஸங்கள் (காலம்) செல்கின்றனவோ, அவ்விதம் நான்கு திக்குகளிலுமிருந்து பிரம்ம வித்துக்கள் என்னிடம் வரட்டும். நீ எல்லாத் துக்க பாபங்களையும் நாசஞ் செய்யக் கூடிய ஸ்தானமாக விருக்கின்றாய்; ஆதலால் என்னைப் பிரகாசப்படுத்து; என்னை வந்தடை; எனக்கு அநுக்கிரகம் செய்.''

---

## அநுவாகம் V.

முன் அநுவாகத்தில பிரம்மத்தினுடைய பிரணவ சரீரஞ் சொல்லப் பட்டது. இப்பொழுது ஹிரண்ய கர்ப்பமென்ற வியாஹிருதி சரீரங் கூறப்படுகிறது. அஃதாவது வியாஹிருதி யாத்மாவான பிரம்மத்தி னுடைய அந்தருபாஸனம் எடுத்துரைக்கப்படுகிறது.

1-3. பூ: பூலோகம், புவ: அந்தரிக்ஷம், ஸுவ: ஸ்வர்க்க லோகம். இம்மூன்றும் வியாஹிருதிகள். மஹ: என்றது நான்காவது வியாஹிருதி; அஃதாவது பிரம்மம். இப்படி மூன்று வியாஹிருதிகளைச் சரீரமாகப் பெற்றவர் எவரோ அவரே ஆத்மா; ஸர்வ வியாபதி யுள்ளவர். இந்த நான்காவது வியாஹிருதியை மஹாசமஸ்யரென்றவர் கண்டறிந்தவர். (ரிஷி ஸ்மரணம் உபாஸனைக்கு வேண்டிய தென்று மேற்படி ரிஷியைப்பற்றி இங்கு பிரஸ்தாபிக்கப்பட்டது.)

பூ:-இந்தலோகம், புவ:-அந்தரிக்ஷம், ஸுவ:-அந்த லோகம்-ஸ்வர்க்கம், மஹ:-ஆதித்யன். ஆதித்யனால் எல்லா உலகங்களும் மகிமையை அடைகின்றன, பிரகாசிக்கின்றன-அஃதாவது மூன்று உலகங்களைக் காட்டினும் ஆதித்யன் பெரிது. பூ:-ருக் வேதம்; புவ:-ஸாம வேதம்; ஸுவ:-யஜுர் வேதம்; மஹ:-பிரம்மம் (பிரணவம்); பிரணவத்தினால் ஸர்வ வேதங்களும் மகிமை படைகின்றன. பூ:-அக்நி, புவ:-வாயு, ஸுவ:-ஆதித்யன், மஹ:-சந்திரன், சந்திரனால் எல்லா ஜ்யோதிஸ்களும் மகிமையை அடைகின்றன. பூ:-பிராண வாயு, புவ:-அபான வாயு, ஸுவ:-வியான வாயு, மஹ:-அன்னம், அன்னத்தினால் ஸகல பிராணன்களும் மகிமையை அடைகின்றன. இவையே நந்நான்கு வியாஹிருதிகள். இவைகளை அறிந்தவனே பிரம்மத்தை அறிந்தவன்-ஸ்வராஜ்யத்தை அடைந்தவன்; இத்தகைமை வாய்ந்தவனுக்குத் தேவர்கள் பலி-கப்பங் கொண்டுவந்து படைப்பார்கள். அஃதாவது தேவர்கள் இவனுக்கு வேண்டியவற்றை யளிப்பார்கள்.

---

## அநுவாகம் VI.

பிரம்மம், ஒருவனிடத்தில் எந்த ஸ்தானத்திலிருந்து ஸாக்ஷாத்தாக உபலப்தி பெறக்கூடியதோ, அந்த ஹிருதயாதி ஆகாச ஸ்தானமும், அதன்

உபாஸனையும் இங்கெடுத்து ஓதப்படுகின்றன. சாளக்கிராம சிலையில் யாங்ஙனம் விஷ்ணுவை உபாஸிக்கின்றோமோ, அங்ஙனம் ஈண்டுக் கூறப் புகுந்த ஸ்தானத்தில் பிரம்மத்தை உபாஸிக்கவேண்டியது.

1-2. உள் ஹிருதயத்தில் ஆகாசமிருக்கின்றது ; தாமரைப் பூ வடிவமுள்ள ஒரு மாம்ஸ பிண்டந் தேகத்தினுள் ளிருக்கின்றது ; அது பிராணன் இருக்கு மிடம் ; அநேக நாடிகளுடன் கூடிய துவாரத்தோ டிருக்கின்றது ; அதற்குத் தண்டு, காம்பு மேல்; முகம் கீழ்; இவ்வா றமைந்த விடத்தில் ஒரு வெட்டவெளியிருக்கின்றது ; அந்த ஆகாசத்தில், மனோமயமான (விக்ஞாநமயனை) புருஷன் எல்லா உலகங்களிலும் பூரணமாக வியாபித்திருக்கின்றவன் இருக்கின்றான் ; அவன் மரணதர்ம மில்லாதவன் ; பிரகாசமுள்ளவன். (இவ்விதம் பிரம்ம ஸ்ரூபத்தை யறிந்த வித்வானுடைய ஸ்வரூப பிரதிபத்தி மார்க்கம் ஈண்டெடுத்துக் கூறப் படுகிறது.) அந்த ஹிருதயத்துக்குமேல், ஸுஷும்ன வென்ற நாடி செல்கின்றது ; இரண்டு தாள்வாய்க்கு மிடையில் ஸ்தனம் போல் ஒரு மாம்ஸ பிண்டந் தூங்குகின்றது. (அஃதாவது உண்ணாக்கு) அதற்குமேல் கேசாந்தம் மூர்த்த-உச்சந்தலை. வித்வானுடைய ஜீவன் ஹிருதயத்திலிருந்து மேற்கூறிய நாடி, உள்நாக்கு, இவைகளின் வாயிலாகச் சென்று, மூர்த்தாவை யடைந்து, அவ்விடமிருந்து கபாலத்தைப் பிளந்துகொண்டு வெளிப்படுகிறது. இதுவே பிரம்ம ஸ்வரூப பிரதிபத்திமார்க்கம். இங்ஙனம் வித்வான் வெளிப்புறப்பட்டு, பூ: என்ற வியாஹிருதி ரூபமாகவுள்ள அக்நியில் சேருகிறான். பிறகு புவ: என்ற வியாஹிருதி ரூபமான வாயுவையும், பிறகு, ஸுவ: என்ற வியாஹிருதி ரூபமான ஆதித்யனையும் சேருகின்றான் ; அதன் பிறகு மஹ: என்ற வியாஹிருதி ரூபமான பிரம்மத்தில் கலந்துபோகின்றான் ; அப்பொழுது ஸ்வராஜ்யத்தைப் பெற்றவனாகின்றான்; மனதிற்கெல்லாம் பதியாயிருக்கின்ற பிரம்மத்தை அடைந்தவனாகின்றான். வாக்கு, சக்ஷுஸ், சுரோத்திரம், விக்ஞானம் இவைகட்கெல்லாம் பதியாகின்றான் ; அஃதாவது யாவுந் தெரிந்தவனாகின்றான். இஃதன்றி மேலானவனாகின்றான் ; ஆகாசம்போன்ற ஸூக்ஷ்ம சரீரத்தையுடைய பிரம்மமாகவே ஆகின்றான் ; ஸத்யமாகிற மூர்த்தா மூர்த்தமாகிற ஜகத்தை ஆத்மாவாக வடைந்தவனாகவும், பிராணன்களிடத்தில் விளை

பாட்டை உடையவனுகவும், மனதின்கண் ஆனந்தத்தையுடையவனுயும், பூர்ணமாய்ச் சாந்தி பொறுமை உள்ளவனுயும், அமிருதனுயும் ஆகிவிடுகிறுன். இவ்வாற்றுல் ஹே! பிராசீன யோக்கிய! இத்தகைய பிரம்மத்தை நீ உபாஸி (என்று குரு, சிஷ்யனுக்கு உபதேசிக்கும் முறை).

---

## அநுவாகம் VII.

வியாஹிருதி யாத்மகமாகப் பிரம்மம் உபாஸ்ய மென்று எடுத்தோதப்பட்டது. இப்பொழுது அந்தப் பிரம்மத்துக்கே பிருதிவி முதலான பாங்க்த ஸ்வரூபமாக உபாஸநம் சொல்லப்படுகிறது. "பாங்க்தம்" என்றுல், "ஐந்துள்ளது" "ஐவகைப்பட்டது" என்றர்த்தம். யக்ஞம் பாங்க்த கர்ம, பாங்கனமெனில்-பத்னி, எஜமானன், தைவம், மனிதர்கள், வித்தம் இவ்வைந்தும் யக்ஞத்துக்குக் குரியன; இவ்வாறு உலக முதலியவற்றை ஐவைந்தாகக் கற்பித்துக் காட்டி, அவ்வப் பாங்க்தமாகப் பிரஜாபதியாகிய பிரம்மம் விளங்குகிறதென்று சொல்லப்படுகிறது.

1. பூமி, அந்தரிக்ஷம், ஆகாயம், நேர்திக்குகள், மூலைத்திக்குகள்-இவ்வைந்தும் லோக பாங்க்தங்களாம். அக்நி, வாயு, ஸூரியன், சந்திரன், நக்ஷத்திரங்கள்-இவ்வைந்துந் தேவதா பாங்க்தங்களாம். ஜலம், செடிகொடிகள், விருக்ஷங்கள், ஆகாசம், ஆத்மா (விராட்ஸ்வரூபி)-இவ்வைந்தும் பூத பாங்க்தங்களாம். இந்த மூன்று தொகுதிகளுக்கும் அதிபூத (பூத ஸம்பந்தமான) ஐந்துகளென்று பெயர் சொல்லப்படும். பிராண, அபாந, வியாந உதாந, ஸமாந-இவ்வைந்தும் வாயு பாங்க்தங்களாம். நேத்திரம், சுரோத்திரம், மனஸ், வாக்கு, துவக்கு (உணர்தல்)-இவ்வைந்தும் இந்திரிய பாங்க்தங்களாம். தோல் (மாம்ஸம்), ஊன், ஜலம், எலும்பு, மஜ்ஜை (எலும்புக்குள்ளிருக்கும் பசை)-இவ்வைந்துந் தாது பாங்க்தங்களாம். இம்மூன்று ஐந்துகளும் அத்யாத்ம (ஆத்ம ஸம்பந்தமான)-ஐந்துகளென் றுரைக்கப்படும். "இவ்வாறு ஐவைந்தாக வகுத்த இவை யாவும் புலப்படுகிற ஜகத் யாவும் பாங்க்தமாக விளங்குகின்றன" என்றும், "பாஹ்ய பாங்க்தமானது (அதிபூத பாங்க்தமானது) அத்யாத்மகத்துடன்

கலந்து பூர்ணப்படுகிறது" (அஃதாவது கெட்டதைக் கொண்டு நல்லது விளங்கும் என்ற நியாயப்படிக்கு வெளிப்பட்ட பாங்க்த ஸ்வரூபத்தைக் கொண்டு அத்யாத்ம பாங்க்தத்தை அறிய வேண்டும்) என்றும், (வேதம் அல்லது) ரிஷி சொல்லியது. (இவ்வாறு பாங்க்த ஸ்வரூபமாகப் பிரம்ம மிருக்கிறதென் றறிகிற வன், பிரஜாபதியாகவே ஆகிவிடுகின்றான்.)

---

## அநுவாகம் VIII.

இப்பொழுது ஸர்வோபாஸனங்க பூதமாயிருக்கின்ற ஓங்காரத்தின் உபாஸனம் ஈண்டெடுத்துக் கூறப்படுகிறது. ஓங்காரம் பரப்பிரம்மமாகப் பாவிக்கப்பட் டுபாஸிக்கப்படவேண்டும். அது சப்தமாத்திரமா யிருந்தா லும், பராபர பிரம்மத்தை அடைவதற்கு ஸாதனமாக விருக்கின்றது. அது பிரம்மத்தின் பிடிப்பு—இருப்பிடமா யிருக்கிறது.

ஓம் என்ற சப்த ரூபத்தைப் பிரம்மமாக மனவினால் தியானிக் கவேண்டும்; ஏனெனில், இந்த ஜகத்தெல்லாம் ஓங்கார ஸ்வரூப மாக விருக்கிறது. (ஓம் என்ற சப்தத்தால் வியாப்தமாயிருக் கிறது.) மேலும் அஃது அநுக்ருதி (அஃதாவது ஒருவனை ஒரு காரியத்தைச் செய்யும்படி ஏவினால், அதற்கு அவன் ஓம் என்று மறுமொழி தரின், அங்ஙனமே செய்வே னென்று அங்கீகரித் துப் பேசுதல்); ஒருவனால் விளிக்கப்பட்டவன், ஓம் என்று கேட் கிறான்; தொடக்கத்தில் ஓம் என்று சொல்லி ஸாமத்தை கானஞ் செய்கிறார்கள்; ஓம் என்று சொல்லிப் பின் ருக்வேத சாஸ்திர மந்திரங்களைச் சொல்லுகிறார்கள்; யாகத்தில் அத்வர்யு ஓம் என்று பிரதிசம்ஸநத்தை உச்சரிக்கிறான்; பிரம்மா என்ற ருத்விக், ஓம் என்று உச்சரித்து அவன் காரியத்தைச் செய்கிறான்; ஓம் என்று உச்சரித்து அக்நி ஹோத்திரஞ் செய்கிறார்கள்; பிராமணன், தொடக்கத்தில் ஓம் என்று உச்சரித்துக்கொண்டு வேதாத்ய யனஞ் செய்ய ஆரம்பிக்கின்றான்; ஓங்காரத்தினால் பிரம்மத்தை யடைவோ மென்று கருதுகிறவன் அங்ஙனமே பிரம்மத்தை

படைகிறான். (ஓங்கார பூர்வமாய்த் தொடங்கப்பட்ட கிரியைகள் யாவும் பலவித்தியை யடைவதால் ஓங்காரத்தை பிரம்மமாக உபாஸித்தல் இன்றி யமையாதென்பது இந்த அநுவாகத்தின் முக்கிய தாத்பரியம்.)

---

## அநுவாகம் IX.

விக்ஞானத்தினால் ஸ்வராஜ்யமாகிற பிரபுத்துவம் வருமென்று கூறப் பட்டிருக்கின்றமையால் ச்ரௌத ஸ்மார்த்தங்களுக்கு அநர்த்த பாவம் வருமோ வென்று கருதி, அஃது உரித்தல்ல வென்றும், அந்தக் கர்மாக் களுக்குப் புருஷார்த்த ஸாதனமிருக்கிற தென்றும் இப்பொழுது நிரூபிக்கப் படுகிறது.

1. ருதம் (ருஜுமார்க்கம் அஃதாவது சாஸ்திர ரீதியாகவும், கிரமமாகவும் நடக்கும்படியான நிச்சய புத்தி); ஸ்வாத்யாயம் (வேதாத்யயனம்), அர்த்த ஞானத்துடன் அத்யயனஞ் செய் வது; ப்ரவசனம் (மறவாலிருக்கவுந் தர்ம விருத்திக்காகவும் அத்யயனஞ் செய்தல், அல்லது பிரம்ம யக்ஞக் கிரியை); இந்த மூன்றும் அநுஷ்டிக்கப்படவேண்டும். ஸத்யம் (ஸத்யமாய் நடத்தல், பேசுதல்) கைக்கொள்ளப்படவேண்டியது. (ஸத்யம் முதற்கொண்டு ஒவ்வொன்றுடனும் "ஸ்வாத்யாய பிரவசனங் கள் அநுஷ்டிக்கப்படவேண்டும்'' என்று கூட்டிச் சொல்லப்படு கிறது. ஏனெனில், இவ்விரண்டுங் கட்டாயம் அநுஷடிக்கப்பட வேண்டியவை யென்பதைக் காட்டும் நிமித்தம்); தபஸ் (கிருச்ராதி விரதங்கள்) செய்யப்படவேண்டும். தம: (பாஹ்யேந்திரிய நிக்ர ஹம்) செய்யப்படவேண்டும். சம: (அந்தரிந்திரிய நிக்ரஹம்) செய்யப்படவேண்டும். அக்நிகள் (அக்நி ஸம்பந்தமான கிரியை கள்) செய்யப்படவேண்டும், அக்நிஹோத்திரஞ் செய்யப்பட வேண்டும்; அதிதிகளைப் பூஜிக்கவேண்டும்; மாநுஷஞ் செய்ய வேண்டும் (லௌகிக வியவகாரம் அஃதாவது விவாக முதலான காரியங்களைச் செய்யவேண்டும்); பிரஜோத்பத்தி செய்யவேண் டும்; பிரஜன: பிறப்பித்தல், அஃதாவது ருதுகாலத்தில் பார்யையி னிடத்தில் பிரவேசித்தல்) செய்யவேண்டியது; பிரஜாதி (பௌத் திரோத்பத்தி—புத்திரனுக்கு விவாகஞ் செய்விப்பது முதலா

னவை) நடத்தவேண்டும்; ஸத்யமே கைக்கொள்ளற்பாலது என்று 'ராதீதரர்' கருதினர். தபஸே செய்யப்படவேண்டுவ தென்பது 'பௌருசிஷ்டி' யினுள்ளக்கிடக்கை. ஸ்வாத்யாயப் பிரவசனங்களே அநுஷ்டிக்க வேண்டியதென்பதும், அதே தபஸ் என்பதும் 'மௌத்கல்யர்' கொள்கை.

---

## அநுவாகம் X.

இப்பொழுது ஆரம்பிக்கப்படும் ஜபமானது, பிரம்ம வித்தியோத்பத்தி நிமித்தம் அத்யயனஞ் செய்யப்படவேண்டிய மந்திரம்.

1. "நான் ஸம்ஸார விருக்ஷத்தினுடைய பிரேரயிதா (அந்தர்யாமியா யிருந்து நடத்துகிறவன்); ஒரு மலையின் உச்சிபோல் என்னுடைய கீர்த்தி உயர்ந்திருக்கின்றது; பரிசுத்தமான ஞானத்தை (பிரம்மத்தை) மேலான காரணமாக உடையவனு யிருக்கிறேன்; ஸூரியனிட மிருக்கின்ற அமிருதமான ஆத்மதத்வம் போல் நான் ஆத்ம தத்வமாக விருக்கின்றேன்; பிரகாசமுள்ள தனம்போன்ற ஆத்ம தத்வமாக விருக்கின்றேன்; சோபநமான புத்தியுள்ளவனு யிருக்கிறேன்; மரண தர்மமில்லாதவனும், குறைவற்றவனுயு மிருக்கிறேன்" என்றது, பிரம்ம ஞானியாகிய 'த்ரிசங்கு' என்ற ருஷியின் வேதாநுவசனம். (ஆத்மா ஒன்றென்னும் அறிவை அடைதற்குரிய வசனம். இந்த மந்திரத்தைப் பிரம்ம வித்யார்த்திகள் ஜபிக்கவேண்டும்.)

---

## அநுவாகம் XI.

வேதாத்யயனஞ் செய்த பிறகு சிஷ்யனுக்குக் குரு செய்யும் உபதேசக் கிரமம் இப்பொழுது சொல்லப்படுகிறது. பிரம்ம விஞ்ஞானத்துக்கு முன் ச்ரௌதஸ்மார்த்த கர்மாக்கள் நியமமாகச் செய்யப்பட வேண்டு மென்ற பொருளு மெடுத்துரைக்கப்படுகின்றது. கர்மாக்களால் ஸம்ஸ்காரஞ் செய்யப்பட்ட விசுத்த ஸத்வமுடையவனுக்கே ஆத்ம ஞானமுண்டாகும். இங்கு ஞானோத்பத்தி நிமித்தஞ் செய்யப்படவேண்டிய நியமம் சொல்லப்படுகிறது. உபதேசம் எவ்விதமெனில் :—

1. வேதாத்யயநஞ் செய்த பிறகு குரு சிஷ்யனுக்கு ஆக்ஞாபிக்கின்றார் ; ஸத்யமுரை ; தர்ம வழியில் நட ; அத்ய யநத்தினின்றும் நழுவுத லடையாதே (அஃதாவது அத்யயநம் செய்யாம லிருக்காதே) ; குருவுக்குத் தக்ஷிணை கொடுத்து அவ ரிடத்தில் உத்திரவு பெற்றுக்கொண்ட பிறகு, பிரஜை யுண்டாக் கும் நூலை அறுக்காதே. (அஃதாவது கல்யாணஞ் செய்து கொண்டு கிருகஸ்தாசிரமத்தில் பிரவேசியாம லிருக்காதே.) ஸத் யத்தினின்றும் நழுவுத லடையாதே ; தர்மத்தினின்றும் நழுவா தே ; ஆத்ம ரக்ஷணத்தினின்றும் நழுவாதே ; ஐசுவரியத்தி னின்றும் நழுவாதே; ஸ்வாத்யாயப் பிரவசனங்களினிறும் நழுவுத லடையாதே.

2. தேவ பிதிரு கர்மாக்களினிறும் பிரமாதத்தை யடை யாதே ; மாதாவைத் தெய்வமாகப் பாவித்துக்கொண்டு உபாவஸி ; பிதாவைத் தெய்வமாகப் பாவித்து உபாவஸி; குருவைத் தெய்வ மாகப் பாவித்து உபாவஸி ; அதிதியைத் தெய்வமாகப் பாவித்து உபாவஸி ; எவை இகழப்படாதனவோ அக்கர்மாக்களைச் செய் ; எவை சிஷ்டாசார லக்ஷணங்க ளமையப்பெற் றிருக்கின்றனவோ அக்கர்மாக்களைக் கைக்கொள் ; மற்றக் கர்மாக்களைச் செய்யற்க ; நன்னடையுள்ள கர்மாக்களைச் செய் ; பிறவற்றைக் கொள்ளற்க.

3. எவர்கள் நமக்குள் சிரேயஸான பிராமணர்களோ அவர் களுக்கு வேண்டிய உபகாரம் புரி; கொடுப்பதைச் சிரத்தையுடன் கொடு ; அசிரத்தையுடன் கொடாதே; ஸ்ரீயுடன் கொடு; லஜ்ஜை யுடன் கொடு ; பயத்துடன் கொடு ; ஸ்நேகத்துடன் கொடு.

4. எந்தக் கர்மாவிலாவது, விருத்தியிலாவது உனக்கு ஆசங்கை நேரிடின் இவ்விருத்தியில், கர்மாவில், அக்காலத்துள்ள, அத்தேசத்துள்ள, யோக்யருங் குரூரமதியற்றவர்களுமான த்வி ஜர்கள் யாங்ஙனம் ஒழுகுகிறார்களோ அங்ஙனமே நீயும் நட ; நீ செய்த கர்ம தோஷத்தினால் யாதேனும் ஸம்பந்தப்பட்டிருப்பின் அவ்விஷயத்திலும் மேற்கண்டவாறு பெரியோர்கள் சொற்படியே நட : இதுவே ஆதேசம் (விதி) ; இதுவே உபதேசம் ; இதுவே

வேதோபநிஷத்; (வேத ரஹஸ்யம்); இதுவே அநுசாஸனம் (ஈசுவர வசனம்); இஃது இவ்விதமே உபாஸிக்கப்படவேண்டுவது; இதுவே உபாஸ்யம்.

---

## அநுவாகம் XII.

“சந்நோ மித்ர” என்றாரம்பிக்குஞ் சாந்தி சொல்லப்படுகிறது. இதன் பொருள் முதல் அநுவாகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

(பிரம்மசரிய, கிருஹஸ்த, வாநப்ரஸ்த, ஸந்யாஸம் என்ற நான்கு ஆசிரமங்களுளண்டு; ஒவ்வொரு ஆசிரமத்தி லிருக்கின்றவனுக்கும் பிரம்ம வித்யையில் அதிகாரம் உண்டு. உத்தமமான சிரேயஸாகிற மோக்ஷமானது, கேவலமாயிருக்கிற வித்யையினலேயே ஸித்திக்கின்றது: அஃதாவது கர்மாவினலன்று. கர்மாக்களெல்லாஞ் சித்த சுத்தி நிமித்தம் என்பது பாஷ்யகாரர் கொள்கை. பிரதிகக்ஷியையும் எடுத்து வாதித்து முடிவில் ஸித்தாந்தஞ் செய்திருக்கிறார்.)

---

# பிரம்மாநந்தவல்லீ

என்ற

# இரண்டாம் அத்தியாயம்

---

## அநுவாகம் I.

(இனிக் கூறப்புகும் பிரம்மவித்யாப் பிராப்திக் கிடையூறு நேரா வண்ணஞ் சாந்தி இங்குச் சொல்லப்படுகிறது.)

எங்களை (சிஷ்யனையும், குருவையும்) ரக்ஷணைபுரிக; எங்களுக்குப் போஜனஞ் செய்து தருக; எங்களுக்கு வித்யா விஷயத்தில் ஸாமர்த்தியத்தைத் தருக; தேஜஸ்விகளான எங்களால் பிரம்ம வித்யை அறியப்படுவதாகுக; எங்களுக்குள் ஒருவருக் கொருவர் துவேஷ புத்தி யுண்டாகாம லிருக்கட்டும்.

(கர்மாக்களுக்கு விரோதமின்றியுள்ள ஸம்ஹிதா முதலியன விஷயங்களான உபாஸனைகள் சொல்லப்பட்டன; உபாதியுடன் கூடின ஆத்மாவைப் பற்றியும், வியாஹிருதி மூலமாகவும் ஸ்வராஜ்ய பல வாயிலாகவும் எடுத்துரைக்கப்பட்டது; இப்பொழுது, ஸம்ஸாரபீஜத்தை நாசப்படுத்த மார்க்க மிருக்கின்றது. அந்தப் பீஜமாகிற அக்ஞானத்தை யகற்றும்பொருட்டும், உபாதியற்ற ஆத்ம தர்சனத்தின்பொருட்டும் இந்த வல்லீ ஆரம்பிக்கப் படுகிறது. பிரம்ம வித்யைக்கும் பிரயோஜனம் அக்ஞான நிவிருத்தி; பிறகு ஸம்ஸாரமில்லாமை; பிரம்ம வித்யையில் பிரவிருத்தி வரும்பொருட்டு முதலில் அதனுடைய பிரயோஜனம் எடுத்து விரிக்கப்படுகிறது.)

பிரம்மத்தை யறிந்தவன் பர வஸ்துவை யடைகிறான். (பிரம்ம மென்பது பிறகு சொல்லப்படுகிறது; பர வஸ்து வென்றால் பிரம்மந்தான்; பிரம்மத்தை யறிந்தவன் பிரம்மமாகவே ஆகிறான் என்பது தாத்பரியம்.) இப்பொருளில் இந்த (அடியில் கண்ட) "ஸத்யம், ஞானம், அநந்தம், பிரம்மா" வென்ற ருக்கு

சொல்லப்பட்டிருக்கிறது ; ஸத்யமாயும், ஞானமாயும், அனந்தமாயும் இருக்கின்ற எந்த வஸ்துவுண்டோ அதுதான் பிரம்மம்.

(ஸத்யமெனின், எந்த வஸ்து எந்த ரூபமாக நிச்சயிக்கப்படுகிறதோ அந்த ரூபம் மாறுதலடையாம லிருந்தால் அந்த வஸ்து ஸத்ய வஸ்து ; அஃதாவது எக்காலத்தும் எவ்விதத்தும் மாருமலிருக்கின்ற வஸ்து. ஞான மென்ருல், அறிவான வஸ்து. அநந்த மென்ருல், எது ஓரிடத்திலும் பிரிக்கப்படாம லிருக்கின்றதோ அந்தவஸ்து ; அஃதாவது, எது காலத்திஞலாவது, தேசத்திஞலாவது, வஸ்துவிஞலாவது அளக்கப் படாமல், அளவற்றதாயும் முடிவற்றதாயு மிருக்கிறதோ, அந்த வஸ்து.)

இந்தப் பிரம்மம், மேலான ஆகாசத்தில் (ஹிருதயாகாசத்தில்) இருக்கிற குஹையில் (புத்தியாகிற துவாரத்தில்) இருக்கின்றதாக எவன் அறிகின்ருனே, அவன் அந்த ஸர்வக்ஞனை பிரம்ம ரூபத்துடன் (பிரம்ம ஸ்வரூபமாகவே ஆகி) எல்லா போக்யங்களையும் அநுபவிக்கிருன். இப்படிப்பட்ட பிரம்மமாகிற ஆத்மாவிடத்தினின்றும், சப்த குண முள்ளதும், மூர்த்தத் திரவியங்களுக்கு இடங்கொடுப்பதுமான, ஆகாசம் (வெளி) உண்டாயிற்று. அந்த ஆகாசத்தினின்று, சப்தம், ஸ்பரிசம் இவ்விரண்டு குணங்களையுடைய வாயு (காற்று) உண்டாயிற்று. அந்த வாயுவினின்றும், சப்தம், ஸ்பரிசம், ரூபம் இம்மூன்று குணங்களையுடைய அக்நி (நெருப்பு) உண்டாயிற்று; அந்த அக்நியினின்றும், சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரஸம் இந்த நான்கு குணங்களையுடைய அப்பு (ஜலம்) உண்டாயிற்று ; அப்புவினின்றும் சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரஸம் கந்தம் இவ்வைந்து குணங்களையுடைய பிருதிவி (பூமி) உண்டாயிற்று ; பிருதிவியினின்றும் ஒஷதிகள் (மரம், செடி, கொடி, முதலியன) உண்டாயின ; ஓஷதிகளினின்றும் அன்னம் (உண்ணப்படுகிற வஸ்து) உண்டாயிற்று ; அன்னத்தினின்றும், ரேதஸ் (புருஷ வீரியம்) உண்டாயிற்று ; அவ் வீரியத்தினின்றும், புருஷன் (தலை, கை, கால் முதலியன அவயவங்களோடு கூடியிராநின்ற மனுஷ்ய பிராணி) உண்டாஞன்; அத்தகைய இப் புருஷன் அன்னரஸமயஞ யிருக்கின்றவன். அவனுக்கு இந்த சிரஸே சிரஸ் ; இந்த வலதுகை வலது சிறகு அல்லது பக்கம். இந்த இடது கை, இடது சிறகு அல்லது பக்கம் ; இந்த மத்திய தேஹ பாகம், ஆத்மா (மத்தியபாகம்) ; (இது நாபிக்குக் கீழுள்ள பாகம்),

வால் (பின்பக்கம்). இவ்விஷயத்தில் இந்த (அடியில்கண்ட) சுலோகம் சொல்லப்பட்டிருக்கிறது.

இனிச் சொல்லப்படப்போகிற பிராணாதிகளுக்குச் சிரஸ், பக்கம் முதலாயின என்ற கற்பிதமாய் வர்ணிக்கப்படுவதுபோல், இந்த ஸ்தூல சரீர புருஷனுக்கும், (அன்னமயகோசத்துக்கும்) வர்ணிக்கப்பட்டது.

---

## அநுவாகம் II.

"பிருதிவியை ஆசிரயித்துக்கொண்டிராநின்ற பிரஜைகளெல்லாம் அன்னத்தினின்றும் உண்டாயின ; அன்னத்தினாலேயே உஜ்ஜீவிக்கின்றன ; முடிவில் அன்னத்தையே அடைகின்றன. ஏனெனில் எல்லா பூதங்களுக்கும் அன்னம் பிரதனமாக விருக்கின்றது (காரணமாயிருக்கின்றது); ஆதல்பற்றி அஃது எல்லோருக்கும் ஔஷதம் (மருந்து)" (என்பது சுலோகத்தின் பொருள்). எவர்கள் அன்னத்தைப் பிரம்மமாக (அஃதாவது 'நாம் அன்னத்திலிருந்து உண்டானோம் ; அதனால் பிழைத்திருக்கின்றோம். அதனாலேயே செல்லப்போகிறோம்' என்று) கருதி, உபாஸிக்கின்றார்களோ, அவர்கள் எல்லா அன்னத்தையும் அடைகின்றார்கள். (ஸ்தூல சரீரம் பிரம்ம மல்ல. அங்ஙனம் நினைத்தால் அன்னம் மாத்திரம் கிடைக்கும் ; வேறு மோக்ஷாதிபலம் கிடைக்காதென்பது பொருள்.)

எது உண்ணப்படுகின்றதோ, அல்லது எதைப் பூதங்கள் உண்கின்றனவோ அஃது அன்ன மென்று கூறப்படுகிறது. அன்னமயம் முதல் ஐந்து கோசங்களையுந் தீட்டிக்காட்டி, இவைகள் அக்ஞானத்தால் ஆத்மாவாகக் கற்பிக்கப்படுகின்றனவே யன்றி உண்மையாக வில்லை யென்றெடுத்து விஸ்தரிக்கவேண்டியதற்காக, மேன்மேலும் பிராணமயாதி கோசங்கள் எடுத்துச் சொல்லப்படுகின்றன). இந்த அன்னமயத்தைக்காட்டிலும் வேறாயும் உள்ளிருப்பதாயு முள்ள பிராணமய ஆத்மா (தேஹம், கோசம்). இருக்கிறது ; இந்த பிராணமயத்தினால் (துருத்தி வாயுவினால் நிரம்பி யிருத்தல் போல) அன்னமய சரீரம் நிரம்பியிருக்கிறது; பிராணமய சரீரம், இந்தப்படி புருஷாகிருதியை அடைந்திருக்கிறது ; யாங்ஙன மெனில், அன்னமயத்தினுடைய ஆகிருதியை

அநுஸரித்திருக்கிறது ; (அஃதாவது சொந்தத்தில் வடிவமில்லை) ; (அதற்கு, இந்தப்படி சிரஸ் முதலியன கற்பிக்கப்படுகின்றன). பிராண வாயு-சிரஸ் ; வியானவாயு-வலது பக்கம் ; அபானவாயு-இடது பக்கம் ; ஆகாசமென்ற ஸமானவாயு-மத்தியபாகம் ; பிருதிவி என்ற உதான வாயு-அடிப்பக்கம். இவ்விஷயம் மேற்கூறப்புகும் சுலோகத்தால் நன்கு விளங்கும்.

---

## அநுவாகம் III.

"தேவர்கள் (அக்நி முதலியோர் ; அத்யாத்மமாகப் பொருள்படும் பொழுது, இந்திரியங்கள்), பிராணனை யனுஸரித்து (வாயுவாக இருந்து) தத்தந் தொழிலை நடத்துகின்றனர் ; (அஃதாவது வாயுவம்சம் இராவிடின் தத்தந் தொழில் நடைபெறாது) ; மேலும் மனிதர்களும், பசுக்களும் பிராணனைக்கொண்டு பிழைத்திருக்கின்றார்கள் ; பிராணன் பிராணிகளுடைய ஆயுள் ; ஆதல் பற்றி அஃது எல்லோருடைய ஆயுளாகவும் சொல்லப்படுகிறது' என்பது. பிராணனை இவ்வாறறிந்து யார் உபாஸிக்கின்றனரோ அவர்களுக்குப் பூர்ணாயுளுண்டு (அபமிருத்தியுவில்லை). இந்தப் பிராணமயகோசம், முந்தின அன்னமயத்தின் சரீர ஸம்பந்தமான ஆத்மா. இந்தப் பிராணமயத்தைக்காட்டிலும் வேறாயும் அந்தர்க்கதமாயுமுள்ள மனோமயகோச மிருக்கிறது ; இதனால் முந்திய பிராணமயம் நிரம்பியிருக்கிறது ; இதனுடைய ஆகிருதி முந்தியதை அநுஸரித்திருக்கிறது ; இதற்கு யஜுர்வேதம்-சிரஸ் ; ருக்குவேதம்-வலதுபக்கம் ; ஸாமவேதம்-இடதுபக்கம் ; ஆதேசம்-(வேதத்திலுள்ளதொரு விசேஷ பாகம்) மத்திய பாகம் ; அதர்வணவேதம்-அடிப்பக்கம் ; இவ்விஷயமாக அடியிற்கண்ட சுலோகஞ் சொல்லப்படுகிறது.

---

## அநுவாகம் IV.

'எதைக் கடக்கமுடியாமல் வாக்குகள் மனதுடன் திரும்பி வந்துவிட்டனவோ அந்தப் பிரம்மத்தினுடைய ஆநந்தத்தை யறிந்தவன் எவ்விதத்தும் பயப்படமாட்டான்" என்பதாம்.

இந்த மனோமயகோசம் முந்திய பிராணமயத்தின் சரீர ஸம்பந்தமான ஆத்மா. இதைக்காட்டிலும் வேறாயும் அந்தர்க்கத மாயுள்ள விக்ஞானமய கோசமிருக்கிறது. இதனால் முந்திய மனோ மயம் நிரம்பி யிருக்கிறது. இதன் ஆகிருதி முந்திய தன் வடிவை அநுஸரித்ததாகும்.

இதற்குச் சிரத்தை-சிரஸ்; (அஃதாவது விக்ஞானத்துடன் கர்ம செய்யவேண்டும்; அக் கர்மாவுக்குச் சிரத்தை முக்கியம்; ஆதல்பற்றியே சிரத்தை சிரம்போல் முதன்மையாக விருக்கிறது); ருதம்-வலது பக்கம்; ஸத்யம்-இடது பக்கம்; யோகம் (புத்தி, அல்லது ஸமாதானம்)-மத்தியபாகம்; மஹஸ்தத்வம் (பரப் பிரம்மத்திடமிருந்து முந்தி உண்டான தத்வம்)-அடிப்பக்கம் (விக்ஞானாதிகளுக்குக் காரணம்). இவ்விஷயமாகப் பின்வரும் சுலோகங் கூறப்படுகிறது.

---

## அநுவாகம் V.

"விக்ஞானமுள்ளவன் யக்ஞத்தைச் செய்கிறான்; மற்றக் கர்மாக்களையுஞ் செய்கிறான்; தேவர்கள் விக்ஞானத்தை (தொடக்கத்திலுண்டான விக்ஞானத்தைப்) பிரம்மமாக உபாஸிக் கிறார்கள்; அவ்வித மறிந்தவன் பிரமாதத்தை யடையமாட்டான்; பாபங்களை யெல்லாம் போக்கடித்து எல்லாக் காமங்களையு மடை வான்" என்று.

இது முந்தின மனோமயத்தின் சரீர ஸம்பந்தமான ஆத்மா. இதைக்காட்டிலும் வேறாயும் அந்தர்க்கதமாயுள்ள, ஆனந்த மயகோசமிருக்கிறது. இதனால் முந்திய விக்ஞானமயகோசம் நிரம்பி யிருக்கிறது. இதன் ஆகிருதி முந்திய தன் வடிவை அநு ஸரித்திருக்கிறது: இதற்குப் பிரியம் (ஒரு வஸ்துவைப்பற்றும் ஆசை)-சிரஸ் (ஆனந்தத்துக்குப் பிரியம் முக்கியமாயிருப்பதால் சிரஸ்போல முதன்மையானது); மோதம் (வஸ்து லாபத்தினால் உண்டாகும் ஸந்தோஷம்)-வலது பக்கம்; பிரமோதம் (அதி ஸந்

தோஷம்)-இடது பக்கம்; ஆநந்தம் (ஸுகாநுபவம்)-மத்திய பாகம்; பிரம்மம் (இவைகளுக்குக் காரணமாயிருக்கின்ற பரப் பிரம்ம வஸ்து)—அடிப்பக்கம்; இவ்விஷயமாய் இனிக்கூறப்படுஞ் சுலோகம் அமைந்திருக்கின்றது.

---

அநுவாகம் VI.

"பிரம்மத்தை இல்லையென்றறிப்பவன், அஸத்தாக (அஸாது வாக) இருக்கிறான்; உண்டு என்று நினைப்பவன் ஸத்தாக (ஸாது வாக) இருக்கிறான்" என்று.

இது முந்தின விக்ஞானமயத்தினுடைய சரீர ஸம்பந்தமான ஆத்மா. பிறகு, இப்பொழுது இதை யநுஸசரித்து சிஷ்யன் கேட்கவேண்டிய கேள்விகளிருக்கின்றன; அவைகளான:— "அவித்வானும் (பிரம்மஞானமில்லாதவனும்) இவ்வுலகத்தி லிருந்து போய் அந்த லோகத்தை பரமாத்மாவைச் சேருகிறானா? வித்துவான் மட்டுஞ் சேருகிறானா?" இந்தக் கேள்விக்கு மறுமொழிசொல்வதற்காக மேல் கிரந்தம் ஆரம்பிக்கப்படுகிறது.)

அந்த ஆத்மா, (பரமாத்மா) மிகுதியாக ஆவோம், உண்டா வோம் என்று இச்சித்தார்; ஸ்ருஷ்டிக்கிரமத்தையும், ஸ்ருஷ்டிக்கப் படவேண்டிய ஜகத்தை யுண்டுபண்ணுகிற விதம் முதலானவை களைப்பற்றியும் யோசித்தார்; அங்ஙனம் யோசித்து, இதோ காணப்படுகின்றவை, இன்னும் எவை யெவை யுண்டோ அவை கள் எல்லாவற்றையும் ஸ்ருஷ்டித்தார்; அங்ஙனம் ஸ்ருஷ்டித்து அவற்றிலேயே பிரவேசித்தார்.

இவ்விடத்தில் அவரே ஜகத்தாகப் பரிணமித்திருக்குங்கால் அவர் வேறாகவும் ஜகத் வேறாகவும் காட்டி அதில் அவர் பிரவேசித்தாரென எங்ஙனம் கூறற்பாலதாகும்? அஸம்பாவித மென்று வாதித்துக் கடைசியில் பாஷ்யத்தில் ஸமாதானம் சொல்லப்பட்டிருக்கிறது. அஃது யாதெனில்:— "ஸர்வ விகற்பத்திற்கும் ஆஸ்பதமா யிருக்கின்ற நிர்விகல்ப வஸ்துவாகிய பிரம்மமானது பிராணிகளின் குஹையில் (பஞ்சகோசங்களின் வழியாய்) தோற்றப்படுகிற தென்பதை நிரூபிக்கவேண்டி, ஜலத்தில் ஸூரியப் பிரதி

பிம்பத்தை நாம் பார்க்குங்கால், ஸூரியன் ஜலத்தில் பிரவேசித்திருப்ப தாகக்காண்பதுபோல, பிராணிகளிடத்தில் அவர் பிரவேசித்திருப்பதாகக் கற்பிக்கப்பட்டிருக்கிறதே யன்றி, ஜகத் வேறுபோலவும் தான் வேறு போலவும், வீட்டில் ஒரு மனிதன் பிரவேசிப்பதுபோல ஜகத்தில் தான் பிரவேசித்ததாகவும் பொருள்படுத்தக்கூடாது.

அப்படிப் பிரவேசித்து மூர்த்த வஸ்துக்களாயும், அமூர்த்த வஸ்துக்களாயுங் குறிப்பிட்டுச் சொல்லக்கூடிய வஸ்துக்களாயும், அப்படியல்லாத வஸ்துக்களாயும், ஆசிரய வஸ்துக்களாயும், அநாசிரய வஸ்துக்களாயும், புத்தியுள்ளவைகளாயும், இல்லாதவைகளாயும், வியஹவார ஸம்பந்தான ஸத்யவஸ்துவாயும், அந்த ஸம்பந்தமான பொய் வஸ்துவாயும், பரமார்த்த ஸத்ய வஸ்துவாயும், மற்றுமுள்ள யாவுமாயு மாகிவிட்டது. இதுவே ஸத்ய வஸ்து வென்று சொல்லப்படுகிறது. இவ்விஷயத்தில் இதனடியில் வரும் மந்திரம் உளது:

---

## அநுவாகம் VII.

"இந்த ஜகத், ஸ்ருஷ்டிக்கப்படு முன்னர் அஸத்தாக விருந்தது. (நாமரூப விசேஷங்களால் விகாரப்படாமல், அவ்வியாகிருத ரூபமாய், பிரம்மமாக விருந்தது.) அதினின்றும் ஸத் உண்டாயிற்று (நாமரூப விசேஷங்களால் விகாரப்பட்ட வியாகிருத ரூபமான ஜகத் உண்டாயிற்று.) அந்த அஸத், தன்னை ஸத்தாகத் தானே செய்துகொண்டது; ஆகையால் அது (பிரம்மம்) 'ஸுகிருதம்' என்று சொல்லப்படும். (ஸுகிருத மென்றால் ஸ்வயம் கர்த்தா, அல்லது புண்ணியம்)" என்று.

இது (இந்தப் பிரம்மவஸ்து) ஸுகிருதமாக விருப்பதால், ரஸமாய் (மாதுர்ய ரஸ பதார்த்தமாய்) இருக்கிறது; அந்த ரஸத்தை யடைந்தவனுக்கு ஆநந்த முண்டாகும்; அது ஹிருதயாகாசத்தில் ஆநந்த ரூபமாக விருக்கிறது. அஃது அங்ஙன மிராவிடில் பிராணபாந விருத்திகளை உண்டுபண்ணுவது யார்? அஃது உலகத்தை ஸுகப்படுத்துகிறது; எப்பொழுது ஒரு ஸாதகன், இத்தகைய காணப்படாததாயும், சரீர மில்லாததாயும், இன்ன தென்று

குறிப்பிட்டுப் பகரக்கூடாததாயும், குறிப்பிட இருப்பிடமில்லாத தாயு யிருக்கிற ஆத்மா விடத்தில் அச்சமற்று (தைரியமாய்) தன்னை நிலைநாட்டுகிருனே அப்பொழுது அவன் அபயத்தை அடைகிருன்; எப்பொழுது ஒருவனுக்குத் தான் வேறு, ஆத்மா வேறு என்ற பேதபுத்தி உண்டாகிறதோ, அப்பொழுது அவனுக்குப் பயமுண்டு; அவன் (தெரிந்தவனுக விருந்தபோதிலும் இவ் விதம் பேதமாய் எண்ணுகிறவனுக்குப் பயமுண்டு. (அஃதாவது ஜகத் யாவும் பயமுள்ளது). இவ் விஷயத்தில் இதனடியிற் கண்ட சுலோகமுள்ளது.

---

அநுவாகம் VIII.

"அவரிடமிருந்து உண்டாகிற பயத்தினல் காற்று வீசுகிறது; ஸூரியன் உதயமாகிருன்; அக்நியும் இந்திரனும், ஐந்தாவதாகிய மிருத்யுவும் அவரவர் காரியங்களைச் செய்கின்ருர்கள்" என்று.

(இவர்களெல்லோரும் ஸ்வயம் ஈசுவரனுகவே யிருந்தாலும், ஒரு பயத்தால் ஏவப்படுகிருர்கள்; அப் பயத்திற்குக் காரணம் ஆநந்த மாகிய பிரம்ம வஸ்து; அந்த ஆநந்தம் எப்படிப்பட்டதென்று இங்குச் சொல்லப்படுகிறது. ஆநந்தம் இப்பொழுது விசாரிக்கப்படுகிறது; விஷய விஷயி ஸம்பந்தமாயிருக்கிற லௌகிக ஆநந்தமா? அல்லது ஸ்வாபாவிகமாக வுள்ள பிரம்மாநந்தமா? வென்று.)

பிரம்மாநந்தம் தெரிய வேண்டிய நிமித்தம், முதலில் உத்கிருஷ்டமாயும், பாஹ்ய அத்யாத்மக ஸாதன ஸம்பத்தி நிமித்தமாயு மிருக்கிற லௌகிக ஆநந்தம் எடுத்துக் கூறப்படுகிறது; பிரவிலித்தமாகவுள்ள இதை யறிவதால், ஒழிவடைந்த விஷய புத்திக்குக் கோசரமாயிருக்கிற பிரம்மாநந்தத்தை யறியக்கூடும்; லௌகிக ஆநந்தமும் பிரம்மாநந்தத்தினேர் அம்சம்; மனுஷ்யாநந்தம் தொடங்கி அதற்குமேல் உத்கிருஷ்டமான ஒவ்வொரு ஆநந்தத்தையும் எடுத்துக்காட்டி முடிவில் பிரம்மாநந்தம் சொல்லப்படுகிறது.

யௌவனம், ஸாதுத்தன்மை, வேதாத்யயனம், ஏவல், த்ருடதைரியம், பலம், இப்பூமி முழுவதுமாளும்படியான சக்தி,

பூர்ண திரவியம் முதலியனவுள்ள வொரு மனிதனுடைய ஆநந்தம் மானுஷ்யாநந்தமென்று கூறப்படும்; இவ்வாநந்தம் நூறு பங்கு கொண்டது மனுஷ்யகந்தர்வனுடைய ஆநந்தம்; இவ்வாநந்தம் வேதார்த்தத்தை யறிந்தவனும், காமத்திற் கட்டுண் டுழலாதவனுயு மிருக்கிற பிரம்மவித்துக்கு முண்டு; (இங்ஙனம் இனிக் கூறப் படும் ஒவ்வோர் ஆநந்தமும் பிரமமவித்துக்கு முண்டு); (மனிதனுயிருந்தபோதிலும், கர்மவித்யா விசேஷங்களினுல் அந்தர்த்தானுதி சக்தியுள்ளவனுயும், ஸூக்ஷ்ம காரிய காரணனுயும், கந்தர்வத்தை யடைந்தவனுயுமுள்ள மனிதனுக்கு, மனுஷ்ய கந்தர்வனென்று பெயர். இப்படிப்பட்டவனுடைய (சித்தப்ரஸாதம் விசேஷாநந்த கரமாக விருக்கும்). இப்படிப்பட்ட ஆநந்தம் நூறு பங்கு கொண்டது தேவகந்தர்வனுடைய (ஜாதி கந்தர்வனுடைய) ஆநந்தம்.

நீடூழிகாலம் பிதிருலோகத்திலுள்ள பிதிருக்களுடைய ஆநந்தம் அதிலும் நூறு மடங்கு கொண்டது; ஸ்மார்த்த கர்ம விசேஷத்தால் தேவர்களின் ஸ்தானத்தில் வந்தவர்களுடைய ஆநந்தம் அதனிலும் நூறு மடங்கு கொண்டது; அக்நிஹோத்ராதி வைதிக கர்மாவால் தேவத்வத்தை யடைந்தவர்களுடைய ஆநந்தம் அதனிலும் நூறு மடங்கு கொண்டது; ஹவிஸைப் புசிக்கிற முப்பத்துமூன்று கோடி தேவர்களுடைய ஆநந்தம் அதனிலும் நூறு மடங்கு கொண்டது; மேற்படி தேவர்களுக்குப் பதியாயுள்ள இந்திரனுடைய ஆநந்தம் அதனிலும் நூறு மடங்கு கொண்டது; இந்திரனுக்குக் குருவாயுள்ள பிருஹஸ்பதியினுடைய ஆநந்தம் அதனிலும் நூறு மடங்கு கொண்டது; பிரஜாபதியினுடைய (த்ரிலோக சரீரியாகிய, விராட்புருடனுடைய) ஆநந்தம் அதனிலும் நூறு மடங்குகொண்டது; பிரம்மத்தினுடைய (ஸூத்ராத்மாவினுடைய) ஆநந்தம் அதனிலும் நூறு பங்கு கொண்டது. அந்தப் பிரம்மம் புருஷனிடத்தில் ஹிருதய குஹையி லிருக்கிறது; ஆதித்யனிடத்திலிருக்கிறது; இப்படி யறிந்தவன் இந்த லோகத்தை (தேகத்தை) விட்டு, இந்த அன்னமயமான ஆத்மாவைக் கடக்கிறுன்; (அன்னமயகோசத்தை முதலில் அறிந்து, அதை ஆத்மா வல்லவென்று தள்ளிவிடுகிறுன்.) அப்படியே பிராணமயம், மனோ

மயம் விக்ஞானமயம், ஆநந்தமயம் இவைகளைக் கடக்கின்றான்; இவ்விஷயத்தில் அடியில் கண்ட சுலோகம் இருக்கிறது.

---

## அநுவாகம் IX.

"எதனிடத்தி னின்றும் வாக்குகள் மனத்துடன் (விக்ஞானத்துடன்) எட்டாமல் திரும்பி விடுகின்றனவோ, அந்த பிரம்மத்தை யறிந்த வித்வானுக்கு எதிலிருந்தும் பயமில்லை" என்று. இப்படிப்பட்ட வித்வானை, புண்ணியஞ் செய்யாமையும் பாபஞ் செய்தலும் அவதிக்குட்படுத்தமாட்டா; ஏனெனில், இப்படி யறிந்த வித்வான் புண்ணியம், பாபம் இவ்விரண்டையுந் தன்னாத்மாவாகப் பார்க்கிறான்; அஃதாவது, தான்மாத்திரம் எஞ்சிநின்று, மேற்படி இரண்டையுந் த்வம்ஸஞ் செய்கிறான்; இதுதான் உபநிஷத் (ரஹஸ்யம்).

"ஸஹ நாவவது" என்ற சாந்தி சொல்லப்படுகிறது.

---

# பிருகு வல்லி

என்ற

## மூன்றாவது அத்தியாயம்

---

### அநுவாகம் I.

"ஸஹ நாவவது" என்ற சாந்தி சொல்லப்படுகிறது; (மேற்சொன்ன படி அறிந்தவனுக்கு) புண்ணிய பாபங்கள் ஜன்மாரம்பத்தைப் பயக்க மாட்டா வென்று முன் வல்லியில் விவரிக்கப்பட்டு, பிரம்வித்யா முடி வெய்தியது. இப்பொழுது அந்தப் பிரம்மவித்யைக்கு ஸாதனமான தபஸ் (ஏகாக்ரசித்தத்தோடு பரியாலோசனை செய்து பாஹ்யேந்திரியங்களை அடக்கிப், பிரம்ம விசாரத்தில் புத்தியை நிலைநிறுத்துவது) கூறப்படுவதோடு, அன்னமயாதி விஷயங்களும் உபாஸனைகளுஞ் சொல்லப்படுகின்றன.

(அடியில் கண்ட கதை வித்யாஸ்துதியின்பொருட்டுச் சொல்லப்படுகிறது); வருணனுடைய புத்திரனை பிருகுவென்ற ஒரு ரிஷி, தன் பிதாவிடஞ் சென்று, "பிரம்மத்தைப்பற்றி எனக் கெடுத்துரைக்க வேண்டும்" என்று கேட்டார்; (பிதா சொல்லு கிறார்.) "சரீரம், பிராணன், சக்ஷுஸ், சுரோத்திரம், மனஸ், வாக் முதலியன பிரம்மத்தை யறியும் வழிகள்; மேலும், பிரம்மத்தின் லக்ஷண மென்னவெனில், இந்தப் பிரம்மாதி ஸ்தம்ப பரியந்த முள்ள பூதங்கள் எதினின்று முண்டாயினவோ, உண்டானவை எதனால் பிழைத்திருக்கின்றனவோ, நாசகாலத்தில் எதனிடஞ் சென்று லயமடைகின்றனவோ, அது பிரம்மம்; (இப்படிப்பட்ட பிரம்மத்தை, சரீராதி வாயிலாக அறியவேண்டு மென்பது தாத்பரியம்): அதைப் பிரம்மமென் றறிய இச்சை கொள்க." இதைக் கேட்ட பிருகு தபஸ் செய்யத் தொடங்கினார் (ஏகாக்ரசித்தராக விருந்து ஆலோசித்தார்.)

---

### அநுவாகம் II.

அன்னத்தை பிரம்மமென் றறிந்தார்; ஏனெனில், அன்னத்தினால் இப்பூதங்க ளுண்டாயின; அதனால் பிழைத்திருக்கின்றார்

கள்; அதிலேயே சென்றடைகிறார்கள். இங்ஙன மறிந்து, மீண்டும் யோசித்துப் பார்த்து (அன்னம் உத்பத்தியாகி நாசமடையுந் தன்மையுளதாதலால் அது பிரம்மமாகமாட்டாது என்று ஆசங்கையுற்று) மீண்டும் பிதாவிடத்திற் சென்று, "பிரம்மத்தைப்பற்றிக் கூறுக" வென்று வினவினர். (பிதா சொல்லுகிறார்) தபஸினால் பிரம்மத்தை யறிய இச்சைகொள்; அதே பிரம்மம். (அஃதாவது, தபஸினாலேயே பிரம்மத்தை யறியவேண்டியது. செம்மையாக யோசித்துப் பார்க்கப் பார்க்கத் தெரியும்.) இதனைக் கேட்ட பிறகு மீண்டும் பரியாலோசிக்க லாயினர்.

---

## அநுவாகம் III, IV, V, VI.

பிராணனை பிரம்மமென் றறிந்தார்; இவ்வாறு மனம், விஞ்ஞானம், ஆநந்தம் இவைகளை யொன்றன்பின் னொன்றாக வறிந்தார். (அதற்குத் தக்கபடி இந்நான்கு அநுவாகங்களையும் இரண்டாவது அநுவாகம்போல் பொருள்படுத்தவேண்டும்.) ஆறாவது அநுவாகத்தி னிறுதியில் சுருதி சொல்லுவதாவது): இந்தப் பார்கவீ வாருணீ வித்யையானது, ஹிருதயாகாச குஹையில் பிரதிஷ்டிதமா யிருக்கிறது. (அஃதாவது அந்த விடத்திற் காணப்படும் பிரம்மத்தைப் பற்றி இங்கு விசாரிக்கப்படுகிறது.) இவ்விதமறிந்தவன் பிரம்மாகவே ஆகிவிடுகிறான். அன்னமுள்ளவனாகவும் அன்னத்தைப் புஜிக்க தீப்தாக்நியுள்ளவனாகவும், மஹா புருஷனாகவும், பசுக்கள், பிரஜை, கீர்த்தி இவைகளுடன் கூடியவனாகவும் ஆகிவிடுகிறான்.

---

## அநுவாகம் VII.

(அன்னத்தின் வாயிலாகப் பிரம்ம விஞ்ஞானம் உண்டாவதால்) அன்னத்தை நிந்திக்கக்கூடாது; அது விரதமாக உபதேசிக்கப்படுகிறது; பிராணனே அன்னமயமாயும், சரீரம் அன்னத்தைக் கொடுப்பதாயு மிருக்கிறது; பிராணன் சரீரத்தில் பிரதிஷ்டிதமாயும், சரீரம் பிராணனிற் பிதிஷ்டிதமாயு மிருக்கிறது, (ஒன்

திற்கு மற்றொன்று ஆதாரம்) ; ஆனதால் அன்னம் அன்னத்திலே பிரதிஷ்டிதமாக விருக்கிறது. இப்படி யறிந்தவன் பிரஜை, பசுக்கள், கீர்த்தி இவைகளுடன் கூடியவனாக ஆகிவிடுகிறான்.

---

## அநுவாகம் VIII.

அன்னத்தைப் புறக்கணித்தல் கூடாது ; அது விரதம் ; ஜலமே அன்னம் ; ஜ்யோதிஸ் அன்னத்தைக் கொடுக்கிறது ; ஜலத்தில் ஜ்யோதிஸும், ஜ்யோதிஸில் ஜலமும் பிரதிஷ்டிதமா யிருக்கிறது. ஆனதால், அன்னம் அன்னத்திற் பிரதிஷ்டிதமாக விருக்கிறது ; இப்படி யறிந்தவனுக்குப் பலன் முன் அநுவாகத்திற் கூறியவாறு.

---

## அநுவாகம் IX.

அன்னத்தை மிகுதிப்படுத்தவேண்டும் (பற்பல விதமாக உபாஸிக்கவேண்டும்) ; அது விரதம் ; பிருதிவியே அன்னம் ; ஆகாசம் அன்னத்தைக் கொடுக்கிறது ; அதில் இதுவும் இதில் அதுவும் பிரதிஷ்டிதம் ; இப்படி யறிந்தவனுக்குப் பயன் முன் அநுவாகத்திற் கூறியது போன்று.

---

## அநுவாகம் X.

1. வீட்டில் வஸிக்க வந்த எவனையுந் தள்ளிவிடக்கூடாது. (வாஸங் கொடுக்கும்பொழுது அன்னமும் அவசியங் கொடுக்க வேண்டியது.) இது விரதம் ; ஆனதால், எவ்விதமாவது ஏராளமான அன்னத்தை ஸம்பாதிக்கவேண்டும் ; அன்னங் கேட்டவனுக்கு இல்லையென்று சொல்லக்கூடாது; ஸித்தமா யிருக்கிறதென்று சொல்லவேண்டும். அன்னத்தினுடைய மாஹாத்மியம் இன்னுஞ் சொல்லப்படுகிறது : எவ்விதம் எக்காலத்தில் தானஞ் செய்கிறானோ, அவ்விதம் அவ்வக்காலத்தில் அதற்குக் தகுந்த பலன் கொடுப்பவனுக்குக் கிடைக்கும் ; யாங்ஙன மெனில், பாலப்

பருவத்தில் அல்லது முக்கிய விருத்தியோடு அன்னங் கொடுத்தால் அப்படியே இவனுக்குத் திரும்பக் கிடைக்கும் ; அங்ஙனமே, மத்யம வயதிலும் வார்த்தக வயதிலும் இவ்விதஞ் செய்தவனுக்குப் பலன் மேற்கூறியதுபோல. இப்படி அறிந்தவனுக்கும் பயன் மேற்கண்டவாறு. (இப்பொழுது பிரம்மத்துக்கு உபாஸநாப் பிரகாரஞ் சொல்லப்படுகிறது.)

2-6. வாக்கில் க்ஷேம ரூபமாகப் பிரம்மம் பிரதிஷ்டிதமாயிருக்கிறதென்று உபாஸிக்கவேண்டும் ; (க்ஷேமம், தேடியதைப் பாதுகாத்தல்) ; பிராணவாயு விடத்திலும், அபானவாயு விடத்திலும், யோகமாயும், க்ஷேமமாயும், பிரதிஷ்டிதமாயு மிருக்கிறதென்று உபாஸிக்கவேண்டும், (யோகமென்றால், இல்லாததை ஸம்பாதித்தல்); ஹஸ்தங்களில் கர்மரூபமாக விருக்கிறதென்று உபாஸிக்கவேண்டும் ; பாதங்களில் கதி ரூபமாகவும், வாயுவில் விமுக்திரூபமாயும் உபாஸிக்கவேண்டும் ; இவை மனுஷ்ய ஸம்பந்தமான ஞானங்கள். இனி தேவஸம்பந்த ஞானங்கள் :--மழையில் திருப்தாத்மாகவும், மின்னலில் பல ரூபமாகவும், பசுக்களில் யசோரூபமாகவும், நக்ஷத்திரங்களில் ஜ்யோதீரூபமாகவும், உபஸ்தத்தில் புத்ராமிருதமாகிய ஆநந்த ரூபமாகவும், ஆகாசத்தில் ஸர்வமாகவும் பாவித்து உபாஸிக்கவேண்டும் ; இவ்வாறு பிரதிஷ்டா குணோபாஸனத்தால், பிரதிஷ்டாவானாக (பிரம்ம நிலைவந்தவனாக) ஆகிவிடுகிறான். பிரம்மத்தை மஹத்வ குணமாக உபாஸித்தால் மஹானாக ஆகிவிடுகிறான் ; அதை மனமாக உபாஸித்தால் மனன ஸாமர்த்ய முள்ளவனாகிவிடுகிறான் ; அதை "நம:" என்று உபாஸித்தால் வணக்கக் குணமுள்ளவனாகிவிடுகிறான் ; காமங்களெல்லாம் அவனுக்கு வணங்கி வருகின்றன ; அதைப் பிரம்மமாக உபாஸித்தால், பிரம்ம குணமுள்ளவனாகிறான்; பிரம்மத்தினுடைய பாய்மரமாகிய வாயுவை ஆத்மாவான ஆகாசமாக உபாஸித்தால் அவனுடைய சத்துருக்களும், அப்பிரியர்களும் நாசமடைகிறார்கள் ; அந்தப் பிரம்மம் இந்தப் புருஷனிடத்திலும், ஆதித்யனிடத்திலு மிருக்கிற ஒருவரே.

இப்படி யறிந்தவன் இந்த லோகத்தைவிட்டு, அன்னமயாதிகளை வரிசையாகக் கடந்து, காமாந்நியாகவும், (எல்லா இச்சைகளையும் அடைந்தவனாகவும்), காம ரூபியாகவும், இந்தப் பூமி

முதலிய லோகங்களில் ஸஞ்சரித்தும், இந்த அடியில் கண்ட ஸாமத்தைக் காநம்பண்ணிக்கொண்டும் ஸுகமாயிருக்கிறான். ஸாம என்றால், பிரம்மம்; எல்லாம் பிரம்மமென்று அறிந்து கிருதார்த்தனா யிருக்கிறான்.)

(அந்த ஸாம யாதெனில்) "அஹோ (ஆச்சரியம்) (மூன்று தடவை சொல்லுக); நான் அன்னம் (மூன்று தடவை); நான் அன்னாதன் (மூன்று தடவை); நான் சுலோககிருத் (சேதனமுள்ளவன்) (மூன்று முறை); நான் ஜகத்துக்கு முந்தி உண்டானவன்; தேவர்களுக்கும் முந்தினவன்; பிராணிகளுக்கு மத்தியிலிருப்பவன்; எவன் என்னை அன்னமாகப் பாவிக்கிறானோ அவன் என்னை ரக்ஷிக்கிறான்; நான் அன்னத்தை உண்ணுகிறவனுக்கு அன்னங் கொடுக்கிறேன் (இதனால் அன்னமும், போக்தாவும் எல்லாம் நானே என்பது பொருள்); நான் எல்லாப்புவனமாயுமிருக்கிறேன்; நான் ஆதித்யன்போல் ஜ்யோதிஸ் உள்ளவன்." இப்படி யறிந்தவனுக்குப் பலன் முன் சொன்னதுபோலவே.

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:

---

தைத்திரீயோபநிஷத் முற்றிற்று.

---

## சாந்தி

(இனிச் சொல்லப்படப்போகிற பிரம்ம வித்யா ப்ராப்திக்கு இடையூறு நேராவண்ணஞ் சாந்தி சொல்லப்படுகிறது.)

எங்களைக் (சிஷ்யனையும், குருவையும்) காக்க. (பரமாத்மா) எங்களுக்குப் போஷணை தருக. எங்களுக்கு வித்யா விஷயத்தில் ஸாமர்த்தியத்தைக் கொடுக்கட்டும்; தேஜஸ்விகளான எங்களால் பிரம்ம வித்யை அறியப்பட்டதாகுக; எங்களுக்குள் ஒருவருக் கொருவர் துவேஷமின்றி யிருக்கட்டும்.

சாந்தி: சாந்தி: சாந்தி:

---

## முதல் அத்தியாயம்

---

### வல்லீ I.

1. வாஜசிரவஸ் (என்ற பெயருடைய ஒரு ரிஷி, விசுவஜித் என்ற யாகத்தைச் செய்து அதன் பலனை அடைய) இச்சித்தவராக, எல்லா உடைமையையுந் தானஞ் செய்தார். அவருக்கு நசிகேதஸ் (என்ற பெயருள்ள) ஒரு புத்திரனிருந்தான்.

2. (மேற்படி ரிஷியால்) தக்ஷிணைகள் கொடுக்கப்படும் பொழுது, அதி பாலனாகிய (மேற்படி) குமாரனுக்கு ஒரு சிரத்தை உண்டாயிற்று. (அஃதாவது அவனுக்கு நல்ல வழியிற் புத்தி உண்டாயிற்று.) (அடியிற்கண்டபடி அவன் நினைத்தான்.)

3. "ஜலத்தைக் குடித்தும், புல்லைத் தின்றும், பாலைக் கறந்தும், இனி ஈனுவதற்குத் தகுதியில்லாதிருக்கும் இப்படிப்பட்ட பசுக்களைத் தானஞ் செய்கிற ஒருவன், அஸுகமாயிருக்கிற உலகங்களை யடைகிறான்" என்பதாக; (அஃதாவது தன் பிதா நல்ல தானஞ் செய்யவில்லை; அவர் இச்சித்த பலனை எப்படி அடைவார்? தன்னையாவது தானஞ் செய்து பலனை யடையட்டு மென்ற நல்லெண்ணங் கொண்டான்).

4. "ஹே! பிதாவே! என்னை யாருக்குக் கொடுக்கப் போகிறீர்?" என்று பிதாவைக் கேட்டான். (பாலன் பிதற்றுகிறு னென்று நினைத்துப் பிதா சும்மாவிருந்தார்); (குமாரன் அந்தப் படியே பிதாவை) இரண்டாந்தரங் கேட்டான். (அதற்குஞ் சும்மா விருந்தார்.) மூன்ருவது தடவையுங் கேட்டான். (அதற்குப் பிதா கோபங்கொண்டவராய்) உன்னை யமனுக்குக் கொடுக்கப்போகிறே னென்ருர்.

5. (இங்ஙனம் பிதா கூறலும் புத்திரன் தனிமையில் உட்கார்ந்துகொண்டு வ்யஸனப்படுவதாவது): (நம்முடைய பிதாவுக்கிருக்கிற) அநேகர்களுள் (புத்திரர்கள் அல்லது சிஷ்யர்களுள்) நான் முந்தினவன் (உத்தமன்); (அல்லது) மத்யமன் ஆக விருக்கட்டும்; (அதமனல்ல; அங்ஙனமிருக்க, என்னை யமனுக்குக் கொடுத்தனரே); யமனுக்கு என்னுல் என்ன பிரயோஜனம்; (கோபத்தின்மேல் அப்படிச் செய்ததாகத் தோன்றுகிறது; ஆயினுமவர் வாக்குப் பொய்யாகப் போகக்கூடாது என்று ஆலோசித்து, பச்சாத்தாபப்பட்டுக்கொண்டிருக்கிற பிதாவைப்பார்த்துச் சொல்லுவதாவது):

6. "(நம்முடைய) பூர்விகர்களுடைய (நடத்தையை) யோசித்துப் பாருங்கள்; (இப்பொழுது இருக்கிற) மற்றவர்களுடைய (நடத்தையையும்) யோசித்துப் பாருங்கள்; மனுஷ்யன் பயிர்போல நசிக்கிருன்; பயிர்போல மறுபடியும் உண்டாகிருன்"; (ஸத்யம் பெரிது, வ்யஸனப்படவேண்டாம், என்னை யமனுக்குக் கொடுத்து விடலாமென்று தைரியஞ் சொன்னுன்).

7. (இப்படிச் சொன்னவுடனே பிதா ஸந்தோஷப்பட்டுப் புத்திரனை யமனிடத்திற்கு அனுப்பினுர்; அப்படியே புத்திரன் யமாலயத்திற்கு வந்து மூன்று தினங் காத்துக்கொண்டிருந்தான்; ஒன்றுங் கேள்வி முறையில்லை. யமன் தூங்கிக்கொண்டிருந்தான்; அவனை மந்திரிகள் எழுப்பிச் சொன்னதாவது): "அதிதியாயிருக்கிற ஒரு விப்ரன், அக்நிபோல வீடுகளில் பிரவேசிக்கிருன். அவனுக்குச் சாந்தியைச் (ஸமாதானம், அல்லது உபசாரம்) (பெரியோர்கள்) செய்கிருர்கள். (அதுபோல், இப்பொழுது உன் வீட்டுக்கு அதிதியாக வந்திருக்கிற நசிகேதஸுக்கு நீ உபசாரஞ்

செய்யும்பொருட்டு அர்க்ய பாத்யங் கொடுக்க) ஹே! யமனே! ஜலத்தைக் கொண்டுவா" (என்று).

8. "யாருடைய வீட்டில் ஓர் அதிதி, சாப்பிடாமல் வஸிக்கிறானோ, அந்த அல்ப புத்தியுள்ள புருஷனுடைய ஆசையையும், இஷ்ட பிராப்தியை எதிர்ப்பார்த்தலையும், ஸத்ஸங்க பலனையும், நல்ல வாக்கினால் உண்டாகும் பலனையும், யாகத்தினால் உண்டாகும் பலனையும், மற்று ஆசிரமாதிக்குரிய தர்மத்தினால் உண்டாகும் பலனையும், எல்லாப் புத்திரர்களையும், பசுக்களையும் இவைகளை யெல்லாம் இஃது அழித்துவிடுகின்றது.

9. (இவ்விதங் கூறியவுடன் யமன் எழுந்து நசிகேதஸுக்கு மரியாதை செய்து, சொல்லுவதாவது): "ஹே! பிராம்மண! அதிதியாகவும், நமஸ்காரத்துக்கு அர்ஹனாகவு மிருந்துகொண்டு என் கிருஹத்தில் போஜனஞ் செய்யாமல் மூன்றிரவு நீ வஸித்திருக்கிறாய். உனக்கு நமஸ்காரம்; எனக்கு மங்கள மிருப்பதாகுக. ஆகையால் மூன்று வரங்களைக் கேட்டுக் கொள்ளும்" (என்று).

10. (நசிகேதஸ் மறுமொழி சொல்லுவதாவது):—"(என் பிதா) கௌதமர் என்னைப்பற்றி விசாரமற்றவராகவும், ஸந்தோஷமுள்ளவராகவும், (என்மேலிருந்த) கோபத்தை விட்டவராக இருக்கும்படியாகவும், உம்மிடத்தினின்றும் விடுபட்டுப் போகிற என்னை (அவர் அலக்ஷியஞ் செய்யாமல், இவன் நம்முடைய குமாரனென்று) பூர்வ ஞாபகத்தை யுடையவராய் என்னைப் பார்த்துப் பேசும்படியாகவும் (நீர் செய்யவேண்டுமென்று) மூன்று வரங்களுள் ஒன்றாகக் கேட்கிறேன்" (என்று).

11. (யமன் சொல்லுவதாவது:) "(உன் பிதா) ஔத்தாலகி என்றும் ஆருணி யென்றும் பெயருள்ளவர், உன்னிடத்தில் முன்னிருந்த பிரீதியுள்ளவராகவும், பூர்வ ஞாபகத்தை யடைந்தவராகவும், இரவுகளில் ஸுகமாக நித்திரை செய்யக் கூடியவராகவும் (அஃதாவது விசாரமற்றவராகவும்) கோபமில்லாதவராகவும் இருப்பார். மிருத்யு விடத்திலிருந்து விடுபட்டுப்போன உன்னைப் பார்ப்பார்" (என்று).

12. (நசிகேதஸ் சொல்லுவதாவது:) "ஸ்வர்க்க லோகத்தில் யாதொரு பயமுமில்லை; அவ்விடத்தில் நீர் இல்லை. (அஃதாவது உம்மால் பயமில்லை.) கிழத்தனத்தால் (ஒருவனுக்குப்) பயமுமில்லை. பசி, தாகம் இவ்விரண்டையுங் கடந்து, சோகத்தையுங் கடந்தவனாய், ஸந்தோஷத்தை யடைகிறான்" (என்று).

13. "ஹே! யமனே! (அப்படிப்பட்ட) ஸ்வர்க்கத்தைக் கொடுக்கத்தக்கதாகவும், அமிருதத்தன்மையை அடையுமாறு செய்யத்தக்கதாகவு மிருக்கின்ற அக்நியை, நீர் ஸ்மரித்து, ஸ்வர்க்கப் பிராப்தியில் சிரத்தையுள்ள என்னைப்பற்றி அதனிடத்திற்பேசும். (அஃதாவது ஸ்வர்க்கம் எனக்குக் கிடைக்கும்படி செய்யும்.) இதை இரண்டாவது வரமாகக் கேட்கிறேன்" (என்று).

14. (யமன் சொல்லுவதாவது):—"ஹே! நசிகேதஸ்! அப்படிப்பட்ட ஸ்வர்க்கத்தைக் கொடுக்கத்தக்கதான அக்நியை அறிந்தவனாக (நான்) உனக்குச் சொல்லுகிறேன். (அதைக் கேள்) எது உன்னால் பிரார்த்திக்கப்பட்டதோ அஃது என் வசனமென்று அறி; (அஃதாவது நீ கேட்ட வரம் கொடுத்தேன்); இந்த அக்நியை ஸ்வர்க்கலோகப்பேற்றின் ஸாதனமாகவும் (ஜகத்துக்கு) ஆசிரயமாகவும், (வித்வான்களுடைய) புத்தியில் வைக்கப்பட்டிருப்பதாகவும் நீ அறிந்துகொள்" (என்று).

15. (மிருத்யுவானவர்) உலகத்துக்கு ஆதியாயிருக்கிற அந்த அக்நியிடத்தில் இவனைக்குறித்துச் (நசிகேதஸைப்பற்றி) சொன்னார். பின்னும் (அக்நிசயனத்துக்கு) எப்படிப்பட்ட கற்கள், எவ்வளவு கற்கள் (வேண்டுமோ அதைப்பற்றியும்), எப்படி அந்த யாகம் செய்யவேண்டியதோ அதைப்பற்றியும் நசிகேதஸுக்குச் சொன்னார். அவனும் (நசிகேதஸும் தனக்குத் தெரிந்ததென்பதைக் தெரிவிக்க) மிருத்யுவால் சொல்லப்பட்டபடி சரியாகத் திருப்பிச் சொன்னான். அப்படிச் சொன்னதில் மிருத்யு ஸந்தோஷப்பட்டு, மறுபடியும் சொல்லுகிறார்.

16. பிரீதியுள்ளவராயும், மஹாத்மாவாயுமிருக்கிற மிருத்யு "மறுபடியும் உனக்கு வரம், (நான்காவது வரம்), கொடுக்கிறேன்"

என்றும்; "இந்த அக்நி உன் பெயராலேயே அழைக்கப்படப் போகிறார்" என்றும்; "விசித்ர ரூபமாயிருக்கிற இந்த மாலையை கிரஹித்துக்கொள்" என்றும், நசிகேதஸுக்குச் சொன்னார்: (அல்லது கர்ம மயமாயிருக்கிற கதியை கிரஹித்துக்கொள் என்றார்; அஃதாவது கர்மாவைக் கைக்கொள் என்றார்).

17. (மறுபடியுங் கர்மாவை ஸ்துதி செய்கிறார்.) "மூன்று முறை அக்நிசயனஞ் செய்தவனும், (மாதா, பிதா, குரு) இம் மூவர் சொற்படி கேட்பவனும், (யாகம், அத்யயனம், தானம்) இம்மூன்று காரியங்களைச் செய்தவனும், ஜன்மத்தையும், மிருத்யு வையுந் தாண்டுகிறான். ஸர்வக்ஞராகவும், ஸ்துத்யராகவு மிருக்கிற (அக்நி)தேவனை அறிந்து பார்த்து, இந்தச் சாந்தியை (விராட் ஸம்பந்தமான பதத்தை-நல்ல கதியை) அடைகிறான்".

18. "எந்த வித்வான் மூன்றையும் (மேலே 15-ஆம் மந்தி ரத்திற் காண்க) அறிந்து, அக்நிசயனத்தை மூன்றுதரஞ் செய் கிறானோ, அவன் முதலில் மிருத்யுபாசங்களை யகற்றிக்கொண்டு, சோகத்தைத் தாண்டினவனாய், ஸ்வர்க்கலோகத்தில் ஸந்தோஷப் படுகிறான்".

19. "(எந்த அக்நியை இரண்டாவது வரத்தால் நீ கேட் டனையோ), ஸ்வர்க்கத்திலுள்ள அக்நியைப்பற்றிய இந்த வரம், ஹே! நசிகேதஸ்! (உனக்குக் கொடுத்துவிட்டேன்). இந்த அக்நியை உன் பெயராலேயே ஜனங்கள் அழைப்பார்கள். மூன்று வது வரத்தைக் கேள்".

20. (நசிகேதஸ் கேட்கிறான்): "இறந்துபோன மனுஷ்ய னுடைய ஆத்மா, வேறு தேஹத்தை யடைகிறதென்று சிலரும், அப்படி யில்லையென்று சிலருஞ் சொல்லுகிறார்கள். இந்த ஸந்தே ஹத்தை எனக்கு நிவர்த்தி செய்யும். இதுதான் மூன்றாவது வரம்".

21. (யமன் சொல்லுகிறார்): "இந்த விஷயத்தில், பூர்வம் தேவர்களுக்குங்கூட ஸந்தேஹ மிருந்திருக்கிறது. நன்றாக அறியத்

தகுந்ததன்று. இந்த (ஆத்ம) விஷய தர்மம் மிகவும் ஸூக்ஷ்ம மானது. ஹே! நசிகேதஸ்! வேறு வரத்தைக் கேள். என்னை நிர்ப்பந்தப்படுத்தாதே: எனக்காக இந்த வரத்தை விட்டுவிடு''.

22. (நசிகேதஸ் சொல்லுகிறான்): "இது தேவதைகளாலுங் கூட ஸந்தேஹிக்கப்பட்ட தல்லவா? ஹே! மிருத்தியுவே! நன்றாக அறியத்தகாதது என்று நீருஞ் சொல்லுகிறீர் இதைச் சொல்ல உம்மைத் தவிர வேறொருவருங் கிடைக்கமாட்டார்கள்; இந்த வரத்துக்கு ஸமமான வேறு வரமுங் கிடையாது''.

23. (மிருத்யு சொல்லுகிறார்): "சதாயுஸ் உள்ள புத்திர பௌத்திராதிகளைக் கேள்; வெகு பசுக்களையும், யானைகள், தங்கம், அசுவங்கள் இவைகளையும் கேள்; இராஜ்யத்தைக் கேள், எவ்வளவு வருஷம் நீ இச்சிக்கிறாயோ அவ்வளவு காலம் நீ ஜீவித்திரு''.

24. "இன்னும் இதற்குத் துல்யமானதாக எந்த வரத்தை நினைக்கின்றனையோ அதைக் கேள்; தனத்தையும், சிரஞ்ஜீவித் தன்மையையுங் கேள். பூமியில் (அரசனாக) விருத்தி பெறு. விருப்ப முள்ளவர்களுக்குள் விருப்பம் நிறைவேறியவனாக உன்னைச் செய்து விடுகிறேன்''.

25. "மனுஷ்ய லோகத்தில் எந்த எந்தக் காமங்கள் துர்லபங் களா யிருக்கின்றனவோ அவைகளை யெல்லாம் உன்னிச்சைப்படி கேட்டுக்கொள்; இதோ இவர்கள் அப்ஸரஸ் ஸ்திரீகள், ரதங்க ளோடும் வாத்யங்களோடும் இருக்கிறார்கள். இப்படிப்பட்ட ஸ்திரீ கள் மனுஷ்யர்களால் பெறக்கூடாதவர்கள்; இவர்களால் உனக்கு ஸகல சுச்ரூஷையையுஞ் செய்வித்துக்கொள்; ஹே! நசிகேதஸ்! மரண விஷயமான (பிரச்னத்தை மட்டும்) கேட்காதே''.

26. (நசிகேதஸ் சொல்லுகிறான்): "நாளைக் காலை இருக்கப் போகின்றதோ இல்லையோ வென்ற ஸந்தேஹத்துக்குரியதா யிருக் கிற (அநித்யமா யிருக்கிற இந்தக்காமங்கள்) ஸர்வேந்திரியங் களுடையை தேஜஸையும், பழுதாக்கிவிடுகின்றன; எல்லா ஜீவித

மும் அற்பமே; ரதாதி வாஹனங்களும், நிருத்ய கீதங்களும் உமக்கே இருக்கட்டும்''. (எனக்கு வேண்டாம்; நான் கேட்ட வரத்தைத்தான் கொடுக்கவேண்டும்.)

27. ''மனுஷ்யன் தனத்தினால் திருப்தி யடைவதில்லை; உம்மைப் பார்த்தால் (பார்த்தமாத்திரத்தில்) வித்தத்தை யடைவோம். எவ்வளவு காலம் (கொடுக்க) நீர் சக்தியுள்ளவரா யிருக்கிறீரோ (அவ்வளவு காலம்) ஜீவனோடிருப்போம்; அது போகுக; என்னுடைய அந்த வரமே கொடுக்கத்தக்கது''.

28. ''ஜரையற்றவர்களாயிருக்கிற தேவர்கள் முன்சென்று, (ஆத்மபாவத்தை) அறிந்தவனாயும், பூமியிலுள்ளவனாயும், ஜரையுள்ளவனாயும், மனுஷ்யனாயும், வர்ணத்தினாலேயும் ரதியினாலேயும் ஸந்தோஷத்தைக் கொடுக்கத்தக்க அப்ஸரஸ் முதலானவர்களைத் (துச்சமென்று) அறிந்தவனாயு மிருக்கிற எவன் (எந்த விவேகி) தீர்க்காயுளை இச்சிப்பான்''.

29. ''எந்தப் பிரேத விஷயத்தில் இந்த ஸந்தேஹத்தை அடைகிறார்களோ, ஹே! மிருத்தியுவே! மஹா பிரயோஜனகரமாயிருக்கிற பரலோக விஷயத்தில் எது (எந்த ஆத்மஞானம்) உண்டோ அதை எங்களுக்குச் சொல்லும்'' என்று.

இந்த வரம், அதி ரஹஸ்யமானது; அதில் பிரவேசித்தவனாதலால் நசிகேதஸ் வேறு வரத்தைக் கேட்கமாட்டேன் என்று உறுதி கூறினான்.

---

## வல்லீ II.

1. (மிருத்தியு சொல்லுகின்றார்): சிரேயஸ் (நிராசை, மோக்ஷம்) என்பது வேறு; பிரேயஸ் (ஆசை, ஸம்ஸாரம்) என்பது வேறு. இவ்விரண்டும் நானாவிதமான பின்னார்த்தங்களையுடையன. இரண்டும் மனுஷ்யர்களைக் கட்டுப்படுத்துகின்றன. அவைகளில் சிரேயஸைக் கைக்கொண்டவனுக்கு மங்களங் கிடைக்கும். பிரேயஸை வரித்தவன், பரமார்த்தத்தினின்றும் நழுவிப்போகின்றான்.

2. சிரேயஸும், பிரேயஸும் மனுஷ்யனை யடைகின்றன. விவேகி இரண்டையும் பகுத்தறிந்து பிரிக்கின்றான். பிரேயஸினின்றும் (பிரித்து) சிரேயஸைக் கைக்கொள்ளுகின்றான். மந்த புத்தியுள்ளவன், யோக க்ஷேம ஆசையினால் பிரேயஸை வரிக்கின்றான்.

3. அப்படிப்பட்ட நீ, பிரியர்களையும் (புத்திர பௌத்திராதிகளையும்), பிரிய ரூபர்களையும் (அப்ஸரஸ் ஸ்திரீ முதலியவர்களையும்) இச்சைகளையும் பகுத்தறிந்து தள்ளிவிட்டனை. எதில் அதிக மனிதர்கள் மூழ்குகிறார்களோ அதுவாகவும், வித்தத்தைக் கொடுக்கத் தகுந்ததாகவு மிருக்கிற இந்த மாலையையும் நீ அடையவில்லை.

4. வித்யை யென்றும் அவித்யை யென்றும் அறியப்பட்டன யாவோ, அவைகள் ஒன்றுக்கொன்று வெகுதூரம். ஒன்றுக்கொன்று விரோதமுடையன. பின்ன பலத்தைக் கொடுக்கத் தக்கன. நீ வித்யையை இச்சித்தவனாக நினைக்கிறேன். ஏனென்றால், வெகு இச்சைகள் உன்னை அணுகவில்லை.

5. அவித்யையில் அகப்பட்டவர்கள், (தாங்கள்) புத்திசாலிகளாகவும், பண்டிதர்களாகவுந் தாங்களே எண்ணிக்கொள்ளுகின்றார்கள். கெட்ட வழியில் செல்கிறவர்கள் ; மூடர்கள் ; குருடனால் வழிகாட்டப்பட்ட குருடர்களைப்போ லிருக்கிறார்கள்.

6. ஸம்ஸார தர்மத்தில் ஆஸக்தியுள்ளவனாயும், வித்த மோஹத்தினாலே மூடனாயு மிருக்கிற அவிவேகியினிடத்தில் பரலோக ஸாதகமான பிரம்ம வித்யை விளங்காது. "இதோ (காணப்படுகிற) இதுதான் உலகம் ; பரலோக மென்பது இல்லை" என்று நினைக்கிறவன், மீண்டும், மீண்டும் மிருத்யுவாகிய என் வசத்தில் வந்து அடைகின்றான்.

7. யாதொரு ஆத்மா, பல கேள்விகளினாலும் அடையக் கூடியவனன்றோ, கேட்டவர்கள் பல ரிருந்தாலும் அவர்களால் யாதொரு வஸ்து அறியப்படவில்லையோ, அந்த ஆத்மாவைப் பற்றி நன்றாகச் சொல்லுபவன் கிடைப்பது அரிது. அத்தகைய குருவால் உபதேசிக்கப்பட்டு அறிந்தவன் கிடைப்பது மரிது.

8. தாழ்ந்த மனிதனால் சொல்லப்படும் ஆத்மா நன்கு அறியப்படத் தக்கதன்று. இது பற்பல விதமாக ஆலோசிக்கப் படத் தகுந்தது. அணுவைக்காட்டிலும் அணு. தர்க்கத்திற் கிடங்கொடாதது. பிரம்ம ஞானமுள்ளவனால் போதிக்கப் பட்டால் அப்பொழுது ஸந்தேஹத்துக் கிடமில்லை.

9. ஹே! சிரேஷ்ட! நசிகேதஸ்! இந்தப் பிரம்ம ஞான புத்தி யானது, தர்க்கத்தினாலடையவு மியலாது; நீக்கவும் முடியாது. பிரம்ம ஞானியால் கூறப்பட்டால்தான் விளங்கும். அப்படிப் பட்ட புத்தியை நீ அடைந்திருக்கின்றாய். ஸத்யதைரியமுற்றவ னாக விருக்கின்றாய். கேட்பவன் உன்னைப்போல் யாவனுளன்?

10. நிதியானது அநித்யமென்று நான் அறிந்திருக் கிறேன். அநித்ய வஸ்துக்களால் நித்ய வஸ்து கிடைக்கமாட் டாது. அநித்ய வஸ்துக்களால் அக்நி யாகஞ் செய்யப்பட்டது. அதனால் (புண்ணியம் இருக்கிற வரையில்) நித்யமான யம அதி காரத்தை (இந்த ஸ்வர்க்க பதவியை) அடைந்திருக்கின்றேன்.

11. காமத்தின் முடிவாயும், ஜகத்தின் பிரதிஷ்டையாயும், யாகத்தின் பலனாயும், அபயஸ்தானமாயும், ஸ்துத்யமாயும், மஹத்தாயும், விஸ்தீர்ண கதியை யுடையதாயு மிருக்கின்ற ஸ்திதியை (பிரம்ம லோகாதி பதவியை) நோக்கி, ஹே! நசிகேதஸ்! விவேகியாயுள்ள நீ தைரியத்தினால் (மேற்கூறப் பட்ட) எல்லாவற்றையும் விலக்கிவிட்டாய்.

12. வருத்தத்துடன் கண்டறியத்தக்கவரும், அதி ரஹஸ்ய மானவரும், (ஒவ்வொன்றிலும்) பிரவேசித்திருக்கின்றவரும், புத்தியி லிருக்கிறவரும், பல அர்த்தங்களின் சிக்குதலுக் கிடையே யிருப்பவரும், புராணருமா யிருக்கிற அந்தத் தேவனை, அத்யாத்ம யோகத்தினால் (விஷயங்களைத் தள்ளி ஆத்மாவையே தியானிப்பதனால்) விவேகி பரியாலோசித்து, ஸந்தோஷத்தையும், வ்யஸனத்தையும் விட்டுவிடுகிறான்.

13. இதை (நான் சொல்லப்போகின்ற பிரம்ம வித்யையை)க் கேட்டு, கிரஹித்து, (சரீராதி) தர்மத்தை விலக்கிவிட்டு, இந்த ஸந்தோஷகரமான ஆத்மாவை யடைந்து, மனுஷ்யன் ஸந்தோஷப்

படுகிறான். நசிகேதஸின்பொருட்டு (மோக்ஷ) வீடு திறந்து வைக்கப்பட்டிருப்பதாக நினைக்கிறேன்.

14. (நசிகேதஸ் சொல்லுகிறான்) : " தர்மத்தைக்காட்டிலும் வேறு ; அதர்மத்தைக்காட்டிலும் வேறு ; காரியத்தைக் காட்டிலும் வேறு ; காரணத்தைக்காட்டிலும் வேறு ; இருந்ததைக்காட்டிலும் வேறு ; (இருப்பதைக் காட்டிலும் வேறு) ; இருக்கப்போவதைக்காட்டிலும் வேறு ; இவ்வித மிருப்பதாக எதை நீர் அறிந்திருக்கின்றீரோ, அதை எனக்குச் சொல்லுக".

15. (மிருத்யு சொல்லுகிறார்) : "எதைப்பற்றி ஸர்வ வேதங்களுங் கூறுகின்றனவோ, எதை ஸர்வ தபஸ்களுஞ் சொல்லுகின்றனவோ, எதை இச்சித்து பிரம்மசரியத்தை யநுஷ்டிக்கின்றார்களோ, அதை உனக்குச் சுருக்கமாகச் சொல்லுகின்றேன். அதுதான் 'ஓம்' (என்ற அக்ஷரம்).

16. "இந்த அக்ஷரந்தான் பிரம்மம் ; இதுதான் பரவஸ்து ; இந்த அக்ஷரத்தை யறிந்து யார் எதை இச்சிக்கின்றானோ, அஃது அவனுக்குக் கிடைக்கும் ".

17. "இந்தப் பிடிப்பு உயர்ந்தது ; இந்தப் பிடிப்பு பரமானது ; அந்தப் பிடிப்பை யறிந்தவன் பிரம்ம லோகத்தில் மஹிமையை அடைகிறான்".

18. "(இந்த ஆத்மா எப்படிப்பட்டவன்) ? பிறப் பிறப்பில்லை ; ஸர்வக்ஞன் ; எதினின்றும் அவன் உண்டாகவில்லை ; அவனிட மிருந்து யாரு முண்டாகவில்லை. அஜன், நித்யன், சாச்வதன், புராணன், ஹிம்ஸிக்கப்படத் தகுந்த சரீரத்தில் ஹிம்ஸிக்கப்படத் தகாதவன் ".

19. "கொல்லுபவன் கொலைசெய்ய நினைக்கிறான் ; (அஃதாவது : நான் கொல்லப்போகின்றேன் என்று அஹம்பாவங் கொள்ளுகிறான்) ; கொல்லப்படுபவன் (தான்) கொலையுண்டவனாக நினைக்கிறான் ; இவ்விருவர்களுந் தெரியாதவர்கள் ; அவன் கொல்லுகிறவனு மல்ல ; இவன் கொல்லப்படுகிறவனு மல்ல".

20. "ஆத்மா அணுவைக்காட்டிலுஞ் சிறிது ; பெரிதைக் காட்டிலும் பெரிது, பிராணிகளுடைய ஹிருதயத்திலிருக்கிறது ;

காம மில்லாதவன் அவைரப் பார்க்கிறான்; சோக மில்லாதவனு கின்றான்; (மனஸ் முதலான) கரணங்களுடைய பிரஸாதத்தினாலே ஆத்மாவினுடைய மஹிமையை (பார்க்கிறான்)."

21. "அந்த ஆத்மா உட்கார்ந்திருந்தே தூரத்தில் போகிறது; படுத்துக்கொண்டே எங்குஞ் செல்கின்றது; அப் படிப்பட்ட விருத்த தர்மத்தையுடைய தேவனை என்னையும் என் போன்றாரையும்விட அந்யன் எவ்வித மறிவான்".

22. "சரீரங்களில் சரீரமற்றவனையும், அநித்ய வஸ்துக் களில் நித்ய வஸ்துவாயும், மஹானையும், விபுவாயு மிருக்கிற ஆத்மாவை, விவேகி அறிந்து சோகத்தை அடையமாட்டான்".

23. "இந்த ஆத்மா, வேதாப்யாஸத்தினாலாவது, படித் ததை மறவாமலிருக்கும் புத்தியினாலாவது, மிகுதியாகக் கேட்ட தினாலாவது, அடையத்தக்கவரல்ல; இந்த (ஸாதகன்) எதை (தன் ஆத்மாவைப்) பிரார்த்திக்கின்றானோ, அதனால் (தன் ஆத்மாவினால்) அறியப்படுகிறார். (அஃதாவது பரமாத்மாவைத் தன தாத்மாவைக் கொண்டே அறியவேண்டியது.) அந்தத் தன தாத்மாவினுடைய யதார்த்தமான ஸ்வரூபத்தைப் பரமாத்மா பிரகாசப்படுத்து கின்றான்".

24. "துர்நடத்தையை விடாதவனாவது, இந்திரியங்களை அடக்காதவனாவது, ஏகாக்ர சித்தமில்லாதவனாவது, ஒழிவடைந்த மனதில்லாதவனாவது இந்த ஆத்மாவை அடையமாட்டான்; பிரக்ஞானத்தினால் மட்டும் அடையத்தக்கது."

25. "எந்த ஆத்மாவுக்குப் புண்ணிய பாபங்க ளிரண்டும் புஜிக்கிற அன்னமா யிருக்கின்றனவோ, மிருத்யு (மரணம்) அதற்கு ஊறுகாயாக விருக்கின்றதோ, யாரிடத்தில் இந்தப்படி எவன் அறிகிறானோ, அவன்தான் (ஆத்மா)".

---

## வல்லீ III.

மிருத்யு சொல்லுகிறார்):—

1. (ஜீவாத்மா, பரமாத்மா இவ்விருவர்களும்) சரீரத்தில், கர்மாவினிடமிருந்து அவசியம் உண்டாகும் பலத்தைத் புஜிக்கிறவர்கள்; வெயிலும் நிழலும்போல (பரஸ்பரம் விருத்தர்களாயும்) இருக்கிறவர்கள்; புத்தியில் பிரவேசித்தவர்கள்; பரமாயிருக்கிற ஹிருதயாகாசத்தில் பிரவேசித்தவர்கள்; பஞ்சாக்நியையுடைய கிருஹஸ்தர்களும், மூன்றுதரம் அக்நிசயனஞ் செய்தவர்களுமான பிரம்மவாதிகள் இங்ஙன முரைக்கின்றார்கள்.

2. கர்மிகளுக்கு எது ஸேதுவாக (கரை) யிருக்கிறதோ, அந்த நாசிகேதாக்நியை (அறிய) சக்தியுள்ளவர்களா யிருக்கின்றோம். எது அக்ஷரமாயும், பரமாயும், அபயமாயும், (ஸம்ஸார ஸாகரத்தைத்) தாண்ட இச்சையுள்ளவர்களுக்குக் கரையாயுமிருக்கின்றதோ, (அந்தப்) பிரம்மத்தை யறியவும் சக்தியுள்ளவர்களா யிருக்கின்றோம்.

3. ஜீவாத்மாவை, ரதத்திலிருக்கிற எஜமானனாகவும், சரீரத்தை ரதமாகவும், புத்தியை ஸாரதியாகவும், மனதைக் கடிவாளமாகவும் அறி.

4. இந்திரியங்கள் (மேற்படி ரதத்திற்குக்) குதிரைகளென்றும், அவைகளின் (ரூபாதி) விஷயங்கள் (மேற்படி குதிரைகள் போகிற) மார்க்கங்க ளென்றும், சரீரம், இந்திரியம், மனஸ் இம்மூன்றுடன் சேர்ந்திருக்கிற ஆத்மா ஸம்ஸாரி என்றும் (ஜீவாத்மா போக்தா) விவேகிகள் சொல்லுகிறார்கள்.

5. எவனொருவன் (புத்தியாகிற ஸாரதியானவன்) அவிவேகியாய் எப்பொழுதும் அடக்கப்படாத மனதுடன் (கடிவாளத்தோடு) இருக்கின்றானோ, அவனுக்கு இந்திரியங்கள் வசப்படமாட்டா, ஸாரதிக்கு முரட்டுக் குதிரைகள் போல.

6. எவனொருவன், விவேகியா யிருந்து எப்பொழுதும் அடக்கப்பட்ட மனதுட னிருக்கின்றனனோ, அவனுக்கு இந்திரியங்கள் வசப்படும், ஸாரதிக்கு நல்ல குதிரைகள் போல.

7. எந்த ஆத்மாவாகிய தேராளியானவன், அவிவேகி யாய் எப்பொழுது அடக்கப்படாத மனதுடன் கூடினவனுக வும், அசுசியாகவு மிருக்கின்றுனோ, அவன் (தன் ஸாரதியைக் கொண்டு) அந்தப் பரமபதத்தைப் (பிரம்மத்தை) யடையமாட் டான்; எனிலோ, ஜனன மரணபாவத்தை அடைவான்.

8. எவன் விவேகியாய் எப்பொழுதும் அடக்கபட்ட மன துடன் கூடினவனுகவும், சுசியுள்ளவனுயுமிருக்கின்றுனோ, அவன் எதினின்றும் பயம் ஜனிக்கவில்லையோ அந்தப் பதத்தைப் (பிரம் மத்தை) அடைகின்றுன்.

9. எந்த விவேகியா யிருக்கிற ஸாரதியானவன், அடக்கப் பட்ட மனமுள்ளவனுக விருக்கின்றுனோ, அவன் ஸம்ஸாரகதி யாகிற மார்க்கத்தின் முடிவை (அஃதாவது விஷ்ணுவின் நிலையை, வியாபனசீலரா யிருக்கிற பரமாத்மாவின் நிலையை) அடைகிறுன்.

10. இந்திரியங்களைக்காட்டிலும் அவைகளின் அர்த்தங் கள் (விஷயங்கள்) உயர்ந்தன; அர்த்தங்களைக்காட்டிலும் உயர்ந் தது மனஸ்; இதைக்காட்டிலும் உயர்ந்தது புத்தி; இதைக் காட்டிலும் உயர்ந்தது மஹானு யிருக்கிற ஆத்மா (மஹத்தத்வம், ஈசுவரதத்வம், ஸூத்ராத்மா).

11. மஹத்தத்வத்தைக்காட்டிலும் உயர்ந்தது அவ்யக்த தத்வம் (மாயை, பிரகிருதி); இதைக்காட்டிலும் உயர்ந்தது பரம புருஷன் (பரமாத்மா); இதைக்காட்டிலும் உயர்ந்தது ஒன்று மில்லை; இதுதான் (அடையவேண்டிய) திக்கு; இதுதான் பர மான கதி (மோக்ஷம்).

12. இந்த ஆத்மா எல்லாப் பூதங்களிடத்திலும் மறைந் திருக்கின்றுர்; பிரகாசப்படுவதில்லை. ஸூக்ஷ்மதரிசிகளால் (விவேகிகளால்) ஸூக்ஷ்மமாயும், ஏகாக்ரமாயு மிருக்கிற புத்தி யைக் கொண்டு காணப்படுகிறுர்.

13. விவேகியானவன், வாக் முதலான இந்திரியங்களை, மனஸில் அடக்கவேண்டியது; மனஸைப் புத்தி ஆத்மாவில் அடக்க வேண்டியது; அந்தப் புத்தி ஆத்மாவை, மஹத்தா யிருக்

கிற ஆத்மாவில் (மஹத்தத்வம்-ஈசுவரதத்வம்-முன் உண்டான விக்ஞானம்) அடக்கவேண்டியது; அந்த மஹத் ஆத்மாவைச் சாந்த ஆத்மாவில் (பரமாத்மாவில்) அடக்கவேண்டியது.

14. (ஹே! ஜந்துக்களே!), (ஆத்மா ஞானம் பெற எழுந் திருங்கள்! அக்ஞானத்திலிருந்து (தூக்கத்திலிருந்து) விழித்துக் கொள்ளுங்கள்! நல்ல குருவை யடைந்து (ஆத்மாவை) யறியுங் கள்; இந்த மார்க்கம் (தத்வஞானலக்ஷண மார்க்கம்) கத்தியின் நுனி; கூர்மையுள்ளது; எளிதில் போகக்கூடாதது; அடைதற் கரிய வழி.

15. எது (எந்த ஆத்மா) அசப்தமோ, அஸ்பரிசமோ, அரூபமோ, அவ்யயமோ, அரஸமோ, நித்யமோ, வாஸனை யற்றதோ, ஆத்யந்தமில்லாததோ, மஹத்தத்வத்தைக்காட்டிலும் வேறானதோ, எப்போதுமுள்ளதோ, அதை யறிந்து (ஒருவன்) மிருத்யுவினிடத்திலிருந்து விடுபடுவான். (மறு ஜன்ம மில்லை.)

16. மிருத்யுவா லுரைக்கப்பட்டதும், புராதனமாயுமிருக் கின்ற இந்த நசிகேதோபாக்யனத்தைச் சொன்னாலும், கேட்டா லும், விவேகி பிரம்ம லோகத்தில் (பரமாத்மாவிடம்) மஹிமையை யடைகின்றான்.

17. எவன் பரிசுத்தனாகிப் பரமாயும், ரஹஸ்யமாயு மிருக்கிற இந்த (கிரந்தத்தைப்) பிராம்மண ஸபையிலும், சிராத்த காலத்திலுங் கேட்கும்படி செய்விக்கின்றானோ, அஃது (அவ னுக்கு) அநந்தமான பலனைப் பயக்கின்றது.

---

# இரண்டாம் அத்தியாயம்

---

## வல்லீ IV.

1. ஸ்வயம்பூ (பரமாத்மா) தன் தன் விஷய பரங்களா யிருக்கின்ற இந்திரியங்களை அடிக்கிறார்; (அஃதாவது ஆத்ம ஞானிகளால்மட்டும் இந்திரியங்களை அடக்க முடியும்); ஆகை யால் (உலகத்தவர்) ஸாமாந்யமாய் அநாத்மபூதங்களைப் பார்க் கிறார்களே யன்றி அந்தராத்மாவைப் (பரமாத்வைப்) பார்ப்ப தில்லை; ஆனால் எவனேனுமொரு தைரியஸ்தன் அமிருதத்வத்தை இச்சித்தவனாகவும், அடக்கப்பட்ட சக்ஷுராதி இந்திரியங்களை யுடையவனுமாக, பிரத்யக் ஆத்மாவைப் (பரமாத்மாவைப்) பார்க்கிறான்.

2. அவிவேகிகள், அநாத்மபூதங்களா யிருக்கிற விஷயங் களைப் பின்றொடர்கின்றார்கள்; (ஆதல்பற்றி) அவர்கள் எங்கும் பரவி நிற்கின்ற மிருத்யுவின் பாசத்தை யடைகின்றார்கள்; ஆதல் கொண்டே தைரியசாலிகள் நித்யமாயுமுள்ள அமிருதத்வத்தை (பிரமத்தை) அறிந்து, அநித்யமான வஸ்துக்களைப் பிரார்த்திக்க மாட்டார்கள். (அந்த வஸ்துக்களில் இச்சைப்படமாட்டார்கள்.)

3. (யாது காரணமெனின்), மிதுன நிமித்தங்களாக (ஸுகத் தைக் கொடுக்கத்தக்கனவாக) இருக்கின்ற ரூப, ரஸ, கந்த, சப்த, ஸ்பரிசங்களாகிற விஷயங்களை (உலகத்தி லுள்ளவன்) இதனா லேயே (பரமாத்மாவினாலேயே, விக்ஞானத்தைக்கொண்டே பார்க்கின்றான் (அறிகின்றான்). (அறியவேண்டியது) இவ்விடத் தில் மிஞ்சியுள்ளது யாது? (ஒன்றுமில்லை; எல்லாவற்றையும் பிரம்மம் அறிந்திருக்கிறது); இதுதான் அது. (நசிகேதஸால் கேட்கப்பட்ட வஸ்துதான்.)

4. (ஒருவன்) ஸ்வப்நமத்யத்தையும், (ஸ்வப்நத்தில் அறியப் பட்டதையும்), ஜாக்ரமத்யத்தையும், (ஜாக்ரதவஸ்தையில் அறியப்படுவதையும்), எதைக்கொண்டு பார்க்கின்றானோ, அந்த

மஹானையும், விபுவாயு மிருக்கப்பட்ட ஆத்மாவை அறிந்து, விவேகி வ்யஸனத்தை யடையமாட்டான்.

5. கர்மபலத்தைப் புஜிப்பவனும், காலத்ரயத்திற்கு ஈசனுயு மிருக்கிற இந்த ஜீவாத்மாவை (இன்னதென்று) எவன் அறிகின்ருனே (அவன்), பிறகு (அப்படி யறிந்த பிறகு) (ஜீவனை) ரக்ஷித்துக்கொள்ள இச்சைப்பட மாட்டான்; இதுதான் அது. (இந்த ஜீவாத்மாவும் அந்தப் பிரம்மந்தான்.)

6. எவர் (எந்தப் பிரம்மா, ஹிரண்யகர்ப்பர்) ஆதியில் விக்ஞானத்தினின்றும் (பரமாத்மாவினின்றும், அஃது அது வாகவே) பூதங்களுடன் உண்டாயினரோ, (சரீராதிகளை உத்பத்தி செய்த பிறகு பிராணிகளின்) ஹிருதயத்தில் பிரவேசித்து இருந்துகொண்டிருக்கிருரோ, அவரை எவன் பூதங்களுடன் அறிகின்ருனே (அவன் பிரம்மத்தை அறிகின்ருன்); இதுதான் அது. (இந்த ஹிரண்யகர்ப்பரும் பிரம்மமே.)

7. எவள் ஸர்வ தேவாத்மிகையாயும், (சப்தாதி விஷயங்களைப்) புஜிக்கிறவளாயும், (பரபிரம்மத்திடனிமிருந்து) ஹிரண்ய கர்ப்ப ரூபமாய் உண்டானளோ, எவள் பூதங்களுடனுண்டானவளோ, ஹிருதயத்தில் பிரவேசித்து நின்றவளாயு மிருக்கிற மாயையை, எவன் அறிகின்ருனே அவனே பிரம்மத்தை அறிந்தவன். இதுதான் அது. (இந்த மாயையும் அந்தப் பிரம்மந்தான்.)

8. கர்ப்பிணிகளால் கர்ப்பம் நன்ருகக் காக்கப்பட்டிருப்பது போல, அரணிக் கட்டைகளால் காக்கப்பட்டிருக்கின்றதாயும், ஜாக்ரதை யுள்ளவர்களும், ஹவிஸ் முதலியவற்றை யுடையவர்களுமான மனிதர்களால் தினந்தோறும் ஸ்துதி செய்யப்படுவதுமான யாதொரு அக்நி யுளதோ, இதுவும் அதுதான். (இந்த அக்நியும் பிரம்மமே.)

9. எந்த ஆத்மாவி னிடத்திலிருந்தும் ஸூரியன் உதயமாகின்ருனே, எதில் அஸ்தமயத்தை யடைகின்ருனே, அதில் எல்லாத் தேவதைகளும் பிரவேசிக்கிருர்கள் (அதிலேயே அடங்கியிருக்கிருர்கள்); ஒன்றும் அதைவிட அந்யமா யிருக்கின்றதில்லை. இதுதான் அது. (இந்த ஸூரியனும் பிரம்மமே.)

10. எது இவ்விடத்தில் (இவ்வுலகத்தில் காரிய காரண ரூபமாகத் தோற்றப்பட்டு விளங்குகின்றதோ) அதுதான் அவ் விடத்திலுள்ளது (பரமபதத்தில் ஸ்வச்சமாக இருக்கப்பட்ட பிரம்மம்); (அப்படியே) அவ்விடத்தி லுள்ளதே இவ்விடத்திலு முள்ளது. இங்கு (பிரம்மம்) பின்னரூபமென்று எவன் அறி கின்ருனோ, அவன் மரணத்துக்குமேல் மரணத்தை யடைகின்ருன்.

11. இது (பிரம்மம்) மனவினுல் (ஆசாரியாகமங்களால் ஸம்ஸ்கரிக்கப்பட்ட மனதால்) பெறத் தகுந்தது; இங்கு அவருக் குப் பின்னமாக ஒன்றுமில்லை; எவன் பின்னமென்று அறி கின்ருனோ, அவன் மரணத்துக்குமேல் மரணத்தை யடைவான்.

12. ஆத்மா ஆங்குஷ்ட பிரமாணமுள்ள புருஷனுக மத்தியி லிருக்கிறது. (அஃதாவது ஹிருதய கமல ரந்திரத்தி லிருக்கிறது.) உண்டானதற்கும், உண்டாகப்போவதற்கும் ஈசானனு யிருக் கின்றது; ஒருவன் அதனை (அறிந்தால்) அவன் அவனிடத்தி னின்றும் கூச்சத்தை யடையமாட்டான். (அதிலேயே ஸம்பந்தப் பட்டுப் போகின்ருன்.) இதுவும் அது. (இந்த ஜீவாத்மாவும் பிரம்மமே.)

13. அங்குஷ்ட பிரமாணமுள்ள புருஷன், புகையில்லாத ஜ்யோதிரூபம் (அஃதாவது கர்மாவில் ஸம்பந்தப்படாதவன்); உண்டானதற்கும், உண்டாகப்போவதற்கும் ஈசானன்; நாளைக்கு முள்ளவன் (நித்யன், கூடஸ்தன்); இதுவும் அது. (ஹிருதயத் தில் ஸாக்ஷிபூதமா யிருக்கிற பரமாத்மாவும் பிரம்மமே.)

14. கரடு முரடான இடங்களிலும், பர்வதங்களிலும் விழுகிற ஜலம் எப்படி சிதறிப் (பல ரூபங்களாக) விழுகின்றதோ, அங்ஙனமே (ஆத்மாவுடைய) தர்மங்கள் தனித்தனி யென்று எவன் அறிகின்ருனோ, அவன் அப்படிப்பட்ட நாநாரூப சரங் களை யடைகின்ருன். (ஜனன மரணத்தை யடைகின்ருன்.)

15. ஹே! கௌதம! (நசிகேதஸ்!) (எப்படி) சுத்தமான ஸ்தலத்தில், சுத்தமான ஜலம் (ஏக ரஸமாகச் சிதறிப்போகாமல் ஒரே தாரையாய்) இருக்கிறதோ, இப்படி யறிந்த முனியினுடைய

(யோகியுடைய) ஆத்மா, இப்படியே யாகிவிடுகிறது. (பிரம்ம மாகவே ஆகின்றது.)

---

## வல்லீ V.

1. பிறப்பில்லாதவராயும், வக்கிரமில்லாத விக்ஞானமுள்ள வராயு மிருக்கிறவருக்குப்(பிரம்மத்துக்கு), ஒரு பட்டணம் (இருக் கிறது) ; (அது சரீரம்) ; அப் பட்டணத்துக்கு 11 துவாரங்கள் ; (முகத்திலுள்ளன 7 ; நாபி உள்பட கீழ் உள்ள 3 ; சிரஸில் பிரம்மரந்திரம் 1; ஆக, 11), இப்படிப்பட்ட வஸ்துவை ஒருவன் தியானஞ் செய்யின் (அவித்யையி லிருந்து) விடுபட்டவனுகத் துக்கத்தை யடைய மாட்டான். அவனுக்கு ஜனன மரணமு மில்லை. இதுதான் அது. (இந்தப்பட்டணத்தை யுடையவனும் அந்தப் பிரம்மமே.)

2. அது (பிரம்மம்) கமனமுள்ளது; ஸ்வர்க்கலோகத்திலிருக் கப்பட்டது (ஸூரியாதி ரூபமாக); எல்லோரையும் வஸிக்கும்படி செய்யத்தக்கது ; அந்தரிக்ஷத்தில் இருக்கப்பட்டது (வாயு ரூப மாக); அக்நியாக விருக்கின்றது; பூமியின்கண்ணுள்ளது; அதிதி ரூபமாகக் கிருஹந்தோறுஞ் செல்லத்தக்கது ; மனுஷ்யனிட முள்ளது; தேவர்களிடமுள்ளது. ஸத்யத்தில் அல்லது யக்ஞத்தி லுள்ளது ; ஆகாயத்திலுள்ளது; பூமியி லுண்டாகிறவைகளாக (பயிர் முதலியனவாக) இருப்பது ; ஜல ஜந்துக்களாகவும், யக்ஞத்திலுள்ளவைகளாகவு முள்ளது ; பர்வதத்தி லுண்டான் வைகளாக (நதி முதலியனவாக) இருக்கப்பட்டது. ஸத்யவஸ்து ; மிகப் பெரிதானது.

3. எது (எந்தப் பிரம்மம்) (ஹிருதயத்துக்கு) மேல் பிராண வாயுவை உயரக் கிளப்பிவிடுகிறதோ, அபான வாயுவைக் கீழே தள்ளிவிடுகிறதோ, (ஹிருதய புண்டரீகாகாசத்தின்) மத்தியிலிருக் கின்றதோ, பஜிக்கத்தக்கதா யிருக்கின்றதோ, அதை எல்லாத் தேவர்களும் (சக்ஷுஸ் முதலான இந்திரியங்கள்) உபாஸிக் கின்றனர். (அதற்குப் பயந்து தத்தம் வேலையைப் பரபரப்புடன் செய்கின்றன.)

4. தேஹத்தை யுடையவரும், சரீரத்திலிருப்பவரும், (பிறகு) நழுவிப்போகிறவரும், தேஹத்தை விட்டுப் போகிறவருமான இவருக்கு (ஆத்மாவுக்கு) இவ்விடத்தில் (தேஹத்தில்) மிஞ்சியது யாது ? (ஒன்று மில்லை.) (அஃதாவது ஆத்மா பிரிந்தால் எல்லாத் தத்வங்களும் பின்பற்றுகின்றன.) இதுதான் அது. (இந்தத் தேஹியுமே அந்தப் பிரம்மம்.)

5. யாதொரு மனிதனும் பிராண வாயுவினுலாவது, அபான வாயுவினுலாவது பிழைத்திருக்கவில்லை; எவனிடத்தில் இந்த இரண்டும் ஆச்ரிதங்களாக விருக்கின்றனவோ, அந்த வேறு ஒன்றினுலே (ஆத்மாவினுலே) பிழைத்திருக்கிறுன்.

6. ஹே! கௌதம ! இரஹஸ்யமாயும், நித்யவஸ்துவாயுமிருக்கும் இந்தப் பிரம்மத்தைக் குறித்தும், ஆத்மா (அவிக்ஞானத்தால்) மரணத்தை யடைந்து (பிறகு) எப்படி ஆகிறுனே (அதைப் பற்றியும்) உனக்குச் சொல்லுகிறேன்; (சொல்லுவதும், அறிந்து கொள்ளுவதும்) மிகவுங் கஷ்டம்.

7. (அவித்யாஸம்பந்தமுள்ள) தேஹிகள், மரணத்துக்குப் பிறகு வேறு சரீரத்தை யடையும்பொருட்டு (சுக்ல பீஜத் தோடு கூடினவர்களாக) யோநித்வாரத்தை (மீண்டும்) அடைகிறுர்கள்; (இவர்களைக்காட்டிலும் அதமர்களாயிருக்கிற) மற்றவர்கள், ஸ்தாவர பாவத்தை (கல் முதலான ஞானமற்ற ரூபங்களை) யடைகிறுர்கள். அவரவருக்குள்ள கர்மாவின்படிக்குங் கேள்வியினுலுண்டான ஞானத்தின்படிக்கும் (இவ்விதமாகிறது).

8. யாதொரு இந்தப் புருஷன் (ஆத்மா), (பிராணுதி தத்வங்கள்) உறங்கும்பொழுது (அவித்யாஸம்பந்தத்தினுல்) மேன்மேலும் இச்சையை வளர்த்துக்கொண்டு, விழித்துக்கொண்டிருக்கிறுனே, அவனே சுத்த வஸ்து; அதுதான் பிரம்மம்; அதுதான் அம்ருதம் என்றுரைக்கப்படுகிறது; அதில் எல்லா உலகத்தவர்களும் ஆச்ரிதர்களா யிருக்கிறுர்கள்; அதை ஒன்றுந் தாண்டுவதில்லை. (அதிலேயே அடங்கி இருக்கின்றது); இதுதான் அது. (இப்படிப்பட்ட ஆத்மாவும் அந்தப் பிரம்மமே.)

9. எங்ஙனம் ஓரே அக்நியானது புவனத்தில் பிரவேசித்து (அந்த அந்த எரிபடும்) வஸ்துவின் ரூபத்துக்குத் தக்கவாறு பிரதி ரூபப்படுகின்றதோ, அங்ஙனம் ஒன்றாயிருக்கிற ஆத்மா, ஸர்வ பூதங்களினூடேயிருந்து, அதனதன் ரூபப்படி பிரதி ரூபமாகவும், வெளியிலும் (விகாரப்படாத ஸ்வரூபத்தை யுடையதாகவும்) இருக்கிறது.

10. எங்ஙனம் ஓரே வாயுவானது புவனத்தில் பிரவேசித்து அந்த அந்த வஸ்துவின் ரூபத்துக்குத் தக்கவாறு பிரதிரூபப்படுகின்றதோ, அங்ஙனமே ஒன்றாகிய ஆத்மா ஸர்வ பூதங்களினூடேயிருந்து, அதனதன் ரூபப்படி பிரதி ரூபமாகவும், வெளியிலும் இருக்கிறது.

11. எப்படி உலகத்திற்குச் சக்ஷுஸா யிருக்கின்ற ஸூரியன் (நம்முடைய) நேத்திர திருஷ்டியி லுண்டான (மூத்திர புரீஷாதி பார்வையினுலுண்டான) வெளிப்பட்ட தோஷங்களோடு ஸம்பந்தப்படுவதில்லையோ, அப்படி ஒன்றாயும், ஸர்வபூதாந்தராத்மாவாயும், (விபரீத புத்தியின் அத்யாஸத்துக்கு) வெளிப்பட்டதாயு மிருக்கிற பர்மாத்மா உலக துக்கங்களுடன் ஸம்பந்தப்படுகிறதில்லை.

12. ஓரே ஒருவன் (எல்லோரையும்) வசப்படுத்துகின்றவன், எல்லாப் பூதங்களினுள் ளிருக்கிற ஆத்மா. ஏகமா யிருக்கிற (தன்னை), பலவிதமாக எவன் செய்துகொள்ளுகின்றானோ அவனை, ஆத்மஸ்தனாக விருக்கிறவனை, எந்தத் தைரியசாலிகள் பின்றொடர்ந்து பார்க்கின்றார்களோ, அவர்களுக்கே சாச்வதமான ஸுகம் ; மற்றவர்க்கில்லை.

13. எவன் அநித்ய வஸ்துக்களுக்கு நித்ய வஸ்துவாயிருப்பவனோ, சேதனமுள்ளவர்கட்குச் சேதனத்தைக் கொடுப்பவனோ, ஒருவனாகவே யிருந்து பலருக்கு (அவரவர்களுக்குத் தக்கபடி) இச்சைகளைக் கொடுக்கின்றானோ, ஆத்மஸ்தனா யிருக்கின்ற அப்படிப்பட்டவனை எந்தத் தைரியசாலிகள் பின்றொடர்ந்து பார்க்கின்றார்களோ அவர்களுக்கே சாச்வதமான ஒழிவு (ஸம்ஸாரத்தின் ஒழிவு); மற்றவர்களுக்கில்லை.

14. குறிப்பிட வொண்ணாததாயும், பரமமாயும், ஸுகரூபமாயு மிருக்கிற (பிரம்மத்தை), "அதுதான் இது" என்று (குறிப்புட்டுக் காட்டி) நினைக்கின்றார்கள் (பெரியோர்கள்). எப்படி யதை யறியலாம்? எது விளங்குகின்றது? எது ஸ்பஷ்டமாய் விளங்குகின்றது?

15. அதனிடத்தில் ஸூரியன் பிரகாசக்கின்றதில்லை; அப்படியே சந்திரனும், நக்ஷத்திரங்களும், மின்னலும்; (அங்ஙனமிருக்க) இந்த அக்நி எப்படிப் பிரகாசிக்கும்; எல்லாம் அதையே யனுஸரித்து விளங்குகின்றன; அதனுடைய ஒளியினாலே இந்த ஜகத்தெல்லாம் விளங்குகின்றது.

# மூன்றும் அத்தியாயம்

---

## வல்லீ VI.

1. இந்த (ஸம்ஸார விருக்ஷம்) அசுவத்த விருக்ஷம் (எப்போதுஞ் சலித்துக்கொண்டிருக்கிற ஸ்வபாவமுள்ளது); அதற்கு வேர் ஊர்த்துவம் (மேல், பிரம்மம்), கிளைகள் கீழ் (ஸ்வர்க்க நரகாதிகள்); நீண்ட காலமுள்ளது ; அதே (அந்த வேரே) சுத்த வஸ்து ; அதே பிரம்மம்; அதே அமிருதம் என்று சொல்லப்படுகிறது ; அதனிடம் எல்லா உலகங்களும் ஆச்ரிதம் ; ஒருவரும் அதைத் தாண்டுவதில்லை (அதனுள் ளடக்கம்); இதுதான் அது. (ஆசாரியர் வ்யாக்யானத்தில் ஸம்ஸார விருக்ஷம் நன்கு வர்ணிக்கப்பட்டிருக்கிறது.)

2. பரபிரம்மம் இருக்கும்பொழுது இந்த ஜகத்திலுள்ள யாவும் அசைகின்றன. (அதனதன் தொழிலை நடத்துகிறது.) அதனின்றும் எல்லாம் வெளிப்பட்டது; அது பெரிய பயம். வஜ்ராயுதத்தைக் கைக்கொண்டது ; எவர்கள் இதை அறிகிறார்களோ அவர்கள் அமிருதர்களாகிறார்கள்.

3. அதனிடத்தினின்றும் உண்டான பயத்தினாலே அக்நி சுடுகின்றது. ஸூரியன் சுடுகின்றான். இந்திரனும் வாயுவும் ஐந்தாவதான மிருத்யுவும் ஓடுகிறார்கள். (அவரவர் தொழிலை முயற்சியுடன் நடத்துகிறார்கள்.)

4. (பிரம்மத்தை) அறிந்துகொள்ள இவ்விடத்திலேயே (ஜீவனுள்ளவனா யிருக்கும்போதே) சக்தியுள்ளவனாயிருந்தால் சரீரம் விழுதற்குமுன் (ஸம்ஸாரபந்தத்தினின்றும் விடுபடுகின்றான்) ; (அப்படிச் சக்தியில்லாவிடில்) அதனாலே (அறியாததினாலே) பிராணிகளிடத்திலேயும், பிருதிவி முதலிய உலகங்களிடத்திலேயும், சரீரத்தை யடைதற்குரியவனாகின்றான். (மீண்டும்

ஜனன மரணத்தையடைகின்ருன்.) (ஆதலால் அதை யடைய இப்பொழுதே முயலவேண்டும்; அதனை யடைவது கஷ்டம். (அஃதெங்ஙனமெனில்),

5. கண்ணுடியில் எப்படி (பிரதிபிம்பம்) தோற்றப்படுகிறதோ, அப்படி (விவிக்தமாய்) ஆத்மாவில் (தனதாத்மாவில் தோன்றும்); எப்படி ஸ்வப்னத்தில் தோற்றப்படுகிறதோ, அப்படி (அவிவிக்தமாய்) பிதுருலோகத்தில் (தோன்றும்); எப்படி ஜலத்தில் பிரதி பிம்பம் தோற்றப்படுகிறதோ அப்படி (அவிவிக்தமாய்) கந்தர்வ லோகத்தில் (தோன்றும்); வெயில் நிழல்கள் போலே (விவிக்தமாய்) பிரம்ம லோகத்தில் (தோன்றும்); (இப்படி பிரம்ம லோகத்தில் ஸ்பஷ்டமாகத் தோன்றினும் அந்த லோகத்தை யடைவது மிகவுங் கஷ்டம், அநேக கர்மாக்கள் செய்து முடிய வேண்டியிருக்கிறது; மற்றும் மேற்கூறிய உலகங்களிலோ ஸ்பஷ்டமாகத் தோற்றப்படவில்லை; ஆகையால் ஆத்மாவில் பிரம்மத்தைப் பார்க்க முயல செய்யவேண்டும்).

6. (அதனதன் காரணமாகிய ஆகாசாதி யிடத்தினின்றும்) தனிப்பட்டுள்ள (சுரோத்ராதி) இந்திரியங்களுடைய தனிமையையும், அவைகளின் உத்பத்தி நாசத்தையும் அறிந்து தைரிய சாலி துக்கத்தை யடையமாட்டான்.

7. இந்திரியங்களைக்காட்டிலும் மனஸ் பெரிது; அதைக்காட்டிலும் புத்தி பெரிது; அதைக்காட்டிலும் மஹத்தத்வம் பெரிது: அதைக்காட்டிலும் அவ்யக்ததத்வம் (பிரகிருதி) பெரிது.

8. அதைக்காட்டிலும் வியாபகனையும், லிங்க ரஹிதனையுமிருக்கிற புருஷன் (பிரம்மம்) பெரிது; எதை அறிந்து ஜந்து (ஸம்ஸாரபந்தத்திலிருந்து) விடுபடுகிருனே, அமிருதத்வத்தையும் அடைகிருனே, (அது பிரம்மம்).

9. அந்தப் பிரம்மத்தினுடைய ரூபம் திருஷ்டியில் நிற்காது; ஒருவனும் இதைக் கண் முதலான இந்திரியங்களினுல் அறிய மாட்டான்; அது, ஹிருதயத்திலிருக்கிற புத்தியாலும், (ஸங்கல்ப

விகல்பமில்லாமல் ஒழிந்திருக்கிற) மனவினாலும், (நல்ல) மனவினாலும் அடையத்தக்கது; எவர்கள் இதை யறிகின்றார்களோ அவர்கள் அமிருதர்களாகிறார்கள்.

10. எப்பொழுது ஐந்து ஞானேந்திரியங்களும் மனதுடன் (ஒழிவடைந்து) நிற்கின்றனவோ, புத்தியும் தன் வேலையை நடத்தாமலிருக்கிறதோ, (அப்பொழுது) அதை (அந்த அவஸ்தையை) பரமமான கதி யென்று மொழிகின்றார்கள் (பெரியோர்கள்).

11. ஸ்திரமாயும், இந்திரியங்களின் தாரணையுள்ளதாயுமிருக்கிற இந்த (அவஸ்தையை) யோகமென்று கருதுகின்றார்கள்; அப்பொழுது (யோக விருத்தி காலத்தில்) (யோகி) ப்ரமாதத்தை யடையாதவனாகிறான் (இந்திரியங்களைக் கண்டவாறு வெளிப்படுத்துவதனால் உண்டாகும் அநர்த்தத்தை யடையாதவனாகிறான்); (ஏனெனில்) யோகமென்பது உத்பத்தி நாசங்களல்லவா? (இந்திரியங்கள் தங்கள் தொழில்களைச் செய்யத் தொடங்குவதும் உடனே யவைகளை யடக்கிவிடுவது மல்லவா.)

12. (ஆத்மா)வாக்கினாலாவது, மனத்தினாலாவது, சக்ஷுஸ் முதலிய இந்திரியங்களாலாவது அடையத்தக்கதன்று; "இருக்கிறது" என்று சொல்லுபவனைக்காட்டிலும், மற்ற யாரிடத்தில் (நாஸ்திகனிடத்தில்) எப்படி அது (ஆத்மா) கிடைக்கும்.

13. (ஆத்மா) "இருக்கிறது" என்று நினைத்தால்மட்டும் தத்வபாவரூபமாக (யதார்த்த ஸ்வரூபமாக) அடையத்தக்கது; (அஸ்தி, நாஸ்தி) இந்த இரண்டினுள், "அஸ்தி" யென்றே யடையப்பட்ட ஆத்மாவுக்கு (ஜீவனுக்கு) தத்வபாவம் (வந்து) முன்னிற்கிறது.

14. (ஞானம் உண்டாவதற்குமுன்) புத்தியை ஆச்ரயித்துக் கொண்டிருந்த எல்லாக் கர்மாக்களும் எப்பொழுது சிதறிப் போய்விடுகின்றனவோ அப்பொழுது மனிதன் அமிருதனாய்விடுகிறான்; இவ்விடத்திலேயே பிரம்மத்தை அடைகிறான் (பிரம்மமாகவே ஆகிவிடுகிறான்).

15. (காமங்கள் எப்படி அற்றுப்போகுமெனின்) இவ்விடத்தில், புத்தியின் முடிச்சுக்கள் (அவித்யையினு லுண்டான "நான், என் சரீரம், என் தனம்" என்பது முதலிய அஹம்பாவங்கள்) எல்லாம், எப்போது அவிழ்ந்துபோகின்றனவோ (இல்லாமல் போய்விடுகின்றனவோ), அப்போது (காமங்கள் நசிக்கும்). மனிதன் அமிருதனுகிறுன். இதுவரையில் உபதேசம் (இவ் வுபதேசம் போதியது).

16. (மந்தப் பிரம்மவித்துக்களைக் குறித்துச் சொல்லப்படுகிறதாவது) ஹிருதயத்துக்கு (ஹிருதயத்தினின்றும் வெளிப்பட்ட) நூறும் (அநேகம்), ஒன்றும் (முக்கியமாய் ஒன்றும்) நாடிகள் உண்டு; அவைகளில் (அந்த முக்கிய) ஒன்று மூர்த்தாவினின்றும் (பிளந்துகொண்டு பிரம்ம மந்திரத்தின் வழியாக) வெளிப்படும்படியானது (ஸுஷும்னுநாடி); அதனுல் உயரக் கிளம்பிச் சென்று அதன் வழியாய்ப் போய், (பிரம்ம லோகம் முதலானவைகளை யடைந்து, அவ்விடத்திலிருந்து பக்குவப்பட்டு, பிறகு, முடிவில்) அமிருதத்துவத்தை யடைகின்றுன்; மற்ற நாடிகள் நாநாவித கதிகளை யுடையன; உத்கிரமணத்தில்(மரணத்துக்கு) நிமித்தமாயிருக்கின்றன (ஸம்ஸாரஹேது).

17. (இந்த உபநிஷத்தின் ஸாரம் யாதெனில்) புருஷன்(பிரம்மம்) அங்குஷ்டமாத்திரன் (அங்குஷ்டப் பிரமாணமுள்ள ஹிருதயத்தில் இருப்பவன்); (அந்தராத்மா, எப்பொழுதும் ஜனங்களுடைய ஹிருதயத்திலிருப்பவன். அப்படிப்பட்டவனை (ஆத்மாவை) தன்னுடைய சரீரத்திலிருந்து, தைரியத்துடன், முஞ்ஜத்தினின்றும் இஷிகையைப்போல் (முஞ்ஜம் என்ற ஒரு விதமான புல்லிலிருந்து அதன் நடுவிலிருக்கும் ஈர்க்கை எடுப்பது போல்) வெளிப்படுத்தவேண்டும். சுத்தனும் அமிருதனுமிருக்கிற அப்படிப்பட்டவனை அறியவேண்டியது. சுத்தனும் அமிருதனும் இருக்கிற அப்படிப்பட்டவனை அறியவேண்டியது.

18. (உபதேசத்துக்குப்) பிறகு, மிருத்தியுவால் சொல்லப்பட்டதினின்றும் இந்த (பிரம்ம)வித்யையையும், எல்லா யோக விதிகளையும் அடைந்து (தெரிந்துக்கொண்டு), நசிகேதஸானவன்

விரஜனாகவும் (தர்மாதர்மங்களை விட்டவனாகவும்), விமிருத்யுவாகவும் (காமம், அவித்யை இவைக ளற்றவனாகவும்), (பிறகு) பிரம்மத்தை யடைந்தவனாகவும் ஆகிவிட்டான். இப்படியே, எவன் அத்யாத்மத்தைத் (ஆத்மபாவத்தை) தெரிந்துகொள்ளுகின்றானோ அவனும் (இப்படிப்பட்ட பலனை யடைவான்).

19. சாந்தி (ஏற்கெனவே அர்த்தம் முதலில் எழுதப்பட்டிருக்கிறது).

ஓம். சாந்தி: சாந்தி: சாந்தி:

---

கடோபநிஷத் முற்றிற்று.

---

## சாந்தி

எங்களை (சிஷ்யனையும், குருவையும்) காக்க. எங்களுக்குப் போஷணை தருக. எங்களுக்கு வித்யா விஷயத்தில் ஸாமர்த்தியந் தருக. தேஜஸ்விகளான எங்களால் பிரம்ம வித்யை அறியப்பட்டதாகுக. எங்களுக்குள் ஒருவருக்கொருவர் துவேஷமின்றி யிருக்கட்டும். சாந்தி: சாந்தி: சாந்தி:

---

**ஸ்ரீசங்கர பாஷ்ய ப்ரதீகச் சுருக்கம்.**—இந்த ஜீவன், சித்ஸதானந்த அத்விதீய பிரம்ம ஸ்வரூபமாக விருந்தபோதிலும், தன்னைச்சேர்ந்த (தனக்குபாதியான) அவித்யையினுல் எல்லா அநர்த்தங்களையு மடைந்து, அவித்யையினுல் கற்பிக்கப்பட்ட பல ஸாதனங்களால் இஷ்டாநிஷ்டங்களையும் பெற்று, மகரம் முதலியன போன்ற ராகாதிகளால் மோக்ஷமாகிற புருஷார்த்தத்தை யடைய வொட்டாது இங்கு மங்கும் இழுக்கப்பட்டு, தேவ நர திர்யகாதி அனேக ஜன்மங்களை எடுத்து, பிறகு, ஏதேனும் புண்ணிய வசத்தால் அந்தந்த ஜன்மத்துக்குரிய கர்மாநுஷ்டானங்களை ஈசுவரார்ப்பணமாகச் செய்து அதனுல் ராகாதிகளைப் போக்கடித்தும், நித்யாநித்ய வஸ்து விவேகத்தால் இஹலோகபரலோகபோகங்களை வெறுத்தும், குருபதேசத்தாலும் வேதாந்த சாஸ்திர சிரவணுதியினுலும், "நானே பிரம்மமா யிருக்கிறேன்" என்ற தத்வத்தை யறிந்து சோகத்தை விலக்குகிறுன்.

இந்த ஸ்திதியே மோக்ஷம். அது வித்யையினுற்றுன் உண்டாகவேண்டியதாக விருக்கிறது. அதன்பொருட்டு உபநிஷத் சொல்லப்படுகிறது. அதை யறிந்தால் அமிருதத்வம்—மோக்ஷம் ஸித்திக்கும்; (அதற்கு அநேக சுருதி ஆதாரங்கள் கூறப்படுகின்றன). இவ்வாறு அநேக சுருதிகளிருப்பதாலும் ஞானத்திற்கே மோக்ஷ ஸாதனத்வ மிருப்பதாலும் இந்த உபநிஷத்து ஞான விசாரணையிலே தொடங்குகின்றது.

மேலும் "உபநிஷத்" என்ற சப்தத்தினுலேயே, ஞானத்துக்கு மோக்ஷ ஸாதனத்வம் பெறப்படுகிறது. யாங்ஙன மெனின், **உப, நி, ஸத். உப, நி,** இரண்டும் உபஸர்க்கம்; **ஸத்** என்ற தாதுவுக்கு விசரணம் (பிளப்பது), கதி (செல்வது), அபஸாதனம் (போக்கடிப்பது) என்பது பொருள். ஸம்ஸாரபீஜத்தைப் பிளப்பதனுலும், பிரம்மத்தி னிடத்திற்குப் போகும்படி செய்வதாலும், கர்ப்ப ஜன்ம ஜரா மரணுதிகளைப் போக்கடிப்பதாலும், "உபநிஷத்" என்று சொல்லப்படும்.

ஞானம் மோக்ஷ ஸாதனமன்று, கர்மா மோக்ஷ ஸாதனமா யிருக்கிறதென்று சொல்வோமாயின், அப்படியல்ல. அவ்வாறு கொள்ளுவது சுருதிக்கும் நியாயத்திற்கும் விரோதமா யிருக்கிறது. (அங்ஙனம் விரோதமாயுள்ள பல சுருதிகள் இங்கெடுத் துதஹரிக்கப்படுகிறது.) எவ்விதம் நியாய விரோதமெனில், எது செய்யப்படுகிறதோ அஃது அநித்யமானதால், கர்மா அநித்யம்; மோக்ஷம் கர்மத்தால் ஸாதிக்கப்படுவதாயிருப்பின் அப்பொழுது மோக்ஷம் அநித்யமாகும்; மோக்ஷமோ நித்யமானதால் நியாய விரோதமென்று சொல்லப்பட்டது. ஆயினும், எப்பொழுது கர்மாவானது, பலம் வேண்டப்படாமலே ஈச்வரார்ப்பணமாக அநுஷ்டிக்கப்படுகிறதோ அப்பொழுது அக்கர்மாவானது, மோக்ஷத்திற்கு ஸாதனமான ஞானத்திற்குச் ஸாதனமாகிய, அந்தக்கரண சுத்திக்கு ஸாதனமாகி, இவ்விடத்திலே பரம்பரையாக மோக்ஷத்துக்கும் ஸாதனமா யிருக்கிறது. அந்தக்கரணஞ் சுத்தமானால் மோக்ஷம்; கர்மாக்களால் அந்தக்கரணஞ் சுத்தப்படவேண்டும்; இதற்கு அநேக சுருதி ஸ்மிருதி பிரமாணங்களுள்ளன. (அவைகள் இங்கெடுத்துக் கூறப்படுகின்றன.) கர்மா கல்மஷ க்ஷயத்திற்கு ஹேதுவாயும், ஞானம் மோக்ஷத்திற்கு ஹேதுவாயு மிருக்கிறதென்று நிரூபிக்கப்பட்டிருக்கிறது. "குர்வந்நேவ" என்று தொடங்குஞ் சுருதியால் கர்மா செய்யப்பட வேண்டியதென்று ஏற்படுங்கால் எவ்விதம் ஞானம் மோக்ஷத்துக்கு ஸாதனமாகுமெனில்:—அவ் விதியானது கர்மாவில் அதிகார முள்ளவனுக்குச் சொல்லப்பட்டதே யன்றி ஞானிக்கன்று. மேலும் மேற்படி சுருதியினால், கர்மா செய்யவேண்டுமென்ற நியமமுஞ் சொல்லப்பட்டதன்று. வித்யையின் மாஹாத்மியத்தைக் காட்டவேண்டியதன்பொருட்டு கர்மா முதலில் எடுத்துப் பேசப்பட்டது. ஞானி அவன் உயிருள்ளவரை புண்ணிய பாபாதி எக்கர்மாவைச் செய்தாலும், அஃது அவனை யாதுஞ் செய்ய வல்லதன்று. அங்ஙனமே ஸூத்திரகாரரும்:—ஞானத்திற்கே மோக்ஷ ஸாதனத்வத்தை ஸாதித்து, செய்கைத் தலைமை முதலிய ஸம்ஸார தர்மங்களில்லாமை, பாபமில்லாமை, இவ்வித இயல்புகளையுடைய பிரம்மத்தைக் குறித்து உபதேசிப்பதைக்கொண்டு, அந்தப் பிரம்மத்தை யறிவதற்குமுன் கர்மாவிற் கதிகார மிருப்பதாகவும், ஒன்றற்கொன்று விரோதமானதால், ஞானம் கர்மா இரண்டுஞ் சேர்ந்திருத்தல் ஒவ்வாதென்றும், ஆனால் கர்மா, அறியவேண்டுமென்ற இச்சைக்கு ஸாதனமாக விருக்கிறதென்றுங் காட்டியிருக்கின்றார். ஆதல்பற்றி மோக்ஷத்திற்கு ஸாதனம் ஞானமே என்க.

(ஆக்ஷேபம்):—பந்தம் (ஸம்ஸாரம்) அநித்யம். அதை நிவிருத்திக்க ஞானம் வேண்டும். அந்த ஞானத்தால் மோக்ஷமுண்டென்று எவ்வாறு சொல்லக்கூடும். பிரபஞ்சம் நமக்கு ஸத்யமாகத் தோன்றுகிறதே அதைப் பாதிக்க ஒன்று மில்லையே ?

(ஸமாதானம்) தோன்றுகிற யாவும் ஸத்யமென்பது நிச்சய மன்று. யாங்ஙனமெனில், ஒரே சந்திரன் பல ஜலாசயங்களில் பல சந்திரர்களாகத் தோன்றினும் அந்தச் சந்திரர்கள் எல்லோரும் அஸத்யமாக எவ்வாறு கொள்ளப்படுகிறார்களோ, அவ்வாறு பிரபஞ்சமும் அஸத்யம். அதற்கு அநேக சுருதி ஸ்மிருதி ஆதாரங்கள் உள்ளன. (அவைகள் விஸ்தாரமாக இங்கெடுத்துக் கூறப்படுகின்றன.) ஆதல்பற்றிப் பிரம்மம் ஒன்றே ஸத்ய வஸ்துவென்றும், அது நிர்விசேஷம் என்றும் அறியவேண்டியது. அங்ஙன மாயின், ஸவிசேஷ பிரம்மத்தைப் பற்றி அநேக சுருதிகளில் ஏன் எடுத்தோதப்படுகிறதெனின், உபாஸநார்த்தங் கூறப்பட்டிருக்கின்றதேயன்றி வேறில்லை.

இவ்வாறு பல சுருதி ஸ்மிருதி யுக்தி அநுபவங்களினுல் பிரபஞ்சத்திற்குப் பொய்ம்மை யிருப்பதாலும், பிரபஞ்சத்தில் பதார்த்தங்களொன்றற்கொன்று விலக்ஷணங்களாகக் காணப்பட்டுப் பரஸ்பரம் அத்யாஸம் தோற்றுவதாலும், அமூர்த்தமான ஆகாசத்தில் அஃதோரிடமென்றும், கறுப்பாக விருக்கின்றதென்றும் அத்யாஸங் காணப்படுவது போன்று ஆத்ம வஸ்துவுக்கும், அநாத்ம வஸ்துக்களுக்கும் பரஸ்பரம் அவ்விதந் தோன்றுவதாலும், "நான் ஸ்தூலித்துப்போனேன், நான் இளைத்துப் போனேன்" என்று பேசுவதைக்கொண்டு தன்னைத் தேஹமாக அத்யாஸப் படுத்திக்கொள்ளுகிற அநுபவ மிருப்பதாலும், அந்த அத்யாஸத்தையொழிக்க ஞானம் வேண்டுவ தவசியம். அந்த ஞானம் உண்டாகும் பொருட்டு உபநிஷத் தொடங்கப்படுகிறது.

---

# முதல் அத்தியாயம்

---

1. ஓம். பிரம்மவாதிகள் சொல்லுகிறார்கள். (பிரம்மவாதிகள் ஓரிடத்திற் கூடி, ஒருவருக் கொருவர் அடியிற் கண்டபடி பிரச்னம் செய்துகொண்டார்கள்.) "இந்த ஜகத்திற்குக் காரணம், பிரம்மமா? (அல்லது இனிக் கூறப்போகுங் காலம் முதலியனவா? அல்லது காரணமே இல்லையா? காரண மெப்படிப்பட்டது? (அஃதாவது உபதானமா, நிமித்தமா? அல்லது இரண்டுமா?) நாம் எதினின்றும் உண்டானோம்? எதனால் பிழைத்திருக்கிறோம்? முடிவில் எதிலே பிரதிஷ்டை செய்யப்படுகிறோம்? ஸுகதுக்கங்களுள் எதனால் ஏவப்பட்டிருக்கின்றோம்? பிரம்ம வித்துக்களே! சொல்லுங்கள்" என்று.

2. காலமா? (எல்லாவற்றினுடைய முடிவுக்கு ஏதுவாயிருக்கிற காலம்?) ஸ்வபாவமா? (அக்நிக்கு உஷ்ணம்போல் பதார்த்தத்தின் தன்மையா?) நியதியா? (புண்ணிய பாப லக்ஷணமான கர்மாவா?) அல்லது யதிருச்சையா? (அகஸ்மாத்தாக நடக்கிற தென்பதா?) அல்லது விக்ஞானமயனாயிருக்கிற ஜீவனா, காரணம்? என்று யோசிக்குங்கால், இவைகளுள் ஒன்றேனுங் காரணமன்று, இவைகள் யாவுஞ் சேர்ந்துங் காரணமன்று; ஜீவனும் ஸ்வாதந்திரியமில்லாதவனாயும், ஸுக துக்கங்களுக் குட்பட்டவனாயு மிருப்பதால் காரணமாகமாட்டான்.

3. பிரம்ம வித்துக்கள், இவ்வாறு தியானயோகத்தால் ஆலோசித்துப் பார்த்து, எவர் ஒருவராகவே யிருந்து, மேற்சொன்ன காலம் முதலிய வெல்லாக் காரணங்களையும் நடத்தி வைக்கின்றனரோ, அந்தப் பரமாத்மாவினுடையதும், தன் குணங்களால் (காரியபூதங்களான பிருதிவி முதலியவைகளால்) மறைக்கப்பட்டிருப்பதுமான சக்தியே காரணமென்று கண்டார்கள் (அறிந்தார்கள்).

## முதல் அத்தியாயம்

---

1. ஓம். பிரம்மவாதிகள் சொல்லுகிறார்கள். (பிரம்மவாதிகள் ஓரிடத்திற் கூடி, ஒருவருக் கொருவர் அடியிற் கண்டபடி பிரச்னம் செய்துகொண்டார்கள்.) "இந்த ஜகத்திற்குக் காரணம், பிரம்மமா? (அல்லது இனிக் கூறப்போகுங் காலம் முதலியனவா? அல்லது காரணமே இல்லையா? காரண மெப்படிப்பட்டது? (அஃதாவது உபதானமா, நிமித்தமா? அல்லது இரண்டுமா?) நாம் எதினின்றும் உண்டானோம்? எதனால் பிழைத்திருக்கிறோம்? முடிவில் எதிலே பிரதிஷ்டை செய்யப்படுகிறோம்? ஸுகதுக்கங்களுள் எதனால் ஏவப்பட்டிருக்கின்றோம்? பிரம்ம வித்துக்களே! சொல்லுங்கள்'' என்று.

2. காலமா? (எல்லாவற்றினுடைய முடிவுக்கு ஏதுவாயிருக்கிற காலம்?) ஸ்வபாவமா? (அக்நிக்கு உஷ்ணம்போல் பதார்த்தத்தின் தன்மையா?) நியதியா? (புண்ணிய பாப லக்ஷணமான கர்மாவா?) அல்லது யதிருச்சையா? (அகஸ்மாத்தாக நடக்கிற தென்பதா?) அல்லது விக்ஞானமயனாயிருக்கிற ஜீவனா, காரணம்? என்று யோசிக்குங்கால், இவைகளுள் ஒன்றேனுங் காரணமன்று, இவைகள் யாவுஞ் சேர்ந்துங் காரணமன்று; ஜீவனும் ஸ்வாதந்திரியமில்லாதவனாயும், ஸுக துக்கங்களுக் குட்பட்டவனாயு மிருப்பதால் காரணமாகமாட்டான்.

3. பிரம்ம வித்துக்கள், இவ்வாறு தியானயோகத்தால் ஆலோசித்துப் பார்த்து, எவர் ஒருவராகவே யிருந்து, மேற்சொன்ன காலம் முதலிய வெல்லாக் காரணங்களையும் நடத்தி வைக்கின்றனரோ, அந்தப் பரமாத்மாவினுடையதும், தன் குணங்களால் (காரியபூதங்களான பிருதிவி முதலியவைகளால்) மறைக்கப்பட்டிருப்பதுமான சக்தியே காரணமென்று கண்டார்கள் (அறிந்தார்கள்).

4. (பிரம்மம் ஒரு சக்கரமாக வர்ணிக்கப்படுகிறது); மாயை, பிரகிருதி, சக்தி, தமஸ், அவித்யை, சாயை, அக்ஞானம், அந்ருதம், அவ்யக்தம் முதலிய பெயர்களை யுடையதாய் யாவற்றிற்குங் காரணமாயும் ஆதாரமாயு மிராநின்ற மேற்படி பரமாத்மாவினுடைய சக்தியாகின்ற ஒரு நேமியை—அச்சை யுடையது; (மேற்படி சக்தியின் ஸத்வ, ரஜஸ், தமஸ் என்ற) முக் குணங்களால் விளக்கப்பட்ட குடமுள்ளது; பதினாறு (பூதங்கள் 5, அந்தக்கரண முள்பட இந்திரியங்கள் 11; ஆக 16 விகாரங்கள்; அல்லது உலகங்கள் 14; விராட் 1; ஸூத்ராத்மா 1; 16) காரியங்களாகின்ற முடிவுகளுடையது; பிரத்யயங்கள் (தோற்றங்கள், அபிப்பிராயங்கள்-ஆகின்ற) ஐம்பது ஆரங்களையுடையது.(அவைகள் இதனடியிற் கூறப்படும்.) (பத்து இந்திரியங்கள்; அவைகளில்—பத்து விஷயங்கள். ஆக) இருபது பிரதி ஆரங்களை யுடையது. (பிருதிவி, ஜலம், அக்நி, வாயு, ஆகாசம், மனஸ், புத்தி, அஹங்காரம் ஆக 8 பிரகிருதிகள்; மேல் தோல், உள் தோல், மாம்ஸம், இரத்தம், ஊன் ஜலம், எலும்பு, அதற்குள்ளிருக்கும் மஜ்ஜை, சுக்லம் ஆக 8 தாதுக்கள்; அணிமா-சிறுமை, மஹிமா-பெருமை, கரிமா-கனம், லகிமா-இலகு, பிராப்தி, பிரகாமியம், ஈசித்வம், வசித்வம் ஆக 8 ஐசுவரியங்கள்; தர்மம், ஞானம், வைராக்யம், ஐசுவரியம், அதர்மம், அக்ஞாநம், அவைராக்யம், அநைசுவரியம், ஆக 8 பாவங்கள்; பிரமன், பிரஜாபதி, தேவ, கந்தர்வ, யக்ஷ, ராக்ஷஸ, பிதிரு, பிசாச ஆக 8 தேவர்கள்; தயை, க்ஷாந்தி (பொறுமை), அநஸூயை (பிறரிடம் அஸூயைப்படாமலிருத்தல்), சௌசம், அநாயாஸம், மங்களம், அகார்ப்பண்யம், அஸ்பிருஹா ஆக 8 குணங்கள்; ஆக) நாற்பத்தெட்டு பிரகிருதி முதலியவைகளாகிற வட்டைகளால் விளக்கப்பட்டது; (நாநாரூபமான காம்யம், ஆசையென்ற) ஒரே கயிற்றை (சுற்றுப்பட்டையை) யுடையது; (தர்மம், அதர்மம், ஞானம் என்ற) மூன்று மார்க்கங்களை யுடையது. (பாப புண்ணியமாகின்ற) இரண்டு நிமித்தம்; (தேஹேந்திரியம் முதலான அநாத்மாக்களிடத்தில் ஆத்மாபிமானம் வைப்பது மோஹம்) மோஹமாகிற ஒரு ப்ரமணமுடையது (சுற்றுதலுடையது). (இப்படிப்பட்ட ஆத்மசக்கரத்தைத் தியானஞ் செய்கின்றோம்.)

[மேற்கண்ட 50 பிரத்யயங்களாவன ; 5 விபர்யயங்கள், வித்தியாஸ நினைப்புகள் ; தமஸ் ; மோஹம் ; மஹா மோஹம் ; தாமிஸ்ரம் ; அந்ததாமிஸ்ரம்.;

தமஸ், 8 விதம் ; ஷை பிருதிவி முதலான இவற்றில் 8 பிரகிருதிகளிடத்தில் ஆத்மப்ரதீதி யுண்டாவது 8 வித தமஸ்.

மோஹம் 8 விதம்; 8 ஐசுவரியங்களில் மோஹம் வைப்பது.

மஹா மோஹம் 10 விதம் ; காணப்பட்டது 5; கேட்கப்பட்டது 5 ; சப்தாதி விஷயங்கள் 10 ; இவற்றில் அபிநிவேசம், மஹா மோஹம். தாமிஸ்ரம் 18 விதம் ; மேற்கண்ட பல விஷயங்களுள் 8 ஐசுவரியங்களால் பிரயத்னஞ் செய்து காரியம் ஸித்திக்காவிடில் அதனா லுண்டாகுங் கோபம் தாமிஸ்ரம்.

அந்ததாமிஸ்ரமும் 18 விதம் ; மேற்கண்டபடி பிரயத்னஞ் செய்து பலனுண்டாகி அதைப் புஜிக்கின்றபோது மரணகாலம் ஸமீபித்துவிட்டால் அப்பொழுது உண்டாகுஞ் சோகம், அந்த தாமிஸ்ரம்.

28 சக்திகள்; இந்திரியங்களுடைய பார்வை முதலான பாவ சக்திகள் 10 ; அந்தகம் முதலான அபாவ சக்திகள் 10 ; அந்தக்கரணத்திற்குப் புருஷார்த்த யோக்யதையுள்ள ஸித்திகளுடைய வித்தியாஸத்தால் சக்திகள் 8 ; ஆக 28 சக்திகள்.

9. துஷ்டிகள் ; பிரகிருத்யாதி 4 ; விஷயோபரமங்கள் 5. ஆக 9. அவைகளாவன:—

1. பிரகிருதிபரிக்ஞான முண்டாகி நாம் கிருதார்த்தனாகி விட்டோமென்று நினைப்பது பிரகிருதிதுஷ்டி.

2. ஆசிரமாதியைப் பெற்று ஸந்தோஷப்படுவது உபாதானதுஷ்டி.

3. எப்போதேனும் முக்தி நமக்கு அவச்யங் கிடைக்கு மென்று ஸந்தோஷப்படுவது காலதுஷ்டி.

4. பாக்ய மின்றி ஒன்றுமில்லை, அதனால் இவ்விடமே மோக்ஷமென்று ஸந்தோஷப்படுவது பாக்யதுஷ்டி.

5. விஷயங்களை ஸம்பாதிப்பது அஸக்யம் ஆதலால் அது வேண்டாமென்று ஒழிவடைவது ஒருவித துஷ்டி.

6. அவைகளைக் காப்பாற்றுவது வருத்தமென்று ஒழிவடைவது ஒருவித துஷ்டி.

7. அவைகட்குத் தோஷ மிருப்பதால் வேண்டாமென் றொழிவுறுவது ஒருவித திருப்தி.

8. அவை கிடைத்தால் மேன்மேலும் ஆசையைக் கொடுக்கின்றன; ஆதலால் அவைகளின் ஸங்கம் வேண்டாமென் றொழிவடைவது ஒரு வித திருப்தி.

9. அவைகளைச் சேர்ந்தால் பரஹிம்ஸாதிதோஷம் ஸம்பவிப்பதால் வேண்டாமென் றொழிவடைவது ஒருவித திருப்தி ஆக 9.

எட்டு ஸித்திகள் :—

1. ஊஹம் என்பது உபதேச மின்றி ஜன்மாந்தர ஸம்ஸ்கார வசத்தால் உண்டாகுந் தத்வஞானம்.

2. சப்தம் என்பது சாஸ்திர வாராய்ச்சி யின்றிக் கேள்வியினுலுண்டாகும் ஞானம்.

3. அத்யயநம் சாஸ்திர வராய்ச்சியினு லுண்டாகும் ஞானம்.

4. ஆத்யாத்மிக வருத்தத்தை ஸஹிப்பதா லுண்டாகும் ஞானம்.

5. ஆதிபௌதிக வருத்தத்தை ஸஹிப்பதா லுண்டாகும் ஞானம்.

6. ஆதிதைவிக வருத்தத்தை ஸஹிப்பதாலுண்டாகும் ஞானம்.

7. ஸுஹிருத் பிராப்தி, குருவை யடைவதாலுண்டாகும் ஞானம்.

8. தானம், ஆசாரியருக் குரித்தான வஸ்துதானத்தினு லுண்டான ஞானம் ஆக 8 ஸித்திகள்.;

ஆக 50 பிரத்யயங்கள்.]

5. (பிரம்மம் ஒரு நதியாக வர்ணிக்கப்படுகின்றது.) (5 ஞானேந்திரியங்களாகிற) ஐவகை ஜலங்களுள்ளது; ஐந்து காரணங்களாகிற(பஞ்ச பூதங்களால்)உக்ரமாயும் வக்ரமாயு மிருக்கின்

றது. (பிராணனாகிற) ஐந்து அலைகளுள் சக்ஷுராதி ஜன்ய மாகிற) ஐந்து (புத்திகளுக்குக் காரணமாகிய மனமை) மூல மாக வுடையது; (சப்தாதி விஷயங்களாகிற) ஐந்து சுழல்களுள் ளது; (கர்மா, ஜன்மம், ஜரை, வியாதி மரணமாகிற) ஐந்து (துக் கங்களாகிற) வேகமுடையது; (அவித்யை அஸ்மிதை, ராகம், த்வேஷம், அபிநிவேசம்) என்ற கிலேசங்களாகிற ஐந்து பர்வாக் களுடையது. இப்படிப்பட்ட நதியை தியானஞ் செய்கிறோம்.

6. யாவற்றிற்கும் ஜீவஸ்தானமாயும், லயஸ்தானமாயும், பெரிதாயு மிருக்கிற இந்தப் பிரம்மசக்கரத்தில் ஜீவன் (தான் வேறென்றும், ஈசுவரன் வேறென்றும் பிரமித்துக்கொள்வதினு லும், அநாத்மாவாகிய தேஹாதியைத் தானென்று நினைப்பதனு லும் தேவ மநுஷ்ய திர்யக் முதலான பலவித யோநிகளில் ஜனித்தும், மரித்தும்) சுழலுகிறான்; பிறகு பரமாத்மா தானென்று அறிவதினால் மோக்ஷத்தை யடைகிறான்.

7. (ஸப்பிரபஞ்சமாகப் பிரம்மஞ் சொல்லப்பட்டது; அதை யறிவதனால் மோக்ஷம் ஸித்திக்குமா வென்ற ஆசங்கை நிகழ அப் படியில்லை என்று நிரூபிக்கப்படுகிறது.) பிரம்மம், அநேக சுருதி களால் உபதேசிக்கப்பட்ட உத்கிருஷ்டமான வஸ்து; அதிலே (போக்தா, போக்யம், பிரேரயிதா அல்லது விசுவன், தைஜஸன், பிராக்ஞன்) என்ற இம்மூன்றும் பிரதிஷ்டிதமாக விருக்கின்றன, (அத்யாஸஞ் செய்யப்படுகின்றன). மேலும், அந்தப் பிரம்மம் அக்ஷர வஸ்து (நாசமற்றது). பிரபஞ்சத்திற்கு உள்ளே யிருக் கிற அந்த வஸ்துவைப் பிரம்மவித்துக்கள் அறிந்து அதில் லீனர் களாகவும், அதிலேயே தியானபரர்களாகவும் இருந்து ஸம் ஸாரத்தினின்று விடுபடுகிறார்கள்.

8. (ஜீவேசுவரர்களுக்கு உண்மையில் பேத மிராவிடினும் வியவஹார தசையில் பேதத்தை எடுத்து விளக்கி அங்ஙனம் அறி வதால் அமிருதத்வம் உண்டாகிற தென்று காட்டப்படுகிறது.) வ்யக்தம், (விகாரப்பட்ட காரியம்); அவ்யக்தம், (காரணம்); க்ஷரம், (நாசமடைவது); அக்ஷரம், (அவிநாசி); இவ்விரண் டுஞ் சேர்ந்த இந்தப் பிரபஞ்சத்தை, ஈசுவரன் (பரமாத்மா) பரிக்கிறார், (தாங்குகிறார்); அநீசன், (ஜீவனும்) தாங்குகிறான்;

5. விஷயங்களை ஸம்பாதிப்பது அஸக்யம் ஆதலால் அது வேண்டாமென்று ஒழிவடைவது ஒருவித துஷ்டி.

6. அவைகளைக் காப்பாற்றுவது வருத்தமென்று ஒழிவடைவது ஒருவித துஷ்டி.

7. அவைகட்குத் தோஷமிருப்பதால் வேண்டாமென்றொழிவுறுவது ஒருவித திருப்தி.

8. அவை கிடைத்தால் மேன்மேலும் ஆசையைக் கொடுக்கின்றன; ஆதலால் அவைகளின் ஸங்கம் வேண்டாமென்றொழிவடைவது ஒரு வித திருப்தி.

9. அவைகளைச் சேர்ந்தால் பரஹிம்ஸாதிதோஷம் ஸம்பவிப்பதால் வேண்டாமென்றொழிவடைவது ஒருவித திருப்தி ஆக 9.

எட்டு ஸித்திகள் :—

1. ஊஹம் என்பது உபதேசமின்றி ஜன்மாந்தர ஸம்ஸ்கார வசத்தால் உண்டாகுந் தத்வஞானம்.

2. சப்தம் என்பது சாஸ்திர வாராய்ச்சியின்றிக் கேள்வியினாலுண்டாகும் ஞானம்.

3. அத்யயநம் சாஸ்திர வராய்ச்சியினா லுண்டாகும் ஞானம்.

4. ஆத்யாத்மிக வருத்தத்தை ஸஹிப்பதா லுண்டாகும் ஞானம்.

5. ஆதிபௌதிக வருத்தத்தை ஸஹிப்பதா லுண்டாகும் ஞானம்.

6. ஆதிதைவிக வருத்தத்தை ஸஹிப்பதாலுண்டாகும் ஞானம்.

7. ஸுஹிருத் பிராப்தி, குருவை யடைவதாலுண்டாகும் ஞானம்.

8. தானம், ஆசாரியருக் குரித்தான வஸ்துதானத்தினா லுண்டான ஞானம் ஆக 8 ஸித்திகள்.;

ஆக 50 பிரத்யயங்கள்.]

5. (பிரம்மம் ஒரு நதியாக வர்ணிக்கப்படுகின்றது.) (5 ஞானேந்திரியங்களாகிற) ஐவகை ஜலங்களுள்ளது; ஐந்து காரணங்களாகிற(பஞ்ச பூதங்களால்)உக்ரமாயும் வக்ரமாயு மிருக்கின்

றது. (பிராணனுகிற) ஐந்து அலைகளுள் சக்ஷுராதி ஜன்ய மாகிற) ஐந்து (புத்திகளுக்குக் காரணமாகிய மனதை) மூல மாக வுடையது; (சப்தாதி விஷயங்களாகிற) ஐந்து சுழல்களுள் ளது; (கர்மா, ஜன்மம், ஜரை, வியாதி மரணமாகிற) ஐந்து (துக் கங்களாகிற) வேகமுடையது; (அவித்யை அஸ்மிதை, ராகம், த்வேஷம், அபிநிவேசம்) என்ற கிலேசங்களாகிற ஐந்து பர்வாக் களுடையது. இப்படிப்பட்ட நதியை தியாநஞ் செய்கிறோம்.

6. யாவற்றிகும் ஜீவஸ்தானமாயும், லயஸ்தானமாயும், பெரிதாயு மிருக்கிற இந்தப் பிரம்மசக்கரத்தில் ஜீவன் (தான் வேறென்றும், ஈசுவரன் வேறென்றும் பிரமித்துக்கொள்வதினு லும், அநாத்மாவாகிய தேஹாதியைத் தானென்று நினைப்பதனு லும் தேவ மநுஷ்ய திர்யக் முதலான பலவித யோநிகளில் ஜனித்தும், மரித்தும்) சுழலுகிறுன்; பிறகு பரமாத்மா தானென்று அறிவதினுல் மோக்ஷத்தை யடைகிறுன்.

7. (ஸப்பிரபஞ்சமாகப் பிரம்மஞ் சொல்லப்பட்டது; அதை யறிவதனுல் மோக்ஷம் ஸித்திக்குமா வென்ற ஆசங்கை நிகழ அப் படியில்லை என்று நிரூபிக்கப்படுகிறது.) பிரம்மம், அநேக சுருதி களால் உபதேசிக்கப்பட்ட உத்கிருஷ்டமான வஸ்து; அதிலே (போக்தா, போக்யம், பிரேரயிதா அல்லது விசுவன், தைஜஸன், பிராக்ஞன்) என்ற இம்மூன்றும் பிரதிஷ்டிதமாக விருக்கின்றன, (அத்யாஸஞ் செய்யப்படுகின்றன). மேலும், அந்தப் பிரம்மம் அக்ஷர வஸ்து (நாசமற்றது). பிரபஞ்சத்திற்கு உள்ளே யிருக் கிற அந்த வஸ்துவைப் பிரம்மவித்துக்கள் அறிந்து அதில் லீனர் களாகவும், அதிலேயே தியாநபரர்களாகவும் இருந்து ஸம் ஸாரத்தினின்று விடுபடுகிறுர்கள்.

8. (ஜீவேசுவரர்களுக்கு உண்மையில் பேத மிராவிடினும் வியவஹார தசையில் பேதத்தை எடுத்து விளக்கி அங்ஙனம் அறி வதால் அமிருதத்வம் உண்டாகிற தென்று காட்டப்படுகிறது.) வ்யக்தம், (விகாரப்பட்ட காரியம்); அவ்யக்தம், (காரணம்); க்ஷரம், (நாசமடைவது); அக்ஷரம், (அவிநாசி); இவ்விரண் டுஞ் சேர்ந்த இந்தப் பிரபஞ்சத்தை, ஈசுவரன் (பரமாத்மா) பரிக்கிறுர், (தாங்குகிறுர்); அநீசன், (ஜீவனும்) தாங்குகிறுன்;

ஆனால் இந்த ஜீவன் அவித்யாதத்கார்யபூததேஹேந்திரியாதிக ளால் கட்டுப்படுகிறான். (போக்த்ருத்வ மிருப்பதனால்; பிறகு உபாதிரஹிதமான பிரம்மமா யிருப்பதாகத் தானே யறிந்து எல்லாப் பாசங்களினின்றும் விடுபடுகிறான்.)

9. (இன்னும் பேதங் காண்பிக்கப்படுகிறது) ஜ்ஞ:, (ஈச் வரன்); அஜ்ஞ:, (ஜீவன்), இவ்விருவரும், பிறப்பு முதலியன அற்றவர்கள். இன்னுமொருத்தி யிருக்கிறாள், அவள் மாயை; அவளும் பிறப்பு முதலியனவும் அற்றவள்தான்; போக்த்ரு போக்யார்த்தத்துடன் சேர்ந்தவள். இம்மூவரில் ஈசுவரன் அநந்த ராயும், (தேச கால வஸ்து இம்மூன்றுவித பேதங்களினால் பரிச்சேதமற்றவராயும்), விசுவரூபராயும், அகர்த்தவாயு மிருக் கிறார்; இவ்வாறு மூன்றையும் அறியும்பொழுது (ஸாதகன்) மோக்ஷத்தை யடைகிறான்.

10. (இப்பொழுது மாயைக்கும், ஈசுவரனுக்கும் பேதங் காண்பிக்கப்படுகிறது.) பிரதானம் (மாயை) க்ஷரம், நாசமடை யும்; ஹர: (அவித்யாதிகளை நசிக்கச் செய்கிறவர்) ஈசுவரன், அமிருதாக்ஷரன். இந்த ஏகனாயிருக்கிற ஈசுவரன் மாயையையும் ஜீவனையும் நடத்துகிறார். அப்படிப்பட்ட வஸ்துவை தியானிப்ப தனாலும், (நானே பிரம்மம் என்று) யோசிப்பதனாலும், அப்படி அடிக்கடி யறிவதனாலும் விசுவரூபமான மாயைக்கு நிவிருத்தி யுண்டாகி மோக்ஷங் கிடைக்கும்.

11. அத்தகைய தேவனை யறிந்தால் (அவித்யாதி) பாசங் கள் யாவும் அற்றுப்போகும்; அவித்யாதி க்லேசங்களுடன் (அவைகளின் காரியமான) ஜன்ம மிருத்யு முதலானவைகளும் நாசமுறும்; அந்தப் பரமேசுவரனை தியானஞ் செய்வதால், தேஹ மழிந்த பிறகு (அர்ச்சிராதி மார்க்கத்தின் வழியாய்) விராட் ஆகிற மூன்றாவது ஸ்வரூபத்தை யடைந்து, எல்லா ஐசுவரியத்தையும் பெற்று, (அஃதாவது ஸ்வர்க்காதி போகங்களை யநுபவித்து அங் கிருந்தபடியே அவைகளை யெல்லாம் ஒழித்து) ஆப்தகாமனாய், கேவலமாய், (பூர்ணானந்த அத்விதீயமா யிருக்கிற பிரம்மமாகி) விடுகிறான்.

12. (எதனால் பரம புருஷார்த்த முண்டாகிறதோ, அதனை இங்ஙனம் அறிக.) இப்படிப்பட்ட கேவலாத்மா, நித்யமாக அறிதற்குரியது. தன்னாத்மாவிலேயே இருக்கிறது; அறிதற்குரியது இதைக்காட்டிலும் வேறொன்று மில்லை; ஜீவன், ஜகத், ஈசுவரன் இம் மூன்றும் அறியப்படின் பிரம்மம் அறியப்படும்.

13. அரணிக்கட்டையி லிருக்கிற அக்நி எவ்வாறு காணப் படவில்லையோ, கடைந்த பிறகு எவ்வாறு காணப்படுகிறதோ, அப்படி ஆத்மா தன் தேஹத்தில் தெரியவில்லை; தியானத்தால் கடைந்து பார்த்தால் புலப்படும்.

14, 15. (எப்படிக் கடைகிற தென்றால்), தேஹமாகிற கீழ் அரணியில் பிரணவமாகிற மேல் அரணியைக்கொண்டு, தியானமாகிற மத்தினால் கடைவாயாக. மறைந்திருக்கிற வெண்ணெயாகிற தேவன் வெளிப்படுவான். (இன்னும் எப்படி யிருக்கிறதென்றால்), எள்ளுக்குள் எண்ணெய்போலும், தயிருக்குள் நெய் போலும், ஊற்றினுள் ஜலம்போலும், அரணிக்குள் அக்நி போலும் மறைந்திருக்கிறது. அதை ஸத்யமார்க்கத்திலிருப்பவன் தபஸால் (தியாநத்தால்) பார்க்கிறான்.

16. (எப்படிப் பார்க்கிறான் என்றால்), க்ஷீரத்தில் நெய் வ்யாபித்திருப்பதுபோல ஆத்மாவை ஸர்வவ்யாபியாகவும், ஆத்மவித்யையாகிற தபஸுக்குக் காரணமாகவும், உபநிஷத்தினால் அறியப்படும் வஸ்துவாகவு மறிகிறான்.

# இரண்டாம் அத்தியாயம்.

1. (தியானத்திற்கு ஸாதனம், அஃதாவது யோக விஷயங் கூறப்படுகிறது.) ஸூரிய தேவரானவர் முதலில் (தியானாரம்ப காலத்தில்) மனதைப் பிரம்மத்தினிடத்தில் பொருந்தச் செய்து, அக்நி ஜ்யோதிஸைக் காட்டி, இந்தச் சரீரத்திலுள்ள புத்தியை வெளிப்பட்ட விஷயங்களினின்று இழுத்து விடட்டும் (புத்தியை அடக்கட்டும்).

2. அப்படி ஸூரியனுடைய அநுக்கிரஹம் இருக்கும் போது அடக்கப்பட்ட மனஸால் நாம் பிரம்மப்ராப்திக்குச் சக்தர்களாக ஆவோம்.

3. ஸவிதாவானவர், மனதை அடக்கி, மனஸ் முதலான கரணங்களைப் பிரம்மஸுகத்தை யடையத்தக்கனவாகவும் திவ்யமான பெரும் ஜ்யோதிஸைப் பார்க்க ஸாமர்த்தியமுள்ளனவாகவுஞ் செய்யட்டும்.

4. எவர்கள் மனதையும், மற்றக் கரணங்களையும் அடக்குகிறார்களோ அந்த விப்ரர்கள், வியாபகராயும், பெரியவராயும், ஸர்வக்ஞராயு மிருக்கிற ஸவிதாவினுடைய தயையை முதலில் ஸம்பாதிக்கவேண்டும்.

5. பிரம்மம் உங்களைச் சேரட்டும்; நமஸ்காரங்களால் சுலோகங்கள் வரட்டும். திவ்யஸ்தானத்திலிருக்கும் எல்லாப் பிரம்ம புத்திரர்களும் இதைக் கேட்கட்டும்.

6. எதில் அக்நி கடையப்படுகிறதோ, எதில் வாயு அடக்கப்பட்டுச் சப்தங்கள் உரத்த குரலில் சொல்லப்படுகின்றனவோ, சந்திரன் எதில் அதிகரிக்கப்படுகிறதோ, அந்த யக்ஞ கர்மாவில் மனஸ் பிரவிருத்திக்கிறது. (அஃதாவது போகத்துக்காக முதலில் மனஸ் கர்மாவிலே பிரவிருத்திக்கிறது.)

7. நீடித்திருக்கும் பிரம்மத்தை, ஸூரியனுடைய அநுக்கிரஹத்தால் ஸேவிக்கவேண்டும். அந்தப் பிரம்மத்தினிடத்தில் நிஷ்டையை, அஃதாவது தியானத்தை, செய்யவேண்டும். அப்படி நீ செய்வாயாகில் முன்பிறவிகளில் செய்த கர்மாக்கள் உன்னைத் தொடமாட்டா.

8. மார்பு, கழுத்து, தலை இம்மூன்றையும் உன்னதமாயுடைத்தாயிருக்கிறதும் ஸமமாயிருக்கிறதுமான சரீரத்தை ஸ்தாபனஞ் செய்துகொண்டு இந்திரியங்களை ஹிருதயத்தில் மனவினால் அடைக்கிப் பிரணவமென்ற தோணியினால் பயங்கரங்களான எல்லா ஸம்ஸாரநதிகளையும் விவேகி கடக்கவேண்டும்.

9. விவேகியானவன், பிராண வாயுக்களை அடக்கிச் சரியான நடத்தையுள்ளவனாக (அஃதாவது மிதபோஜனம் முதலியவற்றைக் கைக்கொண்டவனாக)ப் பிராண வாயு குறைந்தால் மூக்கினால் சுவாஸம் விடுகிறவனாக, நழுவுதலற்றவனாக, துஷ்டக் குதிரைகளுள்ள ரதத்தைப்போல் இம்மனஸைத் தரிக்கவேண்டும்.

10. ஸமபூமியிலும், சுத்தமான விடத்திலும், பொடிக்கல் மணல் அக்நி சப்தம் ஜலம் கட்டிடம் இவைகளில்லாத விடத்திலும் மனவிற்கு அநுகூலமும் பார்வைக்குப் பீடையில்லாததும் ஏகாந்தமானதும் காற்றில்லாததுமான இடங்களிலும் பரமாத்மாவின்மீது சித்தத்தைச் சேர்க்கவேண்டும்.

11. இவ்வாறு யோகஞ் செய்பவனுக்குப் பனி, புகை, ஸூரியன், வாயு, நெருப்பு, மின்மினிப்பூச்சி, மின்னல், ஸ்படிகம், சந்திரன் இவைகளுடைய ரூபங்கள் பிரம்மத்தைக் காட்டுவன போன்று முதலில் பார்வைக்குப் புலப்படும்.

12. ஐந்துவகைப்பட்டதாகிய யோககுணம் பிரவிருத்திக்குங்கால், பிருதிவி, அப், தேஜஸ், வாயு, ஆகாசம் இவைகள் வெளிப்படையாகும். அப்பொழுது அப்படிப்பட்ட யோகாக்நிமயமான சரீரத்தை யுடையவனுக்கு ரோகமும் இல்லை; ஜரையு துக்கமு மில்லை.

13. லகுவா யிருத்தல், ரோகமில்லாம லிருத்தல், ஆசைபற்றிருத்தல், தேஹம் வர்ணமுள்ளதா யிருத்தல், தொனி ரம்மியமாக

விருத்தல், ஸுகந்தமுடைமை, சுபமா யிருத்தல், மூத்திர புரீஷம் அல்பமா யிருத்தல் இவற்றை முதலாவது யோகப்ரவிருத்தி யென்று கூறுகிறார்கள்.

14. பொன் அல்லது வெள்ளியால் செய்யப்பட்ட ஒரு பிம்பம் எப்படி முதலில் மண் முதலான பூச்சினாலே மலினமாக விருந்து பிறகு அக்நி முதலியவற்றால் தேஜோமயமாயும், வெளுப்பாயும் விளங்குகிறதோ, அப்படி அந்த ஆத்மதத்வத்தைப் பார்த்து, தேஹியானவன், ஏகனுகவும், கிருதார்த்தனுகவும், சோகமற்றவனுகவும் ஆகிறான்.

15. எப்பொழுது, யோகி, தன் ஆத்மதத்வத்தினால் பிரம்ம தத்வதைத் தீபத்தைத் தீபத்தாற் பார்ப்பதுபோல் பார்க்கிறானோ, அப்பொழுது பிறப்பில்லாதவனுகவும், நித்யனுகவும், ஸர்வ தத்வங்களால் விசுத்தனுகவு மிருக்கிற தேவனை யறிந்து, ஸர்வ பாசங்களினின்றும் விடுபடுகிறான்.

16. இந்தத் தேவனே திக்கு, மூலை திக்கு, ஸர்வன், முன்னுண்டானவன்; கர்ப்பத்தி லிருப்பவன்; உண்டான சிசு; இனி ஜனிக்கப்போகிறவன், இங்ஙனமாக விருந்தபோதிலும், எல்லா ஜனங்களுக்கும் பிரத்தியேகமாகத் தனிப்பட்டு நிற்கிறான்; எல்லாப் பிராணிகளுடைய முகமாகவு மிருக்கிறான்.

17. எந்தத் தேவன் அக்நியிலும், ஜலத்திலும், விசுவ புவனத்திலும், ஒஷதிகளிலும், விருக்ஷங்களிலு மிருக்கிறானோ, அந்தத் தேவனை நமஸ்காரஞ் செய்கிறேன், நமஸ்காரஞ் செய்கிறேன்.

---

# மூன்றும் அத்தியாயம்.

---

1. எவன் ஒருவனுகவே மாயாவியாகத் தன் சக்திகளினுல் ஈசுவரத்தன்மை அடைந்திருக்கிருனே, எவன் ஒருவனுக, எல்லா ஜனங்களையும் உற்பத்தி காலத்திலும், சக்தி யுண்டாகிற காலத்திலும் தன் சக்திகளினுல் ஈசுவரனுக ஆளுகிருனே, அந்தத் தேவனை அறிகிருர்கள் மரண மில்லாதவர்களாகிருர்கள்.

2. (எப்படி மாயாவி என்ருல்) யாது காரணமெனின், ஒரே ருத்திரன்; ஞானிகள் அவனைத் தவிர இரண்டாவதாக ஒன்றையும் பார்க்கவில்லை; எவன் தன் சக்திகளால் எல்லா ஜனங்களையும் நியமனஞ் செய்கிருனே, அப்படிப்பட்டவனுயும், ஜனங்களுக்கு வேருனவனுயும், எல்லாப் புவனங்களையும் படைத்து, ரக்ஷித்து முடிவு காலத்தில் இழுத்துக்கொள்ளுகிறவனுயு மிருக்கிருன்.

3. எங்குங் கண்க ளுள்ளவராயும், எங்கும் முகமுள்ளவராயும், எங்குங் கைகளுள்ளவராயும், எங்கும் பாதங்களுள்ளவராயு மிருக்கிற ஒரே தேவன், பூமியையும், ஆகாசத்தையுஞ் ஸ்ருஷ்டித்து மநுஷ்யர்களைக் கைகளுடனும், பக்ஷிகளைச் சிறகுகளுடனுஞ் சேர்த்துவைத்தார். (அஃதாவது அதற்கு அதற்குத் தக்க சக்தியை உண்டாக்கினர்.)

4. எவர் தேவர்களுக்கு உத்பத்திகாரணராயும், சக்தியைக் கொடுக்கிறவராயும், விசுவத்தைப் பரிபாலிக்கிறவராயும், ருத்திரனுயும், ஸர்வக்ஞராயும் இருந்து பூர்வத்தில் ஹிரண்யகர்ப்பரைப் படைத்தனரோ அவர் நம்மை நற்புத்தி யுடையவர்களாகச் செய்யட்டும்.

5. ஹே! ருத்திர! கிரியிலிருந்து ஸுகத்தைப் பயக்கும் ஈச! யாதொரு உம்முடைய மங்களகரமாயும், கோரமில்லாததாயும், புண்ணியத்தைக் கொடுப்பதாயு மிருக்கிற தேஹ முண்டோ அந்த அத்யந்த மங்களகரமா யிருக்கிற தேஹத்துடன் எங்களை நோக்குக (கடாக்ஷம் செய்யும்—கிருபை செய்யும்).

6. மலையிலிருந்து நன்மை தருபவனே! மலையிருந்து காப்பவனே! எய்யும்பொருட்டு எந்தப் பாணத்தைக் கையில் தரித்துக்கொண்டிருக்கிறீரோ, அந்தப் பாணத்தை மங்களமாகச் செய்யும்; புருஷனையும் ஜகத்தையும் ஹிம்ஸிக்காமலிரும்.

7. பிரபஞ்சத்துக்கு வேருயும், பிரம்மனுக்கு வேருயும், பெரிதாயும், சரீரந்தோறுஞ் ஸர்வபூதங்களிடத்திலும் மறைந்திருப்பதாயும், பிரபஞ்சத்துக்கு ஓரே ஆவரணபூதமாயு மிருக்கிற அந்த ஈசனை யறிந்து அமிருதர்க ளாகிவிடுமுர்கள். (இது காரணாத்மகா அவஸ்தானம்.)

8. இந்தப் புருஷனை மஹானுகவும், பிரகாசரூபமுள்ளவனுகவும், அக்ஞானத்துப் புறம்பா யிருப்பவனுகவும் நான் அறிகிறேன். அவரையே அறிந்து மிருத்யுவைத் தாண்டுகிறுன். மோக்ஷத்திற்கு வேறு வழியில்லை.

9. எதைக்காட்டிலுஞ் சிரேஷ்ட வஸ்துவாவது, கீழ்ப்பட்ட வஸ்துவாவ தில்லையோ, எதைக்காட்டிலும் பெரிய வஸ்துவாவது சிறிய வஸ்துவாவது இல்லையோ, எது விருக்ஷம்போல் ஆகாயத்தில் நிற்கிறதோ, அந்தப் புருஷனுல் எல்லாம் நிறைந்திருக்கின்றன.

10. காரியரூபமா யிருக்கிற ஜகத்துக்கும், அதற்குக் காரணரூபமா யிருக்கிற ஈசுவரனுக்கும் வேருயிருப்பதும், ரூபரஹிதமாயும், தாபத்ரய ரஹிதமாயு மிருப்பது எதுவோ, அதை அறிந்தவர்கள் அமிருதர்கள். மற்றவர்கள் துக்கமாகிற ஸம்ஸாரத்வத்தை யடைகிறுர்கள்.

11. எல்லா முகங்களையும், தலைகளையும், கழுத்துக்களையும் உடையவராயும், எல்லாப் பிராணிகளுடைய புத்தியிலிருப்பவராயும், ஸர்வ வியாபியாயும், பகவானுயும், சிவனிருக்கிறபடியால் அவரை ஸர்வகதனென்று சொல்லப்பட்டது. (பகவான் என்பதற்கு அர்த்தம்:—எல்லா ஐசுவரியத்தையும், வீரியத்தையும், யசஸையும், ஸ்ரீயையும், ஞானத்தையும், வைராக்யத்தையும் உடையவர்.)

12. (இன்னும் எப்படி யிருக்கிறரென்றால்) மஹான், ஸமர்த்தர் (உதய ஸ்திதி ஸம்ஹார விஷயத்தில்); அந்தக்கரணத்துக்குப் பிரவர்த்தகர்; ஸுநிர்மலமா யிருக்கிற பரமபதப்ராப்தியைக் கொடுப்பவர்; பரிசுத்தர்; நாச மில்லாதவர்.

13. அங்குஷ்டப்பிரமாண முள்ளவர் (அங்குஷ்டப் பிரமாணமுள்ள ஹ்ருதயத்தி லிருப்பதால் அவருக்கு அந்தப் பிரமாணஞ் சொல்லப்பட்டது); பூர்ணர்; யாவ ருள்ளத்து மிருப்பவர்; எப்பொழுதும் எல்லாருடைய ஹிருதயத்திலு மிருப்பவர்; ஹிருதயஸ்தமா யிருக்கிற மனஸால் மறைக்கப்பட்டவர்; ஞானேசன்; இவ்வாறக எவர்கள் அறிகிறர்களோ அவர்கள் அமிருதர்கள்.

14. அநேக சிரஸுகளை யுடையவர், பூர்ணர், அநேக நேத்திரங்களை யுடையவர்; அநேக பாதங்களை யுடையவர்; புவனமனைத்தும் வ்யாபித்து பத்து அங்குலபரிமாணத்துக்கு மேலாக விருக்கிறர். (அஃதாவது, எல்லாவற்றிலும் வியாபித்தும் எல்லாவற்றிற்கும் வேறாயு மிருக்கிறர்; அல்லது நாபிக்குப் பத்து அங்குலத்துக்கு மேலிருக்கிற ஹ்ருதயத்தி லிருக்கிறவர்).

15. எது அன்னத்தினல் கறைக்கப்படாம லிருக்கிறதோ, (அஃதாவது இப்போது காணப்படுகிறதோ), எது உண்டாயிற்றே, எது உண்டாகப்போகிறதோ, அப்படிப்பட்ட இவையெல்லாம் இந்தப் புருஷன்தான். மோக்ஷத்துக்கு ஈசுவரன்.

16. எங்குங் கை காலுள்ளவர்; எங்குங் கண், தலை, முகமுள்ளவர்; எங்குங் காதுள்ளவர்; லோக முழுதுஞ் சூழ்ந்து கொண்டு நிற்கிறர்.

17. (இவரை)எல்லா இந்திரியங்களையும் பிரகாசப்படுத்துகிறவராகவும், எல்லா இந்திரிய மில்லாதவராகவும், யாவற்றிற்கும் பிரபுவாகவும், ஈசனுகவும், யாவற்றிற்கும் மேலான இடமாகவும், மஹத்தான காரணமாகவும் (அறியவேண்டும்).

18. ஒன்பது துவாரமுள்ள பட்டணமாகிய தேஹத்தில் தேஹியாக (ஜீவாத்மாவாக)வும், ஸ்தாவர ஜங்கமாத்மகமா யிருக்

கிற எல்லா ஜகத்தையும் வச்யப்படுத்துகிறவராகவும் இருந்து கொண்டு பரமாத்மா வெளியில் அசைகிறார்.

19. பாதமில்லை, விரைவாகச் செல்பவர்; கரங்களில்லை, கிரஹிக்கக்கூடியவர்; கண்களில்லை, பார்ப்பவர்; காதில்லை, கேட்பவர்; அறியவேண்டியதை அறிபவர்; இவரை அறிபவனில்லை; இவரை முதலாவது மஹா புருஷனாகச் சொல்லுகிறார்கள்.

20. அணுவைக்காட்டிலும் அணு; பெரிதைக்காட்டிலும் பெரிதாக இந்த ஜந்துவுடைய ஹிருதயத்தில் ஆத்மா இருக்கிறார்; இப்படிப்பட்ட விஷய போக ஸங்கல்ப ரஹிதராயும், மஹானுயுமிருக்கிற ஈசனை, ஈசுவரனுடைய அநுக்கிரஹத்தால், சோகமில்லாதவன் பார்க்கிறான். (அஃதாவது ஒருவன் பார்த்தால் அவனுக்குச் சோகங் கிடையாது.)

21. இவரை ஜரையில்லாதவரென்றும், புராதனரென்றும், ஸர்வாத்மாவென்றும், விபுத்வத்தால் எங்கும் நிறைந்தவரென்றும், எவருக்கு உத்பத்தியும் அபாவமு மில்லையென்று பெரியோர்கள் கூறுகிறார்களோ அவரென்றும், நித்யரென்றும் நான் அறிகிறேன்.

---

# நான்காம் அத்தியாயம்

1. எவர் ஒருவரோ; ஜாதி முதலியன இல்லாதவரோ; அநேக சக்திகளின் சேர்க்கையால் அநேக ஜாதிகளைத் தனக்கு யாதொரு பிரயோஜன மில்லாமல், தரித்துகொள்ளுகிறாரோ, எவரிடத்தில் இந்தப் பிரபஞ்சமானது ஆதியிலும் (மத்தியிலும்) அந்தத்திலுஞ் சேருகிறதோ அந்தத் தேவர் நல்ல புத்தியோடு நம்மைச் சேர்த்துவைக்கட்டும்.

2. அதே அக்நி; அதே ஸூரியன்; அதே வாயு; அதே சந்திரன்; அதே சுக்கிரன் (முதலிய நக்ஷத்திரங்கள்); அதே பிரம்மம்; அதே ஜலம்; அதே பிரஜாபதி (பிரமன்).

3. நீயே, ஸ்திரீ; புருஷன்; குமாரன்; குமாரி; கிழவன்; கழியால் வஞ்சிக்கிறாய்; பிறந்தவனாக விருக்கிறாய்; எங்கும் முக முள்ளவன்.

4. நீயே நீல பக்ஷி; மஞ்சள் பக்ஷி; செங்கண்ணுள்ள பக்ஷி; மேகம்; ருதுக்கள்; ஸமுத்ரங்கள்; அநாதியா யிருப்பதும், வியாபகமாக விருப்பதும், எதனிடத்தில் எல்லாப்புவனங்களும் உண்டாயிற்றோ, அதுவுமாக இருக்கிறாய்.

5. செம்மை வெண்மை கறுமை நிறமுள்ளவளாயும், (ரஜஸ், ஸத்வ, தமோகுண முள்ளவளாயும்), அநேக பிரஜைகளை ஸ்ருஷ்டித்தவளாயும், தனக்கு ஸமான வடிவத்தை யுடையவளாயும், பிறக்காதவளாயு மிருக்கிற, ஒருத்தியை (மாயையைப்), பிறக்காத ஒருவன் (ஜீவாத்மா) ஸேவித்துக்கொண்டும் (சொன்னபடி கேட்டுக்கொண்டும்), ஆசிரயித்துக்கொண்டு மிருக்கிறான். மற்றொரு பிறக்காதவன் (பரமாத்மா) போகத்தைப் புசித்த இவனை விட்டுவிடுகிறான்.

6. இரண்டு கருடபக்ஷிகள், சேர்க்கை யுள்ளவைகள், ஸ்நேஹ முள்ளவைகள், (ஜீவன்; பரமாத்மா) ஒரே விருக்ஷத்தில் (சரீரத்

தில்) ஆசிரயித்திருக்கின்றன ; அவைகளில் ஒன்று (ஜீவன்) கர்ம பலத்தை ருசியுடன் சாப்பிடுகிறது ; மற்றொன்று (பரமாத்மா) சாப்பிடாமல் எங்கும் பார்த்துக்கொண்டிருக்கிறது.

7. ஒரே விருக்ஷத்திலே (சரீரத்திலே) போக்தாவாக இருக்கும் புருஷன் (ஜீவன்) முழுகுகிறவனாக, அக்ஞானத்தினாலே மோஹம் பிடித்து துக்கபப்டுகிறான்; அவன் எப்பொழுது கஷ்டப் பட்டுக் கண்டுபிடிக்கப்படும் வேறான ஈசனையும் (பரமாத்மாவை யும்), (இந்த ஜகத்) அவனுடைய மஹிமை யென்பதையுங் கண்டு கொள்ளுகிறானோ, அப்பொழுது துக்கமில்லாதவ னாகிறான்.

8. வேதங்களால் அறியப்படத்தக்கவரும், நாச மில்லாதவ ரும், உயர்ந்தவரும், ஆகாயம்போ லிருப்பவருமான யாதொருவ ரிடத்தில் எல்லாத் தேவர்களும் ஆசிரயித்திருக்கின்றார்களோ, அப்படிப்பட்டவரை அறியாதவன் வேதத்தினால் என்ன செய்யப் போகிறான் ? அறிந்தவர்கள் கிருதார்த்தர்க ளாகிறார்கள்.

9. எதை வேதங்களென்றும், யக்ஞங்களென்றும், கிர துக்க ளென்றும், விரதங்களென்றும், சென்றது இருப்பது இனிவரப்போவது இவைகளென்றும் வேதங்கள் சொல்லுகின்ற னவோ, (இது நிர்க்குண பிரம்மம்), மாயியான அவர் (மாயையில் ஸம்பந்தப்பட்ட ஈசுவரன்) இந்தப் பிரபஞ்சத்தை ஸ்ருஷ்டித் தார். அந்தப் பிரபஞ்சத்தில் இன்னொருவன் (ஜீவன்) மாயையி னால் கட்டுப்பட்டு, ஸம்ஸாரத்திலே திரிகிறான்.

10. பிரகிருதி யென்பது மாயை யென்றும், மாயையுள்ள வன் ஈசுவர னென்றும் அறியவேண்டும். அந்த ஈசுவரனுடைய அவயவபூதங்களாகிற வஸ்துக்களால் இந்த ஜகத் நிறைந்திருக் கிறது.

11. எவர் மூலப்ரகிருதியாகிய மாயை யிடத்திலும், அந்த மாயையே பின்ன பின்ன பிரகிருதியா யிருக்கிற மாயை யிடத்திலும் இருக்கிறாரோ, ஒருவரோ, எவரிடத்தில் எல்லாம் லயத்தை அடைகின்றனவோ, முக்தியைக் கொடுப்பவராயும், ஸ்தோத்திரஞ் செய்யப்பட்டவராயும், தேவனாயு மிருக்கிற அந்த ஈசுவரனை நன்றாக விசாரித் தறிந்தவர்கள் மோக்ஷத்தை யடை கிறார்கள்.

12. எவர், தேவர்களுக்கு உத்பத்தி காரணராயும், சக்தியைக் கொடுப்பவராயும் விசுவத்தைப் பரிபாலிப்பவராயும், உருத்திரனாயும், ஸர்வக்ஞராயும் இருந்து பூர்வத்தில் ஹிரண்யகர்ப்பரை உண்டுபண்ணினரோ, அவர் நல்ல புத்தியோடு நம்மைச் சேர்த்துவைக்கட்டும்.

13. எவர் தேவர்களுக்கு அதிபதியோ, எவரிடத்தில் பிரஜைகள் ஆச்ரயத்திருக்கிறார்களோ, இரண்டு கால் பிராணிகளுக்கும், நாற்கால் பிராணிகளுக்கும் எவர் ஈசனோ அந்தத் தேவரை ஹவிஸால் பூஜிக்கிறோம்.

14. மாயையால் மறைக்கப்பட்டு ஒன்றுந் தெரியாமலிருக்கிற இந்த ஜகத் மத்தியில் ஸூக்ஷ்மத்திலுஞ் ஸூக்ஷ்மராயும், விச்வத்தைச் ஸ்ருஷ்டித்தவராயும், அநேக ரூபங்களை யுடையவராயும், விச்வத்தை ஒரே சுற்றாகச் சுற்றிக்கொண் டிருக்கிறவராயுமுள்ள சிவனை யறிந்த ஒருவன் மோக்ஷத்தை யடைகிறான்.

15. அவரே எக்காலத்திலும் இந்தப் புவனத்துக்கு ரக்ஷகர்; விசுவத்துக்கு அதிபதி; எல்லாப் பூதங்களிலும் மறைந்திருக்கிறவர்; எவரிடத்தில் ரிஷிகளும், தேவர்களும் மனஸை நாட்டிச் சேர்ந்திருக்கிறார்களோ, அவரையே அறிந்து மிருத்யு பாசத்தைப் பேதிக்கிறான்.

16. நெய்யின் ஸாரம்போல் அதி ஸூக்ஷ்மராயும், சிவனையும், எல்லாப் பூதங்களிலும் மறைந்திருப்பவராயும், விச்வத்தைச் சுற்றிக்கொண்டிருப்பவராயும் உள்ள தேவனை யறிந்து, எல்லாப் பாசங்களிலிருந்தும் விடுதலையடைகிறான்.

17. இவர் விச்வத்தை ஸ்ருஷ்டித்தவர், மஹாத்மா; எப்பொழுதும் ஜனங்களுடைய ஹ்ருதயத்தி லிருப்பவர்; ஹ்ருதயத்தாலும், விவேத்தாலும், மனஸாகிற ஞானத்தினாலேயும் அறியத் தகுந்தவர்; இவரை அறிந்தவர்கள் அமிருதர்களாகிறார்கள்.

18. எப்பொழுது அக்ஞானம் நீங்குகிறதோ, அப்பொழுது பகலு மில்லை; இராத்திரியு மில்லை; இருக்கிற தென்பது

மில்லை; இல்லையென்பது மில்லை; சிவன் மட்டுந்தான் நிற்கும்; அது நாசமற்றது; ஸூரியனால் புகழத்தகுந்தது. அதே நித்ய மாயும் அநாதிஸித்தமாயுமுள்ள ஞானம்.

19. இவரை உயரத்திலாவது, பக்கத்திலாவது, மத்தியிலாவது, திக்குகளில் ஒருவருங் கிரஹிக்க முடியாது; இவருக்கு ஸமானமான வஸ்து இல்லை. இவர் பெயர் மஹத்தா யிருக்கும் கீர்த்திதான்.

20. இவருடைய ரூபம், இந்திரியங்களுக்குக் கோசர மில்லாமல் நிற்கிறது; எவனும் இவரைக் கண் முதலிய இந்திரியங்களால் அறியமாட்டான். ஹிருதய குஹையிலிருக்கிற இவரைச் சுத்த புத்தியினாலும், மனஸினாலும் அறிந்தவர்கள் அமிருதர்களாகிவிடுகிறார்கள்.

21. (பிரார்த்தனை) நீ, இறப்பு பிறப்பு இல்லாதவன்; ஆனதால் ஸம்ஸாரத்தினின்றும் பயமடைந்த ஒருவன் உன்னைச் சரணமென்றடைகிறான். ஹே! உருத்திர! உன்னுடைய தக்ஷிண முகத்தால் என்னைக் காப்பாற்று.

22. எங்களுடைய புத்திரர், பௌத்திரர், ஆயுஸ், கோக்கள், அச்வங்கள், வீரர்களா யிருக்கும் வேலைக்காரர்கள், இவர்களிடத்தில், ஹே! உருத்திர! நீர் நாசத்தைச் செய்யவேண்டாம்; கோபங்கொண்டு கஷ்டப்படுத்த வேண்டாம்; ஏனென்றால் இந்த ஸதஸில் ஹவிஸுடன்கூட உம்மை யழைக்கிறோம்.

---

# ஐந்தாம் அத்தியாயம்

---

1. நாசமற்றதாயும், பிரம்ம பரமாயும், அநந்தமாயும் இருப்பவை யிரண்டு ; வித்தை யொன்று ; அவித்தை யொன்று ; இந்த இரண்டும் எதனிடத்தில் மறைவாக வைக்கப்பட்டிருக்கிறதோ, இவைகளில் அவித்யை நாச ஹேது ; வித்யை மோக்ஷ ஹேது ; இந்த இரண்டையும் எவர் நியமனஞ் செய்கிறாரோ அவர் அந்யர் (பரமாத்மா).

2. எவர் ஸ்தானந்தோறும், ஸகல ரூபங்களிடத்திலும் எல்லாம் உண்டாகிற விடத்திலும் இருக்கிறாரோ; ஸர்வக்ஞராயும், முதலில் தானே யுண்டானவராயும் இருக்கிறாரோ, அவர் பிரம்மனை ஞானங்களுடன் சேர்த்தார் ; உண்டானவராகப் பார்த்தார் (முதலில் பிரம்மாவை உண்டுபண்ணினார்).

3. மாயாத்மகமாயிருக்கிற இந்தப் பிரபஞ்சத்தில் ஒவ்வொரு ஸ்ருஷ்டிக் கூட்டத்தையும், நாநாப்பிரகாரமாகச் செய்து மறுபடியும் ஸம்ஹாரிக்கிறார் ; மறுபடியும் மரீசி முதலான யதிகளை ஸ்ருஷ்டித்து, ஸர்வாதிபதிகளாகச் செய்கிறார்.

4. ஸூரியனைப்போல், மேல், கீழ், குறுக்கு முதலான திக்குகளைப் பிரகாசப்படுத்திக்கொண்டு விளங்குகிறார் ; இப்படி பகவான், வரேண்யர், தேவர், ஏகர் தன்னுடைய ஆத்ம பூதமாயிருக்கிற எல்லாவற்றிலு மிருக்கின்றார்.

5. எவர் ஒவ்வொன்றுக்கு முள்ள ஸ்வபாவத்தைப் பக்குவப்படுத்துகிறாரோ, பக்குவப்படும்படியான எல்லாவற்றையும் விகாரப்படுத்துகிறாரோ, மூன்று குணங்களை ஏற்படுத்துகிறாரோ, அவர் ஏகர். விச்வத்திலிருக்கிறார்.

6. உபநிஷதங்களிலே மறைந்திருக்கிற அந்தப் பிரம்மத்தை எந்தப் பிரமன் அறிந்தாரோ, அவரும், எந்தத் தேவர்கள், ரிஷிகள் அறிந்தார்களோ, அவர்களும் அதேமயமாய் அமிருதர்களாகிவிட்டார்கள்.

7. (ஜீவாத்மா) குணத்தோடு கூடியவர், பலத்துக்கும், கர்மாவுக்குங் கர்த்தா; செய்யப்பட்ட கர்மாவின் பலனை அநுபவிப்பவர்; விச்வரூபர்; முக்குண முள்ளவர்; மூன்று வழியுள்ளவர்; (தேவயானம், பிதிருயானம், நாமாதி மார்க்கம்); பஞ்ச பிராணனுக் கதிகாரி; தன்னுடைய ஸ்வ கர்மாக்களுடன் ஸஞ்சரிக்கிறார்.

8. அங்குஷ்ட மாத்திரர்; ஸூரியனுக்கு ஸமானமான ரூபமுள்ளவர்; ஸங்கல்பம், அஹங்காரம் இவைகளுடன் கூடியவர்; புத்தியின் குணத்தோடும், தன் சொந்தமான (ஜாதி) குணத்தோடுஞ் சேர்ந்தவர்; தார்க்குழியின் நுனி ஆணியைப்போல் சிறிதாக இருந்தாலும் வேறாகமட்டுந் தோற்றப்படுகிறார். (பரமாத்மாவுக்கு அவர் வேறில்லை.)

9. ஒரு வாளினுடைய நுனியை நூறு பாகஞ்செய்து, அதில் ஒரு பாகத்தை நூறு பாகஞ் செய்யின், அதில் ஒரு பாகம் ஜீவன். (அஃதாவது பரமாத்மாவின் அநேக அம்சங்களில் ஓர் அம்சம் ஜீவன்.) ஞானமுடையவன், நாசமில்லாதவன்.

10. இவன் (ஜீவாத்மா) ஸ்திரீயுமல்ல; புருஷனுமல்ல; நபும்ஸகனுமல்ல; எந்த எந்த சரீரத்தை எடுக்கிறானோ அதனால் ரக்ஷிக்கப்படுகிறான்.

11. ஸங்கல்பம்; பிறகு த்வக் இந்திரிய வியாபாரம்; பிறகு பார்வை; பிறகு ஆசை; இவைகளால் (கர்மாக்கள் செய்யப்படுகின்றன); அந்த அந்த கர்மாக்களுக்குத் தக்கபடி ரூபங்கள், அந்த அந்த ஸ்தானம். யோனி இவைகளை மனுஷ்யன் அடைகிறான். போஜனம், பானம், மழை இவைகளினால் சரீரம் விருத்தியை அடைவதுபோல்.

12. தேஹியானவன் (ஜீவாத்மா) ஸ்தூல ஸூக்ஷ்மங்களாயிருக்கிற அநேக ரூபங்களைத் தன் குணங்களால் (விஹித, பிரதிஷித்த விஷயாநுகுணங்களால்) சுற்றிக்கொண்டிருக்கிறான். அந்தக் கிரியைக்குத் தக்க குணங்களாலும், ஆத்ம குணங்களாலும் அந்தந்த ரூபங்களுக்குச் சேர்த்துவைக்கிற காரணமாயும், பரனுக்கு வேறானவனாயுங் காணப்படுகிறான்.

13. கஹனமுள்ள ஸம்ஸாரத்தின் நடுவிலே ஆதி அந்தம் இல்லாதவனும், விச்வத்துக்கு ஸ்ருஷ்டி கர்த்தாவாயும், அநேக ரூபங்களை யுடையவனையும், விச்வத்தை ஒரே சுற்றாகச் சுற்றிக் கொண்டிருக்கிறவனையு மிருக்கிற தேவனை அறிந்து, ஸர்வ பாசங்களினின்றும் விடுபடுகிறான் (ஜீவன்).

14. சுத்தமான அந்தக்கரணத்தால் கிரஹிக்கப்படத் தக்கவனையும், அசரீரியென்று பெயருள்ளவனையும், பாவத்தையும் அபாவத்தையும் உண்டுபண்ணுகிறவனையும், சிவனையும் (சுத்தனையும்), கலைகளை ஸ்ருஷ்டித்தவனையு மிருக்கிற தேவனை யார் அறிவார்களோ அவர்கள் தேஹத்தைத் தியஜிக்கிறார்கள்.

# ஆறும் அத்தியாயம்

1. கலங்கிய அறிவுடையவராகிய சில பண்டிதர்கள் (இந்த உலகத்தின் தோற்றத்திற்குக் காரணம்) இயற்கைதானென்றும், வேறு சிலர் காலமே (காரணம்) என்றுஞ் சொல்லுகிறார்கள். உலகத்தில் ஈசனுடைய மஹிமையாலேதான் இந்தப் பிரம்ம சக்கரம் * சுழலுகின்றது.

2. நித்யமாக இவ் வுலகனைத்தையுஞ் சூழ்ந்திருப்பவன், அறிஞன், காலத்திற்குக் காலமாக இருப்போன், (எல்லாக்) குணங்களு முடையோன், எல்லா முணர்ந்தவன்,— இவனது ஆணையின்படி இங்கு மண், நீர், தீ, காற்று, வெளி எனக் கருதப் படும் ஸ்ருஷ்டி (யனைத்தும்) சுழன்றுகொண்டிருக்கிறது.

3. அத் தொழிலைச் செய்து (இவ்வுலகத்தைப் படைத்து), பின் மீண்டும் ஆலோசிப்பவனாகித் தத்வத்தை (ஆத்ம தத்வத்தைத்) தத்வத்துடன் (பிரகிருதி தத்வங்களுடன்) சேர்ப்பிக்கிறான். அஃதாவது, ஒன்றோடும், இரண்டோடும், மூன்றோடும், எட்டோடும் (இவ்வெண்ணுள்ள தத்வங்களுடனும்) காலத்தோடும், ஸூக்ஷ்மமாகிய ஆத்ம குணங்களோடும் (சேர்ப்பிக்கின்றான்).

4. குணங்களுடன் சேர்ந்த கர்மாக்களைப் (படைப்புத் தொழில்களைச்) செய்து, எவன் அவற்றில் அவற்றின் தன்மைகளை ஏற்படுத்துகிறானோ, அவன் (அந்த ஈசன்) அவையில்லாத போது, அத் தொழில்கள் அழிந்துவிட்ட காலத்தில், தொழில் நீங்கியவனாய், (பிரகிருதி) தத்வங்களினின்றும் பிரிந்து நிற்கின்றான்.

5. அவன் ஆதி, எல்லா ஸம்யோக (புணர்ப்பு) நிமித்தங்களுக்கும் ஹேதுவாவோன். முக்காலங்களுக்கும் மேற்பட்டவன். கால மில்லாதவனாகவுங் காணப்பட்டவன். அகி

* முதல் அத்தியாயம் 4-ம் மந்திரத்தைக் காண்க.

ரூபனும், ஜகத்தாகியவனும், ஸ்வசித்தத்தி லுள்ளவனும், பூர்வனுமாகிய அந்தத் தேவனை உபாஸனை செய்து;

6. அவன் விருக்ஷம் (ஜகத்) காலம், இவற்றின் அளவுகளுக்கு அப்பா லுள்ளவன், அவற்றினின்றும் வேறானவன்; அவனால் இந்தப் பிரபஞ்சம் சுழன்றுகொண்டிருக்கிறது. தர்மத்தை வஹிப்பவனும், பாபத்தை அழிப்பவனும், ஜகத்தின் தலைவனும், ஆத்மாவிலுள்ளவனும், அம்ருதனும், அனைத்தையுந் தரிப்பவனும் (ஆகிய அந்த ஈசனை) உணர்ந்து;

7. ஈச்வரர்களிலே உயர்ந்தவனாகிய மஹேசுவரன், தேவதைகளிலே உயர்ந்த தேவதை, தலைவர்களுள் தலைவன், உயர்ந்தவற்றிலெல்லாம் உயர்ந்தவன், புவனேசன், வணங்குதற்குரியவன், அவனை அறிகின்றோம்.

8. அவனுக்குக் காரியமுமில்லை, கரணமுமில்லை. அவனுக்கு ஒப்புயர்வு காணப்படுவதில்லை. இவனது சக்தியை உயர்ந்ததென்றும், பலவிதமானதென்றுங் கேள்வி யுறுகின்றோம். (இந்தச் சக்தி) இயற்கை வடிவானது, ஞானம், பலம், தொழில் (என்னுமிவையாக நிற்பது).

9. அவனுக்கு உலகத்தில் யாருந் தலைவனில்லை; அவனுக்கோர் இறைவனில்லை; அவனுக்கொரு குறியுமில்லை; அவன் (எல்லாவற்றிற்கும்) காரணம்; கரணாதிபர்களின் தலைவன்; அவனைப் பிறப்பித்தவனும், அவனுக் கதிபயும் வேறில்லை.

10. ஏகனாகிய தேவன், சிலந்திப் பூச்சியைப்போலத் தமது இயல்பினின்றும், பிரகிருதியிற் பிறந்த நூல்களால் தன்னை மூடிக்கொள்ளுகிறவன்; இவன் நமக்கு அழிவற்ற பிரம்ம நிலையைத் தருக.

11. ஒருவனாகிய தேவன், எல்லா வஸ்துக்களிலும் மறைந்து நிற்பவன், எதிலும் நிறைந்தவன், எல்லாப் பூதங்களுக்கும் அந்தராத்மா, கர்மாக்களுக் கெல்லாந் தலைவன், எல்லாப் பொருள்களிடத்தும் இருப்பவன், ஸாக்ஷி, அறிவானவன், குணமில்லாதவன்;

12. செய்கையற்றிருக்கும் பல ஸாங்கிய சாஸ்திரப்படி பிரகிருதிக்கே தொழில் விகாரங்க ளுண்டு, ஜீவர்களுக்கில்லை. ஜீவர்

களுக் கிடையே தானொருவனே தன் வசமுடையவனாக இருப்ப வன், தான் ஒரே விதையாக இருந்து, பலவிதமானவற்றை செய் பவன், ஆத்மாவினிட மிருப்பவன். அவனை எந்தத் தீரர்கள் அறிகிறார்களோ, அவர்களுக்கே சாச்வதமான ஆநந்த முண்டு. மற்றவர்களுக் கில்லை.

13. நித்யர்களுக்குள்ளே நித்யன், சேதனர்களுக்குள்ளே சேதனன், தான் ஒருவனாக இருந்து பலவற்றின் விருப்பங்களை ஆக்குபவன், ஸாங்க்ய யோகத்தா லறியத்தக்கவன், அந்தக் காரணனாகிய தேவனை அறிந்தோன் எல்லாப் பாசங்களினின்றும் விடுபடுகின்றான்.

14. அங்கு (அவனிடத்திலே) ஸூரியன் பிரகாசிப்பதில்லை. சந்திரனும் நக்ஷத்திரங்களும் பிரகாசிப்பதில்லை. இந்த மின்னல் கள் ஒளி வீசுவதில்லை. இந்த அக்நி (பௌதிக அக்நி) எவ்விதம் ஒளிதரும்? அவனை (ஒளி தருபவனையே) எல்லாம்பின் பற்றி ஒளிர்கின்றன. அவனது ஒளியினால் இவையனைத்தும் விளங்குகின்றன.

15. அவன் இந்தப் புவனத்தி னிடையே ஒரே (ஹம்ஸ: அவித்யையை அழிப்பவன்) ஹம்ஸமாக நிற்பவன், அவனே தண்ணீரி னுள்ளே புகுந்திருக்குந் தீயாகுபவன், அவனை அறிந்து தான் ஒருவன் மரணத்தைக் கடத்தல்வேண்டும். (மோக்ஷம்) செல்லுவதற்கு வழியில்லை.

16. அவன் அனைத்தையுஞ் செய்தவன், அனைத்தையும் அறிந்தவன், தன்னைத்தானே பிறப்பித்தோன், (பிறப்பில்லாத வன்), அறிஞன், காலத்திற்குக் காலன், (எல்லாக்) குணங்களு முடையவன், ஸர்வத்தையு முணர்ந்தோன், பிரதானத்திற்கும் (பிரகிருதிக்கும்) ஜீவர்களுக்கும் பதியானோன், ஸம்ஸாரத்தின் மோக்ஷம், ஸ்திதி, பந்தம், இவற்றிற்கு ஹேதுவாக இருப்பவன்.

17. தன்மயன், அமிருதன், ஈசனாக நன்கு நிலைபெற்றவன், அறிஞன், எங்கு மிருப்பவன், இவ் வுலகத்தை ரக்ஷிப்பவன், அவனே இவ் வுலகத்திற்கு நித்யத் தலைவன். அவனல்லாது வேறொரு ஹேதுவிருந்து ஆட்சி புரிவதில்லை.

18. எவன் பூர்வத்தில் (ஸ்ருஷ்டியின் தொடக்கத்தில்) பிரம்மனைப் படைத்து, அப் பிரம்மனுக்கு வேதங்களைக் கொடுத்து ஆத்மஞானத்தைப் பிரகாசமுறச் செய்யும் அந்தத் தேவனை, மோக்ஷத்தில் விருப்பமுடைய நான் சரணமடைகிறேன்.

19. அம்சங்க ளில்லாதவனை, செய்கை யில்லாதவனை, சாந்தனை, பழிப்பில்லாதவனை, மாசற்றவனை, அமிருதத்தின் உயர்ந்த அணையை, நன்கு தீ மூண்ட விறகிலுள்ள நெருப்புப் போன்றவனை, (நான் சரணமடைகின்றேன்).

20. எப்போது மனிதர் ஆகாசத்தைத் தோல்போல மடிக்க வல்லவ ராவார்களோ, அப்போது அந்த (ஆத்ம) தேவனை அறியா மல் துக்கத்தின் முடிவுண்டாகும். (ஆத்ம ஞான மின்றி துக்க நிவிருத்தி ஏற்படுதல் அஸம்பாவித மென்பது கருத்து.)

21. மிகுந்த பரிசுத்த முடையதும், ரிஷி கணங்களுக்கு உரியதும் ஆகிய பிரம்ம வித்யையைத் தவப் பெருமையாலும், ஈசனருளாலும் அறிந்த ச்வேதாச்வதரன், நான்கு ஆச்ரமங் களையுங் கடந்த மேலோருக்கு நன்கு எடுத்துக் கூறினன்.

22. வேதாந்தத்திலே பரம ரஹஸ்யமானதும், முன் கல்பத்திலே ஆராய்ச்சி செய்யப்பட்டதும் ஆகிய இந்தப் பிரம்ம வித்யையை மன ஒடுக்கமில்லாதவனுக்கும், புத்திர னில்லாத சிஷ்யனுக்குங் கொடுக்க லாகாது.

23. எவனுக்கு ஈசனிடத்திலே மிகுந்த பக்தி யுளதோ, ஈசனிடத்துள்ளது போலவே குருவிடத்தும் பக்தி யிருக்கின் றதோ, அந்த மஹாத்மாவினிடம் இந்த அர்த்தங்கள் கூறமிடத் துப் பிரகாசமடைகின்றன. அந்த மஹாத்மாவிடம் பிரகாச மடைகின்றன.

ஓம். சாந்தி: சாந்தி: சாந்தி:

---

ச்வேதாச்வதரோபநிஷத் முற்றிற்று.

---

சாந்தி:

ஓம். அது (பிரம்மம்) பூர்ணம் (ஆகாசம்போல் எங்கும் நிறைந்தது). இதுவும் (உபாதிகளுடையதும், வியவஹாரத்துட்பட்டதும், காரியாத்மகமாயு மிருக்கின்ற ஜீவனும்) பூர்ணம். அந்தப் பூர்ண வஸ்துவினின்றும் இந்தப் பூர்ண வஸ்து உதயமாயிற்று. இந்தப் பூர்ண வஸ்துவானது (ஜீவன்) வித்யையினால் பூர்ணத்வத்தைக் கிரஹித்தால் பூர்ணமாகிய பரமாத்மாவாகத்தான் மிஞ்சி நிற்கிறது. (அஃதாவது, பரமார்த்த ஸ்வரூப வஸ்துவினிடத்திலிருந்து அந்ய வஸ்துப்போல உண்டாகி விளங்குகின்ற ஜீவனாகிய தன்னை, அந்தப் பூர்ணமான பரபிரம்ம மென்று அறிந்து, அவித்யையினாலுண்டான நாமரூபாதி கொள்கையை நிவிருத்திசெய்து, நானே பிரம்மம் என்று அறிந்தால், அவன் அந்தப் பிரம்மமாகவே ஆகிவிடுகிறான்.)

(இந்த உபநிஷத்தை "வாஜஸனீய ஸம்ஹிதோபநிஷத்" என்றும், "ஈசாவாஸ்யோபநிஷத்" என்றும் வழங்குவதுண்டு.)

ஓம்

ஓம் தத் ஸத்

# ஈசோபநிஷத்

---

1. இந்த ஜகத்திலே எந்த எந்த வஸ்துக்கள் இருக்கின்றனவோ அவை யாவும் பரமாத்மாவால் மூடப்பட்டிருக்கின்றது. (அஃதாவது, ஒவ்வொன்றிலும் அவரிருக்கிறார்; அவரன்றியொன்றுங் கிடையாது.) அதை (அந்த ஜகத் உபாதியைத்) தள்ளிவிட்டு அவரைமட்டும் ஆதரி (பஜி, காப்பாற்று). அப்படி விட்டுவிட்ட நீ யாதொருவனுடைய தனத்திலும் (உன்னுடைய தா யிருப்பினும்அல்லது பிறருடைதா யிருப்பினும்) ஆசை வைக்காதே.

2. (ஆத்ம ஞான மில்லாத ஒருவன்) இவ்விடத்தில் (உலகத்தில்) நூறு வருஷ காலம் (அஃதாவது அவன் ஆயுள்பரியந்தம்) விஹித கர்மாக்களைச் செய்துகொண்டு பிழைத்திருக்க இச்சிக்கட்டும். இப்படிப்பட்ட நரனாகிய உனக்கு இந்தக் கர்மானுஷ்டானத்தைக்காட்டிலும் உன்னைக் கெட்ட கர்மா தொடாதபடி செய்யும்வழி வேறில்லை.

3. ஆத்ம ஞான மில்லாத ஜனங்கள் அக்ஞானமாகிற இருளால் மறைக்கப்பட்டிருக்கிறார்கள். எவர்கள் ஆத்மஹத்தி செய்கிற ஜனங்களோ (ஆத்மாவை மறந்து விடுகிறார்களோ) அவர்கள் (தேஹத்தை விட்டு) அவைகளை (ஸ்தாவரம் வரையிலுள்ள வேறு சரீரங்களை) அடைந்து (ஸம்ஸாரத்தில்) பிரவேசிக்கிறார்கள்.

4. (பிரம்ம தத்வம் எப்படிப்பட்டதென்றால்), சலிக்காதது (ஒரே ரூபமானது, விகாரப்படாதது). ஒன்று. மனஸைக் காட்டிலும் அதிக வேகமுள்ளது (ஒரு விஷயத்தில் மனஸ் பிரவேசிப்பதற்கு முன் ஆத்மதத்வம் முன்னேறுகிறது). இதை இந்திரியங்கள் அடைவதில்லை (இந்திரியங்களால் கண்டுபிடிக்க

முடியாது). முந்தியுள்ளது (ஆகாசம்போல எப்போதும் எங்கும் வியாபித்திருக்கின்றது). அதி சீக்கிரம் போகின்ற இந்திரியாதி களைத் தாண்டி முன்னே போனதுபோல விருக்கிறது. தான் மாறுபடாமல் இருக்கிறது. அதன் ஸந்நிதியில் வாயு கர்மாக்களைச் செய்வித்துக்கொண்டிருக்கிறான். (அதனால் பிராணவாயு முதலியன தத்தம் சேஷ்டைகளை நடத்திக்கொண்டிருக்கின்றன.)

5. அதுவே சலிக்கிறது, சலியாமலு மிருக்கிறது. அது (ஆத்ம ஞான மில்லாதவர்களுக்குத்) தூரமாயும் (ஞானிகளுக்கு) ஸமீபமாயு மிருக்கிறது. அஃது இந்த எல்லா ஜகத்துக்குள்ளேயும் வெளியிலேயு மிருக்கின்றது.

6. எவனொருவன் ஆத்மாவினிடத்தில் எல்லாப் பூதங்களையும் எல்லாப் பூதங்களினிடத்திலும் ஆத்மாவையும் பார்க்கிறானோ அவன் அதனின்றும் (எதையும்) இகழ்வதில்லை (இகழ்தல், இரக்கம் முதலான பாசங்கள் இவனைத் தொடமாட்டா).

7. ஆத்மஞானிக்கு எந்தக் காலத்தில் எல்லாப் பூதங்களுந் தானாக வாகிவிடுமோ அப்போது ஐக்யத்தை பார்த்துக்கொண்டிருக்கிற அவனுக்கு ஆசை யேது? சோக மேது?

8. அந்த ஆத்மா ஸர்வவியாபி. தேஜஸ் உள்ளவர். காயமில்லாதவர் (ஸூக்ஷ்ம தேஹ மில்லாதவர்). புண்களில்லாதவர். நரம்பில்லாதவர் (ஸ்தூல தேஹ மற்றவர்). சுத்தர். புண்ணியத்தோடு சேராதவர். கவி (ஸூக்ஷ்மமான பார்வை யுள்ளவர்). புத்திமான் (மனதை யடக்குபவர்). யாவற்றிற்கும் மேலாக விருப்பவர். தானே உண்டானவர். நித்யர்களா யிருக்கின்ற பிரஜாபதிகளின்பொருட்டு அந்த அந்த பூத கர்ம பலனுக்குத் தக்கபடி செய்யவேண்டிய அர்த்தங்களை ஏற்படுத்துகிறார்.

9. எவர்கள் அவித்யையை (கர்மாவை) உபாஸிக்கிறார்களோ, அவர்கள் கொடிய தமஸில் (அஞ்ஞானத்தில்) பிரவேசிக்கின்றார்கள். எவர்கள் வித்யையில் (தேவதா ஞானத்தில்) இச்சையுற்றவர்களா யிருக்கிறார்களோ, அவர்கள் இன்னும் அதிகமான தமஸில் பிரவேசிக்கின்றார்கள். (இதனால் கேவலங் கர்மானு

டானமுங் கூடாது, கர்மாவைச் சுத்தமாய் விட்டுக் கேவலந் தேவதா ஞானமுங் கூடாதென்று தாத்பரியம்.)

10. எந்தப் பெரியோர்கள் நமக்கு (கர்மாவையும், ஞானத்தையுங் குறித்து) விஸ்தாரமாகச் சொல்லி யிருக்கிறார்களோ அவர்களுடைய (வசனமாகிற) "வித்யையால் (கிடைக்கப்பட்ட பலன்) வேறு, அவித்யையால் (கிடைக்கப்பட்ட) பலன் வேறு" என்பதை நாம் கேட்டிருக்கின்றோம்.

11. எவன் வித்யை அவித்யை இவ்விரண்டையுஞ் சேர்த்து அறிகிறானோ (அநுஷ்டிக்கிறானோ) அவன் அவித்யையினால் மிருத்யுவை (ஞானம் கர்மா இரண்டையும்) தாண்டி, வித்யையினால் அமிருதத்தை (தேவதாத்மபாவத்தை) யடைகிறான்.

12. எவர்கள் அஸம்பூதியை (அவ்யாகிருத மென்ற பிரகிருதியை, காரிய மாகாத, வடிவு பெறாத மூலப் பிரகிருதியை) உபாஸிக்கிறார்களோ அவர்கள் மிக இருண்ட தமஸில் (அக்ஞானத்தில்) பிரவேசிக்கிறார்கள். எவர்கள் ஸம்பூதியில் (பிரம்மன் முதலிய காரிய பிரம்மத்தினிடத்தில்) இன்புற்றவர்களா யிருக்கிறார்களோ, அவர்கள் மிகவும் இருண்ட தமஸில் பிரவேசிக்கிறார்கள் ; (இதனால் கேவலம் பிரகிருதியை உபாஸிக்கக்கூடாது. கேவலங் காரிய பிரம்மத்தையும் உபாஸிக்கக்கூடாது.)

13. எந்தப் பெரியோர்கள் நமக்கு (பிரகிருதியையும், காரிய பிரம்மத்தையும்) விஸ்தாரமாகச் சொல்லி யிருக்கிறார்களோ அவர்களுடைய (வசனமாகிய) "ஸம்பூதியால் (அடையப்பட்ட பலன்) வேறு ; அஸம்பூதியால் (அடையப்பட்ட பலன்) வேறு" என்பதை நாம் கேட்டிருக்கின்றோம்.

14. எவன் ஸம்பூதி, விநாசம் (அஸம்பூதி) இவ்விரண்டையுஞ் சேர்த்து அறிகிறானோ (உபாஸிக்கிறானோ) அவன் விநாசத்தால் மிருத்யுவை (அதர்ம காமாதி தோஷத்தாலுண்டானதைத்) தாண்டி, ஸம்பூதியால் அமிருதத்தை (அணிமாதி ஐசுவரியப் பிராப்தி பலனை) அடைகின்றான்.

15. (அமிருதத்தை யடையு மார்க்க மென்னவெனில், ஸூரியப் பிரார்த்தனை.) ஹே! பூஷன்! (ஸூரியனே) ஜோதிர் மயமான மறைப்பினால் பிரம்மத்தினுடைய முகம் (அதனிடம் போகும்வழி) மூடப்பட்டிருக்கிறது. ஆகையால், அதை நீ ஸத்ய தர்மனாகிய நான் பார்க்கும்பொருட்டு (அடையும்பொருட்டு) திறந்து விடு.

16. ஹே! பூஷனே (போஷிக்கிறவரே), ஏக ரிஷியே! யமனே! (எல்லாவற்றையுந் தம்மிடத்தில் அடக்கிக்கொள்ளுகிற வரே); ஸூரியனே (பிராணங்களையும் ரஸங்களையும் இழுத்துக் கொள்ளுகிறவரே); பிராஜாபத்யா! (பிரம்மத்தின் புத்திரனே), (உம்முடைய) கிரணங்களை (என்னை விட்டுத்) திருப்பிவிடும், ஒன்றாகச் சேரும் (இழுத்துக்கொள்ளும்). உம்முடைய ஜ்யோதி ஸாகிற மிகுந்த சோபனமுள்ள ரூபத்தைப் பார்க்கின்றேன். அந்தப் புருஷனே (ஸூரிய மண்டலத்திலுள்ள புருஷன் பிரம்மம்) நான்.

17. (இறந்துபோகிற என்னுடைய) வாயு (பிராணன்) அநிலமான அமிருதத்தை (ஸர்வாத்மகமா யிருக்கப்பட்ட ஸூத்ராத்மாவை) அடையட்டும். பிறகு, இந்தச் சரீரம் பஸ்மாவகப் போகட்டும். ஹே! க்ரதுவே! (ஸங்கல்பாத்மா, ஜீவாத்மா) ஓம் (பரமாத்மாவை) ஸ்மரி. (எற்கனவே செய்யப்பட்டிருக்கிற) கர்மாவையும் ஸ்மரி. ஹே! க்ரதுவே, 'ஓம்' என்பதை ஸ்மரி, கர்மாவை ஸ்மரி.

18. ஹே! அக்நியே! (பரமாத்மாவே), ஹே! தேவனே! எல்லாக் கர்மாக்களையும் பிரக்ஞானங்களையும் அறிந்தவர்களாக எங்களைக் கர்மாக்களையும் பிரக்ஞானங்களையும் அறிந்தவர்களாக எங்களைக் கர்ம பல போகத்தின்பொருட்டு நல்ல வழியில் நடத்தும். எங்களுடைய கொடிய பாபத்தை நாசப்படுத்தும். உமக்கு நாங்கள் மிகவும் நமஸ்காரஞ் சொல்லுகின்றோம்.

ஓம். சாந்தி: சாந்தி: சாந்தி:

---

ஈசோபநிஷத் முற்றிற்று.

---

## சாந்தி

ஓம். அது (பிரம்மம்) பூர்ணம். இதுவும் (ஜீவனும்) பூர்ணம். அந்தப் பூர்ணவஸ்துவினின்றும் இந்தப் பூர்ணவஸ்து உதயமாயிற்று. இந்தப் பூர்ண வஸ்து (ஜீவன்), வித்யையினால் பூர்ணத்வத்தைக் கிரஹித்தால் பூர்ண மாகிய பரமாத்மாவாகத்தான் மிஞ்சி நிற்கிறது. ஓம். சாந்தி: சாந்தி: சாந்தி:

ஸ்ரீ சங்கர பாஷ்ய ப்ரதீகச் சுருக்கம்:—ஸம்ஸாரத்தினின்றும் நிவிருத்தியையடைய இச்சிப்பவர்களுக்கு அந்த ஸம்ஸாரத்திற்கு ஹேது வாக விருப்பதை நிவிருத்திசெய்ய ஸாதனமான 'ப்ரஹ்மாத்மைகத்வ வித் தையை' (பிரம்மமும் தானும் ஒன்றென்ற அறிவு) அடையும்பொருட்டு 'உபநிஷத்' என்று பெயருள்ள பிரம்மவித்யை சொல்லப்படுகின்றது.

இஃது அரண்யத்தில் சொல்லப்பட்டதாலும், பெரிதாயிருப்பதாலும் 'ப்ருஹதாரண்யக' உபநிஷத் என்று பெயர்பெற்றது. (பிருஹத்-பெரிது, அரண்யகம்-காடு.)

கர்மகாண்டத்தின் ஸம்பந்தம் இதன் ஆரம்பத்தில் சொல்லப்படு கின்றது. கர்மகாண்டமும், ஞானகாண்டமும் சேர்ந்த எல்லா வேதங்க ளும், பிரத்யக்ஷ பிரமாணத்தினாலாவது, அநுமானத்தினாலாவது கண்டு பிடிக்கக்கூடாத 'இஷ்டவஸ்துபிராப்தி' (விரும்பியதை அடைதல்), 'அநிஷ்டவஸ்துபரிஹாரம்' (விரும்பாததைக் களைதல்) எனுமிவற்றிற்கு வேண்டிய உபாயத்தை வெளிப்படுத்துவதில் சிறந்தனவாகும். ஏனென் றால், ஸ்வபாவத்திலேயே எல்லாமனிதர்களுக்கும் 'நமக்கு நன்மை வரவேண்டும், நமக்குத் தீங்கு வரலாகாது' என்ற எண்ணமிருக்கின்றது. உலகத்தில் செவ்வையாகத் தெரியப்படும் விஷயங்களில் மேற்படி நோக்கத்திற்குரிய உபாயங்களை யறிந்து நடத்துவதற்கு வேதங்களைத் தேடவேண்டுவதில்லை. மேலும், ஜன்மாந்தர மடைதற்குரிய ஓர் ஆத்ம வஸ்து நம்மிடமிருக்கிறதென்று எண்ணுதவர்களுக்கும் வேதங்கள் அவசிய மில்லை. ஆதலால், அப்படிபட்ட ஆத்மா ஒன்று உண்டென்று நம்புவோர் களுக்குமட்டும் இந்த சாஸ்திரம் பிரவிருத்திக்கின்றது. ஆத்மா உண்டு என்பது ஸித்தம். ஆனால், அது பிரத்யக்ஷமாகத் தெரியவில்லை. அப்படிப் பிரத்யக்ஷமாகத் தெரிந்தால், ஆத்மா இல்லையென்று சொல்லுகின்ற பௌத்தாதிகள் நமக்கு (வேதாந்திகளுக்கு) விரோதிகளாக இருப்பார்களா? அநுமானத்தாலும் ஆத்மா உண்டென்று தெரியவில்லை. ஆதலால், வேதங்களின் ப்ராமாண்யத்தைக்கொண்டு ஆத்மா உண்டென்று நம்புகிற வர்களுக்கு ஜன்மாந்தரத்தில் ஸம்பவிக்கும் இஷ்டப்ராப்தி, அநிஷ்ட பரிஹாரம், இவற்றிற்கு வேண்டிய உபாயங்களை எடுத்துக் காட்டும் பொருட்டு கர்மகாண்டம் சொல்லப்பட்டது.

ஆனுல், இஷ்டாநிஷ்டப்ராப்திபரிஹார இச்சைக்குக் காரணமாகவும், கர்த்ருத்வ, போக்த்ருத்வ ஸ்வரூப அபிமான லக்ஷணமாகவும் இருக்கின்ற அக்ஞானத்தை, அதற்கு விரோதமான பிரம்ம ஞானத்தினுலே யல்லாது மற்றவிதமாய்ப்போக்கடிக்க முடியாது. எதுவரை மேற்படி அக்ஞானம் நீக்கப்படவில்லையோ, அதுவரை கர்மபல விஷயத்திலுண்டாகும் ராகம் த்வேஷம் முதலிய இயற்கைத் தோஷங்களுடன் கூடியவனுக, அசாஸ்திரீயகர்மாக்களைச் செய்யத்தொடங்கி, அப்படி அநேக கர்மாக்களைச் செய்து அதனுல் ஸ்தாவராந்தமான அதோகதியில் போகின்றுன்.

ஒருவேளை, சாஸ்திரகர்மாக்களினுல் ஸம்ஸ்கரிக்கப்பட்டு, தர்மமான கர்மாவைச் செய்கிறுன். அப்படிப்பட்ட கர்மா, ஞானத்துடன் கூடியதென்றும், கேவலம் என்றும் இரண்டு வகைப்படும்.

கேவல கர்மாவிற்கு (ஞானமில்லாமல் செய்கிற கர்மாவிற்கு) பித்ருலோகப்ராப்தியுண்டு. மற்றெரு கர்மாவிற்குப்பலன் தேவலோகம் முதல் பிரம்மலோகம் வரையில் பிராப்தி. இப்படி பிரமன்முதல் ஸ்தாவரம் வரையுள்ள பூதங்கள் ஸ்வபாவமான அவித்யாதி தோஷமுள்ளவர்களாகவும், ஸம்ஸாரகதியாகிய நாம, ரூபம், கர்ம இவற்றைத் தழுவியவர்களாகவும் இருக்கின்றுர்கள்.

இப்பொழுது வ்யாகிருதமாக (விரிவுடையதாக)க் காணப்படுகிற ஜகத்தானது, ஸ்ருஷ்டிக்குமுன், அவ்யாகிருதமாக (விஸ்தாரப்படாததாக, ஸூக்ஷ்மமாக) இருந்தது. இந்த ஸம்ஸாரமோ, விதையினின்றும் முளைபோல, அவித்யையால் உண்டாக்கப்பட்டது. அஃது, ஆத்மாவினிடம் கிரியாகாரக பல லக்ஷணமாக ஆரோபிக்கப்பட் டிருக்கின்றது. அநாதியாகவும் அநந்தமாகவு மிருக்கின்ற ஸம்ஸாரத்தினின்றும் நிவிருத்தியை இச்சிப்பவனுடைய அக்ஞானத்தைப் போக்கும்பொருட்டு. அதற்கு விரோதமான ஆத்மஞானத்தை அவனுக்கு உபநிஷத் போதிக்கின்றது.

அச்வமேதத்தைப்பற்றி இந்த உபநிஷத்தின் தொடக்கத்தில் சொல்லுவதேன்? என்றுல், அச்வமேதக் கிரியையில் எவர்களுக்கு அதிகாரமில்லையோ, அவர்களுக்கு இதையறிந்தால் அந்த யாகத்திற்குள்ள திலும் சிறந்த பயன் கிடைக்குமென்பது பற்றியேயாம். மேலும், எல்லாக் கர்மாக்களிலும் மேலானது அச்வமேதம். இது முதலிய எல்லாக் கர்மாக்களுக்கும் பலன் ஸம்ஸார விஷயமாகவே யுள்ளதென்று காட்டும்பொருட்டுத்தான் அச்வமேதத்தைப்பற்றி முதலில் சொல்லப்பட்டது .நித்ய கர்மாக்களுக்கும் ஸம்ஸார விஷயபலனே. அந்தப்பிரகாரம் சுருதி பிரமாணம் இருக்கின்றது. ஆதலால், காமாதிதோஷ கர்மபீஜபூத அவித்யா நிவிருத்தியின்பொருட்டு இந்த பிரம்மவித்யை ஆரம்பிக்கப்படுகின்றது.

---

# முதல் அத்தியாயம்

---

## பிராம்மணம் 1.

இவ்வுபநிஷத்தின் முதல் இரண்டு அத்தியாயங்களில் பிரவர்க்கம் என்றும், உபஸத் என்றும் அச்வமேதயாகத்தின் அங்கங்கள் சொல்லப்படு கின்றன. அவை பிரம்மஞானத்துக்கு அவசியமல்ல. இந்த அத்தியாயத் தில் முதலில் அச்வமேதயாகம் பிரஜாபதி ஸ்வரூபமாக (ஸகுண பிரம்ம ஸ்வரூபமாக) வர்ணிக்கப்படுகிறது. அஃதாவது, இந்த யாககர்மாவிற்கு அவ்வளவு மஹிமை யிருப்பதைக் காண்பிக்கின்றது. எப்படி யென்றால்,

1-2. அச்வமேதீய அச்வத்திற்கு உஷா (விடியற்கால வேளை) வானது சிரஸ்; ஸூரியன், நேத்திரம்; காற்று, பிராணன்; வைசுவாநர அக்நி, வாய்; ஸம்வத்ஸரம், தேஹம்; ஸ்வர்க லோகம், பின்தட்டு; ஆகாசம், வயிறு; பிருதிவி, பாதங்கள் வைக்குமிடம்; திக்குகள், பார்சுவங்கள் (பக்கங்கள்); மூலை திக்குகள், விலாவிலும்புகள்; ருதுக்கள், அங்கங்கள்; மாஸங் களும், பக்ஷங்களும், கணுக்கள்; அஹோராத்திரிகள், பிரதிஷ்டை பாதங்கள்; நக்ஷத்திரங்கள், எலும்புகள்; நபஸ் (ஆகாயத்தி லுள்ள மேகங்கள்), மாம்ஸம்; மணல்கள், ஜீர்ணமாகாத அன்னம்; நதிகள், குத நாடிகள்; பர்வதங்கள், யகிருத், க்லோ மநம் என்ற மாம்ஸகண்டங்கள்; செடிகளும், மரங்களும், மயிர் கள்; மத்யாஹ்நம்வரையுள்ள காலம், கொப்பூழுக்கு மேல்பாகம் மத்யாஹ்நத்திற்குமேலுள்ள காலம், கொப்பூழுக்குக் கீழ்ப்பாகம் மின்னல், வாய்பிளத்தல்; இடி, சிணுத்தல்; மழை, மூத்திரம் வாக்கு (சப்தம்), வாய்; பகல், முன்னால் வைக்கப்பட்டிரு கின்ற ஸ்வர்ணபாத்திரம்; இரவு, பின்னால் வைக்கப்பட்டிரு கின்ற வெள்ளிப்பாத்திரம்; தங்கப்பாத்திரம் வைக்குமிடம் கீ ஸமுத்திரம்; வெள்ளிபாத்திரம் வைக்குமிடம் மேல்ஸமுத்திரம் இந்த இரண்டு பாத்திரங்களும் அச்வத்திற்கு மஹிமை

கொடுக்கின்றன. இந்தக் குதிரை, ‘ஹயம்’ என்ற பெயருள்ள தாய்த் தேவர்களைத் தூக்குகின்றது ; ‘வாஜீ’ என்று கந்தர்வர்களை யும், ‘அர்வா’ என்று அஸுரர்களையும், ‘அச்வம்’ என்று மனிதர் களையும் தூக்குகின்றது. இதற்கு பந்து, ஸமுத்திரம் ; இதற்கு யோனி (காரணம்), ஸமுத்ரம் (பரமாத்மா). (இந்த அச்வம், பிரஜாதிபதி; தூக்குதல் என்றால் இருக்கும்படி செய்தல்.)

---

## பிராம்மணம் 2.

1. இங்கு (இந்த ஸம்ஸார மண்டலத்தில், இந்த ஜகத் இருக்கின்றவிடத்தில்), ஸ்ருஷ்டிக்கு முன்னால், (நாம, ரூபம் இவைகளால் குறிப்பிடப்படும் காரியம் அல்லது வஸ்து) யாதொன்றும் இல்லாமலிருந்தது. மிருத்யுவினால் இந்த ஜகத் மூடப்பட்டிருந்தது (தன்னிடத்தில் அடக்கிக் கொள்ளப்பட்டி ருந்தது ; ஒரு பெரிய விருக்ஷமாகப் பரிணமிக்கும் ரஸத்தை ஒரு விதை யடக்கிக்கொண்டிருப்பது போல்). மிருத்யு வென்றால் பக்ஷிக்க (அநுபவிக்க) இச்சையுள்ள ஆத்மா (ஹிரண்ய கர்ப்ப ரென்ற பிரஜாபதி, மாயையில் பிரதிபிம்பித்த ஆத்மா, ஸகுண பிரம்மம். அஃதாவது, நிர்குண வஸ்துவினிடமிருந்து, ஜகத்காரண மான, ஜகத்தைத் தனக்குள் அடக்கிக்கொண்டிருந்த, மாயை யுடன் கூடிய ஆத்மா, ஸகுணபிரம்மம் உண்டாயிற்று). அந்த மிருத்யு (ஸ்ருஷ்டிக்க வேண்டுமென்ற இச்சைகொண்டு), (மன தாகிற) ஆத்மாவுடன் சேருவோமென்று நினைத்தது. (அஃதாவது மனஸ்தத்வத்தை, மஹத்தத்வத்தை உண்டாக்கிற்று.)

இது (அங்ஙனம் மனதுடன் கூடிய பிரஜாபதியென்ற, மிருத் யுவென்ற ஆத்மா) தன்னைத்தானே பூஜித்துக்கொண்டது (சிலா கித்துக்கொண்டது). (அஹங்காரதத்வம் உண்டாயிற்று.) அதி னின்றும் (ஆகாசம், வாயு, தேஜஸ் இவைகளின் வழியாய்) ஜலம் உண்டாயிற்று. ‘பூஜ்யனாயிருக்கின்ற எனக்கு ஜலம் உண்டாகட் டும்’ என்று நினைத்ததின் பிறகு ஜலம் உண்டாயிற்று. (ஜலத் திற்கு காரணம் பூஜ்யமான ‘அர்க்கம்’ என்ற அக்நியாகையால்) அந்த ‘அர்க்க’ அக்நிக்கு (மேல் கூறிய அச்வமேத யாகத்திற்

குரிய அக்நிக்கு) பூஜ்யத்வம் ஸித்திக்கது. இவ்விதம் யார் அறிகின்றானோ அவனுக்கு ஜலம் (ஸுகம்) கிடைக்கும்.

2. அந்த ஜலம் பூஜ்யமாயுள்ளது; அது பால் ஆடைபோல் கெட்டிப்பட்டது. அது பிருதிவியாயிற்று; அந்த பிருதிவியில் மிருத்யு களைப்பாறினார். அப்படிப்பட்டவரிடமிருந்து தேஜோ ரஸமாகிற அக்நி உண்டாயிற்று (பிரஜாபதி, விராட், பிரதமஜர், சரீரி, அண்டத்திற்குள்ளிருக்கின்ற விராட் உண்டாயிற்று).

3. அவர் (அந்த விராட், உண்டான பிரஜாபதி) தன்னை மூன்று விதமாகச் செய்துகொண்டார்; ஆதித்யன், வாயு, அக்நி இம் மூன்றாக (செய்துகொண்டார்). அவர்தான் எல்லா பூதங்களினுடைய பிராணன். அவர் மூன்றாகப் பிரிக்கப்பட்டவர். (ஒரு பாகம் அக்நி யானதால் அச்வமேத யாகத்திற்குரிய அக்நி இவ்விதம் சுத்த ஜன்மாவையுடையது என்று காண்பிக்கப்படுகிறது.) அதற்கு, கிழக்குதிக்கு-சிரஸ்; ஈசான்யம்-ஆக்நி; இந்த இரண்டு மூலைகளும்-கைகள்; மேற்கு-புச்சம் (முழங்கால் பாகம்); வாயு, நிருருதி மூலைகள்-பிருஷ்டபாகங்கள்; தெற்கு, வடக்கு இவ்விரண்டும் பார்சுவங்கள்; ஸ்வர்க்கம்-பின்பக்கம்; ஆகாசம்-வயிறு; இது (பிருதிவி)-மார்பு; இப்படிப்பட்ட அக்நியாகிற பிரஜாபதி ஜலத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறது. இப்படி யறிந்தவனுக்கு எங்கே போனாலும் பிரதிஷ்டையுண்டு.

4. அந்த மிருத்யு 'எனக்கு இரண்டாவது ஆத்மா (சரீரம்) உண்டாகட்டும்' என்று நினைத்தார். அப்படி நினைத்து, பக்ஷிக்க (அநுபவிக்க) இச்சையுள்ள ஆத்மாவென்ற மிருத்யு, முந்தி உத்பத்தியான மனதுடன் (அநாதியாயிருக்கின்ற) த்ரயீவித்யா வென்ற வேதவாக்கை மிதுனமாகச் சேர்த்தார். (அஃதாவது, ஸ்ருஷ்டிக்ரம விஷயத்தில் வேதங்களில் என்ன சொல்லப்பட்டிருக்கின்றதென்பதைப்பற்றி மனதால் ஆலோசித்தார்.) அப்படி நினைத்ததில் ரேதஸ் (பிரதம புருஷனுக்குக் காரணமான ஞாந கர்ம ரூபமான ஒரு விதை) உண்டாயிற்று. அஃது ஒரு வருஷம் கர்ப்பத்திலிருந்து, ஒரு வருஷத்தை நிர்மாணகர்த்தாவாக, பிரஜாபதி (பிரதமஜன், பிரம்மன்) கர்ப்பத்திலிருந்தது. அதற்கு முன் ஸம்வத்ஸர

மென்றது கிடையாது. எவ்வளவுகாலம் கர்ப்பவாஸமோ அவ் வளவு காலத்திற்குத்தான் ஸம்வத்ஸரமென்று பெயர் கிடைத்தது. அந்த ஒரு வருஷத்திற்குப் பிறகு அண்டத்தைப் பிளந்தார். மிருத்யுவானவர் மேற்கூறிய கர்ப்பத்திலிருந்த பிரதமஜனுகிற பிரஜாபதியை உண்டாக்கினர். அப்படி உண்டுபண்ணப்பட்ட வரை வாயைப் பிளக்கும்படி செய்தார். அஃது ' பாண் ' என்று சப்தம்செய்தது. அந்த சப்தம் தான் வாக்காக (சப்தமாக) ஆயிற்று.

5. அந்த மிருத்யு மேற்கூறிய பிரதமஜனுயிருக்கின்ற குமார னைப் பார்த்து, நமக்கு எப்பொழுதாவது சாப்பிடவேண்டுமென்ற இச்சை வந்தால் இவனை ஹிம்ஸித்துச் சாப்பிடுவோம் என்று எண்ணங்கொண்டார். (ஆனல், இவனைமாத்திரம் சாப்பிட் டால் அன்னம் கொஞ்சமாய்விடும்; நமக்குத் தீர்க்க காலம் உண்ண வேண்டுவதற்காக வெகு அன்னம் வேண்டுவது. விதையாகிற இவனை அடித்துவிடின் பிறகு பயிர்கள் உண்டாகமாட்டா. ஆனதால்) வெகு அன்னத்தை உண்டுபண்ணுவோம் என்று நினைத்து, முன்போல், வேதத்தை மனதால் ஆலோசித்து, ஸ்தாவர ஜங்கமாத்மகமாயிருக்கின்ற இந்த ஜகத்தையும், வேறும் எவை யெல்லாமிருக்கின்றனவோ அவைகளையும், மூன்று வேதங்களையும், சந்தஸ்களையும், யக்ஞங்களையும், பிரஜைகளையும், பசுக்களையும் ஸ்ருஷ்டித்தார். (வேதங்கள் அநாதியாக விருந்தாலும் கர்மாக் களில் விநியோகிக்கும்படி வ்யக்தமாக்கினர் என்று அர்த்தம்.) எவைகளை உண்டாக்கினரோ அவைகளையெல்லாம் (ஸகலபிராணி களிடமும் ஆத்மாவாகயிருந்து) தின்னுவதற்கு இச்சையுள்ளவ ரானர். எல்லாவற்றையும் உண்ணுகிறவரானதால், அவருக்கு, 'அதிதி' என்ற பெயர் கிடைத்தது. அவர் எல்லாவற்றையும் பக்ஷிக்கின்றவர். அவருக்கு எல்லாம் அன்னம். இப்படி யறிப வனுக்கு எல்லாம் கிடைக்கும்.

6. அவர் ஒரு பெரிய யக்ஞத்தை மறுபடியும் செய்ய இச் சித்தார். (முன் கல்பத்தில் செய்திருப்பதால் இந்தக் கல்பத்திலும் செய்யக்கோரினதால் மறுபடியும் என்று சொல்லப்பட்டது.) இளைப்பு அடைந்தார். தபித்தார். அப்படிப்பட்டவரிடமிருந்து

குரிய அக்நிக்கு) பூஜ்யத்வம் ஸித்தித்தது. இவ்விதம் யார் அறிகின்றானோ அவனுக்கு ஜலம் (ஸுகம்) கிடைக்கும்.

2. அந்த ஜலம் பூஜ்யமாயுள்ளது; அது பால் ஆடைபோல் கெட்டிப்பட்டது. அது பிருதிவியாயிற்று; அந்த பிருதிவியில் மிருத்யு களைப்பாறினார். அப்படிப்பட்டவரிடமிருந்து தேஜோ ரஸமாகிற அக்நி உண்டாயிற்று (பிரஜாபதி, விராட், பிரதமஜர், சரீரி, அண்டத்திற்குள்ளிராநின்ற விராட் உண்டாயிற்று).

3. அவர் (அந்த விராட், உண்டான பிரஜாபதி) தன்னை மூன்று விதமாகச் செய்துகொண்டார்; ஆதித்யன், வாயு, அக்நி இம் மூன்றாக (செய்துகொண்டார்). அவர்தான் எல்லா பூதங்களினுடைய பிராணன். அவர் மூன்றாகப் பிரிக்கப்பட்டவர். (ஒரு பாகம் அக்நி யானதால் அச்வமேத யாகத்திற்குரிய அக்நி இவ் விதம் சுத்த ஜன்மாவையுடையது என்று காண்பிக்கப்படுகிறது.) அதற்கு, கிழக்குதிக்கு-சிரஸ்; ஈசான்யம்-அக்நி; இந்த இரண்டு மூலைகளும்-கைகள்; மேற்கு-புச்சம் (முழங்கால் பாகம்); வாயு, நிருருதி மூலைகள்-பிருஷ்டபாகங்கள்; தெற்கு, வடக்கு இவ்விரண்டும் பார்சுவங்கள்; ஸ்வர்க்கம்-பின்பக்கம்; ஆகாசம்-வயிறு; இது (பிருதிவி)-மார்பு; இப்படிப்பட்ட அக்நியாகிற பிரஜாபதி ஜலத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறது. இப்படி யறிந்தவனுக்கு எங்கே போனாலும் பிரதிஷ்டையுண்டு.

4. அந்த மிருத்யு 'எனக்கு இரண்டாவது ஆத்மா (சரீரம்) உண்டாகட்டும்' என்று நினைத்தார். அப்படி நினைத்து, பக்ஷிக்க (அநுபவிக்க) இச்சையுள்ள ஆத்மாவென்ற மிருத்யு, முந்தி உத்பத்தியான மனதுடன் (அநாதியாயிருக்கின்ற) த்ரயீவித்யா வென்ற வேதவாக்கை மிதுனமாகச் சேர்த்தார். (அஃதாவது, ஸ்ருஷ்டிக்ரம விஷயத்தில் வேதங்களில் என்ன சொல்லப்பட்டிருக்கின்றதென்பதைப்பற்றி மனதால் ஆலோசித்தார்.) அப்படி நினைத்ததில் ரேதஸ் (பிரதம புருஷனுக்குக் காரணமான ஞாந கர்ம ரூபமான ஒரு விதை) உண்டாயிற்று. அஃது ஒரு வருஷம் கர்ப்பத்திலிருந்து, ஒரு வருஷத்தை நிர்மாணகர்த்தாவாக, பிரஜாபதி (பிரதமஜன், பிரம்மன்) கர்ப்பத்திலிருந்தது. அதற்கு முன் ஸம்வத்ஸர

மென்றது கிடையாது. எவ்வளவுகாலம் கர்ப்பவாஸமோ அவ்வளவு காலத்திற்குத்தான் ஸம்வத்ஸரமென்று பெயர் கிடைத்தது. அந்த ஒரு வருஷத்திற்குப் பிறகு அண்டத்தைப் பிளந்தார். மிருத்யுவானவர் மேற்கூறிய கர்ப்பத்திலிருந்த பிரதமஜனுகிற பிரஜாபதியை உண்டாக்கினார். அப்படி உண்டுபண்ணப்பட்டவரை வாயைப் பிளக்கும்படி செய்தார். அஃது 'பாண்' என்று சப்தம்செய்தது. அந்த சப்தம் தான் வாக்காக (சப்தமாக) ஆயிற்று.

5. அந்த மிருத்யு மேற்கூறிய பிரதமஜனுயிருக்கின்ற குமாரனைப் பார்த்து, நமக்கு எப்பொழுதாவது சாப்பிடவேண்டுமென்ற இச்சை வந்தால் இவனை ஹிம்ஸித்துச் சாப்பிடுவோம் என்று எண்ணங்கொண்டார். (ஆனால், இவனைமாத்திரம் சாப்பிட்டால் அன்னம் கொஞ்சமாய்விடும்; நமக்குத் தீர்க்க காலம் உண்ண வேண்டுவதற்காக வெகு அன்னம் வேண்டுவது. விதையாகிற இவனை அடித்துவிடின் பிறகு பயிர்கள் உண்டாகமாட்டா. ஆனதால்) வெகு அன்னத்தை உண்டுபண்ணுவோம் என்று நினைத்து, முன்போல், வேதத்தை மனதால் ஆலோசித்து, ஸ்தாவர ஜங்கமாத்மகமாயிருக்கின்ற இந்த ஜகத்தையும், வேறும் எவையெல்லாமிருக்கின்றனவோ அவைகளையும், மூன்று வேதங்களையும், சந்தஸ்களையும், யக்ஞங்களையும், பிரஜைகளையும், பசுக்களையும் ஸ்ருஷ்டித்தார். (வேதங்கள் அநாதியாக விருந்தாலும் கர்மாக்களில் விநியோகிக்கும்படி வ்யக்தமாக்கினார் என்று அர்த்தம்.) எவைகளை உண்டாக்கினரோ அவைகளையெல்லாம் (ஸகலபிராணிகளிடமும் ஆத்மாவாகயிருந்து) தின்னுவதற்கு இச்சையுள்ளவரானார். எல்லாவற்றையும் உண்ணுகிறவரானதால், அவருக்கு, 'அதிதி' என்ற பெயர் கிடைத்தது. அவர் எல்லாவற்றையும் பக்ஷிக்கின்றவர்.. அவருக்கு எல்லாம் அன்னம். இப்படி யறிபவனுக்கு எல்லாம் கிடைக்கும்.

6. அவர் ஒரு பெரிய யக்ஞத்தை மறுபடியும் செய்ய இச்சித்தார். (முன் கல்பத்தில் செய்திருப்பதால் இந்தக் கல்பத்திலும் செய்யக்கோரினதால் மறுபடியும் என்று சொல்லப்பட்டது.) இளைப்பு அடைந்தார். தபித்தார். அப்படிப்பட்டவரிடமிருந்து

யசஸும் வீர்யமும் உண்டாயின. பிராணனே யசஸும் வீர்ய மும் (பிராணன்கள் கண் முதலியன ; வீர்யமெனில் பலம்). பிரா ணன் இல்லாவிடின் எதுவும் எப்படி யுண்டாகும்? சரீரத்திலிருந்து பிராணன் போய்விடின் சரீரம் அமேத்யமாய்க் கெட்டுப்போகும். அப்படிச் சரீரத்திலிருந்து பிராணன் பிரிந்துபோய்விடினும், அந்தச் சரீரத்தில் ஓர் அபிமானமானது இருந்தது. (அங்ஙனம் அபிமானித்து யாது செய்தாரென வினவின் அடியில் சொல் லப்படுகிறது.)

7. இந்த என் சரீரம் மேதார்ஹமாக (யக்ஞத்திற்குரிய தாக) ஆகுக ; சாரீரவானாக ஆவோம் என்று நினைத்தார். எக்கார ணத்தால் பிராணன் போய்விடின் சரீரம் 'அச்வத்தாக' (கெட்டு) போகின்றதோ அக்காரணத்தால் சரீரம் 'அச்வம்' ஆயிற்று. அஃது எப்பொழுது மேதார்ஹமாயினதோ அப்பொழுது அச்வமேதம் என்ற யாகத்திற்கு அப்பெயர் கிட்டியது. அச்வமேத ஸங்கதியை இவ்விதம் தெரிந்துகொள்ளவேண்டியது. அந்த அச்வமேதக் குதிரையைக் கல்பித்து அதைக் கட்டாமல் விட்டுவிட நினைத்தார். அதை அவ்விதம் ஒரு ஸம்வத்ஸரம் விட்டு வைத்துப் பிறகு தன் னிடம் அதை ஆலம்பனம் செய்துகொண்டார் (யாகத்தில் உபயோகித்தார்). மற்ற பசுக்களைத் தேவதைகளின்பொருட்டுக் கொடுப்பித்தார். ஆதலால், இப்பொழுதும் யாகம் செய்கின்ற வர்கள் தேவதாஸம்பந்தமாயும், பிரஜாபதி ஸம்பந்தமாயும், மந்திர ஸம்ஸ்கிருதமாயிருக்கின்ற பசுவை யாகம் செய்கின்றார்கள். எவர் தன் தேஜஸால் இந்த ஜகத்தைத் தபிக்கச் செய்கிறாரோ அந்த ஆதித்யன் அச்வமேதமாயிருக்கிறார். (அந்த யக்ஞத்தின் பலனாக இருக்கிறார்.) அவருக்கு ஸம்வத்ஸரம் சரீரம். இந்த பார்த்திவ அக்நியானது அர்க்கனாக இருக்கிறது (ஸாதனபூதமாக விருக் கிறது ; க்ரதுரூபமாக விருக்கிறது). இவருக்கு மூன்று உலகங் களும் சரீரங்கள். இந்த அக்நியும், ஆதித்யனும் அர்க்காச்வ மேதங்களாக (க்ரது பலன்களாக) இருக்கின்றார்கள். (க்ரது, பலன், யஜமானன்) எல்லாம் ஒரே தேவதையாகத்தான் இருக்கின்றது. (அஃதாவது) மிருத்யு பிரஜாபதியே எல்லாமாக இருக்கின்றார். இங்ஙனமறிந்தவன் மரணத்தை ஜயிக்கின்றான். இவனை மிருத்யு அடைவதில்லை. மிருத்யு ஆத்மாவாகவே

இவன் ஆகின்றான். இத்தேவதைகளில் ஒன்றாக ஆகிவிடு கிறான்.

---

## பிராம்மணம் 3.

1. பிரஜாபதியினிட மிருந்துஉண்டானவர்கள் இரண்டு வகுப் பினர்கள் (அவருடைய பிராணன் வாக் முதலிய தத்வங்கள்). (1) தேவர்கள், (2) அசுரர்கள். (தேவர்கள்—சாஸ்திரஜனிதமா யிருக்கின்ற ஞானத்தையும், கர்மாவையும் கைக்கொண்டவர்கள். அஸுரர்கள்—(ஸ்வாபாவிக பிரத்யக்ஷ அநுமான ஜனிதமாயும் திருஷ்டப்ரயோஜனமுள்ளதாயு மிருக்கின்ற ஞானத்தையும் கர்மாவையும் கைக்கொண்டவர்கள்; தங்கள் தங்கள் அஸுக் களில் பிராணன்களில் ரமிக்கின்றவர்கள்; அல்லது ஸுரர்கள், தேவர்கள், அன்றியில் இருப்பவர்கள்). ஆதலால், தேவர்கள் (ஸாத்விக பிராணன் வாக் முதலான தத்வங்கள்) கொஞ்சமா யிருக்கின்றார்கள். அஸுரர்கள் (அஸாத்விக தத்வங்கள்) அதிகத் தொகையுள்ளவர்கள். இவர்கள் இந்த லோகங்களின் நிமித்தம் (ஸ்வாபாவிகமாயும், அப்படி இல்லாததாகவும் இருக்கின்ற கர்ம, ஞான ஸாத்யமா யிருக்கிற பல விஷயங்களில்) ஒருவருக் கொருவர் விரோத மடைந்தார்கள். தேவர்கள் ஒருவருக்கொரு வர் சொல்லிக்கொண்டதாவது—'யக்ஞத்தில் உத்கீதத்தால் (ஸ்தோத்திராதி நல்ல காரியங்களால்) அஸுரர்களைத் தாண்டிவிடு வோம்' என்று.

2. அத்தேவர்கள் (இவ்விதம் நிச்சயங்கொண்டு) தங்களுக் குள் வாக் அபிமான தேவதையை (வாக்கை)ப்பார்த்து "எங்களின் பொருட்டு உத்கீதமந்திரத்தை கானம் செய்யுங்கள்" என்று சொன்னார்கள். (எப்பொழுதும் ஆத்மாவை வாழ்த்து; நல்ல வார்த்தை சொல்லிக்கொண் டிருக்க என்று பொருள்.) அவ்விதம் சரிதான் என்று வாக்கு சொல்லிக்கொண்டு உத்கீதத் தை கானம் செய்தது. அங்ஙனம் செய்ததனால் உண்டான போகத்தை (ஞானபலனை)த் தேவர்களுக்குச் சேர்ப்பிவித்தது. எது ஸுசோபனவாக்காகச் சொல்லப்பட்டதோ அதை (கர்ம பலனை) வாக்குத் தானே வைத்துக்கொண்டது. அஸுரர்கள், இதைக் கருதி, மேல்கண்ட பிரகாரம் உத்கீதத்தால் தேவர்கள்

16

தங்களை ஜயித்து விடுவார்களென்று நினைத்து, அந்த வாக்கைப் பாபத்தினால் அடித்தார்கள். பாப மென்றால், வாக்கிற்கு அநநுரூபமா யிருக்கின்ற வார்த்தைகளைச் சொல்லுதல். (அஃதாவது, அஸப்யம், பயம், அந்ருதம் முதலிய வார்த்தைகளைப் பேசும்படி வாக்கை அஸாத்விகதத்வங்கள் செய்தன.)

3. (மேற்கூறியவாறு க்ராணேந்திரிய விஷயத்தில் அஸாத்விக தத்வங்கள் அடித்தன.)

4. (சக்ஷுரிந்திரிய விஷயத்திலும் மேல் கூறியதுபோல்.)

5. (சுரோத்திரேந்திரிய விஷயத்திலும் மேல் கூறியதுபோல்.)

6. (மனோ விஷயத்திலும் மேல் கூறியதுபோல்.) இவ்விதமாக இந்தத் தேவர்கள் பாபத்தால் ஸம்பந்தப்பட்டு அடிபட்டுப் போனார்கள்.

7. இத்தேவர்கள், மறுபடியும், தங்களுக்காக உத்கீதத்தைக் கானஞ்செய்ய முக்கிய பிராணனைக்கேட்டார்கள். அந்தபிரகாரமே அந்த பிராணன் கானம் செய்தது. இதைக் கண்டு அஸுரர்கள் பாபத்தால் பிராணனைக் கெடுக்க இச்சித்தார்கள். ஆயினும் அவர்களால் முடியவில்லை. ஓர் ஓட்டின் சில் கருங்கல்லில் அடிபட்டு எவ்விதம் சிதறிப்போகுமோ, அவ்விதம், பிராணனை அடிக்கச் சக்தியில்லாமல் தாங்களே குறுக்கும் நடுக்கும் சிதறுண்டு, நாசமடைந்தார்கள். ஆதலால் தேவர்கள் ஜெயித்தார்கள். இவ்விதம் அறிபவன் பிரஜாபதி ஸ்வரூபமாக ஆகிறான். இவனுடைய விரோதிகளும் அவமானம் அடைகிறார்கள்.

8. அத்தேவர்கள் இத்தகைய (அஸுரர்களிடமிருந்து நம்முடைய தேவத்வத்தை அடைவிப்பிக்கின்ற) பிராணன் எவ்விடம் இருக்கிறதென்று விசாரித்தார்கள். அது முகத்தின் ஓட்டைக்குள் இருப்பதாக (தேஹத்திலேயே யிருப்பதாக) கண்டுபிடித்தார்கள். ஆதல்பற்றி அந்தப் பிராணன், "அயாஸ்யன்" (அஸுரர்களை விருந்து வாகாதிகளைச் சேர்த்துக் பிடித்துக்கொண்டிருப்பவர்), "ஆங்கிரஸன்," அங்கங்களுள் ஸாரமாயிருப்பவன்.

9. (இவ்விதம் சுத்தமுள்ள) இந்த பிராண தேவதை "தூ!" என்ற பெயருடையது. இந்த தேவதைக்கு மிருத்யு தூரமாயிருப்பதால் அந்தப் பெயர் கிட்டியது. இவ்விதம் அறிகிறவனுக்கு மிருத்யு வெகுதூரமிருக்கும்.

10. இந்தப் பிராணதேவதை வாகாதி தேவதைகளின் பாபமாகிய மிருத்யுவை யடித்து, திக்குகளின் முடிவு பிரதேசத்திற்குத் துரத்திவிட்டது. அவ்விடமிருக்கும் துர்ஜனங்களிடம் இப்பாபங்களை யடையும்படி செய்தது. ஆதலால், அத்தகைய ஜனத்தைச் சேரக்கூடாது. பாபமாகிய மிருத்யுவைப் பின்தொடருவோம் என்ற பயங்கொண்டு அத்தகைய ஜனமிருக்கும் திக்கில் போகக்கூடாது.

11. வாக் முதலிய தேவதைகளின் பாபமாகின்ற மிருத்யுவை இந்தப் பிராண தேவதை யடித்து அத்தேவதைகளின் அக்நி முதலிய தேவதா ஸ்வரூபத்தை யடையும்படி செய்தது.

12. முதன்மையாயிருக்கின்ற வாக்கைப் பிராணன் வஹித்தது. அந்த வாக் எப்பொழுது மிருத்யுவைத் தாண்டியதோ அப்பொழுது அக்நியாகிவிட்டது. (அக்நி தேவதா ஸ்வரூபமாகி விட்டது. அஃதாவது, சுத்தவாக் அக்நி தேவதை.) மிருத்யுவைத் தாண்டி இந்த அக்நி மேலாக விளங்குகின்றது.

13. (கிராண விஷயத்தில் மேற்கூறிய பிரகாரம்) கிராணம் வாயுதேவதையாகி மிருத்யுவைத் தாண்டி மேல்கொண்டு அடிக்கின்றது.

14. (சக்ஷுஸ் விஷயத்தில் மேற்கூறிய பிரகாரம்) சக்ஷுஸ் ஆதித்ய தேவதையாகி மிருத்யுவைத்தாண்டி மேல்கொண்டு தபிக்கின்றது.

15. (சுரோத்திரவிஷயத்தில் மேற்கூறிய பிரகாரம்)சுரோத்திரம் திக்தேவதையாகி மிருத்யுவைத் தாண்டி யிருக்கின்றன.

16. (மனோ விஷயத்திலும் மேற்கூறிய பிரகாரம்) மனஸ் சந்திர தேவதையாகி மிருத்யுவைத்தாண்டி விளங்குகின்றது.

இங்ஙனம் யறிந்து பிராணனை உபாஸிக்கின்றவனை இந்தப்பிராண தேவதை அக்நி முதலிய தேவதாபாவமாக வஹிக்கின்றது. (அத்தேவதைகளாகிருன்.)

17. பிறகு, அன்னமுதலியவற்றை தான் உண்ணும்பொருட்டு இந்தப்பிராணன் ஆகானம் செய்தது (வேண்டிற்று). எவை எவை உண்ணப்படுகின்றனவோ அவை யெல்லாம் பிராணனால் சாப் பிடப்படுகிறது. அன்னத்தில் பிராணன் வைக்கப்பட்டிருக் கின்றது. (அன்னமில்லாவிடில் பிராணன் போய்விடும்.)

18. இந்த வாக் முதலிய தேவதைகள் பிராணனை நோக்கி சொன்ன தென்னவெனில்—"இவ்வளவுதானே! இந்த எல்லா அன்னத்தையும் உனக்கே வேண்டிக் கொள்ளுகிறதோ? அன்ன மில்லாமல் நாங்கள் இருக்கமாட்டோம்! எங்களுக்கு உன் அன்னத்தில் பாகம் கொடு" என்று. (பிராணன் மறுமொழி) அப்படி உங்களுக்கு அன்னம் வேண்டுவதானால் என்னைச் சேருங்கள்.

(வாக் முதலிய தேவர்கள் சொன்னார்கள்.) 'அந்தப் பிரகாரம்' என்று சொல்லி பிராணனை சுற்றி வாக் முதலிய தேவர்கள் உட் கார்ந்தார்கள். ஆதல்பற்றி யாவனொருவன் பிராணனைக்கொண்டு அன்னத்தைச் சாப்பிடுகின்றானோ (அஃதாவது பிராணன் இருப்ப தற்காக அன்னத்தை புஜிக்கின்றானோ) அவனுடைய வாக் முதலி யவை திருப்தியை யடைகின்றன. இவ்விதம் பிராணனை அறிந்த வனை அவன் சுற்றத்தார் வந்தடைகின்றார்கள். அவர்களை காப் பாற்றுபவனாகிறான். சிரேஷ்டனாகவும், எல்லோருக்கும் முன் போகின்றவனாகவும், அன்னாதனாகவும், அதிபதியாகவு மாகின் றான். இப்படி யறிந்தவனைப் பகைக்க விரும்புவோர், தங்களைச் சார்ந்தவர்களுக்குத் திருப்திசெய்ய மாட்டார்கள். எவனொருவன் இவ்வித மறிந்தவனை அநுஸரிக்கின்றானோ அவன் இவ்விதம் அநுஸரிப்பதால் தன்னைச் சார்ந்தோரைத் திருப்திசெய்யச் சக்தி யுள்ளவனாகின்றான்.

19. அங்கங்களுக்கெல்லாம் ரஸம் பிராணனே (இவ்விதம் மூன்று தடவை சொல்லப்படுகிறது). ஏனெனில், ஒரு அங்கத்தி

லிருக்கும் பிராணன் போகுமாயின் அந்த அங்கம் சோஷித்துப் போகின்றது. ஆதலால் இஃது அங்கங்களுக்குள் ரஸம்.

20. இந்த பிராணன்தான் ‘பிருஹஸ்பதி’ என்பது. ‘பிரஹதீ’ என்றால் “பிரஹதீ சந்தஸ்,” ருக்வேதம்; அதற்கு பதி; ருக்வேதத்திற்கு அதிபதி. (பிராணனில்லாவிடின் ருக் வேதத்தைச் சொல்லமுடியாது.)

21. இந்தப் பிராணனே ‘ப்ரஹ்மணஸ்பதி’ என்பது. ‘பிரஹ்ம’ என்றால் யஜுர்வேதம். அதன் அதிபதி, “ப்ரஹ்மணஸ்பதி”.

22. இந்த பிராணன்தான் ‘ஸாமவேதம்’. வாக்கே ஸாம வேதம் ‘ஸா’ ஸ்திரீ லிங்கவாச்யமாயிருக்கின்ற எல்ல வஸ்து விஷயங்களும், ‘அம:’ புல்லிங்கவாச்யமா யிருக்கின்ற எல்லா வஸ்து விஷயங்களும், சேர்ந்து ‘வாக்’ என்றது. அந்த வாக்குத் தான் பிராணன். அதற்கு ‘ஸாமம்’ என்ற பெயர் கிடைத்தது. வேறு விதமாகவும் ஸாமத்வம் கிடைத்திருக்கின்றது. ஸமமாக விருக்கை ஸாமம். (எவ்விதம் ஸமமெனில்) அந்தப் பிராணன், பயிர்க்கொல்லை பொம்மை யிடத்திலும், கொசுவினிடமும், யானையிடத்திலும் ஸமமாயிருக்கின்றது. இம் மூன்று உலக ரூபமாயிருக்கின்ற பிரஜாபதியினிடத்திலும் ஸமம். எல்லா ஜகத் தினிடமும் ஸமம். ஆதலால், இவ்விதம் பிராணனாகிய ஸாமத்தை யறிகிறவன் அந்த தேவதையுடன் ஸாயுஜ்யத்தையும், ஸாலோகத் தையும் யடைவான்.

23. ‘உத்கீதம்’ என்று அந்த பிராணன்தான் சொல்லப் படுகிறது. பிராணன் ‘உத்தாக’ விருக்கிறது. எல்லாவற்றையும் உயரத் தூக்கிக்கொண்டிருக்கிறது. வாக்குத்தான் ‘கீதம்’ கானம். ஆனதால், வாக்குடன் சேர்ந்த பிராணன் ‘உத்கீதம்’ என்றது.

24. இவ் விஷயத்தில் ஒரு சரிதை இருக்கின்றது. சிகிதா யனருடைய பேரனை பிரம்மதத்தர் என்பவர் (ஒரு ஸமயம்) யக்ஞத்தில் ஸோமத்தைக் குடித்து ஒரு சபதஞ் செய்தார். (அது யாதெனில்) ‘வாக்குடன் கூடிய பிராணனைத் தவிர வேறு தேவதையைக்கொண்டு நான் கானஞ்செய்யின் நான் பொய்யனாகி

விடுவேன். அப்படிப் பொய்யனாகில் இந்த ஸோமக்கொடி எனது சிரஸை வெடிக்கும்படி செய்யட்டும்'. (ஆதலால் வாக்குடன் சேர்ந்த பிராணனுக்கு இவ்வளவு மஹிமையுண்டென்பது காட்டப்பட்டது.)

25. இத்தகைய ஸாம பிராணனுடைய பொருளை எவன் அறிகின்றானோ அவனுக்கு தனம் கிடைக்கும். மேற்படி பிராண னுடைய பொருள் யாதெனில், ஸ்வரம். ஆதலால் ருத்விக் (காரி யங்களை செய்பவன்) நல்ல ஸ்வரம்வேண்டுமென்று கருதுகிறான். ஆகையால் அவ்விதமான நல்ல ஸ்வரமுள்ள வாக்கால் ஆர்த்த விஜயம் செய்யவேண்டும். எவ்விதம் உலகத்தில் பொருள் உள்ள வனை எல்லோரும் அடைகிறார்களோ அவ்விதம் நல்ல ஸ்வர முள்ள ருத்விக்குகளை யக்ஞத்தில் பார்க்க இச்சிக்கின்றார்கள். இவ்விதம் அறிபவனுக்குப் பொருள் கிடைக்கும்.

26. ஸ்வரத்தை ஸௌவர்ணமாக வர்ணிக்கப்படுகிறது. இவ்விதம் அறிந்தவனுக்குத் தங்கம் கிடைக்கும்.

27. இந்த ஸாம பிராணனின் பிரதிஷ்டையை யறிபவனுக்கு மேன்மைகிடைக்கும். ஸாமத்தின் பிரதிஷ்டை வாக்காக விருக் கின்றது. வாக்கில் பிராணன் பிரதிஷ்டிதமாயிருக்கின்றது. ஏனெனில், வாக்கால்தான் கானம் செய்யப்படுகின்றது. சிலர் அன்னம் பிரதிஷ்டை என்று சொல்லுகிறார்கள்.

28. (இவ்விதம் பிராண விக்ஞானமுள்ளவனுக்கு ஜபகர்மா சொல்லப்படுகிறது.) பவமான ஸ்தோத்திரகாலத்தில் (யக்ஞத் தில்) பிரஸ்தோதா தன் காரியத்தை ஆரம்பிக்கும் ஸமயத்தில் அடியில் குறித்த மந்திரங்களை ஜபிக்கவேண்டும். (ஜபம்) 'அஸ தோ மா ஸத் கமய' (ஸ்வாபாவிக கர்ம விக்ஞானத்தினின்றும் சாஸ்திரீய கர்ம விக்ஞானத்தில் என்னை சேர்க்க). 'தமஸோ மா ஜ்யோதிர் கமய' (அக்ஞானத்தினின்றும் ஞானத்தில் சேர்க்க). 'மிருத்யோர் மா அமிருதம் கமய' (மிருத்யுவினிடமிருந்து நழுவி அமிருதபாவத்தை யடையும்படி செய்க). இந்த ஜபத்திற்குப் பலன் எதை யிச்சித்தாலும் அடைகிறான்.

---

## பிராம்மணம் 4.

1. ஆதியில் இந்த ஜகத் ஆத்மாவாக விருந்தது (ஆத்ம வஸ்துவுக்குள்ளடங்கியிருந்தது). முதலில், பிரதம புருஷனை பிரஜாபதி புருஷரூபமாக தானகவே ஆவிர்பவித்தார். அவர் ஆலோசித்தார். தன்னைத்தவிர வேறு யாதொன்றையும் அவர் காணவில்லை. 'அஹம்', நான்தான் முன்னாலேயே இருக்கிறேன் என்று சொல்லிக்கொண்டார். ஆதலினால், ஆத்மாவுக்கு 'ஆஹம்' என்ற பெயர் கிட்டியது. ஆதலால், உலகத்தில், இப்பொழுதும் கூட, யாதொருவன் கூப்பிடப்பட்டால், முதலில், 'நான்', 'அவன்' என்று சொல்லிக்கொண்டு, பிறகு, தனக்குக் குறிக்கப் பட்டிருக்கும் பெயரைச்சொல்லுகின்றான். இந்தப் பிரஜாபதியின் ஸ்திதியை ஞான கர்மாநுஷ்டானங்களால் அடைய இச்சிப்ப பவர்களுடைய எல்லாக் கூட்டத்திலிருந்தும் அக்ஞான லக்ஷண முள்ள ஸகல பாபங்களையும் மேற்கூறிய முந்தி உண்டாகிய பிரஜாபதி எரித்துப்போடுகிறார். இதனால் அவருக்கு 'புருஷன்' என்ற பெயர் கிடைத்தது. இவ்விதம் அறிபவன் மேற்கூறிய வாறு அறியாமல் பிரஜாபதி ஸ்திதியை அடையவிரும்புவோனை ஜயித்துப்போடுகிறான். (இப்படி யறிந்து நடந்தால் அல்லது பிரஜாபதி ஸ்திதி கிட்டாது.)

2. அந்த பிரதமபுருஷனை பிரஜாபதி (நாசத்திற்குக் காரணமாயிருக்கிற சரீரமுள்ளவராதலால்) பயந்தார். ஆதலால், உலகத்தில் ஒற்றையாய்த் தனித்திருப்பவன் பயப்படுகிறான். மறுபடி, "நம்மையன்றி வேறொருவருமில்லை! அங்ஙனமிருக்க நாம் ஏன் பயப்படவேண்டும்" என்று ஆலோசித்தார். பிறகு பயம் நீங்கிவிட்டது. ஏன் பயம் ஏற்பட்டதெனில், தனக்கு இரண்டாவதாகச் சரீரத்தை தனியென்று கருதாததனால் பயம் ஏற்பட்டது (தன்னைத்தவிர வெறொன்றுமில்லை; எல்லாம் பிரம்மம்தான் என்று ஏகத்வதர்சனம் இருந்தால் பயமில்லை).

3. அந்தப் பிரஜாபதி தான் ஒருவராயிருந்ததால் ஸந்தோஷ மடையவில்லை. ஆதலால், உலகத்திலும் ஒருவனாயிருந்தால் ஸந்தோஷம் கிடையாது. ஆகையால், தான் ஸந்தோஷமடையும்

பொருட்டு தனக்கு இரண்டாவதை (ஸ்திரீரூபமுள்ள ஒரு வஸ்துவை) இச்சித்தார். அங்ஙனம் இச்சித்தவுடன் ஸ்திரீபுருஷன் சேர்ந்த ரூபமுள்ளவரானார். (அஃதாவது, தன்னை ஸ்திரீ புருஷ ரூபங்களாகிற இரண்டுவிதமாய்ச் செய்துக்கொண்டார்.) அப்பொழுதுதான் பதி யென்றும், பத்தினி யென்றும் பெயருள்ளவர்கள் உண்டானார்கள். ஆதல்பற்றி, இந்தச் சரீரம் ஆத்மாவிற்குப் பாதி விகாரப்பட்டது. (அஃதாவது, ஆத்மா புருஷரூபம்; சரீரம் ஸ்திரீ ரூபம்; ஆத்மாவின் மாயாரூபம் சரீரமாயிற்று; அதே ஸ்திரீவ்யக்தி யாயிற்று.) இங்ஙனம் யாஞ்ய வல்கியர் கூறினார். ஆதலால், முன்பு ஸ்திரீவஸ்து சூன்யமாயிருந்த இந்த புருஷார்த்த ஆகாசமானது (வெளியானது, ஆத்மவஸ்து) ஸ்திரீரூபம்சேர்ந்து பூர்த்தியாயிற்று. அது தனிப்பட்டு ஸ்திரீயாக ('சதரூபா' என்று பெயருள்ளவளாக, பிரஜாபதியால் ஸருஷ்டிக்கப்பட்டு) வெளிக்கு வந்தாள். அவளுடன் மனு பிரஜாபதியாக ஆன அந்த பிரதம புருஷன் சேர்ந்தார். அப்பொழுது மனுஷ்யர்கள் உண்டானார்கள்.

4. அந்த ஸ்திரீ, "தன்னிடமிருந்து ஸ்ருஷ்டிக்கப்பட்ட பெண்ணாகிய என்னைச் சேரவருகின்றாரே; இஃது என்ன அந்யாயம்! நான் வேறு ரூபம்பெற்று மறைந்துவிடுவேன்" என்று ஆலோசித்து, உடனே பசுமாடாகி விட்டாள். அச்சமயத்தில், புருஷார்த்தம் ரிஷபமாகி அந்தப் பசுவைச்சேர்ந்தது. அதனால் மாடுகள் உண்டாயின. பிறகு அவள் பெண் குதிரை யானாள். அவர் ஆண் குதிரை யானார். அவள் பெண் கழுதையானாள். அவர் ஆண் கழுதை யானார். இங்ஙனம் ஒற்றைக் குளம்புள்ள மிருகங்கள் உண்டாயின. பிறகு அவள் பெண் ஆடாகவும், அவர் ஆண் ஆடாகவு மானார்கள். இங்ஙனம் உலகத்தில் எறும்புமுதல் ஸ்திரீ புமான் ரூபம் வரையுள்ள எல்லா ஜந்துக்களும் உண்டாயின.

5. இங்ஙனம் ஸ்ருஷ்டித்தவைகளை அந்த பிரஜாபதி ரக்ஷித்தார், அவைகளாகவே தான் இருந்து விளங்கினார். "எக்காரணத்தால் இவ்வெல்லா ஜகத்தை நாம் ஸ்ருஷ்டித்தமோ அக்காரணத்தால் நாமும் 'அபஸ்ருஷ்டி' (கீழான ஸ்ருஷ்டி) ஆகவே இருக்கிறோம்" என்றார். ஆதலால், அவருக்கும் 'ஸ்ருஷ்டி

என்ற பெயர் கிடைத்தது. இங்ஙனம் அறிபவன் பிரஜாபதி போல் இந்த ஸ்ருஷ்டி கர்மாவில் ஆகின்றான்.

6. பிறகு அந்த பிரஜாபதி கைகளால் முகத்தில் அழுத்தினார். அந்த யோநிகளில் (காரணத்தில்) நின்றும் அக்நியை ஸ்ருஷ்டித்தார். ஆதல்பற்றி, முகத்திலும், கைகளுக்குள்ளும் மயிர்களில்லை. யோநிகளுக்குள்ளும் (காரணத்திற்குள்ளும்) மயிர்களில்லை. யாகத்தில் "இந்த தேவனை பஜி, இந்த தேவனை பஜி" என்று சொல்லப்படுகின்ற தேவர்களெல்லாம் அந்த ஒரே தேவதைதான் (அஃதாவது, பிரஜாபதிதான்). பிறகு, அவர் ஈரமுள்ள வஸ்து எவை எவை யுண்டோ அவைகளின் ரஸத்தைக்கொண்டு ஆத்மாவிடமிருந்து சந்திரனை ஸ்ருஷ்டித்தார். இந்த ஜகத்தில் உள்ளதெல்லாம் அன்னமும் அன்னாதமாகவும் இருக்கின்றன. சந்திரன் அன்னமாயும், அக்நி அன்னாதமாயும் இருக்கின்றன. ('அதிஸ்ருஷ்டி,' அஃதாவது உத்கிருஷ்டமான ஸ்ருஷ்டி- சொல்லப்படுகிறது.) தன்னுடைய உத்கிருஷ்டபாவத்தில் நின்றும் தேவர்களை ஸ்ருஷ்டித்தார். மர்த்யனாகப்போன பிரஜாபதி மரணமில்லாத தேவர்களை ஸ்ருஷ்டித்தார். ஆதல்பற்றி இது பிரம்மனுடைய அதிஸ்ருஷ்டி என்று சொல்லப்படுகிறது. இங்ஙனம் அறிபவன் இந்த அதிஸ்ருஷ்டி விஷயத்திலும் பிரஜாபதியைப் போலாகின்றான்.

7. அந்த (அப்ரத்யக்ஷமாக ஆத்மாவுக்குள்ளடங்கி யிருந்த இஃது) இப்பொழுது பிரத்யக்ஷமாகக் காணப்படுகின்ற ஜகத்) ஆதியில் அவ்யாகிருதமாக (விகாரமின்றி, நாமரூபங்களுடன் பலவிதமாக ஆகாமல்) இருந்தது. இவ்விதம் அவ்யாகிருதமாக விருந்த ஜகத் நாமரூபங்களுடன் விகாரமடைந்து பல வஸ்துக்களாக ஆயிற்று. இந்த வஸ்துவிற்கு இந்தப் பெயர்; இந்த வஸ்துவிற்கு இந்த ரூபமுள்ளது என்று விகாரப்பட்டது. இப்பொழுதும் அங்ஙனமே விகாரப்பட்டிருக்கிறது. அத்தகைய இந்த ஜகத்தில் நாமரூபங்களுக்குப் புறம்பாய் (நித்ய சுத்த புக்த முக்த ஸ்பாவமுள்ளதாயும்) இராநின்ற ஆக்மா பிரவேசித்தார். உறையில் எவ்விதம் கத்தி வியாபித்திருக்கின்றதோ, மரக்கட்டையில் எங்ஙனம் அக்நி வியாபித்திருக்கின்றதோ அங்ஙனம் ஆத்மா நகம்

முதல் அக்ரம்வரை வியாபித்து எங்கும் நிறைந்திருக்கின்றார். (அஃதாவது, கத்தியைப்போல் ஒன்றிலும் ஒட்டாமலும், அக்நியைப்போன்று எங்கும் தொட்டுக்கொண்டும் இருக்கின்றார்.) எல்லாமாக விருந்து, பிராணன் தொழில் நடத்தும் ஸமயத்தில் பிராணன் என்ற பெயரை அடைகிறார். வசநக்கிரியை செய்கையில் வாக் என்றும், அங்ஙனமே பார்க்கும்பொழுது சக்ஷுஸ் என்றும், கேட்கும்பொழுது சுரோத்ரம் என்றும், நினைக்கும்பொழுது மனஸ் என்றும் பெயர்களைப் பெறுகிறார். இக்கர்மாக்கள் அனைத்தும் ஆத்மாவிடமே யிருக்கின்றன. எவனொருவன் ஆத்மாவை பிராணன் சக்ஷுஸ் என்று தனித்தனியாகவும், ஒவ்வொன்றாகவும் இருப்பதாக எண்ணங்கொண்டு அவ்விதம் உபாஸிக்கின்றானோ அவன் பிரம்மத்தை யறிந்தவ னல்லன். ஏனெனில், அங்ஙனம் நினைப்பதில் ஆத்மா அஸமஸ்த னாகின்றான். ஒவ்வொன்றாகவும், தனித்தனியாகவும் ஆகிறான். (அநேக தெய்வங்கள் ஏற்படுகின்றன; இது சரியல்ல.) ஆதலால், எல்லாவற்றையும் சேர்த்து ஒரே ஆத்மாவாக உபாஸிக்க வேண்டும். அப்பொழுது எல்லாம் ஒன்றாகிவிடுகின்றது. இந்த எல்லா ஜகத்திற்கும், அதுதான் (அந்த பிரம்மவஸ்து) போக்கிடமும், இருப்பிடமுமாக விருக்கின்றது. (இந்த ஜகத்தில் ஆத்மா ஒன்றுதான் ஸாரமுள்ளதென்று அறியவேண்டியது.) ஏனெனில், இந்த ஆத்மா (ஜீவன்) ஆத்மஞானத்தால் இந்த (அநாத்மஸ்வரூபமா யிருக்கின்ற) எல்லா ஜகத்தையு மறிகின்றான். (அஃதாவது ஆத்மாவான பிரம்மவஸ்து இன்னதென்று தெரிந்தால் அநாத்மவஸ்துவும் அறியப்படும்.) உலகத்தில் களவுபோன பசு முதலியவைகளைக் கால் அடிகளின் அடையாளங்கொண்டு எவ்விதம் தேடிக் கண்டுபிடிக்கின்றோமோ அவ்விதம் நமக்குத் தெரியாமல் மறைந்திருக்கின்ற ஆத்மாவை ஞானமாகின்ற அடையாளத்தைக்கொண்டு கண்டுபிடிக்க வேண்டியது. இப்படி அறிந்தவன் கீர்த்தியையும் (நாமரூபாநுபிரவேசத்தால் ஆத்மாவுக்குண்டான கியாதியையும்) சுலோகத்தையும் (பிராணுதி கூட்டத்தையும்) அடைகின்றான். (அஃதாவது அத்தகைய பிரம்ம வஸ்துவாகி விடுகிறான்; அல்லது, ஐக்கிய ஞானமாகிற கீர்த்தியையும், முக்தியாகின்ற சுலோகத்தையும் அடைகிறான்.)

8. எக் காரணம்பற்றி அந்த ஆத்மாவைத் தேடவேண்டுமெனில், அந்த ஆத்மா அத்யந்தப்ரியம் வைக்கத்தக்கது; புத்திரனைக்காட்டினும் பிரியதரம், வித்தத்தைக்காட்டிலும் பிரியதரம்; இன்னும் உலகத்தில் எது எது உண்டோ அவைகள் எல்லாவற்றைக்காட்டிலும் பிரியதரம்; மேலும் ஸமீபத்தில் நமக்குள்ளிருக்கின்றது. பிரம்ம வஸ்துவைக்காட்டிலும் வேறாகவிருப்பதைப் பிரியவஸ்து வென்று நினைக்கின்றவனை நோக்கி "நீ பிரியவஸ்து வென்று நினைக்கின்ற புத்திராதிகள் நசித்துப்போவார்களே" என்று பிரம்மவித்து கேட்கட்டும். அங்ஙனம் கேட்க அவன் ஸமர்த்தன். ஆதலால் ஆத்மாவே பிரியவஸ்து வென்று அதை உபாஸிக்கவேண்டும். அவ்விதம் உபாஸிப்பவனுடைய பிரிய வஸ்துக்களெல்லாம் நசியா.

9. எந்த பிரம்மவஸ்துவின் வித்யையினால் எல்லாமாக நாம் ஆகிவிடுவோமென்று மனிதர்கள் நினைக்கின்றார்களோ அந்த வஸ்துவையே பிரம்மமென்று பெரியோர்கள் சொல்லுகின்றார்கள். எதன் ஞானத்தால் எல்லாமாக ஆகிவிடுவதாகச் சொல்லப்படுகின்றதோ அந்தப் பிரம்மம் எவ்விதம் அறியப்படுகிறது?

10. ஸ்ருஷ்டிக்குமுன் இந்த ஜகத் பிரம்மமாகவே யிருந்தது. (பிரம்மம் நித்யவஸ்து; அவரிடமிருந்து ஜகத் உண்டாயிற்று.) அந்த பிரம்மம், 'நாமே பிரம்மமாகவிருக்கின்றோம்' என்றறிந்து நினைத்தது. (நம்மைத்தவிர வேறொன்றுமில்லை. நம்மிடமிருந்துதான் எல்லாம் உண்டாகவேண்டும் என்று எண்ணங் கொண்டது.) ஆதலால், அஃது எல்லாமாக வாயிற்று. இந்தப்பிரகாரம் (நாம் பிரம்மமாக விருக்கின்றோம் என்று) தேவர்களில் யார் அறிகிறார்களோ அவர்கள் அந்த பிரம்மமாகவே ஆகிறார்கள். அங்ஙனமே ரிஷிகளிலும், மனிதர்களிலும் எவர் எவர் அறிகிறாரோ அவர்களும் பிரம்மமாகவே ஆகிறார்கள். இந்த பிரகாரம் அறிந்து, 'நான்தான் மனு' 'நான்தான் ஸூரியன்' என்று வாமதேவ ரிஷி அறிந்து கொண்டார். இப்பவும் எவர்கள் மேற்சொல்லிய பிரகாரம் "நானே பிரம்மமாக விருக்கின்றேன்" என்று அறிகிறார்களோ அவர்களும் பிரம்மமாக—எல்லாமாக ஆகிறார்கள். அவர்கள் தேவர்களைக்காட்டிலும் மேலானவர்கள். இத்தேவர்களுடைய ஆத்மாவாகவும் ஆகிறார்கள். எவன் 'தன் ஆத்மாவைக்காட்டி

லும் வேறு தேவதை யிருக்கின்றது ; அது வேறு, நாம் வேறு', என்று எண்ணங்கொண்டு, அவ்விதம் அந்ய தேவதையை உபாஸிக்கின்றானோ அவன் தெரிந்தவனல்லன் ; அவன் மூடன்; அவன் பசுவுக்கு ஸமம் ; தேவதைகளுக்கு அவன் பசுவாக விருக்கின்றான். எவ்வாறு ஒரு மனிதனை அநேகம் பசுக்கள் ஒத்தாசை செய்து ஆதரிக்கின்றனவோ அவ்வாறு ஒரு பசுஸ்தாநீயனா யிருக்கின்ற ஒவ்வொரு மனிதனும் தேவர்களையும், பிதிருக்களையும் யாகம், சிராத்தம் முதலிய கர்மாக்களால் ஆதரிக்கின்றான். ஒரு பசு புலி முதலியவற்றால் கொண்டுபோகப்பட்டுக் காணமற் போயின், ஒரு மனிதனுக்கு, அதனால், அதிக வருத்தம் நேரிடுகின்றது. பல பசுக்கள் போய்விடின் கேட்கவேண்டுமா ? ஆதலால், மனிதர்கள் (பிரம்மஞானிகளாக) தெரிந்தவர்களாகிவிட்டால் (அஃதாவது, யாகாதி கர்மாக்களை விட்டுவிட்டால்) தேவர்களுக்கு, இவ்விஷயம், பிரியமில்லாததுதான் ! ஆகையால், மோக்ஷம் வேண்டுமென்ற இச்சையுள்ளவர்கள் முதலில் தேவர்களை அவசியம் உபாஸிக்கவேண்டும். அவ்விதம் செய்யின் தேவர்கள் அநுக்ரஹம் செய்வார்கள். தங்களுக்குப் பிரியமுள்ளவர்களுக்கு அநுக்ரஹம் புரிவார்கள் ; பிரியமில்லாதவர்களுக்குப் பிரம்ம ஞானம் அடையவொட்டாமல் கெடுதிசெய்வார்கள். (தாத்பரியம் யாதெனில், பிரம்மஞானம் அடையுமட்டும் கர்மாக்களைச் செய்து கொண்டு தேவர்களை உபாஸிக்கவேண்டும்.)

11. இந்த ஜகத் (ஸ்ருஷ்டிக்கு) முன் பிரம்மமாகவே யிருந்தது. அஃது ஒன்றாய்ப் பிரிவுபடாமல் இருந்தது. பிறகு, முன் சொல்லிய பிரகாரம் அக்நியாதிகளை ஸ்ருஷ்டித்தார். பிராமணர்களையும் ஸ்ருஷ்டித்தார். கர்மாவிற்கு அது போதவில்லை. பிரசஸ்தர்களாயிருக்கிற க்ஷத்திரியர்களை ஸ்ருஷ்டித்தார் ; தேவ க்ஷத்திரியர்களையும், மனுஷ்ய க்ஷத்திரியர்களையும் ஸ்ருஷ்டித்தார். (தேவ க்ஷத்திரியர்கள் எவர்களெனில்) இந்திரன் (தேவ அரசன்); வருணன் (ஜல ஜந்துக்களுக்கு அரசன்); சந்திரன் (பிராம்மணர்களின் அரசன்); ருத்திரன் (பசுக்களுக்கு அரசன்); பர்ஜன்யன் (மின்னல் முதலியவைகளின் அரசன்); யமன் (பிதிருக்களின் அரசன்) ; மிருத்யு (ரோகங்களுக்கு அரசன்) ; ஈசானன் (காந்திகளுக்கு அரசன்) ; ஆதலால், க்ஷத்திரியர்களைவிட உயர்ந்தவர்கள்

இல்லை. ஆதலால், ராஜஸூய யாகத்தில் பிராம்மணர்கள் கீழ் இருந்து, மேலாகவிருக்கிற க்ஷத்திரியர்களை உபாஸிக்கிறார்கள். க்ஷத்திரியனே யசஸை அடைகின்றான். அவனுக்கு பிராம்மணன் காரணம். ஆதலால், மேற்கண்ட யாகத்தில் ராஜா மேன்மையை யடைகின்றான். யாதொரு க்ஷத்திரியன் தனக்குக் காரணனாகிய பிராமணனைத் தாழ்மைப்படுத்துகிறானோ அவன் தன் வம்சத்தை நாசம் செய்கின்றான் (அவனுக்கு வம்சம் அற்றுப்போகும்). உலகத்தில் மேல் ஸ்தானத்திலிருப்பவனை அவமானப்படுத்தினால் எவ்விதம் பாபியாகின்றானோ அவ்விதம் பாபியாகின்றான்.

12. க்ஷத்திரமும் போதவில்லை; கர்மாவிற்கு ஸாதனமான வித்தத்தை ஸம்பாதிக்க வேண்டியிருந்ததால் வைசியனை ஸ்ருஷ்டித்தார். வைசிய தேவகணங்களாவன—வஸுக்கள்: ருத்திரர்கள்; ஆதித்யர்கள்; விச்வேதேவர்கள்; மருத்துக்கள்.

13. அவைகளும் போதவில்லை; பரிசர்யனம் செய்பவர்கள் வேண்டியிருந்ததால் சூத்திரர்களை ஸ்ருஷ்டித்தார். எல்லாவற்றையும் போஷிக்கின்ற பிருதிவியையும் ஸ்ருஷ்டித்தார்.

14. கர்மபூர்த்திக்கு இவைகளும் போதவில்லை; சிரேயோரூபமாயிருக்கின்ற தர்மத்தையும் ஸ்ருஷ்டித்தார் (தர்மம்-விதி); அது க்ஷத்திரத்திற்கு க்ஷத்திரம் (அஃதாவது, க்ஷத்திரியனைக்கூட அடக்கி ஆளுகின்றது). ஆதலால், தர்மத்திற்கு மேலாக ஒன்றுமில்லை. ஆதல்பற்றியே, பலவானை தர்மத்தால் துர்பலன் ஜயிக்கிறான். உலகத்தில் அரசனுடன் விரோதப்படும் ஒரு குடும்பி போன்று. தர்மம்தான் ஸத்யம். ஆதலால், ஸத்யம் உரைப்பவர்களை தர்மத்தைக் கூறுகிறார்களென்றும், தர்மத்தைச் சொல்லுகிறவர்களை ஸத்யம் சொல்லுகிறவர்களென்றும் உலகத்தில் சொல்லப்படுகின்றது.

15. இந்தப்பிரகாரம் அந்த பிரம்ம வஸ்து (அவித்யா விஷயங்களாயிருக்கின்ற கர்மாக்களைச் செய்யும்பொருட்டு) (பிரம்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரனென்ற நான்கு வர்ணங்களாக

லும் வேறு தேவதை யிருக்கின்றது ; அது வேறு, நாம் வேறு', என்று எண்ணங்கொண்டு, அவ்விதம் அந்ய தேவதையை உபாஸிக்கின்றானோ அவன் தெரிந்தவனல்லன் ; அவன் மூடன் ; அவன் பசுவுக்கு ஸமம் ; தேவதைகளுக்கு அவன் பசுவாக விருக்கின்றான். எவ்வாறு ஒரு மனிதனை அநேகம் பசுக்கள் ஒத்தாசை செய்து ஆதரிக்கின்றனவோ அவ்வாறு வெறு பசுஸ்தானீயனா யிருக்கின்ற ஒவ்வொரு மனிதனும் தேவர்களையும், பிதிருக்களையும் யாகம், சிராத்தம் முதலிய கர்மாக்களால் ஆதரிக்கின்றான். ஒரு பசு புலி முதலியவற்றால் கொண்டுபோகப்பட்டுக் காணாமற் போயின், ஒரு மனிதனுக்கு, அதனால், அதிக வருத்தம் நேரிடுகின்றது. பல பசுக்கள் போய்விடின் கேட்கவேண்டுமா ? ஆதலால், மனிதர்கள் (பிரம்மஞானிகளாக) தெரிந்தவர்களாகிவிட்டால் (அஃதாவது, யாகாதி கர்மாக்களை விட்டுவிட்டால்) தேவர்களுக்கு, இவ்விஷயம், பிரியமில்லாததுதான் ! ஆகையால், மோக்ஷம் வேண்டுமென்ற இச்சையுள்ளவர்கள் முதலில் தேவர்களை அவசியம் உபாஸிக்கவேண்டும். அவ்விதம் செய்யின் தேவர்கள் அநுக்ரஹம் செய்வார்கள். தங்களுக்குப் பிரியமுள்ளவர்களுக்கு அநுக்ரஹம் புரிவார்கள் ; பிரியமில்லாதவர்களுக்குப் பிரம்ம ஞானம் அடையவொட்டாமல் கெடுதிசெய்வார்கள். (தாத்பரியம் யாதெனில், பிரம்மஞானம் அடையுமட்டும் கர்மாக்களைச் செய்து கொண்டு தேவர்களை உபாஸிக்கவேண்டும்.)

11. இந்த ஜகத் (ஸ்ருஷ்டிக்கு) முன் பிரம்மமாகவே யிருந்தது. அஃது ஒன்றாய்ப் பிரிவுபடாமல் இருந்தது. பிறகு, முன் சொல்லிய பிரகாரம் அக்கினியாதிகளை ஸ்ருஷ்டித்தார். பிராமணர்களையும் ஸ்ருஷ்டித்தார். கர்மாவிற்கு அது போதவில்லை. பிரசஸ்தர்களாயிருக்கிற க்ஷத்திரியர்களை ஸ்ருஷ்டித்தார் ; தேவ க்ஷத்திரியர்களையும், மனுஷ்ய க்ஷத்திரியர்களையும் ஸ்ருஷ்டித்தார். (தேவ க்ஷத்திரியர்கள் எவர்களெனில்) இந்திரன் (தேவ அரசன்); வருணன் (ஜல ஜந்துக்களுக்கு அரசன்); சந்திரன் (பிராம்மணர்களின் அரசன்); ருத்திரன் (பசுக்களுக்கு அரசன்); பார்ஜன்யன் (மின்னல் முதலியவைகளின் அரசன்); யமன் (பிதிருக்களின் அரசன்) ; மிருத்யு (ரோகங்களுக்கு அரசன்) ; ஈசானன் (காந்திகளுக்கு அரசன்) ; ஆதலால், க்ஷத்திரியர்களைவிட உயர்ந்தவர்கள்

இல்லை. ஆதலால், ராஜஸூய யாகத்தில் பிராம்மணர்கள் கீழ் இருந்து, மேலாகவிருக்கிற க்ஷத்திரியர்களை உபாஸிக்கிறார்கள். க்ஷத்திரியனே யசஸை அடைகின்றான். அவனுக்கு பிராம்மணன் காரணம். ஆதலால், மேற்கண்ட யாகத்தில் ராஜா மேன்மையை யடைகின்றான். யாதொரு க்ஷத்திரியன் தனக்குக் காரணனாகிய பிராமணனைத் தாழ்மைப்படுத்துகிறானோ அவன் தன் வம்சத்தை நாசம் செய்கின்றான் (அவனுக்கு வம்சம் அற்றுப்போகும்). உலகத்தில் மேல் ஸ்தானத்திலிருப்பவனை அவமானப்படுத்தினால் எவ்விதம் பாபியாகின்றானோ அவ்விதம் பாபியாகின்றான்.

12. க்ஷத்திரமும் போதவில்லை; கர்மாவிற்கு ஸாதனமான வித்தத்தை ஸம்பாதிக்க வேண்டியிருந்ததால் வைசியனை ஸ்ருஷ்டித்தார். வைசிய தேவகணங்களாவன—வஸுக்கள்: ருத்திரர்கள்; ஆதித்யர்கள்; விச்வேதேவர்கள்; மருத்துக்கள்.

13. அவைகளும் போதவில்லை; பரிசர்யனம் செய்பவர்கள் வேண்டியிருந்ததால் சூத்திரர்களை ஸ்ருஷ்டித்தார். எல்லாவற்றையும் போஷிக்கின்ற பிருதிவியையும் ஸ்ருஷ்டித்தார்.

14. கர்மபூர்த்திக்கு இவைகளும் போதவில்லை; சிரேயோ ரூபமாயிருக்கின்ற தர்மத்தையும் ஸ்ருஷ்டித்தார் (தர்மம்-விதி); அது க்ஷத்திரத்திற்கு க்ஷத்திரம் (அஃதாவது, க்ஷத்திரியனைக்கூட அடக்கி ஆளுகின்றது). ஆதலால், தர்மத்திற்கு மேலாக ஒன்றுமில்லை. ஆதல்பற்றியே, பலவானை தர்மத்தால் துர்பலன் ஜயிக்கிறான். உலகத்தில் அரசனுடன் விரோதப்படும் ஒரு குடும்பி போன்று. தர்மம்தான் ஸத்யம். ஆதலால், ஸத்யம் உரைப்பவர்களை தர்மத்தைக் கூறுகிறார்களென்றும், தர்மத்தைச் சொல்லுகிறவர்களை ஸத்யம் சொல்லுகிறவர்களென்றும் உலகத்தில் சொல்லப்படுகின்றது.

15. இந்தப்பிரகாரம் அந்த பிரம்ம வஸ்து (அவித்யா விஷயங்களாயிருக்கின்ற கர்மாக்களைச் செய்யும்பொருட்டு) (பிரம்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரனென்ற நான்கு வர்ணங்களாக

லும் வேறு தேவதை யிருக்கின்றது; அது வேறு, நாம் வேறு', என்று எண்ணங்கொண்டு, அவ்விதம் அந்ய தேவதையை உபாஸிக்கின்றானே அவன் தெரிந்தவனல்லன்; அவன் மூடன்; அவன் பசுவுங்கு ஸமம்; தேவதைகளுக்கு அவன் பசுவாக விருக்கின்றான். எவ்வாறு ஒரு மனிதனை அநேகம் பசுக்கள் ஓத்தாசை செய்து ஆதரிக்கின்றனவோ அவ்வாறு ஒரு பசுஸ்தாநீயனு யிருக்கின்ற ஒவ்வொரு மனிதனும் தேவர்களையும், பிதிருக்களையும் யாகம், சிராத்தம் முதலிய கர்மாக்களால் ஆதரிக்கின்றான். ஒரு பசு புலி முதலியவற்றால் கொண்டுபோகப்பட்டுக் காணமற் போயின், ஒரு மனிதனுக்கு, அதனால், அதிக வருத்தம் நேரிடுகின்றது. பல பசுக்கள் போய்விடின் கேட்கவேண்டுமா? ஆதலால், மனிதர்கள் (பிரம்மஞானிகளாக) தெரிந்தவர்களாகிவிட்டால் (அஃதாவது, யாகாதி கர்மாக்களை விட்டுவிட்டால்) தேவர்களுக்கு, இவ்விஷயம், பிரியமில்லாததுதான்! ஆகையால், மோக்ஷம் வேண்டுமென்ற இச்சையுள்ளவர்கள் முதலில் தேவர்களை அவசியம் உபாஸிக்கவேண்டும். அவ்விதம் செய்யின் தேவர்கள் அநுக்ரஹம் செய்வார்கள். தங்களுக்குப் பிரியமுள்ளவர்களுக்கு அநுக்ரஹம் புரிவார்கள்; பிரியமில்லாதவர்களுக்குப் பிரம்ம ஞானம் அடையவொட்டாமல் கெடுதிசெய்வார்கள். (தாத்பரியம் யாதெனில், பிரம்மஞானம் அடையுமட்டும் கர்மாக்களைச் செய்து கொண்டு தேவர்களை உபாஸிக்கவேண்டும்.)

11. இந்த ஜகத் (ஸ்ருஷ்டிக்கு) முன் பிராம்மமாகவே யிருந்தது. அஃது ஒன்றாய்ப் பிரிவுபடாமல் இருந்தது. பிறகு, முன் சொல்லிய பிரகாரம் அக்னியாதிகளை ஸ்ருஷ்டித்தார். பிராமணர்களையும் ஸ்ருஷ்டித்தார். கர்மாவிற்கு அது போதவில்லை. பிரசஸ்தர்களாயிருக்கிற க்ஷத்திரியர்களை ஸ்ருஷ்டித்தார்; தேவ க்ஷத்திரியர்களையும், மனுஷ்ய க்ஷத்திரியர்களையும் ஸ்ருஷ்டித்தார். (தேவ க்ஷத்திரியர்கள் எவர்களெனில்) இந்திரன் (தேவ அரசன்); வருணன் (ஜல ஜந்துக்களுக்கு அரசன்); சந்திரன் (பிராம்மணர்களின் அரசன்); ருத்திரன் (பசுக்களுக்கு அரசன்); பர்ஜன்யன் (மின்னல் முதலியவைகளின் அரசன்); யமன் (பிதிருக்களின் அரசன்); மிருத்யு (ரோகங்களுக்கு அரசன்); ஈசானன் (காந்திகளுக்கு அரசன்); ஆதலால், க்ஷத்திரியர்களைவிட உயர்ந்தவர்கள்

இல்லை. ஆதலால், ராஜஸூய யாகத்தில் பிராம்மணர்கள் கீழ் இருந்து, மேலாகவிருக்கிற க்ஷத்திரியர்களை உபாஸிக்கிறார்கள். க்ஷத்திரியனே யசஸை அடைகின்றான். அவனுக்கு பிராம்மணன் காரணம். ஆதலால், மேற்கண்ட யாகத்தில் ராஜா மேன்மையை யடைகின்றான். யாதொரு க்ஷத்திரியன் தனக்குக் காரணனாகிய பிராமணனைத் தாழ்மைப்படுத்துகிறானோ அவன் தன் வம்சத்தை நாசம் செய்கின்றான் (அவனுக்கு வம்சம் அற்றுப்போகும்). உலகத்தில் மேல் ஸ்தானத்திலிருப்பவனை அவமானப்படுத்தினால் எவ்விதம் பாபியாகின்றானோ அவ்விதம் பாபியாகின்றான்.

12. க்ஷத்திரமும் போதவில்லை; கர்மாவிற்கு ஸாதன மான வித்தத்தை ஸம்பாதிக்க வேண்டியிருந்ததால் வைசியனை ஸ்ருஷ்டித்தார். வைசிய தேவகணங்களாவன—வஸுக்கள்: ருத்திரர்கள்; ஆதித்யர்கள்; விச்வேதேவர்கள்; மருத்துக்கள்.

13. அவைகளும் போதவில்லை; பரிசர்யனம் செய்பவர்கள் வேண்டியிருந்ததால் சூத்திரர்களை ஸ்ருஷ்டித்தார். எல்லாவற் றையும் போஷிக்கின்ற பிருதிவியையும் ஸ்ருஷ்டித்தார்.

14. கர்மபூர்த்திக்கு இவைகளும் போதவில்லை; சிரேயோ ரூபமாயிருக்கின்ற தர்மத்தையும் ஸ்ருஷ்டித்தார் (தர்மம்-விதி); அது க்ஷத்திரத்திற்கு க்ஷத்திரம் (அஃதாவது, க்ஷத்திரியனைக்கூட அடக்கி ஆளுகின்றது). ஆதலால், தர்மத்திற்கு மேலாக ஒன்று மில்லை. ஆதல்பற்றியே, பலவானை தர்மத்தால் துர்பலன் ஜயிக் கிறான். உலகத்தில் அரசனுடன் விரோதப்படும் ஒரு குடும்பி போன்று. தர்மம்தான் ஸத்யம். ஆதலால், ஸத்யம் உரைப்ப வர்களை தர்மத்தைக் கூறுகிறார்களென்றும், தர்மத்தைச் சொல்லு கிறவர்களை ஸத்யம் சொல்லுகிறவர்களென்றும் உலகத்தில் சொல்லப்படுகின்றது.

15. இந்தப்பிரகாரம் அந்த பிரம்ம வஸ்து (அவித்யா விஷ யங்களாயிருக்கின்ற கர்மாக்களைச் செய்யும்பொருட்டு) (பிரம்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரனென்ற நான்கு வர்ணங்களாக

ஆயிற்று. அந்த பிரம்மம் தேவர்களுக்குள் அக்நிரூபமாக பிராம்மணனாயிற்று. சிறிது விகாரமடைந்து மற்றைய மூன்று வர்ணங்களாயிற்று. ஆதலால், தேவர்களில் அக்நியிடம் கர்மாவைச்செய்து அதன் பலனாகிய அதற்குரித்தான உலகத்தை யடைய இச்சிக்கிறார்கள். மனிதர்களுக்குள் பிராம்மணத்வ உலகத்தை யடையும்பொருட்டு இச்சிக்கிறார்கள். ஆதலால், இந்த அக்நி, பிராம்மண ரூபங்களாக பிரம்மம் பிராம்மணனாயிற்று. (அஃதாவது, அக்நியிடமும், பிராம்மணர்களிடமும் பிரம்மம் பிரத்யக்ஷமாயிருக்கின்றது ; ஆதலால், அக்நியையும் பிராம்மணர்களையும் உபாஸிக்கவேண்டும்.) எவனொருவன் இந்த ஸாம்ஸாரிக உலகத்தைவிட்டு, தனக்குச் சொந்தமான உலகத்தை (அஃதாவது, தன்னிடமிருக்கின்ற ஆத்மாவை)ப் பாராமல் (அறியாமல்) இறந்து போகிறானோ, அவனை இந்த அறியப்படாமலிருக்கிற ஆத்மா போஷிக்கமாட்டாது (ரக்ஷிக்கமாட்டாது; காப்பாற்றமாட்டாது); எப்படி அத்யயநம் செய்யப்படாத வேதம், கர்மவிதிகள் முதலியவைகளைத் தெரியப்படுத்துவதன் மூலமாய்ப் பாலனம் செய்யாதோ அப்படிப் போஷிக்கமாட்டாது. ஆதலால் ஆத்மாவை யறியாதவன் எவ்வித மஹத்தான புண்யகர்மாவைச் செய்யினும் அது பல அநுபவ முடிவில் நசித்துவிடும். ஆதலால், ஆத்மாவையே தன் உலகமாக உபாஸிக்க வேண்டும். அங்ஙனம் உபாஸிப்பவனுடைய கர்மா நசிக்காது. (அஃதாவது கர்மா தொடாது ; ஸம்ஸாரமில்லை ; கர்மா இருந்தால் அல்லவோ நசிக்கும். அஃது இல்லை.) இவ்விதம் ஏற்பட்ட ஆத்மஞானி எதை எதை இச்சிக்கின்றானோ அவைகள் எல்லாவற்றையும் உண்டு பண்ணுகிறான்.

16. இந்த ஆத்மா (ஜீவன்; கிருஹத்திலிருப்பவனும், கர்மாதிகாரியாகவும், சரீர பிண்டத்தி லிருப்பவனாகவும், அப்ரம்ம ஞானியாகவுமிருக்கின்ற ஆத்மா) எல்லா பூதங்களுக்குள்ளும் போக்த்ரு உலகமாக (போக்கியத்திற்கு இருப்பிடமாக) இருக்கிறான். எவ்விதமெனில், ஹோம யாகங்களால் தேவர்களுக்கு உலகம் ; வேத அத்யயநங்களால் ரிஷிகளுக்கு உலகம் ; சிராத்தாதிகளைச் செய்வதனாலும், பிரஜாவிருத்திக்கு வேண்டிய கர்மாக்களைச்செய்வதனாலும் பிதிருக்களுக்கு உலகம் ; மனிதர்களுக்கு இருப்பிடம், சாப்பாடு

முதலியவைகளைக் கொடுத்து ஒத்தாசை செய்வதனால் மனிதர்களுக்கு உலகம்; புல், ஜலம் முதலியவைகளைக் கொடுப்பதனால் பசுக்களுக்கு உலகம்; வீடுகளிலுள்ள மிருக பக்ஷியாதிகளுக்கு ஆஹாரம் கொடுப்பதனால் அவைகளுக்கு உலகம்; எப்படி உலகத்தில் ஒருவன் தன் இருப்பிடத்திற்கு நாசத்தைக் கருதமாட்டனோ அப்படி மேற்கண்ட பூதங்களெல்லாம் தங்கள் போக்ய இருப்பிடமாகிய மேற்படி ஜீவாத்மாவிற்கு நாசத்தை இச்சிக்கமாட்டார்கள். (இந்தப்பிரகாரம்) அறியப்பட்டது; யோசிக்கப்பட்டது. (தர்மங்களைச் செய்தால் தேவர்கள் ஜீவனைக் காப்பாற்றி இரக்ஷிப்பார்கள்; ஆதலால், கர்மாவையும் விட்டு விடக்கூடாது.)

17. ஆத்மா (ஸ்வாபாவிகனுகவும், அவித்வானுகவு மிருக்கிற ஜீவாத்மா) முதலில் (ஸம்ஸார ஸம்பத்திற்குமுன்) ஒன்ருகவிருந்தான். (வேருருவருங்கூட இராமல் ஒருவனுயிருந்தான்.) அவன் (கர்மகர்த்தாவாகிய) தனக்கு (கர்மாவுக்குக் காரணமாயிருக்கிற) ஸ்திரீயும், பிரஜையும் உண்டாக வேண்டுமென்றும், பிறகு கர்மாவைச் செய்வோமென்றும் இச்சித்தான். ஆசை இவ்வுருவன்ருே? (ஜாயா, புத்திர, வித்த, கர்மாக்களாக விருக்கிறதல்லவா). ஆசைப்படாவிடினும் முன்சொல்லிய பலன்களைகாட்டிலும் அதிகமாய்க் கிடைக்கமாட்டாது. ஆதலால், இக்காலத்திலும் உலகத்தில் ஒருவனுயிருக்கிறவன் (முந்திச் சொல்லியபடி) ஜாயா, புத்திர, வித்த, கர்மாக்களை இச்சிக்கிருன். இவைகளில் ஏதேனும் ஒன்று கிடைக்காமல் குறைவு நேரிடின் தான் அஸம்பூர்ணனென்று நினைத்துக்கொள்ளுகிருன். அப்பொழுது அவனுக்கு அஸம்பூர்ணத்வம் உண்டாகிறது. இவன் மனஸ்தான் ஆத்மா (குடும்பபதி, புருஷன்) மனஸ் பிரதானமாயிருப்பதால், வாக்குத்தான் ஜாயா, மனஸ்பிரகாரம் வாக்கு நடப்பதால், மேற்கண்ட இரண்டும் சேர்ந்ததால் பிராணன் பிரஜையாக உண்டாயிற்று. சக்ஷுஸ் மாநுஷமாயிருக்கிற வித்தம்; அதனுல் உலகத்தில் இருப்பவைகளையெல்லாம் பார்க்கின்ருேம். சுரோத்திரம் தைவமாயிருக்கிற வித்தம்; சுரோத்திரனுலன்ருே விக்ஞானத்தைக் கேட்டறிகின்ருேம். தேஹம்தான் கர்மா; தேஹத்தால்தான் கர்மா செய்யவேண்டிவதாயிருக்கிறது. இதுதான் பாங்க்தமான (ஐந்தால் நிறைவேற்றப்

பட்ட) யக்ஞபம். இப்படி யறிபவனுக்கு, பசு புருஷன் எல்லாம் கிடைக்கும்.

---

## பிராம்மணம் 5.

1-2. பிதாவாயிருக்கிற பிரஜாபதி தனது மேதையினாலும் (பிரக்ஞையாலும்) தபஸாலும் எந்த ஏழு அன்னங்களை உண்டாக்கினரோ அவைகள் இப்பொழுது சொல்லப்படுகின்றன. அவைகளில் ஒன்று ஸாதாரணம்; (அஃதாவது) உலகத்திலுள்ள பிராணிகளெல்லாம் ஸாதாரணமாகச் சாப்பிடுகிற அன்னம், தின்னப்படுகின்ற வஸ்துக்கள் ஸாதாரண அன்னம்; இந்த அன்னத்தை உபாஸிக்கின்றவன் (புசிக்கிறவன்) பாபத்தினின்றும் திரும்பமாட்டான்; இந்த அன்னம் மிச்ரமாக எல்லோருக்கும் பொதுவாகவிருக்கின்றது. தவிர, இரண்டு அன்னங்களைத் தேவர்கள் படையும்படி செய்தார். அவைகளாவன:—ஹுதம் (அக்னியில் ஹோமம் செய்யப்பட்ட அன்னம்); பிரஹுதம் (பலியாகப்போடப்பட்ட அன்னம்); இவ்விரண்டும் தேவர்களின்பொருட்டுத்தான் செய்யப்படுகின்றன. தர்சபூர்ணமாஸகிரியை ஸம்பந்தமான அன்னமென்று சிலர் சொல்லுகிறார்கள்; ஆகஸ்பற்றி, காம்யேஷ்டியைச் சார்ந்ததாக விருக்கமாட்டாது. ஓர் அன்னத்தைப் பசுக்களிடம் கொடுத்தார்; அந்த அன்னம்தான் பால்; மனிதர்களும், பசுக்களும் முதலில் பிறந்தவுடன் பாலைக் குடித்தல்லவா பிழைக்கின்றார்கள்? ஆதலால், பிறந்த குமாரனுக்கு முன்னர் பாலின் விகாரமாகிய நெய்யை நக்கும்படி செய்கிறார்கள்; அல்லது முலைப்பாலைக் குடிக்கும்படிசெய்கிறார்கள்; பிறந்த கன்றுக்குட்டியை இன்னும் புல் தின்னவில்லை என்று சொல்லுகிறார்கள். (அஃதாவது, இன்னும் பால் குடித்துக்கொண்டிருக்கிறது என்றர்த்தம்.) இந்த அன்னத்தில் (பாலில்) தான் எல்லா ஜகத்தும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது; பிராணனுடையவை, பிராணனில்லாதவை இவை எல்லாம் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. ஏது ஒரு ஸம்வத்ஸரம் பாலினால் யாகம் செய்தால் ஒருவன் மறுமரணத்தை ஜயிப்பான் என்று வேறு பிராம்மணங்களில் சொல்லப்பட்டிருக்கிறதோ அஃது அவ்விதமும் அன்று; அந்தப் பிரகாரம் ஒருபகல் ஹோமம் செய்தாலே

மிருத்யுவை ஜயிக்கிறான். ஆதலால் தேவர்களின்பொருட்டு அன்னாத்யங்களைக் கொடுக்கவேண்டும். அன்னங்கள் இவ்விதமாகத் தின்னப்படும்போது, எப்பொழுதும் ஏன் குறைவு இல்லாம லிருக்கிறதென்று கேட்பின், (அதற்குப் பதில்) புருஷன் குறைவு இல்லாதவன்; அவன் தன் புத்தியால் எல்லா அன்னங்களையும் மறுபடியும் உண்டுபண்ணுகிறான். எவன் இவ்விதமாக அக்ஷிதி (குறைவில்லாத) பாவத்தை யறிகிறானோ அவனே முக்கியமாக அன்னத்தைப் புஜிக்கின்றான்; தேவத்வத்தை யடைகிறான்; அமிரு தத்தைக் கொண்டு பிழைக்கிறான் (ஜனன மரணமற்றவன்).

3. (மற்றைய மூன்று அன்னங்கள் சொல்லப்படுகின்றன.) மற்றைய மூன்று அன்னங்களையும் பிதா ஆத்மாவினிடம் இருக்கச் செய்தார். அவைகளாவன (i) மனஸ் (அந்தக்கரணம்), (ii) வாக்கு, (iii) பிராணன். மனஸ்தான் முக்கியம்; எப்படியெனில் மனஸ் பக்கத்தில் போயிருந்தால் ஸமீபத்திலிருப்பதை பார்க்க முடியாது; ஸமீபத்தில் சொல்வதைக் கேட்கமுடியாது; மனஸால் தான் (அஃது இருந்தால்தான்) பார்க்கலாம், கேட்கலாம். காமம் (இச்சை), ஸங்கல்பம், ஸம்சயஞானம், சிரத்தை (ஆஸ்திக்ய புத்தி), அசிரத்தை, தைரியம், அதைரியம், லஜ்ஜை, புத்தி, பயம் இவைகள் முதலியவைகளெல்லாம் மனஸின் ரூபங்கள். மனஸால் உணரவேண்டும் (அறியவேண்டும்). சப்தம்தான் வாக்கு; இந்த வாக்கு அதன் வாசக வஸ்துவாகவும், முடிவுள்ளதாகவு மிருப்பதை அநுஸரித்துக்கொண்டிருக்கிறது. (அஃதாவது, அது வாசகவஸ்துவை பிரகாசப்படுத்துகின்றது.) ஆனால், தான் அவ் விதமன்று. (வேறொன்றால் பிரகாசப்படுத்தப்பட்டதன்று, தானே பிரகாசிக்கத்தக்கது.) (பிராணனைக்குறித்து சொல்லப்படுகிறது.) பிராணன், பிராண, அபாந, வியாந, உதாந, ஸமாந என்று ஐந்து விதம். (ஒவ்வொன்றிற்கும் விவரம் முன்சொல்லப்பட்டிருக் கிறது.) ஆதலால், எல்லாம் பிராணமயமாயிருக்கிறது. இந்த ஆத்மா வாங்மயமாயும், மனோமயமாயும், பிராணமயமாயு மிருக் கின்றது.

4-10. அடியிற்கண்டவைகளெல்லாம் மேற்சொல்லிய வாக்கு, மனஸ், பிராணன்களாக விருக்கின்றன.

(i) லோகம்.

வாக்கு-பூலோகம் ; மனஸ்-அந்தரிக்ஷம் ; பிராணன்-ஸ்வர்க்கம்.

(ii) வேதம்.

வாக்கு-ருக்வேதம் ; மனஸ்-யஜுர்வேதம் ; பிராணன்-ஸாமவேதம்.

(iii) வாக்கு-தேவர்கள் ; மனஸ்-பிதிருக்கள் ; பிராணன் மனுஷ்யர்கள்.

(iv) வாக்கு-பிதா ; மனஸ்-மாதா ; பிராணன்-பிரஜை.

(v) வாக்கு-விக்ஞாதம் ; மனஸ்-விஜிக்ஞ்யாஸம் ; பிராணன் அவிக்ஞாதம்.

விக்ஞாதம் என்றால் செவ்வையாக அறியப்பட்டது ; அது வாக்கின் ரூபம்; இவ்விதம் அறிந்தவனை வாக்கு காப்பாற்றுகிறது. விஜிக்ஞ்யாஸம் என்றால் செவ்வையாக அறியப்படாததை யறிந்து ஸந்தேஹத்தை நிவிருத்திசெய்து கொள்ளுதல் ; இது மனவின் ரூபம்; இவ்விதம் யறிந்தவனை மனஸ் காப்பாற்றும். அவிக்ஞாதம் என்றால் அறியப்படாதது ; இது பிராணனின் ரூபம் ; இவ்விதம் யறிந்தவனை பிராணன் காப்பாற்றும்.

11. வாக்காகின்ற அன்னத்திற்குச் சரீரம் (வெளிப்படையான ஆதாரம்) பிருதிவி ; அதன் ரூபம் ஜ்யோதிர்மயம் ; அஃதாவது அக்நி ; வாக்கின் பரிமாணத்திற்குத் தக்கவாறு பிருதிவியும், அக்நியும் அவ்வளவு பரிமாண முள்ளதாக இருக்கின்றன.

12. மனஸாகின்ற அன்னத்திற்கு ஸ்வர்க்கலோகம் சரீரம் ; அதன் ரூபம் ஜ்யோதிர்மயமான இந்த ஆதித்யன் ; மனவிற்குத் தகுந்தபடி ஸ்வர்க்கலோகமும், ஸூரியனும் இருக்கின்றன. இந்த இரண்டின் சேர்க்கையால் பிராணன் உண்டாயிற்று. அதுதான் இந்திரன் (ஈசுவரன்), அதுதான் இந்த ஜீவன் ; இவன் சத்துருவற்றவன் ; இப்படி யறிந்தவனுக்குச் சத்துருவில்லை.

13. பிராணனாகிற அன்னத்திற்கு ஜலம் சரீரம்; அதன் ரூபம் ஜ்யோதிர்மயமான இந்த சந்திரன். பிராணனுக்குத் தக்கபடி ஜலமும், சந்திரனு மிருக்கின்றன. இவை மூன்றும், வாக்கு மனஸ் பிராணன் மூன்றும், ஸமமானவை; ஆதல்பற்றி அவை அநந்தங்கள் (முடிவற்றவை). இவைகளை அந்தமுள்ளவை களாக உபாஸிக்கிறவர்கட்கு அந்தமுள்ள உலகம்தான் கிடைக்கும். அநந்தமாக உபாஸிக்கிறவன் அநந்த உலகத்தை யடைவான்.

14. அந்த பிரஜாபதி ஸம்வத்ஸராத்மா; (காலஸ்வரூபி, சந்திர தேவதை) பதினாறு கலைகளுள்ளவர்; அஹோராத்திரங்கள், திதிகள் பதினைந்து கலைகள்; பதினாறாவது கலை நித்யமாயுமுள்ளது; இது சுக்லபக்ஷத்தில் மற்ற பதினைந்து கலைகளில் ஒவ்வொன்றுடனும் சேர்ந்து வளருகின்றது; கிருஷ்ணபக்ஷத்தில் குறைவடைகிறது; நித்யமாயிருக்கிற இந்தப் பதினாறாவது கலை அமாவாஸை இரவில் எல்லாப் பிராணிகளிடமும் பிரவேசித்து, மறுதினம் முதல் வளர்ந்துகொண்டுவருகிறது. ஆதல்பற்றி, இந்த அமாவாஸை ராத்திரியில் யாதொரு பிராணிகளின் பிராணனையும் ஹிம்ஸிக்கக் கூடாது; இந்த சந்திரதேவதை பூஜை நிமித்தம், ஸ்பாவத்தில் பிராணிகளால் அமங்கலமென்று நினைக்கப்பட்டு ஹிம்ஸிக்கப்படுகிற பாபாத்மாவாகிய கரட்டோணனின் பிராணனைக்கூட ஹிம்ஸிக்கக் கூடாது.

15. எந்த ஆத்மா, ஸம்வத்ஸர:, பிரஜாபதி, ஷோடசகலா வென்று சொல்லப்படுகின்றாரோ அவர் நமக்குப் பரோக்ஷமாக தெரியாமல் மறைந்திருக்கிறார் என்று நினைக்கவேண்டுவதில்லை. இதோ பிரத்யக்ஷமாக விருக்கிறார். அவ்விதமிருப்பவர் யாரெனில், இவ்விதம் அறிந்த ஒரு புருஷனே; ஜீவாத்மாதான். அவருக்குத் தன் சொத்துக்கள்தான் பதினைந்து கலைகள்; ஆத்மா, சரீரம்தான் பதினாறாவது கலை, நித்யமாயிருக்கிற கலை; அவர் வித்தத்தினால் பூர்ணமாகிறார், குறைவு அடைகிறார்; சரீரம் எதுவோ அது நப்யம் (ஒரு சக்ரத்தின் நடுஸ்தானம்; அச்சின் முக்கிய பிடிப்பு இடம்); வித்தம் அச்சக்கரத்தின் பரிவாரங்கள், ஆரம் முதலியவைகள். எல்லா சொத்துகள் குறைவானாலும் ஒருவன் சரீரத்

துடன் உயிருடனிருப்பானாகில் சொத்துடன் மறுபடியும் சேருவான்.

16. மனுஷ்யலோகம், பிதிருலோகம், தேவலோகம் என மூன்று உலகங்கள் உள. முதல் உலகம், புத்திரனைக்கொண்டு ஜயிக்கப்படத்தக்கது; வேறொருவராலும் முடியாது. இரண்டாவது, கர்மாவால் ஜயிக்கத்தக்கது; வேறொன்றாலும் முடியாது. மூன்றாவது, பிரம்மவித்யையால் ஜயிக்கத்தக்கது; வேறொன்றாலும் முடியாது. இந்த மூன்றாவது உலகம்தான் எல்லாவற்றிலும் சிரேஷ்டமாயுள்ளது. ஆதலால் வித்யையைப் பெரிதாகக் கொண்டாடுகிறார்கள்.

17. இனி 'ஸம்பிரத்தி' (புத்திரனிடம் ஒப்புவித்தல்) சொல்லப்படுகிறது. எச்சமயம் அது செய்யப்படவேண்டுமெனில், பிதா தான் இறந்துபோவதாக எப்பொழுது நினைக்கிறானோ அப்பொழுது புத்திரனைக் கூப்பிட்டு, அவனைப் பார்த்து, "நீ பிரம்மம்; நீ யக்ஞம்; நீ லோகம்" என்று சொல்லுகிறான். அதற்கு மறுமொழியாகப் புத்திரன் "நான் பிரம்மம்; நான் யக்ஞம்; நான் லோகம்"; என்று சொல்லுகிறான். இவ்விதம் ஒன்றும் விளங்காமல் சொல்வதற்கு அர்த்தம் யாதெனில் (வேதம் சொல்லுகிறது, பிதா கூறுவதுபோல்). 'எந்த எந்த பிரம்மம் (வேதம்) என்றால் அத்யயனம் செய்யவேண்டுவதாக விருந்து செய்யப்பட்டும், செய்யப்படாமலு மிருக்கின்றனவோ, அவைகளை யெல்லாம் நீ செய்யயவேண்டியது. எந்த எந்த யக்ஞம் என்றால் செய்யப்பட வேண்டுவதாக விருந்து செய்யப்பட்டதும், செய்யப்படாமலும் இருக்கின்றனவோ அவைகளை எல்லாம் நீ இனிச் செய்யவேண்டும். ஜயிக்கப்படவேண்டுவதாக இருந்து, இதுவரையில் எந்த எந்த லோகம் (பலன்) என்றால் ஜயிக்கப்பட்டும் ஜயிக்கப்படாமலு மிருக்கின்றனவோ அவைகளை எல்லாம் நீ இனி ஜயிக்கவேண்டும்' 'ஒரு கிருஹஸ்தனால் செய்யப்பட வேண்டுவது இவ்வளவுண்டு. இவைகளெல்லாம் என்னிட மிருந்து வெளிப்பட்டு இவ்வுலகத்தினின்றும் என்னை ரக்ஷிக்க' என்றும் (அர்த்தம்). இவ்விதமாகப் புத்திரன் பிதாவை ரக்ஷிப்பதால் அநுசிஷ்டனாயிருக்கிற புத்திரனை 'லோக்யன்' என்று (பிதாவிற்கு லோகத்திற்கு ஹேதுகான்

என்று) சொல்லுகிறார்கள். ஆதல்பற்றி, பிதா புத்திரனை 'இவன் லோக்யனாக விருக்கவேண்டும்' என்று உத்திரவு கொடுக்கிறான் (அநுசாஸிக்கிறான்). இவ்விதமறிந்த பிதா இவ்வுலகத்தைவிட்டுப் போனபோதிலும் திரும்ப இந்த வாக்கு, மனஸ், பிராணன் இவைகளுடன் புத்திரனை அடைகிறான். பிதாவினால் செய்யப்பட வேண்டியவைகளைச் செய்யாமல் ஏதேனும் குறைவாக விடப்பட்டிருந்தால் அதைப் புத்திரன் பூர்ணமாகச் செய்து பிதாவை ரக்ஷிக்கின்றான். ஆதலால், அவனுக்கு 'புத்திரன்' என்ற பெயர் கிடைத்தது. இவ்வுலகத்தில் புத்திரனால் பிதா பிரதிஷ்டையுள்ளவனாக விருக்கிறான். இவனை தைவங்களாகவும், அமிருதங்களாகவுமிருக்கின்ற பிராணன்கள் (வாக்கு, மனஸ், பிராணன்) அடைகின்றன. எவ்விதமெனில்?

18. பிருதிவி, அக்நி லக்ஷணமுள்ள தைவீயாகிய இந்த வாக்கு இவனிடம் பிரவேசிக்கின்றது; அஃதாவது, எது எது வாக்கால் சொல்லப்படுகின்றனவோ அவையெல்லாம் அமோகங்களாக விருக்கின்றன.

19. ஸ்வர்க்க, ஆதித்ய லக்ஷணமுள்ள தைவீயாகிய மனஸ் இவனிடம் பிரவேசிக்கின்றது. மனஸில் சுசியாகவிருந்தால் அவனுக்கு துக்கம் இல்லை. எப்பொழுதும் ஸந்தோஷமுள்ளவனாக விருப்பான்.

20. ஜல, சந்திர லக்ஷணமுள்ள தைவீயாயிருக்கிற பிராணன் இவனிடம் பிரவேசிக்கின்றது. அத்தகைய பிராணன் இவனிடம் ஸஞ்சரித்தும், ஸஞ்சரியாமலும், இருந்துகொண்டு குறைவு அடைகிறதில்லை, நாசமடைகிறதில்லை. இப்படியறிந்தவன் எல்லா பூதங்களின் ஆத்மாவாக விருக்கிறான். (ஸர்வக்ஞரான பரமாத்மாவாக ஆகிவிடுகிறான்.) இந்தப்பிரகாரம் அவன் தேவதையாகிவிடுகிறான். எவ்விதம் யாகம் முதலிய கர்மாக்களால் எல்லா பூதங்களும் இந்த தேவதையை (பிரஜாபதியை)ப் பூஜித்துக் காப்பாற்றுகின்றனவோ அவ்விதம் இந்தப்பிரகாரம் அறிந்த ஞானியை எல்லா பூதங்களும் காப்பாற்றுகின்றன.

(இப்படியறிந்தவன் எல்லோருடைய ஆத்மாகவும் ஆகிவிடு கிறுன் என்று சொல்லப்படின் எல்லோருக்குமுள்ள துக்கம் இவ னுக்கும் வந்துவிடுமே யென்று ஸந்தேஹம்வரின், அதற்கு இட மில்லை, துக்கம் இவனைத் தொடாது என்று சொல்லப்படுகிறது.) இந்தப் பிரஜைகளிடம் ஏதேனும் துக்கமிருப்பின் அஃது அவர்க ளிடம் இருக்குமேயன்றி இவனை (பிரம்மஞானியை) அணுகாது. தேவர்களைப் பாபம் சேருமா ? சேராது!

21. பிறகு உபாஸநா ஸங்கதி (இந்த வாக்கு, மனஸ், பிராணன் களை எவ்விதம் உபாஸிக்க வேண்டுமென்ற விஷயம்) சொல்லப் படுகிறது. வாக்கு முதலிய கரணங்களைக் கர்மாக்களைச் செய்யும் பொருட்டு பிரஜாபதி ஸ்ருஷ்டித்தனர். அவைகள் 'நான் பெரிது, நான் பெரிது' என்று சொல்லிக்கொண்டு ஒருவருக்கொருவர் விரோதமடைந்தார்கள். 'நான் பேசுகின்றதாக விருக்கிறேன் (மற்றக் காரணங்களால் கூடுமா வென்று)' வாக்கு குலாவிக் கொண்டது. அங்ஙனமே, 'நான் பார்க்கின்றவனுக விருக்கிறேன்' என்று சக்ஷுஸும், 'நான் கேட்கின்றவனுக விருக்கிறேன்' என்று சுரோத்திரமும், அவரவர்கட்குத் தக்கவாறு மற்றக்கரணங் களும் குலாவின. இவர்களை 'சிரமம்' என்ற மிருத்யு அடைந் தது. தத்தம் காரியங்களைச் செய்யவொட்டாமல் தடுத்துவிட் டது. ஆதலால், இப்பொழுதும் அதிகமாகப் பேசினுல் வாக்கு சிரமத்தை யடைகிறது; அவ்விதமே நேத்திரமும், சுரோத் திரமும். இந்த சிரமமிருத்யு முக்யப்ராணனை மட்டு மடைய வில்லை. அத்தகைய பிராணனை அறியும்பொருட்டு மற்ற கரணங்கள் மனஸ்வைத்தன (அறிந்தன). (எவ்வித மெனில்) 'இந்த முக்ய பிராணன் நம்முள் சிரேஷ்டனுக விருக்கிறது. ஸஞ்சரித்தும், ஸஞ்சரிக்காமலும், குறைவன்றி யும், நாசமில்லாமலு மிருக்கின்றது. நாம் எல்லோரும் அதன் ஆத்மாவாக விருக்கின்ருேம்' என்று எண்ணிக்கொண்டு அந்தப் பிராணனுடைய ரூபமாகவே ஆகிவிட்டன. ஆதலால், வாகாதிகள் பிராணன்கள் என்று அழைக்கப்படுகின்றன. இவ் விதம் அறிந்தவன் எக்குலத்திலுள்ளவனே அக்குலத்தை இவன் பெயரால் சொல்லுகிருர்கள். இவ்விதம் அறிந்தவனுடன் எவராகிலும் விரோதம் கொண்டால் அவன் சரீரம் வர வர

சோஷித்துப்போய், கடையில் (கஷ்டப்பட்டு) இறப்பான். இஃது அத்யாத்மம் (ஆத்ம ஸம்பந்தமான விஷயம்).

22. இனி அதிதைவதம் சொல்லப்படும். தேவர்கள் ஒருவருக்கொருவர் விரோத மடைந்தார்கள். எவ்விதமெனில் 'நான் ஜ்வலிக்கிறேன்' என்று அக்நியும், 'நான் தபிக்கச் செய்கிறேன்' என்று ஸூரியனும், 'நான் விளங்குகின்றேன்' என்று சந்திரனும், மற்ற தேவர்கள் தங்களுக்குத் தகுந்தவாறும் சொல்லிக் கொண்டார்கள். வாகாதிகளுக்குள் பிராணன் எப்படி முக்கிய தேவதையோ, அப்படி அக்நியாதி தேவர்களுக்குள் வாயு முக்கிய தேவதை. மற்ற தேவதைகளெல்லாம் அஸ்தமயத்தை யடைகின்றார்கள். வாயு தேவதை அப்படி அடைவதில்லை. எப்பொழுதும் தன் வேலையை நடத்திக்கொண்டிருக்கின்றது.

23. இவ்விஷயத்தில் இந்த மந்திரம் இருக்கிறது. "எதினின்றும் ஸூரியன் உதயமாகின்றதோ, எதில் அஸ்தமயத்தை யடைகிறதோ, அந்த வாயுவையும், பிராணனையும் தேவர்கள் உபாஸித்து விரதம் அநுஷ்டித்தார்கள். இப்பவும் செய்கிறார்கள். இனியும் செய்வார்கள்".

ஆதலால், மற்றோரும் இந்த ஒரு விரதத்தைச் செய்ய வேண்டும். அஃதாவது, 'பிராணனம்', 'அபாநநம்', (அஃதாவது) வாயு விருத்தி (மூச்சை பிடித்து விட்டுச் செய்யும் யோகம்) செய்ய வேண்டும். அப்படிச் செய்யாவிடின் மிருத்யு நம்மிடம் வருமென்று பயந்து அங்ஙனம் செய்யவேண்டும். அப்படிச் செய்யின் அந்த வாயு பிராண தேவதையுடன் ஸாயுஜ்ய ஸாலோக பதவிகள் கிட்டும்.

---

## பிராம்மணம் 6.

1. (இந்த வியாகிருதமாக, அஃதாவது நாநாவிதமாக விகார மடைந்திருக்கிற ஜகத்தின் அவஸ்தை, நிலைமை, இவ்விதம் விகார மடையுமுன் எப்படி யிருந்ததெனில்) இம் மூன்றுகளாக விருந்தது. எவைகள் எனில் (i) நாம, (ii) ரூபம், (iii)

சர்ம (இவைகள்தான் இப்பொழுது காணப்படுகிற ஜகத்தாக வியாகிருதமாயின. இம் மூன்றும் ஆத்மாவன்று. அனாத்ம ஸ்வரூபங்களே.) இந்த நாமாக்களுக்கு வாக்கு சப்த ஸாமான்ய மென்று சொல்லப்பட்டது; இந்த வாக்கு நாமாக்களின் மூலமா யிருக்கின்றது. ஏனெனில், எல்லா நாமாக்களும் வாக்கினிட மிருந்து உண்டானவை. இந்த வாக்கு எல்லா நாமாக்களுக்கும் பொது (ஸாமான்யம்). ஏனெனில், எல்லா நாமாக்களுடனும் இது ஸமமாயிருக்கிறது. இந்த வாக்குத்தான் பிரம்மம் (ஆத்மா, ஆத்மாலயம்). ஏனெனில், இஃது எல்லா நாமாக்களையும் பரிக் கிறது (தாங்குகின்றது).

2. சக்ஷுஸ் ரூபங்களுக்கு மூலம் (ஆதாரம்). (முன் மந்திரத்தில் கூறியவாறு இந்த சக்ஷுஸுக்குத் தக்கபடி பொருள் படுத்தவும்).

3. கர்மாக்களுக்கு ஆத்மா (சரீரம்) ஆதாரம் (மூலம்). (முன் மந்திரம்போல் இதற்கு தகுந்தபடி பொருள்).

இம் மூன்றும் (நாம, ரூப, கர்மாக்கள் மூன்றும்) ஸத்தாகச் சேர்ந்து ஒன்றாக விருக்கின்றன. இந்தச் சரீரம் ஒன்றானது, இம்மூன்றில் இருக்கின்றது. அஃது அமிருதம். ஸத்யத்தால் மறைக்கப்பட்டிருக்கின்றது. அமிருதமென்றால் பிராணன். ஸத்யமென்றால் நாமாவும், ரூபமும்; இவ்விரண்டால் பிராணன் மறைக்கப்பட்டிருக்கிறது.

---

# இரண்டாம் அத்தியாயம்

## பிராம்மணம் 1.

1. கருவங்கொண்டவராயும், பேசுவதில் திறமையுள்ளவராயும், கார்க்கருடைய வம்சத்திலுள்ளவருமான பலாகி என்ற ஒருவர் இருந்தார். அஜாதசத்ருவென்று பெயருள்ள ஒரு காசி தேசத் தரசனைப்பார்த்து அவர் 'உனக்கு பிரம்ம வித்யையைக் குறித்துச் சொல்லுகிறேன்' என்று சொன்னார். அதற்கு ராஜா பதில் சொன்னதாவது :—"இந்த வார்த்தையைச் சொல்லியதற்காக உமக்கு ஆயிரம் பசுக்களைக் கொடுக்கிறோம். உலகத்தில் ஜனங்கள் கொடுக்க இச்சையுள்ளவனிடத்திலும், கேட்க இச்சையுள்ளவனிடத்திலும் சொல்லுகிறார்கள்". (அந்த கொடுப்பது முதலிய காரியம் என்னிடமும் உள்ளதென்று எண்ணி என்னிடம் சேர்ந்தீரே என்று.)

2. கார்க்கியர் (அடியில் வருமாறு) சொன்னார்:—"(நமக்கு வெளியில்) ஆதித்யனிடத்திலும், (நமக்குள்) சக்ஷுஸினிடத்திலும், ஒரே புருஷனாக சக்ஷுஸ்வழியாக ஹிருதயத்தில் பிரவேசித்தும், கர்த்தா போக்தா வென்று செல்லப்பட்டும் எவர் விளங்குகின்றாரோ அத்தேவதையை பிரம்மமென்று நான் உபாஸிக்கின்றேன்; அவரை நீரும் உபாஸிக்க".

அஜாதசத்ரு (இப்படிச் சொன்னவரை நோக்கி) சொல்லியதாவது:—'அப்படிச்சொல்லவேண்டாம்; அப்படிச் சொல்லவேண்டாம். (இது பிரம்ம மன்று; நீர் சொல்லிய தேவனுக்கு குணம் இருக்கின்றது.) எல்லா பூதங்களுக்கும் மேலாக, சிரஸாக, ராஜாவாக விருக்கிறார் என்றல்லவா அவரை நீர் உபாஸிப்பதாகச் சொல்லுகிறீர். (அது ஸகுணவஸ்துவன்றோ; அதை உபாஸித்தால் அதற்குத் தகுந்த பலன்தான் கிடைக்கும்.) அவ்விதம் உபாஸிப்பவன் எல்லா பூதங்களுக்கும் மேலானவனாக, சிரஸாக, ராஜாவாக விருப்பான். (இஃது எனக்குத் தெரிந்த விஷயமே; இன்னும் வேறு ஏதாவது நீர் அறிந்திருந்தால் அதைச் சொல்லும்.)'

3. (மேற்கண்டபடி இவ்வாக்கியத்திலும், பின்வரும் 14-வது மந்திரம் வரையில் ஒவ்வொருதேவதையை 'இது பிரம்மம், இது பிரம்மம்' என்று கார்க்கியர் சொல்ல, 'அதுவல்ல, அது வல்ல' வென்றும், ஒவ்வொன்றிற்கும் குணம் இன்னதென்றும், உபாஸிப்பவனுக்குப் பலன் இவ்வளவென்றும் அஜாதசத்ரு பதில் சொல்லிக்கொண்டு வருகிறார். 2-வது மந்திரத்தில் சொல்லிய பிரகாரம் இருவருக்கும் ஸம்வாதம்; பின்வரும் மந்திரங்களில், ஒவ்வொன்றிலும் தேவதை, குணம், பலன் இவைகள்மட்டும் வேருகச் சொல்லப்படவேண்டியது. அதற்கு அதற்குத் தக்கவாறு ஸம்வாதத்தைப் பூர்த்திசெய்து கொள்ளவேண்டியது.) தேவதை—சந்திரனிடத்திலும், மனஸினிடத்திலும் இருக்கிற புருஷன்; குணம்—பெரிதான சுக்ல வஸ்திரத்தை யுடையவன்; அப்சரீர்; ஸோம ராஜா. பலன்—ஸோமலதை பிழியப்படுகிறது (அஃதாவது, யக்ஞம் செய்யப்படுகிறது); விகாரப்படும் அன்னங்களெல்லாம் விருத்தியாகும். அவனுக்கிருக்கும் அன்னம் குறைவடையாது.

4. தேவதை—வித்யுத்திலும் (மின்னல்), த்வக் ஹிருதயத்திலும் இருக்கிற புருஷன்; குணம்—தேஜஸ்வீ; பலன்—இவன் தேஜஸ்வியாகவும், இவனுடைய பிரஜைகள் தேஜஸ்விகளாகவுமிருப்பார்கள்.

5. தேவதை—ஆகாசத்திலும், ஹிருதயாகாசத்திலு மிருக்கிற புருஷன்; குணம்—பூர்ணமாகவும், குறைவு அன்றியுமிருப்பது; பலன்—புத்திர பசுக்கள் நிறைந்திருப்பான்; பிரஜைகட்குப் பூர்ண ஆயுளுண்டு.

6. தேவதை—வாயுவினிடமும், பிராணனிடத்திலும் இருக்கிற புருஷன்; குணம்—பரமேசுவரன் (உயர்ந்தவன்); நரர்களால் எதிர்க்கப்படகூடாதவன்; பிறரால் ஜயிக்கக்கூடாத ஸேனையை (மருத்கணங்களை) யுடையவன். பலன்—ஜயசீலன்; சத்ருக்களை ஜயிக்கிறவன்; சத்ருக்களால் ஜயிக்கப்படாதவன்.

7. தேவதை—அக்நியிடமும், சித் ஹிருதயத்தினிடமும் (ஞானம்) இருக்கிற புருஷன்; குணம்—பொறுமை; பலன்—இவனும் இவனது பிரஜையும் சாந்தமுள்ளவர்களாக விருப்பார்கள்.

8. தேவதை — ஜலத்தினிடமும், ரேதஸினிடத்திலும் இருக்கிற புருஷன்; குணம்—பிரதிரூபம் கொடுக்கிறது; பலன்—பிரதிரூபத்தை யடைகிறான்; தனக்குப் பிரதிரூபமான பிரஜையை உண்டாக்குகிறான்.

9. தேவதை—கண்ணாடியிலும் (பிரதிபிம்பம் காட்டுகின்ற வஸ்து) ஸ்வச்சமான ஹிருதயத்திலும் இருக்கிற புருஷன்; குணம்—பிரகாசம்; பலன்—இவனும், இவனுடைய பிரஜைகளும் பிரகாசமுள்ளவர்களாக விருப்பார்கள்; தன்னைச் சேர்ந்தவர்களுக்கெல்லாம் மேலாக விருப்பான்.

10. தேவதை—சென்ற எதைச் சப்தமும் பின் தொடர்கிறதோ அது, பிராணன்; ஜீவன்; குணம்—ஜீவன ஹேதுத்துவம்; பலன்—பூர்ண ஆயுள்; அகாலமிருத்யு இவனைப் பின்தொடராது.

11. தேவதை-திக்கிலும், சுரோத்திரங்களிலும் இருக்கிற புருஷன் (அசுவினி தேவதைகள்); குணம்—இரட்டையாகவும், பிரியாமலிருக்கையும்; பலன்—இரண்டாவதை யுடையவனாக விருப்பான்; இவனுடைய கூட்டம் குறைவடையாது.

12. தேவதை—சாயா புருஷன், அக்ஞான தேவதை; குணம்—மிருத்யு; பலன்—பூர்ணாயுள்; அகால மிருத்யுவில்லை.

13. தேவதை—பிரஜாபதி ஆத்மா, புத்தி ஆத்மா; குணம்—ஆத்மத்வம்; பலன்—இவனும் இவனுடைய பிரஜையும் ஆத்மாவாகவும், பாஹுல்யமுள்ளவர்களாகவும் இருப்பார்கள்.

இதைக்கேட்டு கார்க்கியர் ஒன்றும் பேசாமல் இருந்தார்.

14. இவ்வளவுதானோ என்று அஜாதசத்ரு கேட்டார்; இவ்வளவுதான் என்று கார்க்கியர் சொன்னார்; அஜாதசத்ரு சொல்லுகிறார்:—இதைக்கொண்டு எது அறியப்பட வேண்டியதோ அது அறியப்படமாட்டாது. கார்க்கியர் சொல்லுகிறார்:—இவ்வளவுதான் எனக்குத் தெரியும்; இனி நீர்தான் சொல்லவேண்டும்; உம்மிடம் வருகின்றேன்; நீர் குருவாகவிரும்; நான் சிஷ்யனாக விருக்கிறேன்.

15. அஜாதசத்ரு சொல்லுகிறார்:—'இப்படிச் சொல்லுவது விரோதம்; பிராம்மணன் குருவாக க்ஷத்திரியனையடைவது சரியன்று; நீர் குருவாகவே இரும்; நான் தமக்குத் தெரியப்படுத்திக் கொள்ளுகிறேன்'. இவ்விதம் சொல்லி கார்க்கியர் கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு இருவரும் ஓர் இடத்தில் தூங்கிக் கொண்டிருக்கும் ஒருவனிடம் சென்றார்கள். தூங்குபவனைப் பார்த்து அஜாதசத்ரு 'ஹே! பிரஹன், பாண்டரவாஸ, ஸோம, ராஜா' வென்று சொல்லிக் கூப்பிட்டார். அவன் எழுந்திருக்கவில்லை. பிறகு கையால் தேஹத்தில் தட்டி எழுப்பினார். அப்பொழுது எழுந்தான்.

16. அஜாதசத்ரு 'இந்த விஞ்ஞானமயனாகவிருக்கிற புருஷன் (தட்டி எழுப்பினவுடன் எங்கிருந்து வந்தெழுந்தானோ அப்புருஷன்) தட்டி எழுப்பப்படுவதற்குமுன், எக்காலத்தில் தூங்கிக் கொண்டு அல்லது தூங்குகிறவனைபோலிருந்தானோ அக்காலத்தில் எவ்விடமிருந்தான்? எவ்விடமிருந்து வந்தான் அல்லது வந்தவன்போல் தோன்றினான்? உமக்குத் தெரியுமா? வென்று கேட்டார். கார்க்கியர் தனக்குத் தெரியவில்லை யென்றார்.

17. அஜாதசத்ரு சொல்லுகிறார்:—இந்த விஞ்ஞானமயமான புருஷன் தூக்கத்தில் எவ்விடமிருந்தான் என்று கேட்டால், தன் சக்தியால் (விஞ்ஞானத்தால்) இந்த வாக்முதலிய தத்வங்களின் ஸாமர்த்தியத்தை கிரஹித்துத் தனது ஸ்தானமாகிய அந்தர்ஹிருதய ஆகாசத்தில் படுத்திருக்கிறான். அவைகளை எப்பொழுது கிரஹிக்கிறானோ அப்பொழுதுதான் இந்தப் புருஷன் தூங்குகிறான் என்று சொல்லப்படுகின்றது; அப்பொழுது, பிராணன் (கிராணேந்திரியம்) கிரஹிக்கப்படுகிறது; அவ்விதமே, வாக்கு, சக்ஷுஸ், சுரோத்திரம், மனஸ் இவைகளும் கிரஹிக்கப்படுகின்றன.

18. இந்தப்புருஷன் எப்பொழுது ஸ்வப்ன விருத்தியுடன் ஸஞ்சரிக்கிறானோ அப்பொழுது இந்த உலகங்கள் அவனுக்கு நிலைமைகள்; மஹாராஜனைப்போல் அல்லது மஹாபிராம்மணனைப் போலிருக்கிறான்; அல்லது, உயர்ந்த ஸ்திதியையும்(தேவாதிதசை)

தாழ்ந்த ஸ்திதியையும் (திர்யக்முதலியவற்றையும்) யடைகிருன். எவ்வாறு தன் பரிவாரங்களுடன் ஒரு மஹாராஜன் தன்னிஷ்டப்படி திரிகிருனே அதுபோல் (ஸ்வப்னகாலத்தில்) இந்தப் புருஷன் மேற்கூறிய தத்வங்களைக் கிரஹித்துக்கொண்டு தன் சரீரத்தில் தன்னிஷ்டப்படி திரிகிருன்.

19. எக்காலத்தில் ஒன்றையும் அறியாமலிருக்கிருனே, (அஃதாவது கரணங்களின் சேஷ்டையின்றி இருக்கின்றுனே) அப்பொழுதுதான் ஸுப்தன் என்று சொல்லப்படுகிருன்.

சரீரத்தில் ஹிதங்களென்ற பெயருள்ள எழுபத்திரண்டாயிரம் நாடிகள் (நரம்புகள்) இருக்கின்றன. புண்டரீக ஆகாரமுள்ளதாகவும், ஹிருதயமென்று பெயருள்ளதுமான ஒரு மாம்ஸ பிண்டத்தினின்று அந்நாடிகள் கிளம்பி (அரசிலை நரம்புகள்போல்) சரீரம் முழுவதும் பரவியிருக்கின்றன. (புத்தியென்ற அந்தக் கரணம் இருக்கின்ற ஸ்தானம்தான் மேற்கூறிய ஹிருதயம்.) இந்த புத்தியினிடத்தில் விக்ஞானமயனை புருஷன் இருக்கிருன் (அதிதிஷ்டதி). (அஃதாவது, புத்தியை வியாபித்துக்கொண்டிருக்கிருன். அஃதாவது, ஜலத்தில் சந்திரன் எவ்விதம் பிரதிபிம்பிக்கின்றுனே அவ்விதம் புத்தியில் பிரதிபிம்பித்துக்கொண்டு அந்த பிரதிபிம்பமூலமாக புத்திக்கு சக்தியை கொடுத்துக்கொண்டுதான் தனிப்பட்டு நின்றிருக்கிருர்.) அந்த புத்தியினுல் மற்றுமுள்ள சுரோத்திராதி கரணங்கள் ஏவப்படுகின்றன. (அஃதாவது, ஜாக்ரத்காலத்தில் மேற்படி நாடிகளின் வழியாக, மீன்வலையைப் போல், புத்தி பரவுகிறது; அப்பொழுது கரணங்களுக்கு சக்தி யுண்டாகின்றது; தப்தலோஹத்தில் அக்நி எங்கும் நிறைந்திருப்பதுபோல் புத்தி சரீரமுழுவதும் பரவி நிற்கின்றது. அந்த வலை இழுக்கப்படுகிறது; அப்பொழுது எல்லாக் கரணங்களும் வேலையொழிந்து, சக்தியற்றுப்போய் இருக்கின்றன.) அப்பொழுது இந்தப் புருஷன், ஒரு பாலனைப்போலாவது, மஹாபிராம்மணனைப்போலாவது, (அல்லது) மஹாராஜனைப்போலாவது கவலையின்றி, காரியமில்லாமல், அத்யந்த ஸந்தோஷத்தையநுபவித்துக்கொண்டு ஸுகமாகவிருக்கிருன். இதுதான் தூங்குகிறது என்று சொல்லப்படுகிறது.

20. ஊர்ணநாபி என்ற பட்டுப்பூச்சி எப்படி நூலைத் தன்னிடத்தினின்றும் கிளப்பிவிட்டுப் பிறகு தானே அதை இழுத்துக் கொள்ளுகிறதோ அதைப்போலும், அக்நியிடமிருந்து சிறு பொரிகள் எப்படி கிளம்புகின்றனவோ அதைப்போலும் இந்த ஆத்மாவிடமிருந்து தத்வங்கள் எல்லாம், உலகங்கள், தேவர்கள், பூதங்கள் எல்லாம் கிளம்பின (உண்டாயின). இந்த ஆத்மாவைக்குறித்த உபநிஷத்வாக்கியம் ஸத்யத்திற்கெல்லாம் ஸத்யமாயிருக்கிறது. பிராணன் ஸத்யம்; அதைவிட இது (ஆத்மாஸத்யம்.) (பிரம்மத்திற்கு வேறாக ஸம்ஸாரி என்று பெயருள்ள யாதொரு வஸ்துவும் இல்லை. அந்த பிரம்மமே ஒரு தசையில் அஸம்ஸாரி; மற்றொரு தசையில் ஸம்ஸாரி. இந்த ஜகத் எதினின்றும் உண்டாயிற்றோ, எதன் மயமாயிருக்கிறதோ, எதனிடம் லயிக்கின்றதோ, அதுதான் பிரம்மம். ஜகத் பஞ்சபூதாத்மகமாயிருக்கிறது. பூதங்கள் நாம ரூபாத்மகங்கள். அவை ஸத்யமென்று சொல்லப்பட்டிருக்கின்றன. ஆதலால், பிரம்மம் அந்த ஸத்யத்திலும் ஸத்யமாயிருக்கிறது.)

---

## பிராமம்ணம் 2.

1. எவனொருவன் சிசுவை (மத்யம பிராணனை) ஸாதானமாகவும், ஸப்ரத்யாதானமாகவும், ஸஸ்தூணமாகவும், ஸதாமமாகவும் அறிகிறானோ அவன் ஏழு சத்ருக்களையும் ஜயிக்கிறான். (ஏழு சத்ருக்கள் என்றால், கண்கள் இரண்டு, காதுகள் இரண்டு, மூக்குத் துவாரங்கள் இரண்டு, வாய் ஒன்று ஆகிய ஏழு இந்திரயங்களினால் கிரஹிக்கப்படுகிற விஷயங்களைப்பற்றிய இச்சைகள். இவைகளை ஜயிக்கிறான், அஃதாவது, இந்திரியங்களைத் தன் ஸ்வாதீனப்படுத்திக்கொள்ளுகிறான்.) (சிசுவென்றால் மத்யம பிராணன், அஃதாவது எந்தபிராணன் சரீரமத்யத்தில் இருந்துகொண்டு ஐந்து விதமாக சரீரத்தை வியாபித்துக் கொண்டிருக்கிறதோ அது சிசு வென்று சொல்லப்படுகிறது; அது ஸாதானம், ஆதானத்துடன், இந்த சரீரத்துடன் கூடியிருக்கிறது; ஸப்ரத்யாதானம், சரீரத்தில் ஒவ்வொரு ப்ரதேசத்திலும் சேர்ந்திருக்கிறது; ஸ்ஸ்தூணம்,

பல முள்ளதாயிருக்கிறது ; ஸதாமம், அன்னமுள்ளதாயிருக்கிறது).

2. அதை (சிசுவாகிய பிராணனை) அநுஸரித்து ஏழு அக்ஷிதிகள் (குறைவற்றவை ; எப்பொழுது முள்ளவை; பிராணன் உள்ளவரையில் இருப்பவைகள்) (கண்களில்) இருக்கின்றன. (அவைகளாவன) நேத்திரத்தில் இருக்கிற சிவப்புக் கோடுகளின் வழியாய் ருத்ர தேவதையும், கண் ஜலத்தின் வழியாய் பர்ஜன்ய (வருண) தேவதையும், கண்ணின் பொம்மை விழிவழியாய் ஆதித்ய தேவதையும், கருப்பு விழிவழியாய் அக்நி தேவதையும், வெள்ளை விழிவழியாய் இந்திர தேவதையும், கீழ் இமைவழியாய் பிருதிவி தேவதையும், மேல் இமைவழியாய் ஆகாச தேவதையும் இந்தப்பிராணனை அநுஸரித்திருக்கின்றன. பிராணனை இவ்விதம் அறிந்தவனுக்கு அன்னம் குறைவில்லாமலிருக்கும்.

3. இந்த விஷயத்தில் ஒரு மந்திரம் இருக்கிறது. அஃது என்னவென்றால்—"சிரஸானது சமஸ் உருவமுடையது;(அஃதாவது, யக்ஞத்தில் உபயோகப்படும் மடக்கு என்ற பாத்திரம் கீழ் வாயும் மேல்தட்டுமுள்ளது, அஃதாவது தலைகீழாகக் கவிழ்த்த மடக்குபோல இருக்கின்றது.) அதில் நாநா ரூபமுள்ள யசஸ் (பிராணன்) வைக்கப்பட்டிருக்கிறது. அதனிடம் ஏழு ரிஷிகள் இருக்கிறார்கள் (ஸத்ய பதார்த்தங்கள், இந்திரியங்கள் இருக்கின்றன). ஸப்தராசியுடன் கூடிய வாக் எட்டாவது ரிஷியாக இருக்கிறது. (ஏழு ரிஷிகளும் அடுத்த மந்திரத்தில் சொல்லப்படுவார்கள்.)

4. வலது காது, கௌதமர் ; இடது காது, பரத்துவாஜர்; வலது கண், விச்வாமித்ரர்; இடதுகண், ஜமதக்நி; வலது மூக்கு, வஸிஷ்டர்; இடது மூக்கு, கசியபர் ; வாக்கு, அத்ரி; வாக் தின்பதால் அத்ரி என்று சொல்லப்படுகிறது. இப்படியறிந்தவனுக்கு எல்லாம் அன்னமாக விருக்கும் (அஃதாவது எல்லாவற்றையும் புஜிப்பான்).

---

### பிராம்மணம் 3.

1. பிரம்மத்தினுடைய ரூபங்கள் இரண்டு இருக்கின்றன.
(ஒன்று) மூர்த்தம் (உருப்படியுள்ளது);
மர்த்யம் (நாசமுள்ளது);
ஸ்திதம் (தங்குதலுள்ளது;
அளவுக்கடங்கியது);
ஸத் (பிரத்யக்ஷமானது;
கண்ணுக்குத் தெரியக்கூடியது);

(இரண்டாவது) அமூர்த்தம் (உருப்படி இல்லாதது);
அமிருதம் (நாசமற்றது);
யத் (எப்பொழுதும் கதியுள்ளது;
அளக்கப்படக்கூடாதது);
த்யத் (அபரோக்ஷமானது;
கண்ணுக்குத் தெரியக்கூடாதது).

2. பஞ்சபூதங்களுக்குள் பிருதிவி, ஜலம், அக்நி இம்மூன்றும் முதல் வகுப்பில் உள்ளன (அஃதாவது, மூர்த்தம் ஆவில் உள்ளன.) இவைகளுக்குள் ஸூரியன் ஸாரமாயிருக்கிறது.

3. வாயுவும், ஆகாசமும் இரண்டாவது வகுப்பில் உள்ளன (அஃதாவது, அமூர்த்தம் ஆவில் உள்ளன.) இவைகளுக்குள் மேற்படி ஸூரியனிடமிருக்கிற புருஷன் ரஸமாயிருக்கிறுன். இஃது அதிதைவத விஷயம்.

4. அத்யாத்ம விஷயம் (சொல்லப்படுகிறது). சரீரத்திலுள்ள பஞ்சபூத அம்சங்களில் பிருதிவி, ஜலம், அக்நி இம்மூன்றின் அம்சமுள்ளது எதுவோ அது முதல்வகுப்பைச் சேர்ந்தது. இவைகளுக்குள் நேத்திரம் ரஸமாயிருக்கிறது.

5. சரீரத்திற்குள்ளிருக்கும் பிராண வாயுவும், ஆகாசவெளியும் இரண்டாவது வகுப்பைச் சேர்ந்தன. இவைகளுக்குள் வலது கண்ணிலிருக்கிற புருஷன் ரஸமாயிருக்கிறது.

6. இந்தப்புருஷனுடைய,ரூபம் (ஸூரியமண்டலஸ்த புருஷனுடைய, அக்ஷி புருஷனுடைய, லிங்காத்மாவினுடைய, ஹிரண்ய

கர்பனுடைய. அவ்யாகிருதத்திலிருந்து வந்த புருஷனுடைய, ஸகுண பிரம்மத்தினுடைய ரூபம்) எதுவெனில், வாஸநா ரூபமாயிருக்கிறது. (அநாதியாயும், அகாரணமுள்ளதாயு மிருக்கிற ஸ்வபாவம் என்பது வாஸனை.) உலகத்தில் வாஸனா ரூபத்திற்குத் திருஷ்டாந்தங்கள் எவையெனில், மஞ்சள் வஸ்திரம், வெளுப்புக் கம்பளி, பட்டுப்பூச்சி, அக்நியின் காந்தி, வெள்ளைத் தாமரை, மின்னல் இவைகளைப்போல் (ஸ்வபாவமுள்ளன). இவைகளில் உள்ள வர்ணங்களும், காந்திகளும் ஸ்வபாவத்தில் உண்டானவை; விசித்திரமானவை; இவ்விதமாக, பலவிதமாகவும், விசித்திரமாகவும், பல பதார்த்தங்களை ஒட்டியிருப்பதுமான ஸ்வபாவ குணம் என்பதே ஸகுண பிரம்மத்தின் ரூபமாயிருப்பது. நிர்குணபிரம்மமே இந்தப்பிரகாரம் ஸகுணப்பட்டது; இரண்டும் ஒன்றே, வெவ்வேறு அல்ல; தசைமாத்திரம் வேறு; தசைக்குத்தக்க பெயர் மாத்திரம்தான் உண்டு. ஒரு தடவை மின்னல் பிரகாசித்தால் எல்லாம் பிரகாசமாய்த் தெரிகின்றன ; இப்படிப்போல் ஸ்வபாவமுள்ளது. மேற்படி பிரம்மத்தை இவ்விதம் அறிந்தவனுக்கு ஸ்ரீ (கியாதி) யுண்டு. அந்த பிரம்மத்திற்கு ஆதேசம் (குறிப்பு, அடையாளம், குறித்துக்காட்டுதல் எதுவென்றால்) 'நேதி, நேதி' (என்றது.) (அதுவுமில்லை, இதுவுமில்லை என்றது; அஃதாவது குறிப்பிட அடையாளமில்லை). இந்த 'நேதி, நேதி' என்ற அடையாளத்தைக்காட்டிலும் வேறு ஆதேசம் ஒன்றுமில்லை. அதற்குப் பெயர் என்னவெனில், 'ஸத்யஸ்ய ஸத்யம்' (ஸத்யத்திற்கெல்லாம் ஸத்யம்). பிராணன்கள் ஸத்யமாயிருக்கின்றன. பிரம்மம், இவைகளைக்காட்டிலும் ஸத்யமாயிருக்கிறது (அஃதாவது, அத்யந்த ஸத்யம், பிராணனைக்காட்டிலும் உயர்ந்தது).

---

## பிராம்மணம் 4.

(ஸம்ஸாரம் அவித்யா விஷயமாயிருக்கிறது; அதற்கு கர்மா அங்கமாயிருக்கிறது; பிரத்யக் ஆத்மா (பிரம்மஞானம்) வித்யா விஷயமாயிருக்கிறது ; அதற்கு ஸந்யாஸம் அங்கமாயிருக்கிறது ; (ஸந்யாஸமென்றால் எல்லாக் கர்மாக்களையும் விட்டுவிடுதல்).

அந்த ஸந்யாஸ விஷயம் ஒரு கதை ரூபமாக இந்தப் பிராம்மணத்தில் சொல்லப்படுகிறது.)

1. யாக்ஞ்யவல்க்யர் என்பவர் தன் பார்யையாகிய மைத்ரேயி என்பவளைப் பார்த்துச் சொன்னதாவது:—"அடியே! கேள்! நான் இந்தகிருஹஸ்த ஆச்ரமத்தில் நின்றும் உயர்ந்த ஆச்ரமத்திற்குப்போக இச்சிக்கிறேன். ஆதலால், நான் உன்னையும், மற்றொரு பார்யையாகிற இந்த காத்யாயனி என்பவளையும் பிரித்து வைக்கிறேன் (சொத்துக்களை உங்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்துத் தனிப்படுத்துகிறேன்)".

2. மைத்ரேயி பதில் சொன்னதாவது:—"ஹே ! ஸ்வாமி! வித்தத்தினால் பூர்ணமாயிருக்கப்பட்ட இந்த எல்லா பூமியும் எனக்கு இருந்தால் நான் எப்படி மிருதாவாக (மரணத்தையடைந்தவளாக) இருப்பேன்? (அஃதாவது, வித்தஸாதனமிருந்தால் நான் அதன் ஸாதனத்தினால் யாகாதிகர்மாக்களைச் செய்து ஏன் அமிருதத்வதத்தை அடையக்கூடாது? நீரோ அமிருதத்வத்தை யடையும் நிமித்தம் வித்தத்தை விடவேண்டுமென்றும் சொல்லுகிறீரே! அஃதென்ன?)"

யாக்ஞ்யவல்க்யர்:—"அப்படியல்ல; உபகரணங்கள் உள்ளவர்கள் ஜீவனம் செய்வதுபோல், உனக்குச் சொத்திருந்தால் நீயும் பிழைத்துக்கொண்டு ஸுகமாகவிருக்க வேண்டியதற்காக நான் சொன்னேன். வித்தஸாதனத்தினால் ஒரு பொழுதும் அமிருதத்வம் கிடைக்கமாட்டாது".

3. மைத்ரேயி—"அப்படியானால் எதனால் எனக்கு அமிருதத்வம் கிடைக்கமாட்டாதோ அதைக்கொண்டு நான் என்ன செய்யப்போகிறேன். ஆதலால் எனக்கு வித்தம் வேண்டியதில்லை. எதனால் அமிருதத்துவத்தை நான் அடையக்கூடுமோ அதை எனக்குச் சொல்லும்.

4. யாக்ஞ்யவல்க்யர்—"ஹே! பிரியே! நீ நல்ல வார்த்தை சொல்லுகிறாய். இங்கு வா; உட்காரு. நான் உனக்குச் சொல்லுகிறேன். சொல்லுவதைக் கவனமாய்க் கேள்.

5. பிரியே! ஒரு பத்னி தன் பதியின் பிரயோஜனத்திற்காகவா அவனிடம் பிரியமாக விருக்கிறாள்? அல்ல; தன் ஆத்ம பிரயோஜனத்திற்காகப் பிரியமாயிருக்கிறாள். அங்ஙனமே ஒரு பதி தன் பத்தினியிடத்தில்; ஒரு தகப்பன் தன் பிள்ளைகளிடத்தில்; அப்படியே ஒருவன் வித்தத்தினிடத்தில்; அப்படியே ஒருவன் பிராம்மணனிடத்தில்; அப்படியே ஒருவன் க்ஷத்திரியனிடத்தில்; அப்படியே ஒருவன் உலகத்தாரிடத்தில்; அப்படியே ஒருவன் தேவர்களிடத்தில்; அப்படியே ஒருவன் பூதங்களிடத்தில்; அப்படியே ஒருவன் எல்லாவற்றினிடத்திலும்; (இவ்விதமாக எல்லாம் தன் ஆத்மாவின்பொருட்டு நடக்கிறது; ஆதலால் ஆத்மாதான் பெரிது). அது (ஆத்மா) பார்க்கத்தக்கது; கேட்கத்தக்கது; நினைக்கத்தக்கது; தியானம் செய்யத்தக்கது; ஆத்மாவின் தர்சனம், சிரவணம், நினைப்பு, தியானம் இவைகளால் எல்லாம் அறியப்பட்டுப்போகும்.

6. (ஆத்மா அறியப்பட்டால் எல்லாம் அறியப்பட்டுப் போகும் என்பது குற்றமல்ல; ஆத்மாவிற்கு அந்யமாய் ஒன்றும் கிடையாது; எல்லாம் ஆத்மாவாகவே யிருக்கிறது.) ஒரு பிராம்மணனை யாதொருவன் தன் ஆத்மாவுக்கு வேறாக அறிகிறானோ அவனை பிராம்மணன் தள்ளிவிடுவான் (மதிக்கமாட்டான்; ஒத்தாசை செய்யமாட்டான்; தன்னைச் சரியாக அறியவில்லை யென்று பிரஸாதம் செய்யமாட்டான்). அப்படியே க்ஷத்திரியன், உலகங்கள், தேவர்கள், பூதங்கள், எல்லாம்—இவைகளை யாதொருவன் தன்னாத்மாவுக்கு (பிரம்மத்திற்கு) வேறாக அறிகிறானோ அவனை இவைகள் அலக்ஷியம் செய்துவிடுவார்கள். ஆதலால் இவைகளெல்லாம் ஆத்மாவே.

7. (எல்லாம் ஆத்மா வென்று எப்படி கிரஹிக்க கூடுமெனில், அதற்குத் திருஷ்டாந்தங்கள் சொல்லப்படுகின்றன.) (ஒரு திருஷ்டாந்தமாவது) எப்படி ஒரு பெரிய பேரீவாத்ய சப்தம் வெளிப்பட்ட இதர சப்தங்களைக் கேட்க வொட்டாமல், தனக்குள்ளடக்கிக்கொண்டு, தான்மாத்திரம் மேல்கொண்டு கேட்கப்படுகிறதோ; பேரீசப்தத்தில் அல்லது பேரியின் அடியில் இதர சப்தங்கள் உள்ளடங்கிப் போகின்றனவோ (அப்ப

டிப்போல் ஸ்வப்ந ஜாக்ரத் தசைகளில் பிரக்ஞாநத்தைக்காட்டிலும் வேறொன்றுமில்லை; அதுவே மேல்கொண்டு இருக்கிறது; அஃதாவது, இஃது இல்லாவிடில் மற்ற இந்திரியங்களுக்காவது, அவயவங்களுக்காவது தொழில் இல்லை. இதுவே எல்லாமாகவிருக்கிறது).

8. (இங்ஙனமே வேறு திருஷ்டாந்தம், சங்கு சப்தம்.) சங்குசப்தவிஷயத்தில் இதர சப்தங்கள் அடங்கிப் போகின்றன.

9. (இங்ஙனமே வீணாவாத்யசப்தம்). வீணாவாத்யசப்தத்திலும் வீணையின் உயர்ந்து பேசுகிற ஓத்து ஸ்வரம் மற்றுமுள்ள சிறிய ஸ்வரங்களை உள்ளடக்கிக் கொள்ளுகின்றது.

10. (எப்படி அக்நியிலிருந்து பொரி, புகை, தணல், ஜ்வாலை என்ற பெயருள்ளவைகளாகக் கிளம்புகின்றனவோ; இவைகள் வெளிக் கிளம்புமுன் அக்நி ஒன்றாகவே இருக்கிறதோ, அப்படிப் போல் ஏகமாயும், பிரக்ஞானகனமாயுமிருக்கிற பிரம்மத்தினிடமிருந்து நாம ரூப விகிருதமாயிருக்கிற ஜகத்தானது உண்டாகிறது என்பதைப்பற்றிச் சொல்லப்படுகிறது.)

மூட்டப்பட்ட ஈர விறகுள்ள அக்நியிடமிருந்து பலவிதமான புகைகள் எப்படி வெளிப்படுகின்றனவோ அப்படி இந்த மஹாபூதமாகிய பரமாத்மாவினிடமிருந்தும் மூச்சுக்காற்றுப் போல் (அஃதாவது, யாதொரு பிரயத்னமின்றி, தனக்குத்தானே சுவாஸம் வருவதுபோல்) நான்கு வேதங்களும், இதிஹாஸமும், புராணங்களும், வித்யையும், உபநிஷத்துக்களும், சுலோகங்களும், மந்திரங்களும், வியாக்யானங்களும் வெளிக்கிளம்பின. இவைகள் அவருடைய சுவாஸங்கள்.

11. (அந்த பிரக்ஞானகனமாகிய பிரம்மத்திற்கு வேறாக ஒன்றுமில்லை; ஆதலால் ஜகத்தும் பிரம்மமயந்தானென்பது மேற்கண்டபடி உத்பத்தி ஸ்திதி காலங்களில் மட்டுந்தான் தெரியுமென்று சொல்லக்கூடாது, பிரளயகாலத்திற்கூட அப்படியே என்று சொல்லப்படுகிறது.)

நதிகள், வாபீ, கூபம், தடாகம் முதலிய ஜலங்களுக்கெல்லாம் எப்படி ஸமுத்ரம் ஒன்றே இருப்பிடமோ (அஃதாவது, இந்த ஜலங்களெல்லாம் ஸமுத்திரத்தில் சேர்ந்து, தங்கள் நாமரூபங்களை விட்டுப் பிரிவுபடாமல் கலந்து ஒன்றாகிவிடுகின்றனவோ); எல்லா ஸ்பர்சங்களுக்கு த்வக்கும், எல்லா ரஸங்களுக்கு நாக்கும், எல்லா கந்தங்களுக்கு மூக்கும், எல்லா ரூபங்களுக்கு நேத்திரமும், எல்லா சப்தங்களுக்குக் காதுகளும், எல்லா ஸங்கல்பங்களுக்கு மனஸும், எல்லா வித்தைகளுக்கு ஹிருதயமும், எல்லா கர்மாக்களுக்குக் கைகளும், எல்லா ஆனந்தங்களுக்கு உபஸ்தமும், எல்லா விஸர்கங்களுக்குப் பாயுவும், எல்லா மார்க்கங்களுக்குக் கால்களும், எல்லா வேதங்களுக்கு வாக்கும் எப்படி இருப்பிடமாயிருக்கின்றனவோ; (அஃதாவது, அந்த அந்த தத்வமில்லாவிடில் அதன் விஷயங்கள் எவ்விதம் கிரஹிக்க முடியாதோ, அப்படிப் போல் இந்த நாம ரூப ஆத்மகமாயிருக்கிற ஜகத் பிரளயகாலத்தில் அந்த பிரக்ஞானகனமாகிய பிரம்மத்துடன் சேர்ந்து ஒன்றாகப் போகிறது; ஆதலால் ஜகத்திற்கு இருப்பிடம் பிரம்மமே.)

12. (இந்த ஸங்கதியைக் குறித்து இன்னும் விசேஷமாகச் சொல்லப்படுகிறது.)

எப்படி ஜலத்தில் போடப்பட்ட உப்புக்கட்டியானது ஜலமாகவே ஆகிவிடுகிறதோ; அதை மறுபடியும் ஜலத்திலிருந்து உப்பாக எடுக்க எப்படி முடியவில்லையோ; அந்த ஜலத்தில் எந்த எந்த விடத்திலிருந்து எடுத்து ருசி பார்த்தாலும் அவையெல்லாம் எப்படி உப்பாகவே இருக்கிறதோ, அப்படிப்போல், ஏ! மைத்ரேயீ! கேள்! மஹத் பூதமாயும் அனந்தமாயும், அபாரமாயும், விக்ஞானகனமாயுமிருக்கிற (திருஷ்டாந்தத்தில் ஜலஸ்தானீயமாகிய) பிரம்மத்தினிடத்தில், (உப்புக்கட்டி ஸ்தானீயமாகிற) இந்த ஜகத் லயத்தை யடைகிறது. மேலும், இந்த ஸத்யவாச்யங்களாயிருக்கிற பஞ்சபூதங்களிடமிருந்து எல்லாம் உண்டாகி அதிலேயே லயிக்கின்றன; அதை யடைந்த பிறகு தன் தன் நாமரூபம் போய்விடுகிறது.

இவ்வாறு யாக்ஞயவல்கியர் மைத்ரேயிக்குச் சொன்னார்.

13. இதற்கு மைத்ரேயீ சொல்லுவது :—'அந்த பிரம்மத்தை பிரக்ஞானகனமென்று ஒரு பெயர் வைத்துச் சொன்னீர்கள்; அதைப்போய் அடைந்தால், பெயர் இல்லாமற் போய்விடும் என்றும் சொன்னீர்கள்; இவைகள் ஒன்றற்கொன்று விரோதமாகவிருக்கின்றனவே ; (எப்படி அக்நி, உஷ்ணமாகவும் சீதமாகவுமிருக்கும்); இந்த விஷயத்தில் எனக்கு (சரியாக)த் தெரியாமவிருக்கிறது; அதை தெரியவைக்கவேண்டும்.

யாக்ஞ்யவல்கியர் நான் தெரியாத ஸங்கதியை உனக்குச் சொல்லவில்லையே ; நான் சொல்லியிருப்பது விக்ஞானத்துக்குப் போதுமே.

(நான் சொல்லியது யாதெனில், அவித்யாஸம்பந்தமான பேதக்கொள்கை யற்றுப்போய் விட்டால், அப்பொழுது, அதற்கு நிமித்தமாயிருக்கிற பெயர் விசேஷம் நசித்துப்போகும். எப்படியெனில், ஜல உபாதியால் தோன்றுகிற சந்திரபிரதிபிம்பம் அந்த உபாதி நீங்கியவுடன் பிரதிபிம்பம் போய்விடுகிறதோ, அப்பொழுது பிரதிபிம்பம் என்ற பெயருக்கும் நாசம் வருகிறதோ, நிஜ சந்திரன்மட்டும் மிஞ்சுகிறதோ ; அப்படிப்போல், அவித்யாஜனிதபேதக் கொள்கையாகிய உபாதி போய்விட்டால் ஜகத்தும், பெயரும் நாசமடைந்து, அந்த பிரக்ஞானகனம் ஒன்முக மிஞ்சும், என்று நான் சொன்னதற்கு தாத்பரியம்.)

14. எந்தக் காரணத்தால் (எந்த பேதபாவமிருந்தால், அத்வைதமாயிருக்கிற பிரம்மத்தினிடத்தில்) த்வைதம் (அது வேறு, இது வேறு என்ற பாவம்) ஒருவனுக்கு உண்டாகிறதோ, அக்காரணத்தால் (அந்த பேதபாவமிருந்தால், அல்லது இருக்கும் வரையில்) இதரன் (அந்யன், ஆத்மாவுக்கு வேருக விருப்பவன்) இதர வஸ்துவைப் பார்க்கிருன், கேட்கிருன், முகருகிருன், பேசுகிருன், நினைக்கிருன், அறிகிருன் என்று ஏற்படுகிறது ; அவனுக்கு எல்லாம் ஆத்மாவாகத் தோன்றி, அத்வைதஞானம் உண்டாளுல், அப்பொழுது எவன், எதைக்கொண்டு, எவற்றைப்பார்க்கிருன், கேட்கிருன், முகருகிருன், பேசுகிருன், நினைக்கிருன், அறிகிருன் (அஃதாவது, பார்க்கிறவனும் வேறில்லை; பார்க்கப்படும் வஸ்துவும் வேறில்லை; எதளுல் பார்க்கப்படுகிறதோ அந்தக்

கரணமும் வேறில்லை ; எல்லாம் ஒன்ருகப் போகின்றது. அப்பொழுது நாமரூபங்களுக்கு நாசம் வருகிறது).

எந்தக் காரணத்தைக்கொண்டு ஒருவன் இவை எல்லாவற்றையும் அறிகிருனே, அதை எதனல் அறிகிறது. ஹே! (மைத்ரேயி), அறிபவனை எதனல் அறிவது (அதைக் கொண்டுதான் பார்க்கவேண்டும் ; வேறு ஒன்றைக் கொண்டுமல்ல ; எல்லாம் ஒன்றுதான்).

---

## பிராம்மணம் 5.

(அமிருதத்துவத்திற்கு ஸாதனம் எது என்று மைத்ரேயியால் கேட்கப்பட்டது. அது ஸந்யாஸாங்க விஷயமாயிருக்கிற ஆத்மஞானம். ஆத்மா அறியப்பட்டால் எல்லாம் அறியப்பட்டுப் போகிறது. ஆத்மா எல்லாவற்றைவிட பிரியவஸ்து ஆதலால், ஆத்மா பார்க்கத்தக்கது, கேட்கத்தக்கது, அறியத்தக்கது. இவையெல்லாம் ஆத்மாவே யென்று சொல்லப்பட்டது.

இதற்கு ஹேது வசனம் என்னவெனில்—எல்லாம் ஆத்மாவிட மிருந்து உண்டாகின்றன; அதனல் இருக்கின்றன ; அதில் லயமடைகின்றன—என்பது. இது சரிதானு வென்று ஸந்தேஹம் நிகழ அதை நிவிருத்திசெய்ய இந்த பிராம்மணம் தொடங்கப்படுகிறது. எதனல் பிருதிவிமுதலிய இந்த ஜகத் வஸ்துக்கள் பரஸ்பரம், ஒன்றற்கொன்று உபகார்ய உபகாரக பூதங்களாக விருக்கின்றனவோ ; உலகத்தில் எது எது ஒன்றற்கொன்று உபகார்ய உபகாரகமா யிருக்கின்றனவோ, அவைகள், ஒரே காரணத்திலிருந்து உண்டாகியும் ஒரே காரணத்துடனிருந்தும், ஒரே காரணத்தில் லயமடைகிறதாயும் காணப்படுகின்றனவோ, அக்காரணத்தால் பிருதிவ்யாதிலக்ஷணமுள்ள இந்த ஜகத் அவ்விதமே இருக்கக்கூடுமா யிருக்கிறது, என்று இந்த பிராம்மணத்தில் சொல்லப்படும்.)

1. இந்த பிருதிவி எல்லா பூதங்களுக்கும் (பிரம்மாதி ஸ்தம்பபரியந்தம்) மது (தேன்) ஒப்பந்தம் இருக்கிறது ; (அஃதா

வது, ஒரு தேன் அடையானது அநேக தேனீக்களால் நிறைவேற்றப்பட்டு இருப்பதுபோல, இந்த பூமி எல்லா பூதங்களாலும் நிறைவேற்றப்பட்டிருக்கிறது, நிர்வாஹம் செய்யப்பட்டிருக்கிறது). அப்படியே, எல்லா பூதங்களும் இந்த பிருதிவிக்கு மதுவாயிருக்கிறது; (தேனை ஈக்கள் சாப்பிடுவதுபோல் பூமியை ஸர்வ பூதங்களும் அநுபவிக்கின்றார்கள்). (இவைகள்மாத்திரம் அல்ல, மேலும்) இந்த பிருதிவியில் சிந்மாத்ரபிரகாசமயனும், அமிருதமயனும் இருக்கிற புருஷனும் (அஃதாவது, பூமியில் அந்தர்யாமியாயிருக்கிற ஆத்மா; இப்படி ஒரு வஸ்துவில்லாவிடில், ஜடமாயிருக்கிற பூமியில் எவ்விதம் விருக்ஷாதிகள் முளைக்கும்), அத்யாத்மமாய்த் தேஜோமயனும், அமிருதமயனுயு மிருக்கிற புருஷனும் (அஃதாவது, சரீரத்தை ஒட்டினதாக, சரீரத்திலிருக்கிற லிங்காபிமானியாயிருக்கிற ஜீவன்; அப்படி ஒரு வஸ்து வில்லாவிடில் சரீரம் எவ்வாறு நிலைபெறும்; இந்த ஜீவன் வெளியில் போனவுடன் ஜடசரீரம் அசைவற்றுச் சேஷ்டையில்லாமல் போய்விடுகிறதல்லவா), ஸர்வபூதங்களுக்கும் மதுவாக விருக்கின்றார்கள்; அப்படியே எல்லா பூதங்களும் மேற்படி புருஷர்களுக்கு மதுவாக விருக்கின்றன. (இவ்விதமாக இந்த நான்கும் ஒன்றற்கொன்று உபகார்ய உபகாரகங்களா யிருக்கின்றன; மேலும்,இந்த நான்கும் ஏகமாய், ஸர்வபூதகார்யமாயிருக்கின்றன; எல்லாபூதங்களும் இந்த ஏக வஸ்துவின் காரியமாய் இருக்கின்றன. எல்லாம் ஓரே காரணத்திலிருந்து உண்டானவை. பிரம்மத்தைத் தவிர மற்றவையெல்லாம் சொல்லுக்கு மாத்திரமே தவிர ஸத்யமல்ல). இஃது அமிருதம்,இது பிரம்மம், இது ஸர்வம் என்று சொல்லப்பட்டிருக்கிற ஆத்மா (மேற் சொல்லப்பட்ட வஸ்துதான்).

(இப்படியே இனி அடியில் மதுவிஷயமாய்ச் சொல்லப்படுவதற்கெல்லாம் தாத்பரியம் கொள்ளவேண்டியது.)

2. (பிருதிவி விஷயத்தில் சொல்லப்பட்டிருக்கிறபடி அடியிற்கண்டவைகளுக்கு வைத்துக்கொள்ள வேண்டியது விசேஷஸங்கதிகள் மாத்திரம் ஒவ்வொன்றிலும் குறிக்கப்படும்.)

இந்த ஜலம் எல்லா பூதங்களுக்கும் மதுவாக விருக்கிறது ; அத்யாத்மம், ரேதோரூபமாகச் சரீரத்திலிருக்கிற ஆத்மா.

3. இந்த அக்நி மதுவாக விருக்கிறது ; அத்யாத்மம், வாக்கு ரூபமாகச் சரீரத்திலிருக்கிற ஆத்மா.

4. இந்த வாயு மதுவாக விருக்கிறது ; அத்யாத்மம், பிராணரூபம்.

5. இந்த ஆத்தித்யன் மது ; அத்யாத்மம், அக்ஷிபுருஷ ரூபம்.

6. இந்த சந்திரன் மது ; அத்யாத்மம், சுரோத்திரத்தி லுள்ள புருஷன்.

7. இந்த சந்திரன் மது; அத்யாத்மம், மனோரூப புருஷன்.

8. இந்த மின்னல் மது ; அத்யாத்மம், தேஜஸ் ஸம்பந்த மாயிக்கிற த்வக்ரூப புருஷன்.

9. இந்த இடி மது ; அத்யாத்மம், சப்த ஸம்பந்தமாயிருக் கிற ஸ்வரரூப புருஷன்.

10. இந்த ஆகாசம் மது ; அத்யாத்மம், ஹிருதயாகாசரூப புருஷன்.

11. இந்த தர்மம் மது (தர்மமென்றால், அதிருஷ்ட பல ரூபமுள்ளதாயிருக்கிற கர்மா. இஃது இரண்டுவிதம். ஸாமான்யம் ஒன்று, விசேஷமுள்ளது இரண்டாவது; முதலாவது, பிருதிவி யாதியை நடத்துகிற ஸ்வபாவமுள்ளது ; இரண்டாவது காரிய காரண ஸங்காதமாகிய சரீரத்திற்குக் கர்த்தாவாக விருப்பது) ; அத்யாத்மம், மேற்படி காரிய காரண ஸங்காதத்திற்குக் கர்த்தா வாயிருக்கிற கர்மாவிலுள்ள (கர்மாவிற்குப் பலன் கொடுக்கிற) புருஷன்.

12. இந்த ஸத்யம் மது (ஸத்யமெனில், திருஷ்ட பல ரூப முள்ளதாயிருக்கிற கர்மா; தர்மம்போல் இதுவும் இரண்டுவிதம்); அத்யாத்மம், காரிய காரண ஸங்காத கர்த்தாவாகிய, ஸத்யத்தி லுள்ள புருஷன்.

13. (தர்மம், ஸத்யம் இவைகளுடன் சேர்ந்திருக்கிற) மனுஷ்யாதி ஜாதி மது; அத்யாத்மம், மனுஷ்யாதி யிடத்தி லிருக்கிற ஆத்மா.

14. இந்த ஆத்மா மது (காரிய காரண ஸங்காதமாகப் பரிணமித்தவனும், மனுஷ்யாதியாக ஆனவனும், பிரதயக் ஆத்மாவாயும், பரமாத்மாவாயும், ஸர்வாத்மாவாயும், அமூர்த்த பிரம்மாவாயும் இருப்பவர், மது); அத்யாத்மம், முன் சொல்லியதுபோல்.

15. அந்த ஆத்மாதான் இந்த ஆத்மா (ஜீவாத்மா); எல்லா பூதங்களுக்கும் அதிபதி, ராஜா. ஒரு வண்டிச் சக்கர நாபியில் (நேமியில்) ஆரங்கள் எப்படி கோக்கப்பட்டிருக்கின்றனவோ அப்படிப்போல இந்த ஆத்மாவிடம் எல்லா பூதங்களும் கோக்கப் பட்டிருக்கின்றன.

16-17. (இந்த இரண்டும் மது பிராம்மணத்தைப்பற்றிய மந்திரங்கள்; வேதத்தில் பிரவர்க்கிய பிரகரணத்தில் சொல்லப் பட்ட ஒரு கதையைப் பற்றியது; அச்வினீ தேவர்களும் தத்யஞ் என்ற அதர்வணர் சொல்லியது.)

இந்த மதுவித்தைதான் அதர்வண ததீசியால் அச்வினீகளுக்குச் சொல்லப்பட்டது. அச்வினீகள் செய்த (பின் கூறப் படும்) காரியத்தைப் பார்த்து வேதம் சொல்லுவதாவது:—ஹே! ஜனங்களே! உங்கள் ஸௌகரியத்திற்காகச் செய்யும் கெட்ட காரியங்களை, பர்ஜயன்யன் (மேகத்திலிருந்து) மழையைப்போல, வெளிப்படுத்துகிறேன். குதிரைமுகம் தரித்து அதர்வண ததீசியால் சொல்லப்பட்ட மதுவித்தை இதுதான். வேதம் மறுபடி சொல்லுவதாவது:—ஹே! அச்வினீகாள்! நீங்கள் அதர்வண ததீசியின் மேல் ஒரு குதிரைத் தலையை ஏற்படுத்தினீர்கள். தன் வாக்குப்படி அவர் இந்த ஆதித்ய மதுமையும், மதுவித்யையையும் சொன்னார். இது வெகு ரஹஸ்யமாய் இருக்கவேண்டியது.

18. இதுதான் அந்த மது; எதுவெனில், அச்வினீ தேவர்களுக்குத் தத்யஞ் சொல்லியது; எப்படிச் சொன்னாரெனில்—'எது ஆதியில் இரண்டுகால் நாலுகால் ஜீவன்களை உண்டு பண்ணியதோ, அதே, பக்ஷியாக, லிங்க சரீரமாக ஆகி அந்தச் சரீரங்களில்

பிரவேசம் செய்ததோ, அந்த வஸ்துவாகிய ஆத்மாவுக்குத்தான் புருஷன் என்று பெயர். (புரி-தேஹத்தில், சய:--இருக்கிறார்) இவரால் ஒன்றும் உள்ளே புகப்படாமல் இருக்கவில்லை; வெளியில் சூழப்படாமல் ஒன்றும் இருக்கவில்லை.

19. இதுதான் அந்த மது; எதுவெனில், அச்வினீ தேவர்களுக்கு தத்யஞ் சொல்லியது; எப்படிச் சொன்னார் எனில்—'எது ஒவ்வொரு ரூபத்திலும் அந்த ரூபமாகவே இருந்துகொண்டிருக்கிறதோ இந்த இவருடைய ரூபம் அவரைத் தெரிவிக்கும் பொருட்டு ஏற்பட்டிருக்கிறது. (அவர் நாம ரூபங்களாக ஆகாவிடில் நிருபாதிக ரூபமாயும், பிரக்ஞானகனமாயு மிருக்கிற அவர் எப்படி அறியப்படுவார்.)

அந்த பரமேசுவரானவர் தன் மாயைகளால் (பிரக்ஞைகளால்) வெகு விதமான ரூபங்களை அடைகிறார். ஒரு ரதத்தில் குதிரைகள் கட்டப்பட்டிருப்துபோல், அவரிடத்தில் அநேகமாயிருக்கிற இந்திரியங்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இந்த இந்திரியங்களாகிற குதிரைகள் யாவை யெனில், அவைகளும் இவரே (அஃதாவது இவரே இந்திரிய ரூபங்களாகவு மிருக்கிறார்). அவர்தான் பிரம்மம், ஆதியில்லாதவர், அந்தமில்லாதவர், இவரொருவரே ஒன்றுமில்லாத தன்மையுள்ளவர்; இவருக்கு வேறாக ஒன்றுமில்லை. அவர்தான் ஆத்மாவென்று சொல்லப்படும் பிரம்மம். எல்லா ஆத்மாவாகவும், எல்லாவற்றையும் அநுபவித்துக்கொண்டிருப்பவர்.

---

## பிராம்மணம் 6.

இதில் மது பிராம்மணத்தைப்பற்றிய குரு சிஷ்ய வம்சங்கள் சொல்லப்படுகின்றன. கடை குரு ஸ்வயம்பூ பிரம்மன், ஹிரண்யகர்பர்; (அஃதாவது, ஸகுண பிரம்மம்); இதற்குமேல் வம்சம் என்பது கிடையாது. அவருக்கு நமஸ்காரம் செய்கிறேன்.

---

# மூன்றும் அத்தியாயம்.

## பிராம்மணம் 1.

1. விதேஹதேச ராஜாவாகிய ஜனகர் வெகுதக்ஷிணையுள்ள ஒரு பெரிய யக்ஞம் செய்தார். அதற்காகக் குரு தேசத்திலிருந்தும், பாஞ்சால தேசத்திலிருந்தும் பெரியோர்களான அநேக பிராம்மணர்கள் வந்திருந்தார்கள். இவர்களுக்குள் எவர் உத்தமமான பிரம்மநிஷ்ட பிராம்மணன் என்று அறிந்துகொள்ள ஜனகர் விருப்பமுற்றார். (அதற்காக அடியிற்கண்ட ஓர் உபாயம் செய்தார். ஆயிரம் பசுக்களைக் கொண்டுவந்து, ஒவ்வொன்றின் கொம்புகளிலும், கொம்பு ஒன்றுக்கு, ஐந்து கால்பலம் தங்கம் கட்டி, ஒரு கொட்டகையில் கட்டிவைத்தார்.

2. பிறகு அந்தப் பிராம்மணர்களைப் பார்த்து ஜனகர் சொன்னதாவது—'ஹே! பெரியோர்களே! உங்களுக்குள் எவர் பிரம்ம நிஷ்டாரயிருக்கிறரோ அவர் இந்த கோக்களைக் கொண்டு போகட்டும்' என்று. அதற்கு ஒருவரும் தான் பிரம்மநிஷ்டனென்று சொல்லத் துணியவில்லை. இப்படியிருக்கையில் யாக்ஞ்யவல்க்யர், தன் சிஷ்யனுகிய ஒரு பிரம்மசாரியைக் கூப்பிட்டு, 'அடே! அப்பா! இந்த மாடுகளை வீட்டிற்கு ஓட்டிக்கொண்டுபோ' வென்றார். அந்தப்படியே அவன் செய்தான். 'நாமெல்லோருமிருக்கும்பொழுது யாக்ஞ்யவல்க்யர் மாத்திரம் எவ்விதம் தான் பிரம்மநிஷ்டனென்று சொல்லிக்கொள்ளலாம்' என்று மற்ற பிராம்மணர்களுக்குக் கோபம் உண்டாயிற்று. அந்த யக்ஞத்தில் ஹோதாவாயிருந்த அச்வலர் என்றவர் யாக்ஞ்யவல்க்யரை 'நம்மெல்லோருக்குள்ளும் நீர்தான் பிரம்மநிஷ்டனுயிருக்கிறீரோ' வென்று கேட்டார். யாக்ஞ்யவல்க்யர் பிரம்மநிஷ்டனின் பொருட்டு நாம் நமஸ்காரம் செய்வோம். நாம் எல்லோரும் கோகாமர்களா யிருக்கிறோம் (அங்ஙனமிருக்க பிரம்மநிஷ்டத்வம் எப்படி ஸித்திக்கும்) என்றார். இதற்கு அச்வலர் (பரீக்ஷையாக) அவரைக் கேட்கத் தொடங்கினர்.

3. அச்வலர்:—ஹே! யாக்ஞ்யவல்க்யரே! இந்த யாகவஸ்துக்க ளெல்லாம் மிருத்யுவினுல் (கர்மாவாகிய மிருத்தியுவால்) ஆப்தமா யும், வசீகிருதமாயும் இருக்கின்றனவே. எந்த ஸாதனத்தால் யஜ மானன் (யக்ஞம் செய்கிறவன்) அந்த மிருத்யுவைத் தாண்டு கிறுன் ? யாக்ஞ்யவல்க்யர்:—ஹோதாவாகிய அக்நியால், வாக்கால்; (ஆதிபௌதிக யக்ஞத்தில் ஹோதா அக்நி ; அத்யாத்ம யக்ஞத் தில் ஹோதா வாக்; யக்ஞத்தில் ஹோதாவை, அக்நி ஸ்வரூப மாகவும், வாக் ஸ்வரூபமாகவும் பாவித்து யக்ஞத்தை நடத்தினுல் மிருத்யுவைக் கடக்கலாம்.) வாக்குத்தான் ஹோதாவும், அக்நியு மாயிருக்கிறது. (இப்படி அபேதமா யறிந்துவிட்டால் அதுதான் முக்தி ; விடுதலை) ; அதுதான் அதிமுக்தி (மிருத்யுவைத்தாண்டின விடுதலை.)

4. அச்வலர்:—இவைகளெல்லாம் இராப்பகலாகிய காலத்தி னுல் (காலமென்ற மிருத்யுவால்) ஆப்தமாயும் (அளக்கப்பட்டும்) வசீகிருதமாயுமிருக்கின்றன. இந்தக் காலத்தை எதனுல் தாண்டு வது ? யாக்ஞயவல்க்யர்:—அத்வர்யுவாகிற ஆதித்யனுல், நேத்திரத் தால் (ஆதிபௌதிக யக்ஞத்தில் ஆதித்யன் அத்வர்யு ; அத்யாத் மத்தில் நேத்ரம் அத்வர்யு; இந்த பாவனையால் மிருத்யுவைக் கடக் கலாம்). (இப்படி அபேதமாய் யறிந்துவிட்டால்) அதுதான் முக்தி; அதுதான் அதிமுக்தி.

5. அச்வலர்:—பூர்வபக்ஷம், அபரபக்ஷமென்கிற காலத்தி னுல் ஆப்தமாயும் வசீகிருதமாயும் இருக்கிறதே, எதனுல் அந்தக் காலத்தைத் தாண்டுகிறது? யாக்ஞயவல்க்யர்:—உத்கா தாவென்கிற வாயுவால், பிராணனுல். (இதற்குத் தகுந்தபடி முன்போல் முக்தி, அதிமுக்தி.)

6. அச்வலர்:—அந்தரிக்ஷம் யாதொரு பிடிப்பில்லாமல் வெளியாக விருக்கிறதல்லவா! எவ்வழியால் யஜமானன் ஸ்வர்க் கத்திற்குப் போகிறுன் ? யாக்ஞயவல்க்யர்:—பிரம்மன் என்ற ருத்விக்காகிய சந்திரன், மனஸ் வழியாகப் போகிறுன். (இதற்குத் தக்கவாறு (முன்போல் முக்தி, அதிமுக்தி). இஃது அதிமோக்ஷ மென்றது. இனி ஸம்பத்துக்கள் சொல்லப்படும்.

7. அச்வலர்:—இந்த யக்ஞத்தில் எவ்வளவு ருக்குகளால் ஹோதா ஹோமம் செய்வான்? யாக்ஞயவல்க்யர்—மூன்று ருக்குகளால். அச்வலர்:—அவைகள் எவை? யாக்ஞயவல்க்யர்:—அநுவாக்யா; யாஜ்யா; சஸ்யா. அச்வலர்:—இவைகளால் எதை ஜயிக்கிறான்? யாக்ஞயவல்க்யர்:—எது எது பிராணனுள்ளவைகளோ அவைகளையெல்லாம் ஜயிக்கிறான்.

8. அச்வலர்:—இந்த யக்ஞத்தில் எவ்வளவு ஆஹுதிகளை அத்வர்யு செய்கிறான்? யாக்ஞயவல்க்யர்:—மூன்று. அச்வலர்:—அவைகள் எவை? யாக்ஞயவல்க்யர்:—ஜ்வலிப்பது; வெடிப்பது; பூமியில் கீழேபோவது. அச்வலர்:—எதை இவைகளால் ஜயிக்கிறான்? யாக்ஞயவல்க்யர்:—முதலாவதால் தேவலோகத்தையும், இரண்டாவதால் பிதிருலோகத்தையும், மூன்றாவதால் மனுஷ்ய லோகத்தையும் ஜயிக்கிறான்.

9. அச்வலர்:—இந்த யக்ஞத்தை எவ்வளவு தேவதைகளால் பிரம்மன் என்ற ருத்விக், தக்ஷிண திக்கிலிருந்துகொண்டு, ரக்ஷிக்கிறார்? யாக்யவல்க்யர்:—ஒரு தேவதையால். அச்வலர்:—அது யார்? யாக்ஞயவல்க்யர்:—மனஸ்; மனஸ் அநந்தம், முடிவில்லாதது. (அஃதாவது, மனஸின் விருத்திகள் முடிவில்லாதன; அநேகம்.) அந்த மனோபிமானி தேவர்களும் அநந்தர்கள். அந்த மனஸால் லோகத்தை ஜயிக்கிறான்.

10. இந்த யக்ஞத்தில் உத்காதா எவ்வளவு ஸ்தோத்ர வசனங்களால் ஸ்தோத்திரம் செய்கிறான்? யாக்ஞயவல்க்யர்:—மூன்றால். அச்வலர்:—அவை எவை? யாக்ஞயவல்க்யர்:—அநுவாக்யா; யாஜ்யா; சஸ்யா. அச்வலர்:—அவைகள் எப்படிப்பட்டன? யாக்ஞயவல்க்யர்:—அத்யாத்ம விஷயத்தில் முதலாவது பிராணன், இரண்டாவது அபானவாயு, மூன்றாவது வியானவாயு. அச்வலர்:—இவைகளால் எதை ஜயிக்கிறான்? யாக்ஞயவல்க்யர்:—முதலாவதால் பிருதிவியையும், இரண்டாவதால் அந்தரிக்ஷத்தையும், மூன்றாவதால் ஸ்வர்க்க லோகத்தையும் ஜயிக்கிறான்.

இந்தப் பிரகாரம் கேட்டபிறகு ஹோதாச்வலர் பேசாமலிருந்துவிட்டார்.

## பிராம்மணம் 2.

(ஸ்வாபாவிகமாயிருக்கிற அக்ஞானத்தினின்றும் விடுதலைக்கு ம்ருத்யுவானது ஆஸ்பதமில்லாமலிருக்கிறது. அந்த ம்ருத்யு கிரஹாதிகிரஹ லக்ஷணமுள்ளதாயிருக்கிறது. கிரஹமென்றால், பிடித்துக்கொள்ளுகிற சக்தியுள்ளது; வசப்படுத்திக்கொள்ளுகிற சக்தியுள்ளது. அதிகிரஹமென்றால், கிரஹத்தையும் பிடித்துக் கொள்ளுகிற சக்தியை யுடையது. அந்த ம்ருத்யுவினிட மிருந்து விடுபடவேண்டியது அவச்யமாயிருக்கிறது. அதற்காக மேற்படி ம்ருத்யுவின் லக்ஷணம் விஸ்தாரமாகச் சொல்லப்படு கிறது.)

1. (அச்வலருக்குப் பிறகு) ஆர்த்தபாகர் என்ற ருஷிக் கேள்வி கேட்கிறார். ஆர்த்தபாகர்:—கிரஹங்கள் எவ்வளவு? அதி கிரஹங்கள் எவ்வளவு? யாக்ஞவல்க்யர்:—கிரஹங்கள் எட்டு; அதிகிரஹங்கள் எட்டு. ஆர்த்தபாகர்:—அவை எவை? எப் படிப்பட்டவைகள்?

2. யாக்ஞவல்க்யர்:—பிராணன் (என்கிற கிராணேந்திரியம்) கிரஹம். அஃது அபானவாயுவாகிய (அஃதாவது அபானவாயு ஸாதகத்தால் உண்டாகிற) கந்தத்தால் கிரஹிக்கப்படுகிறது. கந்தத்தால் (கந்தசக்தியால்) அன்றோ ஒருவன் எல்லாவற்றையும் முகருகிறான். (கந்த விஷயத்தால் கிராணேந்திரியத்திற்குச் சக்தி யுண்டாகிறது; ஆதலால் கிராணம் கந்தத்தால் கிரஹிக்கப்படுகிற தாகச் சொல்லப்படுகிறது.)

(இவ்விதமாகவே கீழ்ச்சொல்லிய மற்ற ஏழு கிரஹங்கள், அதிகிரஹங்களுக்கும் ஸந்தர்ப்பம் பார்த்துக் கொள்க.)

3-9. வாக் இந்திரியம், கிரஹம்; நாம (சொல்) அதி கிரஹம். நாக்கு (ரஸனேந்திரியம்) கிரஹம்; ரஸம் (ருசி) அதி கிரஹம். நேத்திரம் கிரஹம்; ரூபம் அதிகிரஹம். ச்ரோத்ரம் கிரஹம்; சப்தம் அதிகிரஹம். மனஸ் கிரஹம்; காமம் (இச்சை) அதிகிரஹம், கை கிரஹம்; கர்மா (செய்கை) அதிகிரஹம். த்வக் கிரஹம், ஸ்பர்சம் அதிகிரஹம்.

7. அச்வலர்:—இந்த யக்ஞத்தில் எவ்வளவு ருக்குகளால் ஹோதா ஹோமம் செய்வான்? யாக்ஞயவல்க்யர்—மூன்று ருக்குகளால். அச்வலர்:—அவைகள் எவை? யாக்ஞயவல்க்யர்:—அநுவாக்யா; யாஜ்யா; சஸ்யா. அச்வலர்:—இவைகளால் எதை ஜயிக்கிறான்? யாக்ஞயவல்க்யர்:—எது எது பிராணனுள்ளவைகளோ அவைகளையெல்லாம் ஜயிக்கிறான்.

8. அச்வலர்:—இந்த யக்ஞத்தில் எவ்வளவு ஆஹுதிகளை அத்வர்யு செய்கிறான்? யாக்ஞயவல்க்யர்:—மூன்று. அச்வலர்:—அவைகள் எவை? யாக்ஞயவல்க்யர்:—ஜ்வலிப்பது; வெடிப்பது; பூமியில் கிழேபோவது. அச்வலர்:—எதை இவைகளால் ஜயிக்கிறான்? யாக்ஞயவல்க்யர்:—முதலாவதால் தேவலோகத்தையும், இரண்டாவதால் பிதிருலோகத்தையும், மூன்றாவதால் மனுஷ்ய லோகத்தையும் ஜயிக்கிறான்.

9. அச்வலர்:—இந்த யக்ஞத்தை எவ்வளவு தேவதைகளால் பிரம்மன் என்ற ருத்விக், தக்ஷிண திக்கிலிருந்துகொண்டு, ரக்ஷிக்கிறார்? யாக்யவல்க்யர்:—ஒரு தேவதையால். அச்வலர்:—அது யார்? யாக்ஞயலல்க்யர்:—மனஸ்; மனஸ் அநந்தம், முடிவில்லாதது. (அஃதாவது, மனஸின் விருத்திகள் முடிவில்லாதன; அநேகம்.) அந்த மனோபிமானி தேவர்களும் அநந்தர்கள். அந்த மனஸால் லோகத்தை ஜயிக்கிறான்.

10. இந்த யக்ஞத்தில் உத்காதா எவ்வளவு ஸ்தோத்ர வசனங்களால் ஸ்தோத்திரம் செய்கிறான்? யாக்ஞயவல்க்யர்:—மூன்றால். அச்வலர்:—அவை எவை? யாக்ஞயவல்க்யர்:—அநுவாக்யா; யாஜ்யா; சஸ்யா. அச்வலர்:—அவைகள் எப்படிப்பட்டன? யாக்ஞயவல்க்யர்:—அத்யாத்ம விஷயத்தில் முதலாவது பிராணன், இரண்டாவது அபானவாயு, மூன்றாவது வியானவாயு. அச்வலர்:—இவைகளால் எதை ஜயிக்கிறான்? யாக்ஞயவல்க்யர்:—முதலாவதால் பிருதிவியையும், இரண்டாவதால் அந்தரிக்ஷத்தையும், மூன்றாவதால் ஸ்வர்க்க லோகத்தையும் ஜயிக்கிறான்.

இந்தப் பிரகாரம் கேட்டபிறகு ஹோதாச்வலர் பேசாமலிருந்துவிட்டார்.

## பிராம்மணம் 2.

(ஸ்வாபாவிகமாயிருக்கிற அக்ஞானத்தினின்றும் விடுதலேக்கு மிருத்யுவானது ஆஸ்பத மில்லாமலிருக்கிறது. அந்த மிருத்யு கிரஹாதிகிரஹ லக்ஷணமுள்ளதாயிருக்கிறது. கிரஹமென்றால், பிடித்துக்கொள்ளுகிற சக்தியுள்ளது; வச்யப்படுத்திக்கொள்ளுகிற சக்தியுள்ளது. அதிகிரஹமென்றால், கிரஹத்தையும் பிடித்துக் கொள்ளுகிற சக்தியை யுடையது. அந்த மிருத்யுவினிட மிருந்து விடுபடவேண்டியது அவச்யமாயிருக்கிறது. அதற்காக மேற்படி மிருத்யுவின் லக்ஷணம் விஸ்தாரமாகச் சொல்லப்படு கிறது.)

1. (அச்வலருக்குப் பிறகு) ஆர்த்தபாகர் என்ற ருத்விக் கேள்வி கேட்கிறார். ஆர்த்தபாகர்:—கிரஹங்கள் எவ்வளவு? அதி கிரஹங்கள் எவ்வளவு? யாக்ஞயவல்க்யர்:—கிரஹங்கள் எட்டு; அதிகிரஹங்கள் எட்டு. ஆர்த்தபாகர்:—அவை எவை? எப் படிபட்டவைகள்?

2. யாக்ஞயவல்க்யர்:—பிராணன் (என்கிற கிராணேந்திரியம்) கிரஹம். அஃது அபானவாயுவாகிய (அஃதாவது அபானவாயு ஸாதகத்தால் உண்டாகிற) கந்தத்தால் கிரஹிக்கப்படுகிறது. கந்தத்தால் (கந்தசக்தியால்) அன்றோ ஒருவன் எல்லாவற்றையும் முகருகிறான். (கந்த விஷயத்தால் கிராணேந்திரியத்திற்குச் சக்தி யுண்டாகிறது; ஆதலால் கிராணம் கந்தத்தால் கிரஹிக்கப்படுகிற தாகச் சொல்லப்படுகிறது.)

(இவ்விதமாகவே கீழ்ச்சொல்லிய மற்ற ஏழு கிரஹங்கள், அதிகிரஹங்களுக்கும் ஸந்தர்ப்பம் பார்த்துக் கொள்க.)

3-9. வாக் இந்திரியம், கிரஹம்; நாம (சொல்) அதி கிரஹம். நாக்கு (ரஸனேந்திரியம்) கிரஹம்; ரஸநா (ருசி) அதி கிரஹம். நேத்திரம் கிரஹம்; ரூபம் அதிகிரஹம். சுரோத்ரம் கிரஹம்; சப்தம் அதிகிரஹம். மனஸ் கிரஹம்; காமம் (இச்சை) அதிகிரஹம், கை கிரஹம்; கர்மா (செய்கை) அதிகிரஹம். த்வக் கிரஹம்; ஸ்பர்சம் அதிகிரஹம்.

10. ஆர்த்தபாகர்:—இவைகளெல்லாம் (உண்டாகி நசிக்கின்றவையெல்லாம்) மிருத்யுவிற்கு அன்னமா யிருக்கிறதல்லவா! இந்த மிருத்யு எதற்கு அன்னமாயிருக்கிறது? அந்த தேவதை யாது? (அஃதாவது மிருத்யுவிற்கு மிருத்யு வுண்டோ.) யாக்ஞ்யவல்க்யர்:—எல்லாவற்றிற்கும் அக்நி மிருத்யுவாக விருக்கிறது. ஏனெனில் அக்நி எல்லாவற்றையும் பஸ்மாவாக்குகிறது. இதற்கு மிருத்யு ஜலமாயிருக்கிறது. ஜலத்தினால் அக்நி அணைந்து போகிறது. இப்படி மேற்கண்ட மிருத்யுவுக்கு மிருத்யு உண்டு. (அஃதாவது, புருஷப்பிரயாஸம்; பிரயாஸத்தால் மிருத்யுவாகிற வாக் முதலிய இந்திரியங்களை யடக்கலாம்; அப்பொழுது மோக்ஷம் கிடைக்கும்; மிருத்யுவை ஜயிக்கலாம்.)

11. ஆர்த்தபாகர்:—இந்த (பிரம்மவித்தாகிய, முக்தனாயிருக்கிற) புருஷன் எப்பொழுது மரித்துப்போகிறானோ அப்பொழுது அவனுடைய வாகாதி பிராணன்கள் உயரக் கிளம்பிப் போகின்றனவா, இல்லையா? யாக்ஞ்யவல்க்யர்:—இல்லை; இங்கேயே (இந்தச் சரீரத்திலேயே, பரமாத்மாவிடத்திலேயே) கலந்துபோகின்றன (அலைகள் ஜலத்தில் போல). அப்பொழுது மரித்துப்போனதாக எவ்விதம் சொல்லக்கூடுமெனில், அவன் மிருதனல்ல; ஆனால் துருத்திபோல் வெளிவாயுவால் பூரிக்கப்பட்டவனாகவும், உப்பிப் போனவனாகவும், சேஷ்டையன்றிப் படுத்துக்கொண்டிருக்கிறான்.

12. (பிராணன்கள்மாத்திரம் கலந்து போகின்றனவா, அவைகளில் பிரயோகங்களும், ஏவுகிற விஷயங்களும் கூடவா எல்லாம் கலந்து போகின்றன என்பதைப்பற்றிச் சொல்லப்படுகிறது.)

ஆர்த்தபாகர்:—எப்பொழுது இந்த பிரம்மவித்தாகிய புருஷன் மரிக்கிறானோ அப்பொழுது இவனை விடாமலிருப்பது எது?

யாக்ஞ்யவல்க்யர்:—பெயர்மாத்திரம் எஞ்சியிருக்கிறது; மற்றவை யெல்லாம் போகின்றன. பெயர் முடிவற்றது; விச்வேதேவர்களும் முடிவற்றவர்கள்; அந்த முக்தன் மேற்படி தேவதாஸ்வரூபங்களாகக் கலந்துபோய், பெயரைக்கொண்டு, அநந்தமாயிருக்கிற லோகத்தை ஜயிக்கிறான்.

13. ஆர்த்தபாகர்:—அவித்வான், இறந்துபோனால், அவனுடைய வாக் அக்நியையும், பிராணன் வாயுவையும், நேத்திரம் ஆதித்யனையும், மனஸ் சந்திரனையும், சுரோத்ரம் திக்குகளையும், சரீரம் பிருதிவியையும், ஆத்மா ஹ்ருதயாகாசத்தையும், தேஹ மயிர்கள் ஓஷதிகளையும், தலைமயிர்கள் மரங்களையும், லோஹிதமும் ரேதஸும் ஜலத்தையும் போய்க் கலந்து விடுகின்றனவே! அப்பொழுது இந்தப் புருஷன் எவ்விடமிருக்கிறான்? எதை ஆச்ரயித்துக்கொண்டிருக்கிறான்? எதை ஆச்ரயித்து மறுபடியும் காரிய காரண ஸங்காதமாகிய தேஹத்தை யடைகிறான்? யாக்ஞயவல்க்யர்:—உனக்குத் தெரியவேண்டியதைச் சொல்லுகிறேன்; இந்த ஜனக் கூட்டத்தில் பேசிமுடியாது; தனிமையில் போவோம், வாரும்.

இவ்விதமாய்ச் சொல்லி, இரண்டு பேர்களும் (யாக்ஞயவல்க்யரும், ஆர்த்தபாகரும்)தனிமையிற் போனார்கள். அவர்கள் யோசித்தார்கள். அவர்கள் முடிவாகப் பேசிக்கொண்டது என்னவெனில்:—கர்மாவை ஆச்ரயித்துக்கொண்டிருக்கிறான். (அஃதாவது, இவனுடைய பிராணன்களெல்லாம் முன்சொன்னபடி அதில் அதில் கலந்துபோகின்றன; இவனுடைய கர்மாமட்டும் எஞ்சியிருக்கிறது.) அந்தக் கர்மாவிற்குத் தக்கப்படி மறுபடியும் தேஹத்தை யடை"றான்; புண்யகர்மாவால் (சாஸ்திரோக்த நல்ல கர்மாவால்) புண்யசாலியாகவிருந்து ஸுகங்களை யநுபவிக்கின்றான்; பாப கர்மாக்களைச் செய்தால் பாபியாகி அநேக துக்கங்களை யடைகிறான். இந்தப்படி அவர்களிருவரும் தாங்கள் பேசிக்கொண்டிருந்தது மாத்திரமல்ல; எல்லோருக்கும் தெரியும்படி பிரசித்தமும் செய்தார்கள். இந்தப்படி பேசியதின்மேல் ஆர்த்தபாகர் ஒழிவு அடைந்தார்.

---

## பிராம்மணம் 3.

(பிரதீகம்—பந்தன மென்றது கிரஹாதி கிரஹலக்ஷணமாயிருக்கிறது. அதுதான் மிருத்யு வென்று சொல்லப்படும். அதினின்று விடுதலைதான் மோக்ஷம். இது கூடும். முக்தனுக்கு ஒரு பக்கத்திலும் கதி கிடையாது. பெயர்மட்டும் மிஞ்சினவனாய், எல்லாவற்றையும் விட்டவனாய், தீபம் அணைவதுபோல் வியாபாரம் ஒடுங்கி, எங்கும் நிறைந்து, கலந்து, ஒன்றாய்ப்போகி

ருன். முக்தனுடையவும், அமுக்தனுடையவும் காரியகாரணங்கள், ஸமான மான ஸ்வகாரணத்தில் போயடைந்தபோதிலும், முக்தனுக்குப்புனருத்பத்தி யில்லை; மற்ரூனுக்கு உண்டு. எதனுடன் சேர்ந்தால் ஸம்ஸரண முண்டா குமோ அது கர்மா வென்பது நிச்சயம். அந்தக்கர்மா க்ஷயித்தால் தான் மோக்ஷ முண்டாகும். கர்மா இரண்டுவிதம்; புண்ணியம் பாபம்; பாபம் செய்தால், ஸ்வபாவதுக்க பகுளமான ஸ்தாவர ஜங்கமங்களிலும், நரக திர்யக் பிரேதா திகளிலும் விழுந்து துக்கத்தை யநுபவிக்கிருன். புண்ய கர்மாவோ ஸர்வ புருஷார்த்த ஸாதனமாயிருக்கிறது. ஒருவன் எவ்வளவுக் கெவ்வளவு புண்யம் செய்கிருனே அவனுக்கு அவ்வளவுக்கவ்வளவு பலனுண்டு. ஆனல் புண்ய கர்மாவால் மட்டும் மோக்ஷம் கிடைக்கமாட்டாது. வித்யா ஸஹித மான கர்மாவினுலும் மோக்ஷம் கிட்டாது. கிரியா காரக பல வர்ஜிதமாயிருக் கிற வஸ்துவினிடத்தில் கர்ம வியாபாரம் செல்லாது. 'வித்யா ஸஹித கர்மா மந்திர சர்க்கிராதியுடன் கலந்த விஷதத்யாதிபோல்,மோக்ஷமாகிற காரியாந் தரத்தை ஆரம்பிக்கும்', என்று சொல்லக்கூடாது. ஏனெனில், மோக்ஷத் திற்கு ஆரம்பமென்பது இல்லை; பந்தன நாசமே மோக்ஷம்; பந்தன மென் றது அவித்யை; கர்மாவால் அவித்யைக்கு நாசமுண்டாகாது. உத்பத்தி, ஆப்தி, விகாரம், ஸம்ஸ்காரம் இவைகள் கர்ம ஸாமர்த்தியத்தால் உண்டா கின்றன. ஆதலால் மோக்ஷம் கர்மாவின் காரியமாகாது. ஞானத்தின் காரியம் மோக்ஷமென்று உபசாரமாகச் சொல்லப்படுகிறதே தவிர, வாஸ்த வத்தில் அப்படியுமென்று. அக்ஞானம் நீங்கினல் ஞானம்; அக்ஞானம் ஒரு மறைவாகவிருக்கிறது; அதை நீக்கிவிட்டால் ஞானம் எப்பொழுது மிருக்கி றது; அப்படியே மோக்ஷமுமிருக்கிறது. மோக்ஷத்திற்கு மறைவு அக்ஞானத் தைத் தவிர வேறென்றுமில்லை. அக்ஞானத்தை ஞானம், விரோதியாயிருப் பதால், அடிக்கும். கர்மா அக்ஞானத்திற்கு விரோதியன்று; அஃது எவ்விதம் அக்ஞானத்தை யடிக்கும்? நித்ய கர்மா அக்ஞானத்தை நிவர்த்தி செய்யவும் மாட்டாது; பலனை மோக்ஷமென்று சொல்லக்கூடாது; பலனுக்கு க்ஷீணதை (குறைவு) உண்டு; மோக்ஷம் அவ்வாறன்று. 'நித்ய கர்மா, மற்ற கர் மாக்களுக்கு வேருனதால், அதன் பலனும் வேருகவிருக்கட்டும்' என்று சொல்லக்கூடாது. கர்மா வென்பது ஸமம்தான். ஆதலால், நித்யகர்மாவிற் குப் பலன் மோக்ஷமன்று. ஆனல், யாது பலன் எனில், இஃது ஆத்மாவை ஸம்ஸ்கரிக்கின்றது, சுத்தப்படுத்துகிறது; ஆத்மஞானத்திற்கு இவனை, பரி சுத்தம்செய்து, தயார்செய்து வைக்கின்றது. ஞானத்துடன் கூடிய நித்ய கர்மா ஆத்மஞான உத்பத்திக்கு ஸாதனமாயிருக்கிறது. விஹித கர்மாக்களைச் செய்யாமலிருப்பதாலும், நிஷித்த கர்மாக்களைச் செய்வதாலும், நிரம்பவும் கீழ்ப்பட்ட ஜன்மங்கள் கிடைப்பதில் ஸந்தேஹமில்லை. இதற்கு வேத வாக்யங்கள் பிரமாணம்; அதற்கு அந்நியதாபாவம் இல்லை. கர்மாவிற்கு,

ஆகையால், மோக்ஷ பலனில்லை. கர்மாவிற்குப் பலன் ஸம்ஸாரமே—என்று காண்பிக்க அந்தப் பிராம்மணம் துவக்க ப்படுகிறது.)

1. பிறகு, புஜ்யு: வென்ற லாஹ்யாயநி யாக்ஞயவல்க்யரை (அடியில் வருமாறு) கேட்டார்:—'ஹே! யாக்ஞவல்க்யரே! மத்ர தேசதிற்கு, அத்யயனார்த்தம்போய், அவ்விடங்களில் சுற்றிக் கொண்டு வரும்பொழுது, காப்யரென்ற பதஞ்ஜலருடைய கிருஹத்திற்கு வந்தோம். அவருடைய புத்ரீ அவ்விடம் இருந்தாள். அவள் ஒரு கந்தர்வனால் பிடிக்கப்பட்டிருந்தாள், அந்தக் கந்தர்வனை 'நீ யார்?' என்று கேட்டோம். 'நான் ஆங்கிரஸன் என்ற ஸுதன்வா' என்று சொன்னான். நாங்கள் லோகங்களின் முடிவை அவனைக் கேட்டபொழுது, 'அச்வமேத யாகம் செய்தவர்கள் எங்கு இருந்தார்கள்?' (அவர்கள் எங்குப்போய் சேருகிறார்கள்?) என்று கேட்டோம். (அவன் அதற்கு பதில்சொல்லி, எங்களுக்குத் திருப்தியாகிவிட்டது.) அந்த கேள்வியை உம்மைக் கேட்கிறேன். உமக்குத் தெரிந்ததைச் சொல்லும்.'

2. யாக்ஞயவல்க்யர்:—அச்வமேத யாஜிகள் எங்கே போகிறார்கள் என்பதைப்பற்றி அந்தக் கந்தர்வனே சொல்லியிருக்கிறானே! (நானும் சொல்லுகிறேன், கேள்). ஒரு தினத்தில் ஸூரியனுடைய ரதம் எவ்வளவு தூரம் போகிறதோ, அதற்கு முப்பத்திரண்டு மடங்கு விஸ்தீரணமுள்ளதா யிருக்கிறது இந்த லோகம் (விராட் சரீரமுள்ளதும், பிராணிகளுக்குக் கர்மபலபோக முள்ளதுமான லோகம், ஸ்வர்க்கலோகம்). அதை மேற்படி அளவுக்கு இரண்டுமடங்கு விஸ்தீரணம் பூமி சுற்றிக்கொண்டிருக்கிறது. அந்தப் பூமியை மேற்படி அளவுக்கு இரண்டு மடங்கு ஸமுத்ரம் சுற்றிக்கொண்டிருக்கிறது. அவ்விடத்தில், அண்ட கபாலங்களுக்கு மத்தியில், கத்திமுனை, ஈசலிறகு, இவைகளைப்போல், அதி ஸூக்ஷ்மமான இடைவெளி யிருக்கிறது. அதன் வழியாக இந்திரன் (யாகத்தால் திருப்தியடைந்த ஈசுவரன்), ஒரு பக்ஷி ரூபங்கொண்டு, இந்த யாகம் செய்தவர்களைக் கொண்டுபோய் வாயுதேவதையிடம் கொடுத்தார். வாயு தன்னிடமே வரவழைத்துக்கொண்டார். இந்தப்படி வாயுவையே அவர் (அந்த கந்தர்வன்) கொண்டாடினார் (சிலாகித்தார்). வாயு, வ்யஷ்டியாகவும் (தனித்தனி

யாகவும்), ஸமஷ்டியாகவும் (மொத்தமாகவும்) இருக்கிறார். இந்தப்படி யறிந்தவன் மிருத்யுவை ஜயித்துப்போடுகிறான். இதைக் கேட்டு புஜ்யு ஒழிவடைந்தார்.

(அச்வமேதயாகம் செய்தவர்களுக்கு வாயு லோகம் கதி; மோக்ஷமில்லை.)

---

## பிராம்மணம் 4.

1. பிறகு, உஷஸ்தர் என்ற சாக்ராயணர் யாக்ஞயவல்க்யரை (அடியில் வருமாறு) கேட்கிறார்:—

(கிரஹாதிகிரஹங்களால் பிடிக்கப்பட்ட ஸம்ஸாரி என்ற ஒருவன் இருக்கிறானா, இல்லையா? இருந்தால் அவன் யார்? இதைப்பற்றிச் செவ்வையாகத் தெரியவேண்டியதற்காக இந்தக் கேள்வி ஏற்பட்டிருக்கின்றது.

எது, ஹே! யாக்ஞயவல்க்யரே! ஸாக்ஷாத்தாகவும் (மறைவில்லாமலும்) அபரோக்ஷமாகவும் (முக்கியமாயும்) இருக்கின்றதோ, எது ஸர்வாந்தரமாயும் (எங்கும் நிறைந்ததாயும்) இருக்கிறதோ அந்த ஆத்மா எவர்? எப்படிப்பட்டவர்? சொல்லுங்கள்.

யாக்ஞயவல்க்யர்:—எந்த ஆத்மா பிராணவாயுவால் (மூக்கால்) சுவாஸம் விடும்படி செய்கிறதோ, அபான, வ்யாந, உதான வாயுக்களால் அதன் அதன் சேஷ்டைகளை நடத்தும்படி செய்கிறதோ அவர்தான் ஸர்வாந்தர ஆத்மா. (அஃதாவது, அந்த அந்த இந்திரியத்தைத் தத்தம் தொழிலை நடத்தும்படி ஏவுவதுதான் அந்த உன்னுடைய ஆத்மாவாக விருக்கிறது; அஃதாவது, உன்னிடத்திலிருக்கிற ஆத்மா, ஜீவன், அதே பரமாத்மா.)

2. உஷஸ்தர்:—இது மாடு, இது குதிரை யென்பதுபோல் ஆத்மாவைக்குறித்துக் காட்டுவதாக பிரதிக்ஞை செய்துகொண்டீரே, அங்ஙனமிருக்க பிராண சேஷ்டாதி அடையாளங்களினால் மட்டும் காட்டுகிறீர். அந்த ஸர்வாந்தர ஆத்மா எப்படிப்பட்டது? செவ்வையாய்ச் சொல்லும்.

யாக்ஞயவல்க்யர்:—[நான் அந்த பிரதிக்ஞைப் பிரகாரம் நடந்தேன். ஆனால் கடம்போல் நேரில் உருப்படியாகக் காண்பிக்க முடியாதப்பா. ஏனெனில் அதன் ஸ்வபாவம் அப்படிப்பட்டது, விஷயீகரிக்க முடியாது; (இந்திரியத்திற்கு கோசரமல்ல). திருஷ்டி இரண்டுவிதம்; ஒன்று லௌகிக திருஷ்டி; இரண்டாவது, ஆத்மாவின் நித்ய திருஷ்டி; முதலாவது, உண்டாகும், நசிக்கும்: இரண்டாவது நித்யம், அழிவில்லாதது]. இந்த லௌகிக திருஷ்டிக்கு திரஷ்டாவாக விருப்பதை (அஃதாவது, இந்த திருஷ்டியின் தொழிலை எது ஏவுகிறதோ அதை) நீ பார்க்கமாட்டாய்; அப்படியே, லௌகிக சுருதிக்கு ச்ரோதாவாயிருப்பவரை நீ கேட்கமாட்டாய்; அப்படியே, மதிக்கு மந்தாவாயிருப்பவரை நீ நினைக்கமாட்டாய்; அப்படியே விக்ஞானத்திற்கு விக்ஞாதாவாயிருப்பவரை நீ அறியவுமாட்டாய்; அப்படிப்பட்டவர்தான் ஸர்வாந்தர ஆத்மா. இவரைக்காட்டிலும் அந்யவஸ்து (இந்த கார்ய காரணாத்மகமா யிருக்கிற சரீரம்) ஆர்த்தம், நாசமுள்ளது. (பிரம்மத்தைப் பிரத்யக்ஷமாய் கடாதிகள்போல் கையால் பிடித்துக் காட்டமுடியாது.) இதன்மேல், உஷஸ்தர் ஒழிவடைந்தார்.

---

## பிராம்மணம் 5.

(ஸப்ரயோஜகமாயிருக்கிற பந்தம் இன்னதென்றும், அதனால் கட்டுப்பட்டவன் இன்னான் என்றும், அப்படிப்பட்ட ஒருவன் உண்டென்றும், அவன் தனிப்பட்டவனாகத் தெரியவருகிறான் என்றும் சொல்லப்பட்டது; இப்பொழுது அந்தக் கட்டிலே நின்றும் விடுதலைக்கு ஸாதனமாகிய ஸந்யாஸத்துடன் கூடிய ஆத்மஞானம் சொல்லப்படவேண்டியதற்காக கஹோல பிரச்ன மென்ற இந்த பிராம்மணம் ஆரம்பிக்கப்படுகிறது.)

1. கஹோலர் என்ற கௌஷீதகேயர் யாக்ஞயவல்க்யரைக் கேட்கிறார்:—ஹே! யாக்ஞயவல்க்யரே! ஸாக்ஷாத்தாயும், அபரோக்ஷமாயும் இருக்கிற பிரம்மம் எதுவோ, ஸர்வாந்தர ஆத்மா எதுவோ, அதைச் செவ்வையாய்ச் சொல்லும். (அஃதாவது, எவரை அறிந்தால் பந்தனம் விடுபடும்?)

(முந்திய பிராம்மணத்தில் உஷஸ்தர் கேட்டபடியே இவரும் கேட்கிறாரே! இந்தப் பிரச்னத்திலும் அதே ஆத்மாவைப்பற்றியா அல்லது வேறு ஆத்மாவைப்பற்றியா என்று ஸந்தேஹம்வர பாஷ்யகாரர் நிவிருத்திசெய்வதாவது:—ஒரே ஆத்மாவைப்பற்றித் தான்; இன்னும் விசேஷித்துச் சொல்லப்படவேண்டியதற்காக இரண்டாம் தடவைகேட்கப்படுகிறது. முதல் பிரச்னத்தில் ஆத்மா பத்தன் என்று சொல்லப்பட்டது. இப்பொழுது இரண்டாவது பிரச்னத்தில் அசநாயாபிபாஸாதிகளைத் தாண்டியவரென்று சொல்லப்படுகிறது. ஆனால், ஒரே ஆத்மா பத்தனையும், அதற்கு விரோதமாக அசநாயாதி அதீதனையும் சொல்லப்படுவது ஏனெனில், அது தோஷமன்று. ஏனெனில், ஸம்ஸாரித்வம, நாமரூப விகாரகார்ய காரண லக்ஷண ஸங்காதோபாதி பேத ஸம்பர்க்க ஜனித பிராந்தி மாத்திரமாயிருக்கிறதென்று அடிக்கடி சொல்லப் படுகிறது. அஃதாவது, ஆத்மாவிற்கு ஸம்ஸாரித்தவம், ரஜ்ஜு ஸர்ப்பம்போல், தோற்றமே தவிர யதார்த்தமன்று. வஸ்து வெவ் வேறு என்ற வ்யவஹாரமானது, பிரம்மஸ்வரூபத்தைத் தெரிய வொட்டாமல் மறைத்துக்கொண்டிருக்கிற அவித்யை உள்ள வரையில் இருந்துகொண்டேயிருக்கும். ஆதலால் ஆத்மா ஒன்றுதான். லோக வ்யவஹாரகாலத்தில்மட்டும், ஜீவாத்மா வென்றும், பரமாத்மாவென்றும் சொல்லப்படுகிறது. ஆத்மா உபாதியால் பத்தனைப்போல் காணப்படுகிறான். அப்பொழுது அவனுக்கு ஜீவன் என்ற பெயர் வ்யவஹரிக்கப்படுகிறது. உபாதி நீங்கிவிட்டால் பரமாத்மா வென்று சொல்லப்படு கிறது.)

யாக்ஞயவல்க்யர்:—உன்னிடத்திலிருக்கிற ஆத்மாவே, அவனே ஸர்வாந்தரன்.

கஹோலர்:—அவர் யார்? எப்படிப்பட்டவர்?

யாக்ஞயவல்க்யர்:—எவர், பசி, தாஹம், சோகம் (துன்பம் அல்லது வ்யஸனம்), மோஹம் (தெரியாத்தனம்), ஜரை (கிழத்தனம்), மிருத்யு (மரணம், தேஹத்தின் முடிவு) இவை களை யெல்லாம் கடந்து இருக்கிறாரோ அவர்தான் ஆத்மா, ஸர்வாந்தரர்.

அப்படிப்பட்ட ஆத்மாவை பிராம்மணர்கள் (பிரம்மவித்துக்கள்) அறிந்து, புத்திர ஏஷணையிலிருந்தும் (கல்லியாணம் செய்து கொள்ளுகிற இச்சையிலிருந்தும்), வித்த ஏஷணையிலிருந்தும் (கர்மாவிற்கு ஸாதனமாகிய பணம் ஸம்பாதிக்க வேண்டுமென்கிற இச்சையிலிருந்தும்), லோக ஏஷணையிலிருந்தும் (அந்த கர்மாவால் ஸ்வர்க்காதி லோகங்களை யடையவேண்டுமென்ற இச்சையிலிருந்தும்) கிளம்பி, பிக்ஷை எடுத்துக்கொண்டு போகிறார்கள். (அஃதாவது, பிரம்மஞானத்திற்கு ஸாதனம், இந்த மூன்று இச்சைகளையும் விட்டுவிடுவதுதான்.) இம்மூன்று இச்சைகளும் ஒன்றற்கொன்று ஸம்பந்தமுள்ளவை. (அஃதாவது, ஒன்றற்கொன்று ஸாத்யஸாதனமாயிருக்கின்றன.) எது புத்ரேஷணையோ அது வித்தேஷணை. எது வித்தேஷணையோ அது லோக ஏஷணை. இந்த ஏஷணையைத் தள்ளி மற்ற இரண்டுமட்டும் இருக்கின்றன வென்று சொல்லலாம்.

(ஸந்யாஸமென்றால் எல்லாவற்றையும் தள்ளக்கூடாது. பரிவிராட்டாக விருந்தாலும் அவனுக்கு வேதாத்யயனம் விதிக்கப்பட்டிருக்கிறது. அதைத் தள்ளிவிட்டால் அவன் சூத்ரனுக்கு ஸமானம். மேலும், பரிவிராட்டாக விருந்தபோதிலும் குருக்கள், பெரியோர்கள், அதிதிகள், ஹோமம், ஜபம், போஜனம், ஆசமனம் ஸ்வாத்யாயம் இவைகளில் யக்ஞோபவீதியாயிருக்க வேண்மென்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆதலால், யக்ஞோபவீதாதி லிங்க பரித்யாகம் செய்வது சரியேயில்லை; அது குருட்டுத்தனம். ஏஷணைகளை ஏன் விடவேண்டுமெனில் அவைகள் அவித்யாவிஷயங்கள்; பிரம்மஞானம் வித்யாவிஷயமாயிருக்கிறது. இருளும் வெளிச்சமும் இரண்டும் சேர்ந்து ஓரேயிடத்தில் எப்படி இருக்கமாட்டாவோ, அப்படி அவித்யையும், வித்யையும் சேரமாட்டா, ஒன்றுக்கொன்று விரோதமாயிருப்பதால். ஆதலால், அவித்யா விஷயமாயிருக்கிற ஏஷணைகளை விடவேண்டியதுதான் ஸந்யாஸம். பாரிவ்ராஜ்யாச்ரமத்திற்குக்கூட யக்ஞோபவீதாதி ஸாதனங்களும், லிங்கங்களும் விதிக்கப்பட்டிருக்கின்றன. ஆகையால் பாரிவ்ராஜ்யமே வ்யுக்தமான லக்ஷணம், ஸர்வ கர்ம ஸாதன பரித்யாக லக்ஷணம். அதை பிரம்மவித் அடையவேண்டும்.)

ஆதலால், பிராம்மணன், பாண்டித்யத்தை (ஆத்மஞானத்தை) யடைந்து, ஏஷணைகளை விட்டுவிட்டு), பால்யத்துடன் (ஆத்ம ஞான பலத்துடன்) இருக்கவேண்டியது. இவ்விதம் பாண்டித்யத் தையும், பலத்தையும் அடைந்தால் அவன் முனி ஆகிறான் (மனன சக்தியுள்ளவனாகிறான்). பிறகு அமௌனத்தையும் (ஆத்ம ஞானமும், அநாத்ம பிரத்யயதிரஸ்காரமும்), மௌனத்தையும் (அநாத்ம பிரத்யயதிரஸ்காரத்தின் முடிவையும்) யடைகிறான். அப்பொழுதுதான் அவனுக்கு பிராம்மண்யம் கிடைக்கின் றது. பிறகு, அவன் எந்த நடவடிக்கைகளுடன் சேர்ந்திருந்த போதிலும் அவன் பிராம்மணனாகவே யிருக்கின்றான். இப்படி பிரம்ம ஸ்வரூபியாகிய பிரம்மவித்தைக்காட்டிலும் அந்யமா யிருக்கப்பட்ட வஸ்துக்களெல்லாம் ஆர்த்தம், நாசமுற்றவை. (ஆத்மாதான் நித்தியவஸ்து.) இதைக் கேட்டபின்பு கஹோலர் ஒழிவடைந்தார்.

---

## பிராம்மணம் 6.

(ஸாக்ஷாத்தாயும், அபரோக்ஷமாயும் இருக்கிற எந்த வஸ்து ஸர்வாந்தரர் என்று முன் சொல்லப்பட்டதோ அந்த ஸர்வாந்தர ஆத்மாவின் ஸ்பரூபம் சொல்லவேண்டியதற்காக இந்த பிராம்மணம் ஆரம்பிக்கப்படுகிறது. பிருதிவி முதலான ஐந்து பூதங்களும் பஹிரந்தர்பாவமாக, ஸூக்ஷ்ம ஸ்தூல தாரதம்ய கிரமமாக வ்யவஸ்தை செய்யப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு பூதமும் அதற்கு மேற்பட்ட பூதத்தால் வ்யாபிக்கப்பட்டதாயும், ஒவ்வொரு பூதத்திற்கும் அதற்கு மேற்பட்டது காரணமாயும், ஒவ்வொரு பூதத்தைவிட அதற்கு மேற்பட்டது ஸூக்ஷ்மமாயும் இருக்கிறது. அஃதாவது, ஒவ்வொரு பூதமும் அதற்குக் கீழ்ப்பட்ட பூதத்திற்குள் அந்தர்யாமியாயிருந்து வ்யாபித்துக்கொண்டும், அதற்கு வெளியில் தனிப்பட்டிருந்துகொண்டும் இருக்கிறது. எப்படியெனில்—பிருதிவிக்குள் ஜலம் கோத்துக்கொண்டும், வ்யாபித்துக்கொண்டும், ஸமுத்திரம் முதலியவைபோல் பூமிக்கு வெளிப்பட்டுத் தனிமையில் இருந்துகொண்டும் இருப்பதுபோல. இந்தப்படி மேன்மேலாக பிரம்மலோகம்வரை சொல்லப்படுகிற,

எதற்குமேல் ஒன்று மில்லையோ அந்த ஸர்வாந்தரவஸ்துவாகிய, பிரம்மம், தனக்குக் கீழ்ப்பட்ட எல்லா பூதங்களிலும், உள்ளும் புறமும் இருந்துகொண்டு, அஃதாவது எல்லாமாகவும் அதுவே யிருந்துகொண்டு இருக்கிறது. அதைத் தவிர வேறொன்று மில்லை. மேலும், ஸர்வாந்தரமாயிருக்கிற கௌண, அமுக்ய ஆத்மா வான ஜீவன், ஒவ்வொரு பூதத்தையும் தள்ளிப்பார்த்து, மேலாகப் போய், அஃதாவது, ஸர்வஸம்ஸார நிர்முக்தனாய், பரபிரம்ம வஸ்துவாகவே இருக்கிறான் என்ற அர்த்தமும் இதனால் காட்டப் படுகிறது.)

1. பிறகு, கார்கியென்ற வாசக்நவீ என்ற ஸ்திரீ யாக்ஞ வல்க்யரைக் கேட்கிறாள்:—இந்த பிருதிவி ரூபமாயிருக்கிற எல்லாம் ஜலத்தில் ஓதமாயும் ப்ரோதமாயும் இருக்கிறதே (ஒரு வஸ்திரத் தில் உண்டை நூலும் பாவு நூலும் கலந்துகொண்டிருப்பது போல, பூமி, ஜலத்தில் கோவையடைந்திருக்கிறதே), ஜலம் எதனிடம் ஓதமாயும் ப்ரோதமாயுமிருக்கிறது? (அஃதாவது ஜலத் திற்கும் மேற்பட்ட ஸூக்ஷ்மமாயும், காரணமாயும், வ்யாபகமாயு மிருக்கப்பட்ட பூதம் எது?)

யாக்ஞவல்க்யர்:—கேள்! ஹே! கார்கி! வாயுவில். (அஃதாவது ஜலத்தைக்காட்டிலும் வாயு ஸூக்ஷ்மமாயும் வ்யாபக மாயு மிருக்கிறது.)

(ஜலத்திற்கு அடுத்த அக்நி ஏன் சொல்லப்படவில்லை யென்றால், அக்நிக்கு பூமி, ஜலம் இவைகளின் ஸம்பந்தமின்றி யிருப்பு இல்லாததால், அவைகளில் அடங்கி யிருக்கிறதென்று எண்ணிச் சொல்லப்படவில்லை.)

கார்கி:—எதில் வாயு ஓதமாயும் ப்ரோதமாயும் இருக்கிறது?

(இவ்வாறு ஒவ்வொரு பூதத்தைப்பற்றியும் தனித்தனிக் கேள்வி கேட்கப்படுகிறது. ஒருமித்து அதற்கு உத்தரங்கள் இவ்விடத்தில் சொல்லப்படுகின்றன.)

யாக்ஞவல்க்யர்:—வாயு, அந்தரிக்ஷலோகங்களிலும்; இவை கள் கந்தர்வலோகங்களிலும் (அந்தரிக்ஷத்திற்கு மேல் இருப்பதும் கந்தர்வாதிகள் ஸஞ்சாரம் செய்யும் லோகங்கள்); இவை ஆதித்ய

லோகங்களிலும் (ஸூரிய மண்டலங்களிருக்கிற வெளி); இவை சந்திரலோகங்களிலும்; இவை நக்ஷத்ரலோகங்களிலும்; இவைகள் தேவலோகங்களிலும்; இவை இந்திரலோகங்களிலும்; இவைகள் பிரஜாபதிலோகங்களிலும் விராட் சரீராரம்பக பூதலோகங்களிலும்; இவைகள் பிரம்மலோகங்களிலும் (அண்டங்களைப் படைத்த பிரம்மன் என்ற தேவதை யிருக்குமிடம்) ஓதமாயும் ப்ரோதமாயுமிருக்கின்றன.

கார்கி:—பிரம்மலோகம் எதில் ஓதமாயும் ப்ரோதமாயுமிருக்கின்றது?

யாக்ஞவல்க்யர்:—இனிமேல் கேட்கவேண்டாம்; நிறுத்திவிடு; கேட்டால் உன் தலை வெடித்துப்போகும். (இதுவரையில் நியாய பிரகாரமும், அநுமான பிரகாரமுமாய்க் கேட்டது சரியே. இனி ஆகமப்பிரகாரம்தான் கேட்கவேண்டும். அஃதாவது, இதற்கு மேல் வேதத்தில் சொல்லப்படுவது பிரம்மவஸ்து. அதை வேறு விதமாகச் சொல்லமுடியாது.)

பிறகு கார்கி ஒழிவடைந்தாள்.

---

## பிராம்மணம் 7.

(இப்பொழுது பிரம்மலோகத்திற்கும் அந்தரதமமாயிருக்கிற ஸூக்ஷ்மவஸ்து இதில் சொல்லப்படுகிறது.)

1. உத்தாலகர் என்ற ஆருணி, யாக்ஞவல்க்யரைக் கேட்கிறார்:—

மத்ர தேசத்தில், யாகத்தைப்பற்றிய வேதாத்யயனம் செய்யக் கருதி, நாங்கள் வஸித்துக்கொண்டிருந்தோம். பதஞ்ஜலரென்று காப்யரின் கிருஹங்களிலிருந்தோம். அவருக்கு ஒரு பார்யை இருந்தாள். அவள் ஒரு கந்தர்வனால் பிடிக்கப்பட்டிருந்தாள். அந்த கந்தர்வனை 'நீ யார்?' என்று கேட்டோம். 'நான் கபந்தன் என்ற ஆதர்வணன்' என்று சொன்னான். அவன் பதஞ்ஜலரையும், சிஷ்யர்களையும் பார்த்துக் கேட்டதாவது:—'எந்த ஸூத்திரத்தினால் (கயிற்றால்) இந்த லோகமும் (இந்த ஜன்மமும்), பரலோகமும்

(வரப்போகிற ஜன்மமும்), எல்லா பூதங்களும் கோத்துக் கட்டப் பட்டிருக்கிறதோ, அந்த ஸூத்திரம் எது ? உனக்குத் தெரியுமா? என்று. அதற்குப் பதஞ்ஜலர் தனக்குத் தெரியாதென்று சொன்னார். 'எவர் இந்த லோகத்தையும், பரலோகத்தையும், எல்லாப் பூதங்களையும், உள்ளே யிருந்துகொண்டு, நடத்திவைக்கிறாரோ அந்த அந்தர்யாமி எவர் ?' என்று மேற்படி கந்தர்வன் மறு படியும் கேட்க, அதற்கும் பதஞ்ஜலர் தெரியாதென்று சொன்னார். 'அந்த ஸூத்திரத்தையும், அந்தர்யாமியையும் எவன் அறிகிறானோ, அவன்தான் பிரம்மத்தை யறிந்தவன், லோகங்களை யறிந்தவன், தேவர்களை யறிந்தவன், வேதங்களை யறிந்தவன், (தன்) ஆத்மாவை யறிந்தவன், எல்லாவற்றையு மறிந்தவன்' என்று மறுபடியும் கந்தர்வன் சொன்னான். பிறகு, நாங்கள் கேட்டுக் கொண்டதன்பேரில், அந்த ஸூத்திரத்தையும், அந்தர்யாமியை யும் அவன் எடுத்துச் சொன்னான். அப்படி நான் அறிந்து கொண்டிருக்கிறேன். அஃது உமக்குத் தெரியாவிடில், ஹே! யாக்ஞவல்க்யரே ! ராஜா கொடுத்த மாடுகளை நீர் எப்படி ஓட்டிக் கொண்டு போகக்கூடும் ! உம்முடைய தலை வெடித்துப்போகும் !

யாக்ஞவல்க்யர்:—அந்த ஸூத்திரத்தையும், அந்தர்யாமியை யும் நான் அறிவேன்.

உத்தாலகர்:—பிராகிருத மனுஷ்யன் தனக்குத் 'தெரியும், தெரியும்' என்று தன்னைப்புகழ்ந்து கொள்ளுவன் ! உமக்குத் தெரிந்தால் சொல்லும் !

2. யாக்ஞவல்க்யர்:—அந்த ஸூத்திரம் வாயுதேவதை தான். வாயுதான் எல்லாவற்றையும் கட்டிப் பிடித்துக் கொண்டிருக்கிறது. ஒரு தேஹத்திலிருந்து வாயு வெளியே போய் விட்டால், அவன் பிரேதமாகப் போய்விட்டான் என்றும், அவனுடைய அங்கங்கள் நழுவிப்போய்விட்டதாகவும் சொல்லுகிறார்கள்.

உத்தாலகர்:—அது சரிதான் ; பிறகு, அந்தர்யாமியைச் சொல்லும்.

3. யாக்ஞவல்க்யர்:—யாதொருவர் பிருதிவியில் இருக்கிறாரோ (அஃதாவது பிருதிவிக்குள்ளிருக்கிறாரோ), எவரை பிருதிவி

தேவதை யறியவில்லையே, எவருக்குப் பிருதிவி தேவதைக்குள்ள சரீரம் இருக்கிறதோ (அஃதாவது, பிருதிவிமயமாயிருக்கிறாரோ), எவர் பிருதிவிக்குள்ளிருந்து அதை நியமானம் செய்கிறாரோ, அவர்தான் உனக்குள்ளும், எனக்குள்ளும், எல்லோருள்ளும் இருக்கிறார் ; அவர்தான் அந்தர்யாமி, அமிருதர்.

4-23. (பிருதிவி விஷயத்தில் சொன்னது போல அடியிற் கண்ட இருபது விஷயங்களிலும் பொருள்படுத்திக்கொள்ள வேண்டும்.) ஆதிதைவதவிஷயங்கள்—ஜலம், அக்நி, அந்தரிக்ஷம், வாயு, ஸ்வர்க்கலோகம், ஆதித்யன், திக்குகள், சந்திரநக்ஷத்திரங்கள், ஆகாசம், (வெளி), தமஸ், தேஜஸ் ; அதிபூதம்—எல்லா பூதங்கள் (பிராணிகள்); இனி அத்யாத்மம்—பிராணன், வாக், சக்ஷுஸ், சுரோத்ரம், மனஸ், த்வக், விக்ஞானம், ரேதஸ்.

(இந்த அந்தர்யாமி) பார்க்கப்படாதவர், ஆனால் பார்ப்பவர், கேட்கப்படாதவர், ஆயினும் கேட்பவர் ; நினைக்கப்படாதவர் ஆனால் நினைப்பவர் ; அறியப்படாதவர், ஆனால் அறிபவர் ; இவரைக்காட்டிலும் திரஷ்டா, ச்ரோதா, மந்தா, வேறொருவருமில்லை. இவர்தான் உன்னிடத்திலிருக்கிற ஆத்மா, அந்தர்யாமி, அமிருதர். இவரைத் தவிர மற்றவையெல்லாம் அழிவுள்ளன.

பிறகு உத்தாலகர் ஒழிவடைந்தார்.

---

## பிராம்மணம் 8.

1. பிறகு, வாசக்நவீ என்றவள் அவ்விடமிருந்த பிராம்மணர்களைப் பார்த்துச் சொல்லுகிறாள் :—ஹே! பிராம்மணர்களே! இந்த யாக்ஞவல்க்யரை இரண்டு கேள்விகள் கேட்கப்போகிறேன். அவைகளுக்கு இவர் உத்தரம் சொல்லிவிட்டால், பிரம்மத்தைப் பற்றிச்சொல்லுகிற இவரை, உங்களுக்குள் ஜயிப்பவர் ஒருவருமில்லை.

பிராம்மணர்கள்:—கேள் ! ஹே ! கார்கி !

2. வாசக்நவீ:—ஹே ! யாக்ஞவல்க்யரே ! உம்மை இரண்டு கேள்விகள் கேட்கப்போகிறேன்; சூரர்களான காசிராஜா அல்லது

விதேஹராஜா, தன்னுடைய அம்பில் இரண்டு பாணங்களைத் தொடுத்து விடுவதற்கு எப்படித் தயாராக விருப்பார்களோ, அப்படிப்போல் இரண்டு கேள்விகள் உம்மைக் கேட்கப் போகிறேன். (ஜாக்ரதையாக உத்தரம் சொல்லும்.)

யாக்ஞவல்க்யர்:—கேள்! ஹே! கார்கி!

3. கார்கியின் கேள்வி:—த்யௌ: என்ற பார்க்கப்படுகிற ஆகாசத்திற்கு மேலாக எது உள்ளதோ; (அண்டகபாலாதி) பூமிக்குக்கீழ் எது உண்டோ; இரண்டிற்கும் மத்தியில் எவை எவை உளவோ; இன்னும் இருந்த, இருக்கும், இருக்கப்போகிற எவைகள் உண்டோ அவைகள் எல்லாம் (அஃதாவது, இந்த ஸூத்திராத்மகமாயும், வ்யாகிருதமாயுமிருக்கிற இந்த ஜகத்தெல்லாம்) எதனிடம் ஓதமாயும் ப்ரோதமாயும் இருக்கிறது?

4. யாக்ஞவல்க்யர்:—அவ்யாகிருதமாயிருக்கிற ஆகாசத்தில் (வெட்டவெளியில்) ஓதமாயும் ப்ரோதமாயுமிருக்கிறது.

5. கார்கி—சரிதான்; இதைச் சொல்விட்டீர். உமக்கு நமஸ்காரம். என் இரண்டாவது கேள்விக்கு உத்தரம் சொல்லத் தயாராக விரும்.

யாக்ஞவல்க்யர்:—கேள்! கார்கி!

6. (முதற் கேள்வியை கார்கீ உறுதிப்படுத்தும் நிமித்தம் மற்றொருதரம் கேட்கிறாள்.)

7. (யாக்ஞவல்க்யர் முன்சொன்ன உத்தரம் கொடுத்தார்.) கார்கீ:—அந்த ஆகாசம் எதில் ஓதமாயும் ப்ரோதமாயும் இருக்கிறது? (இரண்டாவது கேள்வி.)

8. யாக்ஞவல்க்யர்:—ஹே! கார்கி! நீ எதைக் குறித்து கேட்கின்றனையோ அஃது அக்ஷரம் (நாசமற்றது) என்று பிரம்ம வித்துக்கள் சொல்லுகிறார்கள். அஃது எப்படிப்பட்டதெனில், ஸ்தூலமு மன்று; அணுவு மல்ல; குட்டையு மன்று; நெட்டையு மல்ல; சிவப்புவவர்ணமுள்ளது மன்று; ஈரமுள்ளது மன்று; வாயுவு மல்ல; ஆகாசமு மன்று; சேர்க்கையுள்ளது மல்ல; ரஸமுள்

ள்ளது மன்று; கந்தமுள்ளது மன்று ; கண்ணுள்ளது மல்ல ; காதுள்ளது மன்று;வாக்குள்ளது மல்ல; மனதுள்ளது மன்று; (லௌகிக) தேஜஸ் உள்ளது மல்ல ; பிராணனுள்ளது மன்று ; முகம் (துவாரம்) உள்ளது மல்ல ; அளவற்றது ; உள்ளற்றது; வெளியற்றது ; அஃது ஒன்றையும் உண்பதுமில்லை ; ஒன்றால் உண்ணப்படுவதுமில்லை (அஃதாவது யாதொரு விசேஷணத்தாலும் சொல்லப்படாத வஸ்து).

9. (இப்படிச்சொல்லப்படாதவஸ்துவாயிருந்தால், அஃது இருக்கிறது என்பது என்ன நிச்சயம்? அஃது இருப்பதாக எதனால் அறியக்கூடுமென்றால்—அநுமானப்பிரமாணத்தால், அஃதாவது அடையாளங்களால் அறியக்கூடுமென்பதைப்பற்றி இனிச் சொல்லப்படுகிறது.)

யாக்ஞவல்க்யர்:—இந்த அக்ஷர வஸ்துவின் உத்திரவினால் ஸூர்ய சந்திரர்கள் அவர் அவர்களின் தொழில்களை நடத்திக் கொண்டிருக்கிறார்கள். உதயாஸ்தமனங்களும், விருத்தி க்ஷயங்களுமெல்லாம், நியதமாய், நடந்துவருகின்றனவன்றோ ! இஃது ஓர் அடையாளம். இவருடைய ஆக்ஞையால் பூமியும், ஆகாசமும் தரிக்கப்பட்டவைகளாக விருக்கின்றன. பூமி கீழே விழாமலும், ஆகாசம் பிரியாமலும் இருக்கிறனவன்றோ ! இஃது ஓர் அடையாளம்.

இவருடைய ஆக்ஞையால், கால அவயவங்களான நிமிஷம், முஹூர்த்தம், பகல், இரவு, பக்ஷம், மாஸம், ருது, ஸம்வத்ஸரம் இவைகள், நியதமாய், அது அது வந்துகொண் டிருக்கின்றன. அந்த அந்தக் காலம் அதன் அதன் லக்ஷணப்படி இருக்கிறதன்றோ ! இஃது ஓர் அடையளம்.

இவருடைய ஆக்ஞையால், நதிகளும், நதங்களும், தங்கள் தங்கள் பர்வதங்களில் நின்றும் அந்த அந்தக் காலத்தில் பிரவஹித்துக்கொண்டிருக்கின்றன. இஃது ஓர் அடையாளம்.

இவருடைய ஆக்ஞையால் தானம் கொடுப்பவர்களை மனிதர்கள் புகழ்கிறார்கள். (அஃதாவது, தானம் கொடுப்பவன் பலத்தை யடைகிறான் ; அந்தப் பலத்துடன் அவனைச் சேர்த்து வைக்கிறவர் ஒருவர் இருக்கிறார் என்று தோன்றுகிறதல்லவா),அவ்

விதமே, யாகம் செய்பவர்களைத் தேவர்கள் பின்தொடருகிறார்கள். மேலும், தர்வியைப் பிதிருக்கள் பின்தொடருகிறார்கள். (அஃதாவது, தேவர்களும், பிதிருக்களும் யாக ஹோமாதிகளால் உண்டாகும் பலனைப் புஜித்து, அதனால் ஸந்தோஷமடைந்து மனிதர்களுக்கு ஸுகத்தைக் கொடுக்கிறார்கள். அந்த ஸுகங்களுடன் சேர்த்துவைப்பவர் ஒருவர் இருக்கவேண்டுமென்று தோன்றுகிறது ; மேலும், இதனால், யாக ஹோம தானாதி கர்மாக்களுக்கு ஈச்வரனிடமிருந்து பலபிராப்தி யுண்டென்றும், அவைகளைச் செய்யவேண்டு மென்றும், தேவர்களும் பிதிருக்களும் உண்டென்றும் ஏற்படுகிறது.)

10. (இதைக்கொண்டு அக்ஷரவஸ்து ஒன்று இருக்கிறதென்று ஏற்படுகிறது. அவரை யறியாவிடில் ஸம்ஸாரமுண்டு ; அறிந்தால் அந்த ஸம்ஸாரத்திற்குச் சேதம் (நீக்கம்) நியாயம் என்பதைப்பற்றிச் சொல்லப்படுகிறது.)

யாக்ஞவல்க்யர்:—இந்த அக்ஷர வஸ்துவை அறியாமல் எவனொருவன் இவ்வுலகத்தில், அநேக வருஷகாலம், ஹோமம், யாகம், தபஸ்களைச் செய்தாலும், அதற்கு முடிவு உண்டு. (அஃதாவது, அந்த கர்மாக்களின் பலனை அநுபவித்தபிறகு அந்தக் கர்மாக்கள் நசித்துவிடுகின்றன ; அறிந்து செய்தால் அநந்தமான பலன் கிடைக்கும்.) அந்த அக்ஷர வஸ்துவை யறியாமல் எவன் இவ்வுலகத்தை விட்டுப்போகிறானோ அவன் கிருபணன். (அஃதாவது, அடிமைபோல் ஸம்ஸாரத்திற்குட்பட்டு அடிக்கடி ஜனன மரணத்துடன் கெட்டு அலைவான்.) அறிந்து போனால் அவன் தான் பிராம்மணன். (பிரம்மத்தை யறிந்தவன் ; மோக்ஷத்தை யடைந்தவன் ; அவனுக்கு ஸம்ஸாரமில்லை.)

11. (அந்த அக்ஷர வஸ்து அசேதனம் என்று சொல்லுவோமெனில், அது கூடாதென்பதைப்பற்றிச் சொல்லப்படுகிறது.)

அந்த அக்ஷர வஸ்து பார்க்கப்படாதது, (ஆனால்) அது பார்க்கும் ; கேட்கப்படாதது, அது கேட்கும் ; நினைக்கப்படாதது, அது நினைக்கும் ; அறியப்படாதது, அஃது அறியும். பார்ப்

பவன் முதலியன இவரைக்காட்டிலும் வேறு இல்லை. (அனைத்தாவது எல்லாம் இவர்தான்.) அப்படிப்பட்ட இந்த வஸ்துவினிடத்தில்தான் ஆகாசம் ஓதமாயும் ப்ரோதமாயுமிருக்கிறது.

12. கார்கி:—'ஹே ! பிராம்மணர்களே ! கேளுங்கள் ! இந்த யாக்ஞவல்க்யரை நமஸ்காரம் செய்து அவரை விடவேண்டியது தான். இவரை உங்களுக்குள் ஜயிக்கிறவர் ஒருவருமில்லை' என்று சொல்லிவிட்டுக் கார்கி ஒழிவடைந்தாள்.

(மேற்கண்ட அந்தர்யாமி பிராம்மணத்தில், ஆத்மா எல்லாவற்றினிடத்திலும், சேதனதாதுவாக அந்தர்யாமியாக விருக்கிறதென்று சொல்லப்பட்டடிருக்கிறது. அவைகளில் ஒன்றற்கொன்று ஏதாகிலும் விசேஷமுண்டா? அல்லது எல்லாவற்றினிடமும் ஸாமானியமாய் (ஸமமாய்) இருக்கிறதா? என்ற இவ்விஷயத்தில் சிலர், அந்த அக்ஷர வஸ்துவின் ஈஷத்பிரசலதாவஸ்தா அந்தர்யாமி யென்றும்; அத்யந்தபிரசலதாவஸ்தா ஜீவன் என்றும்; சிலர், பிண்டம், ஜாதி, விராட், ஸூத்திரம், தைவம் என ஐந்து அவஸ்தைகள் உளவென்றும்; சிலர் மேற்படி ஐந்துடன், அவ்யாகிருதம், ஸாக்ஷி, க்ஷேத்ரக்ஞன் என்ற மூன்றும் சேர்ந்து எட்டு அவஸ்தைகள் உளவென்றும்; சிலர் இவைகள் எல்லாம் அதனுடைய சக்திகள் என்றும்; சிலர் இவைகள் அதனுடைய விகாரமென்றும் சொல்லுகிறார்கள். இந்த கல்பனைகள் எல்லாம் கூடாது. ஆனால் பேதங்கள் எவ்விதம் உண்டாகின்றன வெனில்—உபாதிபேதத்தால் உண்டாகின்றன. உபாதியன்றிக் கேவலம் சுத்தமாய் இருக்கும்பொழுது ஆத்மா பரபிரம்மம் என்று சொல்லப்படுகிறது. நித்ய நிரதிசய ஞானசக்தி யுள்ளபோது ஈசுவர னென்று சொல்லப்படுகிறது. அவித்யா காம கர்ம விசிஷ்ட கார்ய கரண உபாதி யுள்ளபோது ஸம்ஸாரி யென்றும் ஜீவன் என்றும் சொல்லப்படுகிறது. அவ்வண்ணமே, அந்த ஆத்மாவே தேவதா ஜாதி பிண்ட மனுஷ்ய திர்யக் ப்ரேதாதி கார்ய கரண உபாதிகளால் அந்த அந்தப் பெயருள்ளதாயும் அந்த அந்த ரூபமுள்ளதாயு மாகின்றது.)

---

பிராம்மணம் 9.

(பிருதிவி முதலியவைகளுக்கு ஒன்றிற்கொன்று மேலாக ஸூக்ஷ்மதாரதம்யக்ரமமாக ஓதப்ரோத பாவமும் ; பிரம்மத்திற்கு ஸர்வாந்தரத்வமும் ; அந்தபிரமத்திற்கு அவித்யாகிருதவிஷயங்களில் ஸூத்ரபேதங்களில் நியந்த்ருத்வமும் சொல்லப்பட்டது. வ்யாகிருத விஷயத்தில், அடையாளம் செவ்வையாகத் தெரியும் என்பதுபற்றி, அந்த பிரம்மத்தின் ஸாக்ஷாத் அபரோக்ஷத்வமானது, நியந்தவ்ய தேவதாபேத ஸங்கோசமூலமாம் அறியப்படுகின்றது என்று இந்த சாகல்யபிராம்மணம் ஆரம்பிக்கப்படுகிறது).

1. பிறகு, விதக்தர் என்ற சாகல்யர் யாக்ஞவல்க்யரைக் கேட்கிறார்:—'தேவர்கள் எவ்வளவு பெயர்கள்?'

யாக்ஞவல்க்யர்:—வைச்வதேவ மென்ற யாகமந்திரங்களில், நிவித் என்று ஒரு மந்திரமிருக்கிறது. அதில் எவ்வளவு சொல்லப்பட்டிருக்கின்றனவோ அவ்வளவு உள.

சாகல்யர் :—எவ்வளவு ? சொல்லும்.

யாக்ஞவல்க்யர்:—மூன்றும் மூன்று நூறும் ; மூன்றும் மூன்று ஆயிரமும்; (இன்னும் எண்ணிக்கையைக் குறைக்கிக் கேட்க கேட்க) 33-6-3-2-1½-1 தேவர்கள்.

சாகல்யர்:—303-ம், 3003-ம் என்று சொன்னீர்களே, அவர்கள் எவர்கள் ?

2. யாக்ஞவல்க்யர்:—இவர்கள் தேவர்கள் அல்லர் ; சரியான தொகை 83 தேவர்கள்தான். இவர்களின் விபூதிகள் (மஹிமைகள்) தான், மேற்சொன்ன 303-ம், 3003-ம், (மூலத்தில் கேள்வி உத்தரங்களாக விருந்தாலும் இவ்விடத்தில் முக்யப் பொருள்மாத்திரம் எழுதப்படுகிறது.) 33 தேவர்கள் யாரெனில், 8 வஸுக்கள், 11 ருத்ரர்கள் ; 12 ஆதித்யர்கள் ; 1 இந்திரன் ; 1 பிரஜாபதி: ஆக 33 தேவர்கள்.

3. 8 வஸுக்களாவன. அக்னி, பிருதிவி, வாயு, அந்தரிக்ஷம், ஆதித்யன், த்யௌ: (ஸ்வர்க்கம்), சந்திரன், நக்ஷத்திரங்கள்:

ஆக 8 வஸுக்கள். பிராணிகளின் கர்மபலனுக்குத் தக்கபடி, கார்ய கரண ஸங்காத ரூபமாக (சரீர இந்திரிய ஸமுதாய ஆகாரமாக) தாங்களே பரிணமித்துக்கொண்டும், இந்த ஜகத்தை ஆச்ரயித்துக்கொண்டும், அதைப் பிழைத்திருக்கும்படி செய்வதால் இவைகளுக்கு வஸுக்கள் என்ற பெயர் ஏற்பட்டது.

4. ருத்ரர்கள் 11—கர்ம, ஞான இந்திரியங்கள் 10; ஆத்மாவென்ற மனஸ் 1: ஆக 11 ருத்ரர்கள். இவர்கள் சரீரத்தை விட்டுப் போகும்பொழுது, மரித்துப்போனவனைச் சார்ந்தவர்களை அழும்படி செய்வதால் இவர்களுக்கு ருத்திரர்கள் என்ற பெயர் கிடைத்தது.

5. ஆதித்யர்கள் 12—ஒரு வருஷத்தின் அவயவங்களான 12 மாதங்களும், 12 ஆதித்யர்கள். இவர்கள், அடிக்கடி மாறிமாறி வந்துகொண்டு, பிராணிகளின் ஆயுளையும், கர்ம பலனையும் கிரஹித்துக்கொண்டு போவதால் இவர்களுக்கு ஆதித்யர்கள் என்ற பெயர் கிடைத்தது.

6. இந்திரனென்பது மேகம்; அஃதாவது, இடி; வஜ்ரம், வீர்யம், பலம்; (அஃதாவது பிராணிகளை எது பயப்படுத்துகிறதோ, ஹிம்ஸிக்கிறதோ அதுதான்).

பிரஜாபதி யென்பது யக்ஞம்; அஃதாவது யக்ஞபசு; யக்ஞம் பசு ஸாதனமானதால் பசுவென்று சொல்லப்படுகிறது.

7. 6 தேவர்கள் எவர்கள்? அக்நி, பிருதிவி, வாயு, அந்தரிக்ஷம், ஆதித்யன், த்யௌ:, இவை ஆறுதான்; மற்ற தேவர்களெல்லாம் இந்த ஆறுக்குள் அந்தர்பூதர்களாயிருக்கிறார்கள்.

8. 3 தேவர்கள் எவர்கள்? இந்த மூன்று உலகங்களும் தான்; (அஃதாவது) பூமி, அந்தரிக்ஷம், ஸ்வர்க்கம். பிருதிவியும் அக்நியும் சேர்ந்து முதலாவது; அந்தரிக்ஷமும் வாயுவும் சேர்ந்து இரண்டாவது, ஸ்வர்க்கமும் ஆதித்யனும் சேர்ந்து மூன்றாவது. இந்த மூன்றிற்குள் எல்லாம் அடங்கியுள்ளன.

2 தேவர்கள் எவர்கள்? அன்னமும் பிராணனும்; இவைகளுக்குள் எல்லாம் அடக்கம். $1\frac{1}{2}$ தேவன் எவர்? வாயுதான்.

9. வாயு ஒன்றுயிருக்கும்பொழுது எவ்விதம் $1\frac{1}{2}$ யென்று சொல்லப்படுகிறதெனில்—இந்த வாயுவிருந்தால் எல்லாம் விருத்தியடைகிறது ; அதனுல் $1\frac{1}{2}$ பங்குள்ளதென்று சொல்லப்படுகிறது.

1 தேவன் எவன்? பிராணன் ; இதை 'த்யத்' என்றும் சொல்லுகிறுர்கள். இதுதான் ஸர்வதேவதாத்மகமாயிருக்கிற பிரம்மம்; இந்தப் பிரகாரம் இஃது ஒன்றுகவும், பலவாகவுமிருக்கிறது.

10. (இப்பொழுது அந்த பிராணனுகிற பிரம்மம் 8 விதமாயிருக்கிறதென்று சொல்லப்படுகிறது.) எவருக்குப் பிருதிவி சரீரமாகவும், அக்நி லோகமாகவும், (பார்வை, நேத்திரம்) ஜ்யோதிஸ் மனஸாகவும் இருக்கின்றனவோ; அந்தப் புருஷனை, எல்லா ஆத்மாக்களுக்கும் பரமான (மேலான) அயநம் (ஆச்ரயஸ்தானம்) என்று எவன் அறிகிறுனே அவன்தான் (ஸத்யத்தை) யறிந்தவனென்று சொல்லப்படுவான்.

சாகல்யர்:—(என்ன! யாக்ஞவல்க்யரே! தெரியாமல் இருக்கும் பொழுது, மிகவும் தெரிந்ததுபோல் சொல்லுகிறீர்!) எவரை, எல்லா ஆத்மாக்களுக்கும் பராயணமாயிருப்பவராகச் சொல்லுகிறீரோ அவரை அப்படிப்பட்டவர் என்று நான் அறிவேன். அப்படிச் சொல்வது போதாது. இன்னும் எப்படிப்பட்டவர்? சொல்லும்!

யாக்ஞவல்க்யர்:—அவர் சாரீரபுருஷன்; (பார்த்திவ அம்சன்). இன்னும் என்ன விசேஷமிருக்கிறதென்று கேளும், வேண்டுமாயின்.

சாகல்யர்:—அந்தச் சாரீர தேவனுக்கு தேவதை எது? (அஃதாவது எதினின்று அஃது உண்டாயிற்று? வெளிக்கிளம்பிற்று?)

யாக்ஞவல்க்யர்:—அந்தத் தேவதை அமிருதம். (அஃதாவது, புஜிக்கப்பட்ட அன்னத்தின் ரஸம்; அந்த ரஸத்தால், மாதாவிடம் லோஹிதம் உண்டாகிறது; அது, த்வக், மாம்ஸ, ருதிரரூபமாக விருக்கிறது ; அந்த அன்ன ரஸத்தால் பிதாவிடத்தில் சுக்லமுண்டாகிறது; அது, அஸ்தி, மஜ்ஜை, சுக்லரூபமாக விருக்

கிறது; அதுதான் விதை; இந்த சுக்லமும் சோணிதமும் சேர்ந்து சிசு உண்டாகிறது. பார்த்திவாம்சம் பிராணன் உண்டாகிறான்.)

11. (இனிச் சொல்லப்படப்போகிற ஏழுவித பிராணன் விஷயத்தில், மூலத்தில் ஸம்பாஷணை ரூபமாக விருக்கிறது. இதில் விசேஷங்கள்மட்டும் எடுத்துக்காண்பிக்கப்படுகின்றன.)

கர்மா (ஸ்திரீ இச்சை) சரீரம்; ஹிருதயம் (புத்தி) பார்வை; ஜ்யோதிஸ் மனஸ்—இது காமமயபுருஷன்; ஸ்திரீ தேவதை.

(எட்டு விதத்திற்கும் ஜ்யோதிஸ் மனஸானதால் இனிச் சொல்லப்படும் ஏழனுடம் சேர்த்துக்கொள்க.)

12. ரூபங்கள் (வெண்மை, கறுப்பு முதலிய ஸாதாரண ரூபங்கள்) சரீரம்; சக்ஷுஸ் பார்வை:—இஃது ஆதித்ய புருஷன்; ஸத்யம் சக்ஷுஸ் தேவதை.

13. ஆகாசம் சரீரம்; சுரோத்திரம் பார்வை; இது பிராதிசுருத்க புருஷன் (கேட்டதற்கு மறுமொழி சொல்லுங்காலத்தில் அதிக கவனமாய்க்காதுகொடுத்துக்கேட்கப்படுகிறது; சுரோத்ரத்திற்குப் பிராதிசுருக்தம் என்று சொல்லப்படுகிறது). திக்கு தேவதை.

14. தமஸ் (இருள்) சரீரம்; ஹிருதயம் பார்வை; இது சாயாமயபுருஷன்; மிருத்யு (மரணம்) தேவதை.

15. ரூபங்கள் (பிரகாசங்களான ரூபங்கள்) சரீரம்; சக்ஷுஸ் பார்வை; இஃது ஆதர்சேபுருஷன் (பிரதிபிம்பபுருஷன்); அஸுः (பிராணன்) தேவதை.

16. ஜலம் சரீரம்; ஹிருதயம் பார்வை; அஃது அப்ஸு புருஷன்; வருணன் தேவதை.

17. ரேதஸ் சரீரம்; ஹிருதயம் பார்வை; இது புத்ரமய புருஷன்; பிரஜாபதி (பிதா) தேவதை.

18. (பிராணன் எட்டு விதமாகவும், ஒவ்வொன்றையும் தேவ, லோக, புருஷன் என்று மூன்றுவிதங்களாவும் பிரித்து, உபாஸநார்த்தம் சொல்லப்பட்டது. இப்பொழுது திக்கு விபாகமாக, ஐந்துவிதமாகப் பிரிக்கப்பட்ட பிராணனுக்கு ஆத்மாவிடம் உபஸம்ஹாரம் சொல்லப்படுகிறது.)

யாக்ஞவல்க்யர்:—ஹே! சாகல்யா! இந்த பிராம்மணர்கள் அணைந்துபோன நெருப்புத்தணல் உள்ள இடமாக உன்னை நினைக்கிறார்கள். (அஃதாவது, என்னால் தஹிக்கப்பட்டவனாக, என்னால் ஜயிக்கப்பட்டவனாக, தாங்கள் பயந்துகொண்டு நினைக்கிறார்கள். அஃது உனக்குத் தெரியவில்லை.)

19. சாகல்யர்:—நீர் என்ன இந்த பிராம்மணர்களைப்பற்றி அதிகமாய்ப்பேசுகிறீர்? நீர் எந்த (எப்படிப்பட்ட) பிரம்மத்தை யறிந்து இவ்விதம் பேசுகிறீர்?

யாக்ஞவல்க்யர்:—தேவர்களுடனும், அதன் அதன் பிரதிஷ்டை களுடனு மிருக்கின்ற திக்குகளை யறிந்திருக்கிறேன். (அஃதாவது, திக்கு விஷயமா யிருக்கிற பிரம்ம விக்ஞானம் எனக்குத் தெரியும்; நானே அந்த திக்கு பிரம்மமாயிருக்கிறேன்.)

சாகல்யர்:—அப்படி உமக்குத் தெரிந்தால் சொல்லும்?

20. சாகல்யர்:—இந்தக் கிழக்குத் திக்கில் எந்த தேவதை யிருக்கிறார்?

யாக்ஞவல்க்யர்:—ஆதித்ய தேவதை.

சாகல்யர்:—அந்த ஆதித்யன் எதில் பிரதிஷ்டிதனாயிருக்கிறான்?

யாக்ஞவல்க்யர்:—அத்யாத்மமா யிருக்கிற கண்ணினிட மிருந்து ஆதித்யன் உண்டாகிறான்.

சாகல்யர்:—அந்தக் கண் எளிதில் பிரதிஷ்டிதமாயிருக்கிறது?

யாக்ஞவல்க்யர்:—ரூபங்களில்; (சக்ஷுஸ் ரூபாத்மகமா யிருக்கிறது). கண்ணால் ரூபங்களைப் பார்க்கிறான்.

சாகல்யர்:—ரூபங்கள் எதில் பிரதிஷ்டிதமா யிருக்கின்றன?

யாக்ஞவல்க்யர்:—ஹிருதயத்தில்; (புத்தி மனஸ் இவைகளில்). புத்தியால் ரூபங்களைத் தெரிந்துகொள்கிறார்கள். புத்தியால் ரூபஸ்மரணம் உண்டாகிறது. (அஃதாவது, நேத்திரத்துடன் மனஸ்கூடச் சேராவிடில் நேத்திரம் பார்க்கமாட்டாது.)

சாகல்யர்:—இஃது இப்படி யிருக்கட்டும்.

21. (இனிச் சொல்லப்போகிற நான்கு திக்குகள் விஷயத்திலும் மூலத்தில் முன்போல் ஸம்பாஷணையுள்ளது. இதில் விசேஷங்கள்மாத்திரம் எழுதப்படுகின்றன.)

தெற்குதிக்கு—யமன் தேவதை; யமன் யக்ஞத்தில் பிரதிஷ்டிதன் (யக்ஞத்தால், கர்மாவால், யமன், மரணதேவதை ஸம்பவிக்கிறது); யக்ஞம் தக்ஷிணையில் பிரதிஷ்டிதம் (தக்ஷிணையால் யக்ஞம் முடிவுபெறுகிறது); இது சிரத்தையில் (சிரத்தையிருந்தால்தான் தக்ஷிணை கொடுக்கப்படும்). இது ஹிருதயத்தில் பிரதிஷ்டிதம்.

22. மேற்குதிக்கு—வருண தேவதை; இது ஜலத்திலும், ஜலம் ரேதஸிலும், ரேதஸ் ஹிருதயத்திலும் பிரதிஷ்டிதங்கள்.

23. வடக்குதிக்கு—ஸோம தேவதை (சந்திரனும், ஸோமலதையும் சேர்ந்தது); இது தீக்ஷையிலும் (யாகதீக்ஷைசெய்துகொண்டவன்தான் ஸோமலதைக்கு அதிகாரி), தீக்ஷை விஷயத்திலும், விஷயம் ஹிருதயத்திலும் பிரதிஷ்டிதங்கள்.

24. துருவதிக்கு (மேருவுக்கு மேலாக விருப்பதும், எப்பொழுதும் பிரகாசமுள்ளதுமான திக்கு)—அக்நி தேவதை; இது வாக்கிலும், வாக்கு ஹிருதயத்திலும் பிரதிஷ்டிதங்கள்.

சாகல்யர்:—ஹிருதயம் எதில் பிரதிஷ்டிதமாயிருக்கிறது?

25. ஹிருதயம் நம்முடைய சரீரத்தைவிட வேறு இடத்தில் இருக்கிறதென்று நீ நினைத்தால் உன் சரீரத்தை நாய்களும், பக்ஷிகளும் கொத்தித் தின்னும். (அஃதாவது ஹிருதயம் சரீரத்தில் பிரதிஷ்டிதம்.)

26. சாகல்யர்:—நீயும் (உன் சரீரமும்), ஆத்மாவும் எதில் பிரதிஷ்டிதங்களாயிருக்கின்றன?

யாக்ஞவல்க்யர்:—பிராணவாயுவில்; இஃது அபானவாயுவில் இது வ்யானவாயுவில்; இஃது உதானவாயுவில்; இது ஸமானவாயுவில்; அதுதான் பிரம்மம்; 'நேதி நேதி' என்று நிர்தேசம் செய்யப்பட்டிருக்கிறவர்; இந்திரியங்களால் கிரஹிக்கப்படாதவர்;

சிதறிப்போகாதவர் ; ஒன்றிலும் சேராதவர் ; ஒன்றிலும் கட்டுப் படாதவர் ; நாசமில்லாதவர்.

இந்த எட்டு ஆயதனங்கள், எட்டு லோகங்கள், எட்டு தேவர்கள், எட்டுப் புருஷர்கள் உளதோ, இந்த புருஷர்களை எவர், நிச்சயமாய் அவகாசப்படுத்தி, தன் ஆத்மாவில் கிரஹித்துக் கொண்டு (தன்னுத்மாவாகவே யறிந்துகொண்டு), உபாதிதர்மங் களைத் தாண்டியிருக்கிருரோ, அவராகிய உபநிஷத் பிரதிபாத்யனு யிருக்கிற புருஷனைப்பற்றி (ஹே ! சாகல்யா !) உன்னைக் கேட்கி றேன். நீ அதைச் சொல்லாவிடில் உன் தலை வெடித்துப்போகும்!

அதைச் சாகல்யர் தெரிந்துகொள்ளவில்லை; அவர், தலை வெடித்து இறந்துபோனுர். உடனே அவருடைய சிஷ்யர்கள், திருடர்கள் போல், அவருடைய எலும்புகளை ஸம்ஸ்காரம் செய்ய எடுத்துப்போய்விட்டார்கள்.

27. யாக்ஞவல்க்யர்:—'ஹே ! மஹான்களான பிராம்மணர் களே ! உங்களுக்குள் எவர் என்னைக்கேட்க இச்சிக்கிருரோ, அவர் அல்லது எல்லோரும் சேர்ந்து, என்னைக் கேட்கட்டும். அல்லது, நான், உங்களுக்குள் எவரையாவது, அல்லது எல்லோரையும் சேர்ந்தாவது, கேட்க நீங்கள் இச்சித்தால், கேட்கிறேன்.

28. ஆதலால், அடியிற்கண்ட ச்லோகங்களைக் கொண்டு தானே கேட்கிருர்.

யாக்ஞவல்க்யர்:—'உலகத்தில் ஒரு புருஷன், ஒரு விருக்ஷத் திற்கு ஸமானன் என்பது ஸத்யமான ஸங்கதி; எப்படியென்ருல், விருக்ஷத்தின் இலைகள் புருஷனுடைய மயிர்கள் ; பட்டை, மேல் தோல் ; பட்டையிலிருந்து பால் பெருகுவதுபோல், தோலிலி ருந்து ரக்தம் பெருகுகிறது ; சகலங்கள் (துண்டுகள்) மாம்ஸக் கட்டிகள் ; பட்டைக்குள்ளிருக்கிற வெள்ளைப்பட்டை, மேல் தோ லுக்குள்ளிருக்கிற வெள்ளைத்தோல்; மரக்கட்டைகள் எலும்புகள்; கட்டைக்குள்ளிருக்கிற வைரம், மஜ்ஜை ; (ஆனல் இப்பொழுது சொல்லப்படும் விஷயத்தில் வித்தியாஸமிருக்கிறது). மரம் வெட்

21. (இனிச் சொல்லப்போகிற நான்கு திக்குகள் விஷயத்திலும் மூலத்தில் முன்போல் ஸம்பாஷணையுள்ளது. இதில் விசேஷங்கள்மாத்திரம் எழுதப்படுகின்றன.)

தெற்குதிக்கு—யமன் தேவதை; யமன் யக்ஞத்தில் பிரதிஷ்டிதன் (யக்ஞத்தால், கர்மாவால், யமன், மரணதேவதை ஸம்பவிக்கிறது); யக்ஞம் தக்ஷிணையில் பிரதிஷ்டிதம் (தக்ஷிணையால் யக்ஞம் முடிவுபெறுகிறது); இது சிரத்தையில் (சிரத்தையிருந்தால்தான் தக்ஷிணை கொடுக்கப்படும்). இது ஹிருதயத்தில் பிரதிஷ்டிதம்.

22. மேற்குதிக்கு—வருண தேவதை; இது ஜலத்திலும், ஜலம் ரேதஸிலும், ரேதஸ் ஹிருதயத்திலும் பிரதிஷ்டிதங்கள்.

23. வடக்குதிக்கு—ஸோம தேவதை (சந்திரனும், ஸோமலதையும் சேர்ந்தது); இது தீக்ஷையிலும் (யாகாதிதீக்ஷைசெய்துகொண்டவன்தான் ஸோமலதைக்கு அதிகாரி), தீக்ஷை விஷயத்திலும், விஷயம் ஹிருதயத்திலும் பிரதிஷ்டிதங்கள்.

24. துருவதிக்கு (மேருவுக்கு மேலாக விருப்பதும், எப்பொழுதும் பிரகாசமுள்ளதுமான திக்கு)—அக்நி தேவதை; இது வாக்கிலும், வாக்கு ஹிருதயத்திலும் பிரதிஷ்டிதங்கள்.

சாகல்யர்:—ஹிருதயம் எதில் பிரதிஷ்டிதமாயிருக்கிறது?

25. ஹிருதயம் நம்முடைய சரீரத்தைவிட வேறு இடத்தில் இருக்கிறதென்று நீ நினைத்தால் உன் சரீரத்தை நாய்களும், பக்ஷிகளும் கொத்தித் தின்னும். (அஃதாவது ஹிருதயம் சரீரத்தில் பிரதிஷ்டிதம்.)

26. சாகல்யர்:—நீயும் (உன் சரீரமும்), ஆத்மாவும் எதில் பிரதிஷ்டிதங்களாயிருக்கின்றன?

யாக்ஞவல்க்யர்:—பிராணவாயுவில்; இஃது அபானவாயுவில் இது வ்யானவாயுவில்; இஃது உதானவாயுவில்; இது ஸமானவாயுவில்; அதுதான் பிரம்மம்; 'நேதி நேதி' என்று நிர்தேசம் செய்யப்பட்டிருக்கிறவர்; இந்திரியங்களால் கிரஹிக்கப்படாதவர்;

சிதறிப்போகாதவர் ; ஒன்றிலும் சேராதவர் ; ஒன்றிலும் கட்டுப் படாதவர் ; நாசமில்லாதவர்.

இந்த எட்டு ஆயதனங்கள், எட்டு லோகங்கள், எட்டு தேவர்கள், எட்டுப் புருஷர்கள் உளதோ, இந்த புருஷர்களை எவர், நிச்சயமாய் அவகாசப்படுத்தி, தன் ஆத்மாவில் கிரஹித்துக் கொண்டு (தன்னுத்மாவாகவே யறிந்துகொண்டு), உபாதிதர்மங் களைத் தாண்டியிருக்கிறுரோ, அவராகிய உபநிஷத் பிரதிபாத்யனு யிருக்கிற புருஷனைப்பற்றி (ஹே! சாகல்யா!) உன்னைக் கேட்கி றேன். நீ அதைச் சொல்லாவிடில் உன் தலை வெடித்துப்போகும்!

அதைச் சாகல்யர் தெரிந்துகொள்ளவில்லை; அவர், தலை வெடித்து இறந்துபோனுர். உடனே அவருடைய சிஷ்யர்கள், திருடர்கள் போல், அவருடைய எலும்புகளை ஸம்ஸ்காரம் செய்ய எடுத்துப்போய்விட்டார்கள்.

27. யாக்ஞவல்க்யர்:—'ஹே! மஹான்களான பிராம்மணர் களே! உங்களுக்குள் எவர் என்னைக்கேட்க இச்சிக்கிறுரோ, அவர் அல்லது எல்லோரும் சேர்ந்து, என்னைக் கேட்கட்டும். அல்லது, நான், உங்களுக்குள் எவரையாவது, அல்லது எல்லோரையும் சேர்ந்தாவது, கேட்க நீங்கள் இச்சித்தால், கேட்கிறேன்.

28. ஆதலால், அடியிற்கண்ட ச்லோகங்களைக் கொண்டு தானே கேட்கிறுர்.

யாக்ஞவல்க்யர்:—'உலகத்தில் ஒரு புருஷன், ஒரு விருக்ஷத் திற்கு ஸமானன் என்பது ஸத்யமான ஸங்கதி; எப்படியென்றுல், விருக்ஷத்தின் இலைகள் புருஷனுடைய மயிர்கள் ; பட்டை, மேல் தோல் ; பட்டையிலிருந்து பால் பெருகுவதுபோல், தோலிலி ருந்து ரக்தம் பெருகுகிறது ; சகலங்கள் (துண்டுகள்) மாம்ஸக் கட்டிகள் ; பட்டைக்குள்ளிருக்கிற வெள்ளைப்பட்டை, மேல் தோ லுக்குள்ளிருக்கிற வெள்ளைத்தோல்; மரக்கட்டைகள் எலும்புகள்; கட்டைக்குள்ளிருக்கிற வைரம், மஜ்ஜை ; (ஆனுல் இப்பொழுது சொல்லப்படும் விஷயத்தில் வித்தியாஸமிருக்கிறது). மரம் வெட்

டுப்பட்டால், மறுபடியும் புதுத் தளிராகத் தளிர்க்கிறது; அது போல் புருஷனிடம் நாம் பிரத்யக்ஷமாகப் பார்க்கவில்லை. ஆதலால் ஒரு கேள்வி இருக்கின்றது. (அஃதாவது) இறந்துபோன மனுஷ்யன் மறுபடியும் எங்கிருந்து உண்டாகிறான்? இதற்கு, ரேதஸிலிருந்து உண்டாகிறான் என்று சொல்லக்கூடாது. ஏனென்றால், உயிருள்ள மனுஷ்யனிடத்திலிருந்து மாத்திரம்தான் ரேதஸ் உண்டாகிறது. மேலும், விருக்ஷவிஷயத்தில், மரத்தினின்றும் புதிதாய்த் தளிர்ப்பதுமாத்திரமல்ல; விதையினின்றும் விருக்ஷம் மறுபடியும் உண்டாகிறது. ஆயினும், விதை வேர்கள் ஸஹிதமாய் விருக்ஷத்தை நாசம்செய்துவிட்டால், அப்பொழுது விருக்ஷம் மறுபடியும் உண்டாவதில்லை. ஆதலால், வெட்டுப் பட்ட மனுஷ்யன் மறுபடி எதினின்று உண்டாகிறான்? தானாகப் பிறக்கிறான் என்றும் சொல்லக்கூடவில்லை; ஏனென்றால், நசித்தது எப்படித் தானாக உண்டாகும்? ஆதலால், எவர் இவனை மறுபடியும் உண்டுபண்ணுகிறார்?'

(இதற்குப் பிராம்மணர்கள் உத்தரம் சொல்லாததினால், இவர்கள் யாக்ஞவல்க்யரால் ஜயிக்கப்பட்டார்கள். உடனே ராஜா கொடுத்த பசுக்களை இவர் ஓட்டிக்கொண்டுபோய்விட்டார். இத்துடன்கதை முடிவுபெற்றது.)

(பிறகு, இந்தக் கேள்விக்கு உத்தரம் வேதமே சொல்லுவதாவது.)

"விக்ஞானமாயும், ஆனந்தமாயுமிருக்கப்பட்டதும், பிரம்மமாயும் கர்மடனுக்கும் ஆத்மவித்துக்கும் பராகதியாயும் இருக்கப்பட்ட ஆத்மாதான் மறுபடியும் இவனை உண்டுபண்ணுகிறார்".

(ஆனந்த சப்தம் பிரம்மத்திற்கு விசேஷணமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இதைப்பற்றிச் சுருதிவாக்யங்கள் அநேக மிருக்கின்றன. அந்த ஆனந்தம் அறியப்பட்டால் அந்த விசேஷணம் சரியாக விருக்கும். இதற்கு விரோத சுருதிகளும் அநேகம் இருக்கின்றன. 'எல்லாம் ஒன்று, இரண்டாவது இல்லை' யென்ற சுருதி யிருக்கிறதல்லவா? அப்படி யிருந்தால் ஆனந்தம் அறியப்படுகிற

விஷயத்தில், அறிபவன் ஒருவன், அறியப்படுகிற ஆனந்த வஸ்து ஒன்று, என இரண்டு ஏற்படுகின்றன. அப்பொழுது ஏகத்வ சுருதிக்கு விரோதம் ஏற்படுகிறது. ஆதலால், இந்த விஷயத்தில் கொஞ்சம் விசாரணை செய்யவேண்டியது அவசியமா யிருக்கிறது. மேலும், மோக்ஷத்தில் 'அறியப்படுகிற ஸுகம் இல்லை' யென்று சிலரும், 'அறியப்படுகிற நிரதிசயஸுகம் இருக் கிறது' என்று சிலரும் சொல்லுகிறார்கள். ஏகத்வ விஷயத் தில் விக்ஞானத்திற்கு (அறிவுக்கு) உபபத்தி இல்லை யென்று சொல்லக்கூடாது; சப்தப்பிரமாணமிருப்பதால் கூடாது. அக் நிக்கு குளுமைக் குணமும், ஜலத்திற்கு உஷ்ணகுணமும் இருக்கிற தென்று ஒரு வசனமிருந்தால் அது யதார்த்தத்தில் ஸம்ப விக்குமா? ஆதலால், சப்தப்பிரமாணம் போதுமா? பிரத்யக்ஷப் பிரமாணம் வேண்டாமா? என்ற ஸந்தேஹம் வர, ஸமாதானம் இருக்கிறது. பிரத்யக்ஷப் பிரமாண மிருக்கிறது; எப்படி யெனில், 'நான் ஸுகியாயிருக்கிறேன்' என்று சொல்லுகிறான். தன்னு டைய ஸுகத்தைத் தானே அறிகிறான். ஆதலால், பிரம்ம விக்ஞானமான ஆனந்தத்தை பிரம்மவித் தானே அறிகிறான்; (அஃதாவது தன்னைத் தானே அறிகிறான்).

---

# நான்காம் அத்தியாயம்

---

## பிராம்மணம் 1.

1. ஒரு நாள் விதேஹ ராஜாவான ஜனகர் ஸிம்ஹாஸனத்தி லிருக்கும்போது, யாக்ஞவல்க்யர் அங்கு வந்தார்.

ஜனகர்:—மறுபடியும் எதற்காக வந்தீர்? இன்னும் பசுக்களை இச்சித்துக் கேட்கவா, அல்லது, அதி ஸூக்ஷ்மங்களான கேள்வி களை என்னிடம் கேட்கவா?

யாக்ஞவல்க்யர்:—இரண்டு விஷயகளுக்குமாகத்தான்.

2. உனக்கு எந்த ஆசாரியராவது ஏதாவது சொல்லியிருந் தால், அதைச் சொல்லும், கேட்கிறேன்.

ஜனகர்:—ஜித்வா என்ற சைலினி, வாக்கே பிரம்மமென்று எனக்குச் சொன்னார்.

யாக்ஞவல்க்யர்:—உபநயநம்வரையில் மாதாவால் போஷிக்கப் பட்டும், சாஸிக்கப்பட்டும், அதற்குமேல், ஸமாவர்த்தன பர்யந்தம் பிதாவால் சாஸிக்கப்பட்டும், பிறகு, ஆசாரியனால் போதிக்கப் பட்டும், இவ்விதம் கிரமமாக ஞானத்தையடைந்தவன் அறிந்து சொல்லுகிற ஒப்பந்தம் அந்த சைலினி சொன்னார். அது சரி தான்; வாக்கில்லாத ஊமையனுக்கு என்ன விருக்கிறது? (அஃதா வது, ஊமையனுக்கு ஞானம் உண்டாகமாட்டாது.) அந்த பிரம் மத்திற்கு ஆயதனம் (சரீரம்) இதுவென்றும், பிரதிஷ்டை (முக் காலத்திலும் ஆச்ரயம்) இதுவென்றும் அவர் சொன்னாரா?

ஜனகர்:—அவர் எனக்குச் சொல்லவில்லை.

யாக்ஞவல்க்யர்:—அப்பொழுது, காற்பங்குதான் பிரம்மத் தைப் பற்றிச் சொல்லியிருக்கிறார். (முழுவதும் சொல்லவில்லை; இன்னும் முக்காற்பங்கு இருக்கிறதே. இந்தக் காற்பங்கு தெரிந் தால்மட்டும் போதாதே; அவ்வளவு பலன் யடையமுடியாதே.)

ஜனகர்:—உங்களுக்குத் தெரிந்தால் சொல்லுங்கள்.

யாக்ஞவல்க்யர்:—வாக்குத் (வாய்)தான் ஆயதனம் (சரீரம்); ஆகாசம் (அவ்யாகிருத ஆகாசம்) பிரதிஷ்டை. இதை பிரக்ஞை யாக (அறிவு என்று) உபாஸிக்கவேண்டும்.

வாக்கால் நம்முடைய பந்துவென்று அறியப்படுகிறது. அதுபோல், நான்கு வேதங்களும், இதிஹாஸ, புராண வித்யையும், உபநிஷத்துக்கள், ச்லோகங்கள், மந்திரங்கள், இஷ்டம், ஹுதம், அசிதம், பாயிதம், இந்த ஜன்மம், வருகிற ஜன்மம் இவைகளும், எல்லா பூதங்களும் அறியப்படுகின்றன. ஆதலால் வாக்குத்தான் பரபிரம்மம். வாக்கு பிரம்மவித்யையை விடுகிறதில்லை. இப்படி யறிந்து வாக்கை உபாஸிக்கிறவனை எல்லா பூதங்களும் ரக்ஷிக்கின்றன. சரீரபதனத்திற்குப் பிறகு இவன் தேவனாகி தேவத்வத்தை யடைகிறான்.

ஜனகர்:—இந்த வித்யையைச் சொன்னதற்காக உமக்கு யானைக்குச் சமானமாயிருக்கின்ற ஆயிரம் ரிஷபங்களைக் கொடுக்கிறேன்.

யாக்ஞவல்க்யர்:—சிஷ்யனைக் கிருதார்த்தனாகச் செய்யாமல் அவனிடமிருந்து ஒன்றும் பெறக்கூடாதென்று என் பிதா எண்ணி யிருந்தார். (அந்தப்படி என் அபிப்பிராயமும் உளது.)

3. (மூலத்தில் கீழ்ச்சொல்லியபடி ஸம்பாஷணைரூபமாய் உள்ளது. இதில் விசேஷங்கள் மாத்திரம் எழுதப்படும்.)

பிராணன் (வாயு தேவதை) பிரம்மம்; அதற்குப் பிராண வாயுவே சரீரம்; ஆகாசம் பிரதிஷ்டை; அதைப் பிரியவஸ்துவாக உபாஸிக்கவேண்டும். பிராணனைக் காப்பாற்ற எதை வேண்டுமானாலும் செய்கிறான்; அயாஜ்யனை யாகம் செய்விக்கிறான்; வாங்கத் தகாததை வாங்கிக்கொள்ளுகிறான்; பிராணன் போய் விடுமென்று, பயந்துகொண்டு, வதாசங்கைப்படுகிறான். (மற்ற பாகம் முன் போல்.)

4. (வார்ஷ்ணர்):—சக்ஷுஸ் (ஆதித்ய தேவதா) பிரம்மம்; நேத்திரம் சரீரம்; ஆகாசம் பிரதிஷ்டை; ஸத்யவஸ்துவாக உபாஸிக்கவேண்டும்; கண்ணாலே பார்க்கிறான்; பார்க்கப்படுவதுதான் நிஜம் என்று சொல்லுகிறார்கள்.

5. (பாரத்வாஜர்):—சுரோத்ரம் (திக் தேவதா) பிரம்மம்; காது சரீரம்; ஆகாசம் பிரதிஷ்டை; அநந்தமாக உபாஸிக்க வேண்டும்; திக்குகளுக்கு முடிவில்லை; ஒரு திக்கில் போகப் போக இடம் கொடுத்துக்கொண்டேயிருக்கும்.

6. (ஸத்யகாமர்):—மனஸ் (சந்திரதேவதை) பிரம்மம்; மனஸ் சரீரம்; ஆகாசம் பிரதிஷ்டை; ஆனந்தமாக உபாஸிக்க வேண்டும்; மனஸினால் ஒரு ஸ்த்ரீ பிரார்த்திக்கப்படுகிறாள்; அவளிடத்தில் அநுரூபமான புத்திரன் உண்டாகிறான்; இதுதான் ஆனந்தம்.

7. (சாகல்யர்):—ஹிருதயம் (பிரஜாபதி தேவதை) பிரம்மம்; ஹிருதயம் சரீரம்; ஆகாசம் பிரதிஷ்டை; ஸ்திதியாக உபாஸிக்க வேண்டும்; ஹிருதயத்தில் எல்லாம் அடக்கம்.

---

## பிராம்மணம் 2.

1. ஜனகர் ஆஸனத்திலிருந்து எழுந்து, யாக்ஞவல்க்யரின் ஸமீபம்சென்று, நமஸ்காரம் செய்து, தனக்கு உபதேசம் செய்யும்படி யாக்ஞவல்க்யரைக் கேட்டார்.

யாக்ஞவல்க்யர்:—உலகத்தில் ஒரு பெரிய மார்க்கத்தை, ஸ்தல வழியாக, ரதமூலமாக, அல்லது ஜலவழியாகக் கப்பல் மூலமாகக் கடந்து எவ்விதம் ஒருவன் குறிப்பிட்ட இடம் போய்ச் சேருவானோ அவ்விதம் இந்த உபநிஷத்துக்களைக் கொண்டு இந்த ஸகுண பிரம்மங்களை யறிந்து ஸமாஹித ஆத்மாவாக விருக்கிறீர். ஒருவன் வேதாத்யயனம் செய்தவனாகவும், பூஜ்யனாகவும், பணக்காரனாகவும், உபநிஷத்துக்களைக் கேட்டவனாகவும் இருந்தபோதிலும், அவனுக்கு பிரம்மக்ஞானமில்லாவிடில், அவன் கிருதார்த்தனாகமாட்டான். ஆதலால், கேளும், இந்த தேஹத்தை விட்டபிறகு ஸமாஹிதாத்மாவாயிருக்கிற நீர் எங்கே போகப் போகிறீர்? (எந்த வஸ்துவை யடையப் போகிறீர்.) உமக்குத் தெரியுமா?

ஜனகர்:—அஃது எனக்கு தெரியாது.

யாக்ஞவல்க்யர்:—அதை நான் சொல்லுகிறேன்.

ஜனகர்:—சொல்லும்.

2. யாதொரு ஆத்மா வலது கண்ணில் அந்தர்கத புருஷனாக விருக்கிறானோ, ஆதித்யாந்தர்கத புருஷனோ அவருக்கு 'இந்த:' (பிரகாசமுள்ளவர்) என்று பெயர். அவரை 'இந்திரன்' என்றும் பரோக்ஷமாகச் சொல்லுகிறார்கள். (ஜாக்ரத் அவஸ்தையில், ஆத்மா, வைச்வாநரன் என்ற பெயருள்ளவனாய், வலது கண்ணில் அந்தர்கதமாயிருக்கிறார். அதை யறிந்தவனாக, அதுவாக, நீர் இருக்கிறீர்.)

3. இந்த இடது கண்ணில் புருஷரூபமாயிருக்கப்பட்ட வஸ்து மேற்படி வைச்வாநரனுடைய பத்நீ, விராட்ஸ்வரூபம் (அன்னம், போஜ்யவஸ்து). (அஃதாவது, மேற்படி வைச்வாநரன் அத்தா, இந்திரன்; மேற்படி பத்னீ, விராட், அன்னம், இந்திராணீ ; இந்த இரண்டும் ஸ்வப்நாவஸ்தையில் ஒன்றாய்க் கலந்திருக்கின்றன ; அப்பொழுது இந்த ஆத்மாவிற்கு 'தைஜஸன்' பிரகாசரூபன் என்று பெயர்.) இவர்களின் ஸ்தானம் எதுவெனில், அந்தர்ஹ்ருதய ஆகாசம் (ஹிருதயத்தின் மாம்ஸபிண்டமத்தியிலிருக்கிற வெளி). இவர்களுக்கு அன்னம் எதுவென்றால், அந்தர்ஹிருதயத்திலிருக்கிற ரக்தக்கட்டி. (அஃதாவது, உண்ணப்படுகிற அன்னம் இரண்டு விதமாக பரிணமிக்கின்றது. ஸ்தூலமாயிருக்கிற ஒன்று கீழே விழுந்துவிடுகிறது ; மற்றொன்று அக்நியால் பக்வப்பட்டு இரண்டு விதமாகிறது. மத்யம ரஸமானது ரக்தம் முதயலியன ஆகி இந்தப் பாஞ்சபௌதிகமாயிருக்கிற சரீரபிண்டத்தைப் பலப்படுத்துகிறது. மற்றும் அதி ஸூக்ஷ்மமாயிருக்கிற ரஸம் மேற்சொன்ன ரக்தக் கட்டியாக பரிணமிக்கிறது. இஃது அன்னமாயிருக்கிறது; அஃதாவது, ஹிருதயத்தில் இந்திரன், இந்திராணீ யென்று பெயர் பெற்று இரட்டையாகவும், தைஜஸனென்று பெயருள்ளதாகவும், லிங்காத்மாவாகவுமிருக்கிற ஜீவனுக்கு ஸ்திதி ஹேதுவாகவுமிருக்கிறது. (அஃதாவது, அன்னமில்லாவிட்டால், ஜீவன் தேஹத்தில் தங்கமாட்டாது.) இவர்களுக்கு 'பிராவணம்' (மறைவு, படுதா) எதுவென்றால், அந்தர்ஹிருதயத்தில் வலைபோல் எதுவுண்டோ அதுதான் (அஃதாவது அநேக நாடிசித்ரங்கள்). இவர்களுக்கு, (ஸ்வப்ன ஜாக்ரத் காலங்களில் ஸஞ்சரிக்கின்ற) மார்க்கங்கள் யாவை யெனில்—ஹிருதய தேசத்திற்கு மேல்போகும் நாடி ;

எப்படி உலகத்தில் மயிர்கள் அநேக ஆயிரம் பின்னங்களாகவும், ஸூக்ஷ்மங்களாகவு மிருக்கின்றனவோ அப்படி 'ஹிதா' என்று பெயருள்ள அநேக ஸூக்ஷ்ம நாடிகள் ஹிருதயத்தினின்றும் கிளம்புகின்றன; அதில் பிரதிஷ்டிதங்களா யிருக்கின்றன. இந்த நாடிகள் வழியாக அன்னம் போகின்றது; ஆத்மாவும் போகிறார். ஆதலால், தைஜஸன், வைச்வாநரனைக்காட்டிலும் ஸூக்ஷ்மான்ன உபசிதனாயிருக்கிறான்.

4. (இப்படிபட்ட தைஜஸன், ஸுஷுப்தியவஸ்தையில், கேவலம் பிராணனாய்மாத்திரம் இருக்கிறான்; அஃதாவது சேஷ்டையின்றி இருக்கிறான். அப்பொழுது இவனுக்கு 'பிராக்ஞன்' என்று பெயர்.)

அப்பொழுது இவனுக்குக் கிழக்குதிக்கு, கிழக்குப் பிராணன்கள்; அப்படியே ஒவ்வொருத்திக்கு விஷயத்திலும்; எல்லாத்திக்குகளும் எல்லா பிராணன்களாயிருக்கின்றன. (இந்தப் பிரகாரம், பிரம்மவித், ஸர்வாத்மகமாயும், பிராணாத்மகமாயுமிருக்கிற பிரக்ஞாத்மத்வத்தை யடைந்து, முடிவில் துரீயாவஸ்தையில் பிரத்யக் ஆத்மாவாகிய) 'நேதி, நெதி' என்று குறிக்கப்படுகிற பர பிரம்மதத்வத்தை யடைகிறான். அப்பொழுது அவன் சிதறிப் போவதில்லை; சேருவதில்லை; வருத்தப்படுவதில்லை; நசிப்பதில்லை; அப்படிப்பட்ட அபயத்தை (ஜனன மரணாதி நிமித்த பயசூன்யமான வஸ்துவை), ஹே! ஜனக! நீ அடையப் போகிறாய், கேள்!

ஜனகர்:—எந்த அபயத்தை எங்களுக்கு அடையும்படி செய்தீரோ அந்த அபயம் உம்மையும் அடையட்டும்; உமக்கு நமஸ்காரம். இந்த உபதேசத்திற்கு நான் எதைக் கொடுக்கப்போகிறேன்! இதோ! இந்த விதேஹ ராஜ்யம் இருக்கிறது; நான் இருக்கிறேன் அடிமையாக (யதேஷ்டம் எதையும் எடுத்துக் கொள்ளலாம்).

---

## பிராம்மணம் 3.

(பிரம்மத்தைத் தெரிந்துகொள்ளவேண்டியதற்காக, விஸ்தாரமாக, அதிகத் தர்க்கத்துடன், ஜாக்ரத், ஸ்வப்னாதி துவாரமாய் இப்பொழுது

சொல்லப்படுகிறது. ஆத்மாவிற்கு ஸத்பாவம் இல்லையென்ற சங்கையை நிவர்த்தி செய்து, அவருக்கு வ்யதிரிக்தத்வம், சுத்தத்வம், ஸ்வம் ஜ்யோதிஷ்ட்வம், அலுப்தசக்திஸ்வரூபத்வம், நிரதிசயானந்த ஸ்வாபாவ்யம், அத்வைதத்வம் இவைகளை யறியவேண்டியதென்று இந்த பிராம் மணம் ஆரம்பிக்கப்படுகிறது.

இவைகளின் விதி தெரிந்துகொள்ளவேண்டிய நிமித்தம் ஒரு கதையாகச் சொல்லப்படுகிறது. வித்யாஸ்துதி நிமித்தம் வரதானாதிகள் ஸூசிபிக்கப்படுகின்றன.)

1. யாக்ஞவல்க்யர் (ஒருகாலத்தில்) ஜனகரிடம் சென்றார். ராஜாவுக்குத் தான் ஒன்றும் சொல்லுவதில்லை என்ற எண்ணத்துடன் (தன் யோக க்ஷேமார்த்தம்) போனார். (அவர் அப்படி ஸங்கல்பம் செய்துகொண்டு போனாலும், ஜனகரால் கேட்கப்பட்ட கேள்விகளுக்கு அவர் உத்தரம் சொல்லும்படி நேரிட்டது; (ஏனெனில்) முன்பு அக்நிஹோத்ர விஷயமாய் இருவருக்கும் ஸம்வாதம் நடந்த காலத்தில் யாக்ஞயவல்க்யர் (ஜனகரிடம் ஸந்தோஷப்பட்டு) ஜனகருக்கு வரம் கொடுத்திருந்தார். அது கேள்விகளைக் கேட்கிற வரம்; அந்த வரத்தை ராஜா இப்பொழுது உபயோகப்படுத்திக்கொண்டார்.

2. ஜனகர்:—இந்தப் புருஷன் (ஜீவன்) எந்த ஜ்யோதிஸாக விருக்கிறான்? (அஃதாவது, எந்த ஜ்யோதிஸால், எந்த ஜ்யோதிஸின் உதவியைக்கொண்டு வ்யவஹாரத்தைச் செய்கிறான்?)

யாக்ஞவல்க்யர்:—ஆதித்ய ஜ்யோதிஸ்; இந்த ஜ்யோதிஸின் உதவியால் பிழைத்திருக்கிறான், எல்லாவற்றையும் கண்ணால் பார்க்கிறான், வேண்டிய விடங்களுக்குப் போகிறான், காரியங்களைச் செய்கிறான், திரும்பவருகிறான். (சக்ஷுரிந்திரியத்திற்கு ஸூரிய பிராகாசத்தின் உதவியிருந்தால்தான் அதன் தொழிலை செவ்வையாய் நடத்தும்.)

ஜனகர்:—இது சரிதான்.

3. ஜனகர்:—ஸூரியன் அஸ்தமித்துவிட்டால், அப்பொழுது இந்த ஜீவனுக்கு எந்தவிதமான ஜ்யோதிஸ் உண்டு?

யாக்ஞவல்க்யர்:—சந்திர ஜ்யோதிஸ்; அதன் வெளிச்சத்தைக்கொண்டு எல்லாவற்றையும் நடத்துகிறான். (இதுவும் சக்ஷுரிந்திரியத்திற்கு உதவி.)

4. ஜனகர்:—ஸூர்ய சந்திரர்களிருவரும் அஸ்தமித்துப் போனால் எந்த ஜ்யோதிஸ் உண்டு?

யாக்ஞவல்க்யர்—அக்நி ஜ்யோதிஸ்; அக்நியாகிற தீபம் முதலியவற்றின் வெளிச்சத்தைக்கொண்டு எல்லாவற்றையும் நடத்துகிறான். (இதுவும் சக்ஷுரிந்திரியத்திற்கு உதவி.)

5. ஜனகர்:—மேற்படி மூன்று ஜ்யோதிஸ்களும் இல்லாவிடில் அப்பொழுது இந்த ஜீவனுக்கு எந்த ஜ்யோதிஸ் உளது?

யாக்ஞவல்க்யர்:—வாக் ஜ்யோதிஸ்; (அஃதாவது, சப்தம்; ஒரு வெளிச்சமுமில்லாமல் சுத்த இருளாயிருக்கும் காலத்தில் சக்ஷுரிந்திரியத்திற்குத் தொழில் இல்லாமலிருக்கிறது. அப்பொழுது சுரோத்ரேந்திரியத்திற்குத் தொழிலுண்டாகிறது). அதைக்கொண்டு வ்யவஹாரத்தை நடத்துகிறான். (அங்ஙனமே, கந்தத்தால் கிராணேந்திரியத்திற்கும், ரஸத்தால் ரஸநேந்திரியத்திற்கும், ஸ்பரிசத்தால் த்வக் இந்திரியத்திற்கும் தொழில் உண்டாகிறது.)

6. ஜனகர்:—மேற்படி ஜ்யோதிஸ்களெல்லாம் இல்லாமல் போனால் அப்பொழுது ஜீவனுக்கு எந்த ஜ்யோதிஸ் உளது?

யாக்ஞவல்க்யர்:—ஆத்மாவாகிற ஜ்யோதிஸ்; இதனால் பிழைத்திருக்கிறான்; எல்லா வ்யவஹாரத்தையும் நடத்துகிறான்.

(ஜாகிரத் விஷயத்தில், சக்ஷுஸ் முதலிய பஹிர்முகங்களாயிருக்கின்ற காரணங்கள் ஆதித்யாதி ஜ்யோதிஸ்களால் அநுக்கிரஹிக்கப்பட்டால், அப்பொழுது இந்த ஜீவனுக்கு வ்யவஹாரம் அதிகத் தெளிவாக ஏற்படுகிறது; இந்தப் பிரகாரம், ஜாக்ரத் காலத்தில், தன்னுடைய அவயவக் கூட்டத்திற்கு வேறாக விருக்கிற ஜ்யோதிஸால் காரிய ஸித்தியாகின்றது. ஆதலால், எல்லா பாஹ்ய ஜ்யோதிஸ்களும் அஸ்தமித்துப்போய்விட்டால், ஸ்வப்ன ஸுஷுப்தி காலங்களிலும், அப்படியே சில நேரம் ஜாக்ரத் காலத்திலும், தன்னுடைய அவயவக் கூட்டத்திற்கு வேறாக விருக்கிற ஒரு ஜ்யோதிஸால் காரிய ஸித்தியாகின்றது; எப்படியென்றால், ஸ்வப்னத்தில் பந்துவின் வரவு முதலிய யாவற்றையும் பார்க்கிறான்; தூங்கி எழுந்திருந்த பிறகு தான் ஸுகமாய்த் தூங்கினதாகச் சொல்லுகிறான். அப்பொழுது ஏதோ ஒரு ஜ்யோதிஸ் வ்யதிரிக்தமாக விருந்துதானே இவைகளையெல்லாம் அவன் அறிந்திருக்கவேண்டும். ஆதலால், காரிய காரண ஸ்வாவய ஸங்காத வ்யதிரிக்தமாயும், ஆதித்யாதி பாஹ்ய ஜ்யோதிஸ்போல்

வேறு ஒன்றினுலும் இல்லாமல் தானே பிரசகாசமுள்ளதாயும் இருக்கிற ஒரு ஜ்யோதிஸ் இந்த சரீரத்திற்குள் இருக்கவேண்டும். அதுதான் ஆத்ம ஜ்யோதிஸ் என்று சொல்லப்படுகிறது.

மேலும், இந்த ஜ்யோதிஸ் ஆதித்யாதி ஜ்யோதிஸ்களைக்காட்டிலும் விலக்ஷணமாயும், பூதஸம்பந்தமில்லாமலும் இருக்கிறது. சக்ஷுராதிகளினுல் கிரஹிக்கக் கூடாததாயுமிருக்கிறது. ஆதலால், இதுதான் எல்லாவற்றிக்கும் ஹேதுவாயிருக்கிறது. இப்படிப்பட்ட விலக்ஷணமான ஜ்யோதிஸ் ஒன்று இல்லையென்று சொல்லக்கூடாது; தேஹத்திற்கே தர்சனுதி கிரியையிருக்கிறது, வேறு வஸ்துவில்லையென்றும் சொல்லக்கூடாது. அப்படியிருந்தால், ஜாக்ரத் காலத்தில் காணப்பட்ட வஸ்துவிற்கு மாத்திரம்தான் ஸ்வப்னத்தில் தர்சனம் கிடைக்கும்; அப்படியில்லையே; பிறவிக்குருடன் ஸ்வப்னத்தில் முன் பார்க்கப்படாதவைகளை யெல்லாம் பார்க்கிருன்; அல்லது, குருடனுயிராதவன் தான் ஜாக்ரத் காலத்தில் பார்க்காத ஹிமவத் பர்வதத்தின் சிகரத்தைப் பார்த்தேன் என்று சொல்லுகிருன். ஆதலால், எவன் ஸ்வப்னத்தில் பார்க்கிருனே, அவனே பார்ப்பவன், ஆத்மா; தேஹம் பார்ப்பதில்லை; நினைப்பவனும் பார்ப்பவனும் ஒருவன்தான்; கண்ணை மூடிக் கொண்டிருப்பவனும் நினைத்துப் பார்ப்பதனுல் முன் பார்க்கப்பட்ட வஸ்துவைப் பார்க்கிருன்; ஆதலால், கண்ணுக்குத்தானே பார்க்கும் சக்தியில்லை; பார்ப்பவன் ஒருவன் இருக்கிருன்; மிருதமாய்ப்போன தேஹத்திலிருக்கிற கண்ணுக்குப் பார்க்கும் சக்தி யிருக்கிறதா? இல்லையே; ஆதலால், தேஹத்திற்கு தர்சனுதி கிரியை இல்லை. கண் முதலியவற்றிற்கும் தர்சனுதிகிரியை யில்லை; 'நான் பார்த்தேன், பார்க்கிறேன்' என்று சொல்லுகிருன்; தன் கண் பார்த்ததாகச் சொல்லவில்லை; அஃதாவது, பார்த்த கர்த்தா வேறு என்று ஏற்படுகிறது. ஆனுல், மனஸ் பார்த்தது என்று சொல்லுவோமானுல், அப்படியும் சொல்லக்கூடாது; ஏனென்ருல், 'என் மனஸ்' என்று சொல்லுகிருன்; அஃதாவது, மனஸும் ஒரு விஷயமாய்ப் போய்விடுகிறது. ஆதலால், இவைகள் யெல்லாவற்றைக்காட்டிலும் வ்யதிரிக்தமான ஜ்யோதிஸ் ஒன்று இருக்கவேண்டுமென்பது ஸித்தமாயிருக்கிறது.

காரிய காரண ஸங்காதத்திற்கு ஸமானஜாதீயமான ஜ்யோதிஸ் உள்ளே யிருக்கவேண்டும் என்று சொல்வதும் பிசகாயிருக்கிறது. எப்படியென்ருல், ஒரு வஸ்துவிற்கு, அதற்கு ஸமானஜாதீயமான வஸ்துவே உபகாரம் செய்யவேண்டுமென்ற நியமமில்லை; அக்நியானது பார்த்திவ ஸம்பந்தமான கட்டை முதலியவற்ருல் ஜ்வலிக்கிறது; மின்னல் அக்நியும், ஜடா அக்நியும் ஜலத்தால் ஜ்வலிக்கின்றன; மனுஷியன் தனக்கு ஸமான ஜாதியாயில்லாத மிருகத்தாலேயும் உபகரிக்கப்

படுகிறான். ஆதித்யாதி காரணங்களால் வ்யதிரிக்தமாயும், உள்ளே ஜ்யோதீரூபமாக ஆத்மா ஒரு வஸ்து இருக்கிற தென்பது ஸித்தம்.)

7. ஜனகர்:—அந்த ஆத்மா எவர்? (அஃதாவது, தேஹேந்திரிய மனஸ் இவைகளுள் எதில் இருக்கிறார்?)

யாக்ஞவல்க்யர்:—எந்த, இந்த ஆத்மா, பிராணன்களுக்குள் விக்ஞானமாகவும், ஹ்ருதிபுத்தியில் அந்தர்ஜ்யோதீரூபமாகவும், 'புருஷன்' என்று சொல்லப்பட்டவராயு மிருக்கிறாரோ அவர் தான் (அந்த ஆத்மா).

ஒரு பச்சை மணியை, பாலில் போட்டால், அந்தப் பால் முழுவதிலும் பச்சையின் சாயை எப்படி அடிக்கிறதோ, அதைப்போல், ஆத்மா, தன் சாயையைப் புத்தியில் விழும்படி செய்கிறார், அந்தப் புத்தி ஆத்மாவிற்கு ஸமீபமாயிருப்பதால்; அந்த புத்தி மேற்படி ஆத்ம ஜ்யோதிஸின் பிரதிச் சாயையாயிருக்கிறது. அதனால், ஆத்மாபிமான புத்தி, விவேகிகளுக்குக்கூட முதன்மையானது; பிறகு, மனஸ், இந்திரியங்கள் தேஹம் இப்படி வரிசையாக ஒன்றுக்கொன்று அவபாஸங்களாக விருக்கின்றன.

பூர்ணமாயிருப்பதால் 'புருஷன்' என்ற பெயர் கிடைத்தது.

ஸர்வகரணங்களுக்கும் அநுகிராஹகங்களாவிருக்கிற ஆதித்யாதி வெளிப்பட்ட ஜ்யோதிஸ் அஸ்தமனத்தை யடைந்தால், புத்திக்குள் ஜ்யோதீரூபமாயிருக்கிற ஆத்மாவாகிய புருஷன், அந்தக்கரண வழியாய், கரணங்களுக்கு அநுகிராஹகமாயிருக்கிறார். இந்த ஸ்வயம் ஜ்யோதிஸ் இல்லாவிட்டால் கார்யகாரண ஸங்காதத்திற்கு வ்யவஹாரம் உண்டாக மாட்டாது. வ்யவஹார மெல்லாம் அபிமானத்துடன் கூடியதாயிருக்கிறது; அஃதாவது இச்சையிருந்தால்தான் வ்யவஹாரம் உண்டு; புத்தியால் இச்சை யுண்டாகிறது; புத்தி ஆத்ம ஸ்வரூபம்; ஆதலால், ஆத்மாவாகிய அந்தர்ஜ்யோதிஸ் இல்லாவிட்டால் ஒரு வ்யவஹாரமும் இருக்கமாட்டாது. ஜாக்ரத்காலத்தில் கார்யகரணங்களின் வ்யாபார ஸமூஹத்தின் வ்யாகுலீபாவத்தால் ஆத்மா தென்படுவதில்லை.)

(யாக்ஞவல்க்யர்:—மேற்சொல்லிய விதத்தால்) அந்த ஆத்மா புத்தியுடன் ஸம்பந்தப்பட்டதாக (அஃதாவது, புத்திரூபமாக, புத்தியுடன் கூடியதாக, புத்திவழியாக, புத்தியைப்போல் தோன்றுவதாக) விருந்துகொண்டு, இஹலோகத்திலும், பரலோகத்திலும் ஸஞ்சரிக்கிறான். (அஃதாவது, ஸஞ்சரிப்பவர்

போல் தோன்றுகிறார்). நினைப்பவர்போலும் போகிறவர்போலும் தோன்றுகிறார். (புத்தியில் ஸம்பந்தப்பட்டதால் அப்படி தொழில் உள்ளவர்போல் தோன்றுகிறாரே யல்லாது யதார்த் தத்தில் ஸ்வயமாய் அவருக்கு யாதொரு தொழிலுமில்லை.)

(உலகத்தில், ஒரு வெளிச்சம், அஃதாவது ஒரு மத்தாப்பூ, சிவப்பு முதலிய பல வர்ண முள்ளதாக, பதார்த்தங்களை விளங்கும்படி செய்து கொண்டு, தானும் அப்படியே சிவப்பு முதலிய பல வர்ணமுள்ளதாயிருப் பதுபோல் எப்படித் தோன்றுகிறதோ, அப்படி ஆத்மா புத்தியைப் பிரகாசப்படுத்தி வைத்துக்கொண்டு தானும் புத்திரூபமாக விருப்பது போல, தோன்றுகிறது.)

யாக்ஞவல்க்யர் :—(மேற்செல்லியது எப்படி யென்றால் சொல்லப்படுகிறது) அந்த ஆத்மா ஸ்வப்நமாக ஆகி (ஸ்வப்ன விருத்தியையுடைய புத்தியை விளங்கச்செய்துகொண்டு) இந்த லோகத்தையும் (ஜாக்ரத் வ்யவஹார லக்ஷணமாயும், காரியகாரண ஸங்காதாத்மகமாயும் லௌகிக சாஸ்திரீய வ்யவஹாராத்மகமாயு மிருக்கிற இந்த உலகத்தையும்), மிருத்யுவினுடைய ரூபங்களையும் (அவித்யாகாரிய காரணங்களையும்) தாண்டுகிறார் (கடந்து போகிறார்).

(அஃதாவது, விவிக்தமாயிருக்கிற தன்னுடைய ஜ்யோதிஸால், ஸ்வப்நாத்மிகமாயிருக்கிற புத்தியின் விருத்தியை விளங்கச்செய்து கொண்டு இருக்கிறார்; ஸ்வயம் ஜ்யோதிஸ் ஸ்வபாவமாயிருக்கிற இந்த ஆத்மா, விசுத்தராக, கர்த்ரு கிரியா காரக பல சூன்யராக விருக்கிறார். ஸஞ்சரண ஹேதுவானது புத்தி ஸாதிருச்யமே தவிர வேறில்லை.)

(புத்தியாகிற விக்ஞானத்தைத் தவிர வேறாக ஆத்மா என்பது ஒன்று இல்லை யென்று பூர்வபக்ஷிகளின் கக்ஷியை யெடுத்து விஸ்தாரமாய் பாஷ்யத்தில் பேசப்படுகிறது. புத்திக்கு மாறுதல் உண்டாவதால் அஃது ஆத்மாவாக மாட்டாது; 'அது கெட்டுப்போய்விட்டது, கெடாமல் இருக்கிறது' என்று ஒரு வஸ்து, தனிமையில் இருந்துகொண்டு அறிந்துகொண்டிருக் கிறதே, அஃது ஆத்மாக விருக்கிறது; புத்திக்கு வேறாகவும் ஸ்வச்சமாகவு மிருக்கிறது—என்று பாஷ்யத்தில் ஸித்தாந்தம் செய்யப்பட்டிருக்கிறது.)

8. அந்த ஆத்மாவாகிய புருஷனே (தேஹேந்திரிய ஸங்காத மாகிற) சரீரத்தை யடைந்து, அதனாலுண்டானவனாக, பாபங்க ளுக்கு ஆச்ரயங்களாயிருக்கிற காரிய காரணங்களுடன் ஸம்பந்தப்

படுகிறான். அவனே இந்த தேஹத்தை விட்டு உயரக் கிளம்பி மேற்படி பாபங்களுக்கு ஆச்ரயங்களாயிருக்கிற காரிய கரணாதி களை விட்டுவிடுகிறான்.

(ஸ்வப்ந ஜாக்ரத் காலங்களில் இந்த ஆத்மா, ஒரே தேஹத்திலிருந்து கொண்டு பாப ரூபங்களாயிருக்கிற காரிய காணங்களை அங்கீகரித்துக் கொண்டும், விட்டு விட்டுக்கொண்டும், எப்பொழுதும் எப்படி ஸஞ்சரிக்கி ருனே, அப்படி அந்தப் புருஷனே இஹ பரலோகங்களில், ஜனன மரணங்களுடன்கூட, காரிய கரணங்களின் அங்கீகாரம், அதன் விடுதலை இவைகளை யடைந்துகொண்டு மோக்ஷபரியந்தம் ஸஞ்சரிக்கின்றான்.)

9. (இஹ, பரலோகங்கள் இல்லை; ஸ்வப்ந ஜாகரிதங்கள் பிரத்யக்ஷமாய்த் தெரிகின்றன; அப்படிப்போல் தெரியாதபடி யால், இவைகள்தான் மேற்படி லோகங்களாக விருக்கவேண்டும்; வேறு இல்லை யென்று ஆக்ஷேபம் நிகழ அதற்குச் சொல்லப் படுகிறது.)

இந்தப் புருஷனுக்கு இரண்டு ஸ்தானங்களே உள்ளன; ஒன்று, இந்த லோகம்; (அஃதாவது, பிரத்யக்ஷமாய் அநுபவிக் கப்படுவதும், ஜன்ம, சரீர, இந்திரியங்களால் வேதனை செய்யப் பட்டதுமான ஸ்தானம்). இரண்டாவது, பரலோகம்; (அஃதா வது சரீராதிகளை விட்ட பிறகு அநுபவிக்கும்படியான ஸ்தானம்). இந்த இரண்டிற்கும் மத்தியில் ஸந்த்யமாயிருப்பது ஸ்வப்ந ஸ்தானம்; இது மூன்றாவதாக விருக்கிறது. ஆத்மா இந்த ஸந்தி ஸ்தானத்திலிருந்துகொண்டு இந்த லோகத்தையும், பரலோகத்தை யும் பார்க்கிறான்.

(எப்படி யென்றால், ஜாக்ரத் காலத்தில் அநுபவிக்கும் விஷயங்களை ஸ்வப்னத்தில் பார்க்கிறான்; இதனால் இஹலோகத்தைப் பார்க்கிறான் என்று ஏற்பட்டது. ஜாக்ரத்காலத்தில் அநுபவிக்கப்படாத விஷயங்களை யும் ஸ்வப்னத்தில் பார்க்கிறான்; இதனால் இஹலோகாநுபவத்தைத் தவிர வேறு லோகாநுபவமிருக்கிறதென்று ஏற்படுகிறது. அதனால், பரலோகத் தைப் பார்க்கிறான் என்று சொல்லப்படுகிறது.)

(ஸ்வப்நத்தில், எவ்விதம், எதை யாசிரயத்துக்கொண்டு எவ் விதியால் பார்க்கிறான் என்றால் அதற்குச் சொல்லப்படுகிறது.) பரலோக பிரதிபத்திக்கு (அடைவுக்கு) ஸாதனமாயும், வித்யா, காம, பூர்வபிரக்ஞா லக்ஷணமுள்ளதுமான ஸாதனங்களில்

எப்படிப்பட்டவைகளுடன் கூடியிருக்கிறானோ (அஃதாவது, இவனுடைய பாப புண்யத்திற்குத் தக்கபடி), அந்த ஸாதனங்களாகிய பிடிப்புக்குத் தக்கபடியும், அப் பிடிப்பை ஆசிரயித்துக் கொண்டும், பாப பலன்களாயிருக்கிற துக்கங்களையும், புண்ய பலன்களாயிருக்கிற ஸுகங்களையும் பார்க்கிறான்.

(ஆத்மா, எப்பொழுதும், காரியகரண ஸங்காதமாயிருக்கிற சரீரத்தில் ஸம்பந்தப்பட்டுக்கொண்டே தெரிகிறான். ஆதலால், அந்தச் சரீரம் எப்படி அஸத்தாக விருக்கிறதோ, அப்படி அவனும் அஸத்துத்தான் என்று சொல்லுவோமானால், அது கூடாது என்பதைப்பற்றிச் சொல்லப்படுகிறது.)

ஆத்மா, எப்பொழுதும் மிகவும் ஸ்வப்நதசையை யடைகிறானோ, அப்பொழுது, அவன் எல்லாவற்றையும் காப்பாற்றி வைத்துக்கொண்டிருப்பதும் ஜாக்ரத்காலத்தில் பிரத்யக்ஷமாய் காணப்படுவதுமான இந்த லோகத்தின் அம்சத்தை யடைந்து (அஃதாவது, திருஷ்ட ஜன்மவாஸனையில் ஸம்பந்தபட்டவனாக), தானே இந்த தேஹத்தைக் கீழேவிழும்படி தள்ளி, தானே ஒரு ஸ்வப்ந சரீரத்தை யுண்டுபண்ணிக்கொண்டு, தன்னுடைய காந்தியாலும் (அஃதாவது, ஸர்வ வாஸனாத்மகமாயும், விஷயபூதமாயுமிருக்கிற அந்தக்கரண விருத்தி பிரகாசத்தாலும்), தன்னுடைய ஜ்யோதிஸாலும் (அஃதாவது விஷயிபூதமாயிருக்கிற விவிக்த ஸ்வரூபத்தினாலேயும்), ஸ்வப்னதசையை யடைகிறான். அப்பொழுது தான் ஸ்வயம்ஜ்யோதீரூபனாயிருக்கிறான்.

10. (ஸவப்னத்தில் இந்திரியங்களுக்கும், அநுகிராஹகங்களாயிருக்கிற ஆதித்யாதிகளுக்கும் அபாவமிருப்பதால் ஆத்மா ஸவப்னகாலத்தில் விவிக்தஸ்வபாவமுள்ளதாயிருக்கிறது. ஸ்வப்னத்தில் இந்திரியங்கள் இல்லாமலிருந்தபோதிலும் விஷயங்கள் அநுபவிக்கப்படுகின்றனவே, அப்படியிருக்க, இந்திரியாபாவத்தால் விலக்ஷணமென்று எப்படிச் சொல்லலாம் என்றால், அதற்குச் சொல்லப்படுகிறது.)

ஸ்வப்னத்தில் ரதங்களும் இல்லை; குதிரைகளும் இல்லை; மார்க்கங்களும் இல்லை; ஆனால் இவைகளை யெல்லாம் ஆத்மா

தானே ஸ்ருஷ்டித்துக்கொள்ளுகிறான். அப்படியே, ஸுகமு மில்லை; ஸந்தோஷமுமில்லை; அதிக சந்தோஷமுமில்லை; அப்படியே ஓடைகளுமில்லை; குளங்களுமில்லை; நதிகளுமில்லை; ஆனால், இவைகளையெல்லாம் ஆத்மா தானே உண்டுபண்ணிக்கொள்ளு கிறான். அவனே கர்த்தாவாய் இருக்கிறான். (அஃதாவது கர்த்தாவைப்போல் தோன்றுகிறான்; யதார்த்தத்தில் கர்த்தா வன்று; வாஸனைமயமாயிருக்கிற புத்தியின் விருத்தி இவைகளுக் கெல்லாம் கர்த்தாவாயிருக்கிறது.)

11. இந்த அர்த்த விஷயத்தில் அடியிற்கண்ட ச்லோகங்கள் இருக்கின்றன. அவைகளாவன:—

ஆத்மா, சரீரத்தை ஸ்வப்ன பாவத்தால் நிச்சேஷ்டையாக விழும்படிசெய்து, அஸுப்தனாயிருக்கிற இந்த ஆத்மா, ஸுப்தங் ளாகவிருக்கிற எல்லாப் பாவங்களையும் தன் திருஷ்டியால் பார்க்கி றார். (அஃதாவது, வாஸனாகாரத்தால் உண்டாயிருக்கின்றனவும், அந்தக்கரண விருத்தியை யநுஸரித்துக்கொண்டிருக்கின்றனவும், ஆத்ம ஸம்பந்த வெளிஸம்பந்த பட்டவைகளாகவும், தன் ஸ்வ ரூபம் மேல் கொண்டதால் அஸ்தமயத்தை யடைந்தனவாகவு மிருக்கிற எல்லாப் பாவங்களையும் பார்க்கிறான்: எல்லாவற்றையும் பிரகாசப்படுத்துகிறான்.) (ஜ்யோதிஷ்மத்தாயிருக்கிற இந்திரிய மாத்ரா ரூபத்தை கிரஹித்துக்கொண்டு), மறுபடியும் கர்மாவி னால் ஜாக்ரத் ஸ்தானத்தைப் போயடைகிறான். ஹிரண்மயனை புருஷனையும், (அஃதாவது, சைதன்ய ஜ்யோதிஸ் ஸ்பாவமுள்ள புருஷனையும்), ஏக ஹம்ஸனையும் (இஹலோக பரலோகங்களில் ஸஞ்சரிக்கிறவனையும்) இருக்கிறான்.

12. ஸ்வப்ன காலத்தில், நிகிருஷ்டமாயிருக்கிற துவார மான இந்தச் சரீரத்தைப் பிராணனைக்கொண்டு காப்பாற்றும்படி செய்து விட்டு, அந்தச் சரீரத்தைவிட்டு வெளிக்கிளம்பி ஸஞ்சரித் துக்கொண்டு, தான் அமிருதனாகவும், ஹிரண்மய புருஷனாகவும், ஏகஹம்ஸனாகவும் இருந்துகொண்டு தன்னிஷ்டப்படி போகிறான்.

13. மேலும், ஸ்வப்னத்தில், இந்த ஆத்மா தேவத்தன்மை பொருந்தியதால் உயர்ந்ததாயும், திரியகாதித்தன்மையுள்ளதால்

நிகிஷ்ருடமாயிருக்கிற பல ரூபங்களை யெடுத்துக்கொள்கிறான். ஸ்திரீகளுடன் ரமிப்பதுபோல் காணப்படுகிறான்; சிறிரிப்பவன் போலும், பயத்தை யுண்டாக்கும் ரூபங்களைப் பார்க்கிறவன் போலும் காணப்படுகிறான்.

14. ஆத்மாவின் விளையாட்டு வனமாகிய கிராமம், ஸ்திரீ, அன்னாதிமுதலிய வாஸனா நிர்மிதமாயிருக்கிற ஸ்தலத்தை எல்லா ஜனங்களும் பார்க்கிறார்கள். அந்த ஆத்மாவை ஒருவரும் பார்ப்பதில்லை. (இது கஷ்டம், ஆச்சரியம்; ஜனங்களின் தெளர்பாக்கியம்; ஆதலால், ஜனங்களிடத்தில் இரக்கம்வைத்து, சுருதி, ஸ்வப்னத்தில், விவிக்தமாய், ஸ்வயம் ஜ்யோதிஸ் ஒன்று இருக்கிறதென்று காண்பிக்கிறதென்பது தாத்பரியம்.)

தூங்குகிறவனைச் சீக்கிரம் எழுப்பக்கூடாதென்று லோகத்தில் பிரஸித்தமாயிருக்கிறது. (ஏனென்றால், தூங்குங்காலத்தில், ஆத்மா, சரீரத்தைப் பிராணனைக்கொண்டு ரக்ஷிக்கும்படி செய்துவிட்டு, வெளியில் இஷ்டப்படி ஸஞ்சரிக்கப் போய்விடுகிறார்; அப்பொழுது இந்திரியங்களுக்குத் தொழில் இல்லை; ஆத்மா மறுபடியும் வந்து சேர்ந்தால்தான் இந்திரியங்களுக்குத் தொழில் உண்டாகிறது; சீக்கிரத்தில் எழுப்பினால் அப்பொழுது ஒருகால் ஆத்மா, வெளி ஸஞ்சாரத்திலிருப்பதால், இந்திரியங்களுக்குத் தொழிலுண்டாகிற தில்லை; ஆதலால், மறுபடியும் தூங்குகிறான்; எழுந்திருப்பதில்லை; இந்திரியங்களும் வசப்படுகின்றனவல்ல.)

ஆத்மா மறுபடியும் தேஹத்தில் வந்து சேர்ந்தாலொழிய இவனுடைய இந்திரியங்களின் தொழிலில்லாமைக்கு யாதொரு வைத்தியமுமில்லை. (ஆகையால் சீக்கிரம் தூங்குபவனை எழுப்பக்கூடாது.)

'எது ஜாக்ரத்காலத்தில் காணப்படுகிறதோ, அதுவே ஸ்வப்ந காலத்திலும் காணப்படுகிறது; ஆதலால் அது வேறு, இது வேறு என்பது இல்லை' என்று சிலர் சொல்லுகிறார்கள் (இரண்டும் ஒன்றுதான் என்று சொல்லுகிறார்கள்). (அது சரியல்ல; ஸ்வப்னத்தில் இந்திரியங்கள் ஒழிவடைந்து போகிறபடியால், இந்தி

ரியங்களுக்குத் தொழில் அடங்கிப்போன பிறகுதான் ஸ்வப்னம் காண்கிறுன் ; அப்பொழுது இந்திரியங்களுக்கு வேருக விருக்கிற ஒரு ஸ்வயம் ஜ்யோதிஸ் இருக்கவேண்டுமென்று ஏற்படுகிறதல்ல வா.) ஆதலால், ஸ்வப்னத்தில் வ்யதிரிக்தமான ஒரு ஸ்வயம் ஜ்யோதிஸ் இருப்பது நிச்சயமாயிருக்கிறது.

ஜனகர்:—இந்தப் பிரகாரம் எனக்கு உபதேசம் செய்ததற் காக உமக்கு ஆயிரம் கோக்கள் கொடுக்கிறேன். இன்னும், ஸம் ஸாரத்திலிருந்து எப்படி மோக்ஷம் உண்டாகுமோ அதைப் பற்றி, மேலும், சொல்லுங்கள்.

15. யாக்ஞவல்க்யர் மேலும் சொல்லுகிறுர் :—(ஸ்வப்னத் தில் இந்திரியங்களுக்கு ஒழிவு இருந்தாலும், ஸந்தோஷம், பயம் முதலியவை காணப்படுகின்றன; அப்பொழுது ஆத்மா சரீத்தில் கட்டுப்பட்டிருப்பதாக பிரத்யக்ஷமாகத் தெரிகிறது. ஆதலால், எப்பொழுதும் சரீரத்தில் கட்டுப்பட்டிருப்பதால் ஒரு நாளும் மோக்ஷமில்லை என்று வரத்தெரிய, அப்படி யன்று, மோக்ஷ முண்டு ; ஆத்மா எப்பொழுதும் அஸங்கன் என்பதைப் பற்றிச் சொல்லப்படுகிறது.)

இந்த ஆத்மா, ஸ்வப்னகாலத்தில், மித்திர, பந்துஜனதர்சனம் முதலியவற்ருல் ஸந்தோஷங்களை யடைந்து, அநேக விதமாக, இச்சைப்படி திரிந்து, அதனுல் சிரமத்தை யடைந்து, புண்யபாப பலனைப் பார்ப்பவன்போல் இருந்துகொண்டு, பிறகு, ஸுஷுப் தியை யடைகிறுன். அதன் பிறகு, வந்த கிரமப்படி ஸுஷுப்தியி லிருந்து ஸ்வப்னுவஸ்தைக்குப்போகிறுன். அந்த ஸ்வப்னத்தில் எதைப் பார்க்கிறுனோ, அதாவது, எந்த எந்தப் புண்ணிய பாப பலனைப் பார்க்கிறுனோ, அதனுல் இவன் கட்டுப்படுவதில்லை. ஆதலால் ஆத்மா அஸங்கன் என்பது நிச்சயம். (லோகத்தில், ஸ்வப்ன காலத்தில் ஒருவன் ஏதாவது ஒரு துன்மார்க்கமான காரியம் செய்ததாகக் கண்டேன் என்று சொன்னுல், அதற்காக அவனை நிந்திக்கிறுர்களா, அல்லது தண்டிக்கிறுர்களா ? இல்லையே; ஆததால், ஸ்வப்னத்தில் கண்ட பாப புண்ய பலனுல் அவன் கட்டுப்பட்டிருக்கவில்லை.)

ஜனகர்:—இந்த உபதேசத்திற்காக நான் உமக்கு ஆயிரம் பசுக்களைக் கொடுக்கிறேன். இன்னும் மோக்ஷத்தைப்பற்றி மேலே சொல்லும்.

16. யாக்ஞவல்க்யர்:—(ஆத்மா தன் இச்சைப்படி போகிறான் என்று முன்னால் சொல்லப்பட்டிருக்கிறது; மறுபடியும் இப்பொழுது அவன் அஸங்கன் என்று சொல்லப்படுகிறது. ஒன்றுக்கொன்று விரோதப்படுகிறது. இச்சைப்படி போகிறவன் என்றால் அவனுக்கு கர்த்ருத்வம் ஸ்தாபிக்கப்படுகிறதே, இப்படியிருக்க எப்படி அகர்த்தாவாக விருப்பான் என்றால், அதற்குச் சொல்லப்படுகிறது.)

ஸுஷுப்திக்குப் பிறகு, ஸ்வப்னத்தில் வந்த இந்த ஆத்மா, ஸந்தோஷப்பட்டு, திரிந்து, சிரமப்பட்டு, புண்ணிய பாப பலன்களைப் பார்ப்பவன் போலுமிருந்து, மறுபடியும், வந்த கிரமப்படி ஜாகரிதத்தில் பிரவேசிக்கிறான். ஸ்வப்னத்தில் பார்த்த பாப புண்ய பலனோடு ஸம்பந்தப்படுபவன் அல்லன்.

ஜனகர்:—இந்த உபதேசத்திற்காக நான் உமக்கு ஆயிரம் கோக்களைக் கொடுக்கிறேன். இன்னும் மோக்ஷத்தைக்குறித்துச் சொல்லும்.

17. யாக்ஞவல்க்யர்:—(ஸ்வப்னத்திலுண்டான தோஷங்களால் எப்படி இவன் ஸம்பந்தப்படுவதில்லையோ அப்படியே ஜாக்ரத்காலத்தில் உண்டாகும் தோஷங்களுடன் இவன் ஸம்பந்தப்படுவதில்லை யென்பதைப்பற்றி சொல்லப்படுகிறது.)

இந்தப்படி ஜாகரிதத்திற்கு வந்த ஆத்மா, அங்கும், ஸந்தோஷமடைந்து, திரிந்து, சிரமப்பட்டு, புண்ய பாப பலனைப் பார்ப்பவன்போல் இருந்து, மறுபடியும், வந்த கிரமமாக ஸ்வப்னாவஸ்தைக்குப் போகிறான்.

(ஸ்வப்னத்திலிருக்கட்டும், ஜாகரிதத்தில் புண்ய பாபகர்மங்களைச் செய்கிறானே, அதை நாம் பிரத்யக்ஷமாகப் பார்க்கிறோமே, அப்படியிருக்க, ஜாகரிதத்திலும் ஆத்மா, அஸங்கன், அகர்த்தாவென்று எப்படிச் சொல்லலாம் என்ற ஆக்ஷேபத்திற்கு ஸமாதா

27

னம் என்னவெனில்—ஆத்மா ஜாகரிதத்திலும் அகர்த்தாதான்; இவன் ஒன்றும் செய்வதில்லை; ஆனால் எவர்கள் செய்கிறார்களென்றால், புத்யாதி தத்வங்கள் செய்கின்றன; இந்த ஆத்மாவின் ஸன்னிதியில் அவைகள் தொழில்களை நடத்துகின்றன. ஆனால், ஆத்மா அவைகளைப் பிரகாசப்படுத்தி வைக்கிறான்; அஃதாவது, அதன் அதன் தொழிலை நடத்தும்படி அதற்கு, ஸன்னிதி விசேஷத்தால், சக்தியைக் கொடுக்கிறான். ஸூரிய வெளிச்சத்தில், இருவர் ஒருவருக்கொருவர் சண்டை செய்யும்படி நேரிட்டது! ஆதலால் இது ஸூரியனுடைய பிசகு என்று ஸூரியனுக்குத் தோஷத்தைக் கல்பிக்கக் கூடுமா? அப்படிப்போல், ஸன்னிதான விசேஷத்தால் புத்யாதிகளைப் பிரகாசப்படுத்திவைக்கிற ஆத்மாவிற்கு கர்த்ருத்வ தோஷம் சொல்லக்கூடாது. ஆதலால் ஜாகரிதத்திலும் இவன் அகர்த்தாதான்.)

18. (ஜாக்ரத், ஸவப்ன, ஸுஷுப்தி இம் மூன்று அவஸ்தைகளிலும் ஆத்மா ஒன்றிலிருந்து மற்றொன்றிற்குக் கிரமமாகப் போய்க் கொண்டிருக்கிறார் என்றும், ஒவ்வோர் அவஸ்தையிலும் வ்யதிரிக்தராய் இருக்கிறார் என்றும் ஸாதிக்கப்பட்டிருக்கிறது. அந்த ஸஞ்சாரக் கிரமம் இப்பொழுது ஒரு திருஷ்டாந்தத்தால் காட்டப்படுகிறது.)

எப்படி லோகத்தில் ஒரு பெரிய மீன், ஜலத்தின் வேகத்தால் அசைக்கப்படாததாக, ஒரு நதியில், இக்கரையிலிருந்து அக்கரைக்கும், அக்கரையிலிருந்து இக்கரைக்கும் போய்வந்து கொண்டிருக்கிறதோ, அப்படி இந்த ஆத்மா, ஒன்றாலும் அசைக்கப்படாதவராய், அஸங்கராய், ஸ்வப்னத்திலிருந்து ஜாகரிதத்திற்கும், ஜாகரிதத்திலிருந்து ஸ்வப்னத்திற்கும் போய்வந்துகொண்டிருக்கிறார்.

19. (ஸ்வயம் ஜ்யோதிஸாயும், கார்யகரண ஸங்காதமாகிய சரீரத்திற்கு வேறாகவுமிருக்கிற ஆத்மா காம கர்மாக்களால் ஸம்பந்தபட்டவரல்லரென்று சொல்லப்பட்டது; இந்த ஆத்மா ஸம்ஸார தர்மம் உடையவரல்லர், அவருக்கு ஸம்ஸாரித்வம் உபாதி நிமித்தம், அஃது அவித்யையால் ஆரோபிதம் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. மேற்படி மூன்று அவஸ்தைகளில்

ஒவ்வொன்றிலும் வெவ்வேறு ரூபம் உடையவரென்றும் சொல்லப்பட்டது. ஜாகரிதத்தில் இந்த ஆத்மா அவித்தையால் சரீரத்தில் ஸம்பந்தபட்டவராகவும், கார்ய காரண ஸங்காதராகவும் தோற்றப்படுகிறார்; ஸ்வப்னத்தில் காமத்தோடு கூடினவராகவும், சரீரத்தோடு ஸம்பந்தப்படாதவராகவும் தோற்றப்படுகிறார். ஸுஷுப்தியில் ஒன்றிலும் ஸம்பந்தப்படாதவராக, அஸங்கராக விருக்கிறார்; அஃதாவது, தன்னுடைய யதார்த்த ஸ்வரூபத்தை யடைகிறார். அஃது எப்படி யென்று திருஷ்டாந்தத்துடன் சொல்லப்படுகிறது.)

எப்படி லோகத்தில், ஆகாசத்தில் ஒரு பருந்து அல்லது கருடன், வெகுதூரம் பறந்து திரிந்து, அந்த சிரமத்தால் தன் இரண்டு இறகுகளை யடக்கிக்கொண்டு, அந்த சிரமபரிஹாரத்திற்காகத் தன் பொந்தில் வந்து சேருமோ, அப்படிப்போல், ஆத்மா, ஜாக்ரத் ஸ்வப்ந அவஸ்தைகளில் ஸஞ்சரித்த சிரமபரிஹாரத்திற்காக, எந்த அவஸ்தையில் யாதொரு இச்சையும் இச்சிக்கப்படுவதில்லையோ, யாதொரு ஸ்வப்னமும் பார்ப்பதில்லையோ அந்த அவஸ்தையாகிற ஸுஷுப்தியில் போகிறார். (அஃதாவது ஸர்வ ஸம்ஸார விலக்ஷணமாயும், ஸர்வகிரியா காரக பல ஆயாஸ சூன்யமாயும், தன் பொந்தாயுமிருக்கிற தன்னையே தன்னிடத்திலேயே பிரவேசிக்கிறார்.)

20. (இந்த ஆத்மாவின் ஸ்வபாவம் ஸர்வ ஸம்ஸார தர்ம சூன்யமாயிருக்கிற பக்ஷத்தில் அவருக்கு ஸம்ஸார தர்மம் இருக்கிறதாகத் தோன்றுதல் பரோபாதி நிமித்தந்தான்; அஃது என்னவெனில், அவித்யை தெரியாமை, மோஹம். இந்த அவித்யை, ஸ்வபாவமாயுள்ளதா? அல்லது ஆகந்துகமாய் வருகிறதா? ஆகந்துகமாயிருந்தால்தான் மோக்ஷமென்பது கூடும். அதற்கு ஆகந்துகத்வம் எப்படிக் கூடும்? அல்லது அவித்யை ஆத்மாவின் குணமல்லவென்று எப்படி யேற்படும்? எல்லா அநர்த்தத்திற்கும் விதையாயிருக்கிற அவித்யையின் ஸ்வபாவத்தைப்பற்றிச் சொல்ல இந்த கண்டிகை ஆரம்பிக்கப்படுகிறது.)

இந்தப் புருஷனுக்கு, சரீரிக்கு, ஹிதா வென்று பெயருள்ள அநேக நாடிகள் (நரம்புகள்) இருக்கின்றன. ஒரு மயிரை ஆயி

ரம் பாகமாகப் பிளந்தால் அதில் ஒரு பிளப்பு எவ்வளவு பரிமாண முள்ளதோ, அவ்வளவு இந்த நாடிகள் உள்ளன, அஃதாவது அத்யந்த ஸூக்ஷ்மமாயிருக்கின்றன. அவைகள் வெளுப்பு, நீலம், பச்சை, மஞ்சள், சிவப்பு வர்ணங்களுள்ள ரஸத்தால் நிறைந் திருக்கின்றன.

(இப்படிப்பட்ட ஸூக்ஷ்மமான நாடிகளில், பதினேழு அவயவங்களுள்ள லிங்க சரீரமிருக்கிறது. எல்லா வாஸனைகளும் அதை ஆச்ரயித்துக் கொண்டிருக்கின்றன; மேற்படி வாஸனைகள் மேற்பட்டதும், கீழ்ப்பட்டதுமான ஸம்ஸாரதர்ம அநுபவத்தால் உண்டானவைகளாயிருக்கின்றன. இந்த லிங்க சரீரம் வாஸனை களுக்கு ஆச்ரயமாயும், ஸ்வச்சமாயும், நாடிகளுள்ளிருக்கிற ரஸ ஸம்பந்தத்தால் தர்மாதர்மத்தால் ஏவப்பட்ட தொழிலுள்ள தாயுமிருக்கிறது; ஸ்திரீ, ரதம், யானை முதலிய உருப்படி விசேஷங் களாகிற வாஸனாதிகளால் விளங்கப்படுகிறது.)

எப்பொழுது தன்னை யாரோ வந்து அடிப்பதுபோலும், வசப்படுத்துவதுபோலும், யானை வந்து துறத்துவதுபோலும், தான் ஓடிப்போய் ஒரு குழியில் விழுவதுபோலும், ஸ்வப்னத் தில் பாக்கிறானோ அப்பொழுது அவன் பார்ப்பது நிஜமல்ல; பொய்; யதார்த்தத்தில் ஒருவன் அடிப்பதுமில்லை; யானையுமில்லை; அது துறத்துவதுமில்லை; குழியில் விழுவதுமில்லை. ஆனால், அஃது அவித்யா வாஸனையினாலுண்டான கேவலம் பிராந்தி, பொய்த் தோற்றம். (நிகிருஷ்டதர்மத்தாலுண்டான அந்தக் காரண விருத்தியைச் சேர்ந்த தோற்றம்.) ஜாக்ரத் காலத்தில் எந்த பயங்கரமான பொருளைப் பார்க்கிறானோ அந்த அவித்யா வாஸனையினால் ஸ்வப்னத்தில் அந்த பயங்கரமான பொருளைத் தான் பார்ப்பதுபோல் எண்ணுகிறான். (யதார்த்தத்தில் ஒன்று மில்லை; அவித்யை இப்படிப்பட்டதாயிருக்கிறது.)

(அவித்யை போய் வித்யையை மேற்கொண்டால் அப் பொழுது வித்யை எப்படிபட்டதாயிருக்கிறதென்று சொல்லப் படுகிறது.)

எப்பொழுது ஜாக்ரத்காலத்தில் இவன் தன்னைத் தேவனாக வும், ராஜாவாகவும், (அஃதாவது) எல்லாம் தானாக எண்ணு

கிருனே அப்பொழுது ஸ்வப்னத்திலும் அப்படியே நினைக்கிருன் பார்க்கிருன். அப்படி இவனுக்கு ஸர்வாத்ம பாவம் வந்து விட்டால் பரமலோகத்தை யடைகிருன் (அஃதாவது, பரமாத்மா வாக ஆய்விடுகிருன்).

(ஸர்வாத்ம பாவமில்லாமல், நாம் அது வல்ல, நாம் வேறு, அது வேறு, என்று கீழ்ப்பட்ட எந்த நினைப்பு வுண்டோ அதுதான் அவித்யையாயிருக்கிறது. அதனுல் அநாத்ம பாவம் உண்டாகி அபரலோகம் கிடைக்கிறது; அஃதாவது புனர் ஜனன மரணம் கிடைக்கிறது. ஆதலால், அவித்யை இழுக்கப்பட்டால், வித்யையை மேற்கொண்டால், அப்பொழுது ஸர்வாத்ம பாவம், மோக்ஷம் உண்டாகிறது. எப்படி ஸ்வப்னத்தில் ஸ்வயம் ஜ்யோதிஷ்ட்வம் பிரத்யக்ஷமாகக் காணப்படுகிறதோ, அப்படிப் போல், வித்யா பலன் காணப்படுகிறது. அப்படியே, வித்யை மறைந்து போய், அவித்யையை மேற்கொண்டால் அப்பொழுது அவித்யையின் பலன் காணப்படுகிறது. வித்யையால் ஸர்வாத்மா வாக ஆகிருன். அவித்யையால் அஸர்வாத்மாவாக ஆகிருன். இல்லாவிடில், இவன் ஏன் பிரிந்தவனுயிருப்பான்? அன்ய பாவ முள்ளவனுயிருப்பான்? விபக்தனுயிருந்தால் அதனுல் விரோதப் படுகிருன்; விரோதப்பட்டால் அடிக்கப்படுகிருன். எல்லாம் இவனுக விருந்துவிட்டால் விரோதமுமில்லை, அடியுமில்லை.

இந்தப்படி அவித்யையின் ஸ்வபாவம் சொல்லப்பட்டது. பின்னமாய் நினைத்தால் காமம் உண்டாகிறது; அதனுல் கர்மா உண்டாகிறது; அதனுல் பலன்; அப்பொழுது ஸம்ஸாரித்வம். இஃது அவித்யையின் காரியம். அவித்யை ஆத்மாவினுடைய ஸ்வ பாவமல்ல; வித்யையை மேற்கொண்டால் அவித்யை தானுய்ப் போய்விடும்; ரஜ்ஜுஜ்ஞானம் வந்தவுடன் ஸர்ப்பப்ராந்தி போய் விடுவது போல். ஆதலால், அவித்யை ஆத்மாவின் தர்மமல்ல; ஸ்வாபவத்திற்கு ஒரு நாளும் ஹாநி வராது; ஸூரியனுடைய உஷ்ண குணமும், பிரகாச குணமும் போய்விடுமா? ஆனல், அவித்யை போய்விடுகிறதே; ஆதலால் அஃது ஆத்மாவின் ஸ்வபாவமல்ல. ஆதலால் மோக்ஷமென்பது கூடும்.)

21. (இப்பொழுது வித்யாபலனையும், கிரியாகாரக சூன்ய மாயும் ஸர்வாத்ம பாவமாயு மிருக்கிற மோக்ஷமென்பது பிரத்யக்ஷமாகக் காண்பிக்கப்படுகிறது.)

ஸுஷுப்தியில் ஆத்மாவிற்கு எப்படிப்பட்ட ரூபமென்றால்—அதிச்சந்தம், காமத்தைக் கடந்த ரூபம்; அபஹத பாப்மம், பாபங்களுக்கு ஹேதுவாயிருக்கிற தர்மாதர்மமில்லாத ரூபம்; அபயம், பயத்திற்கு ஹேதுவாயிருக்கிற அவித்யா வர்ஜித ரூபம். (அஃதாவது, இந்த ஆத்மாவிற்கு நித்யமாயிருக்கிற ஸ்வரூபமானது சைதன்ய ஜ்யோதிஸ் ஸ்வரூபம்; அப்படிப்பட்ட ரூபத்தால் எல்லாவற்றையும் பிரகாசப்படுத்திவைக்கிறார்.)

(ஸுஷுப்தியில் ஆத்மா நஷ்டமாய்ப் போகாமல் தன் ரூபத்துடன் இருக்கிறார் என்றால், எதனால் அந்தக் காலத்தில் அவர் தன்னையும் அறியவில்லை, வெளிப்பட்ட வஸ்துக்களையும் அறியவில்லை யென்பதைப்பற்றிச் சொல்லப்படுகிறது.)

எப்படி லோகத்தில் அத்யந்த காமமுள்ள ஸ்திரீ புருஷர்கள் ஒருவருக்கொருவர் செவ்வையாகச் சேர்ந்து ஸம்பந்தப்படும் பொழுது, அவர்களுடைய இருமனஸும் ஒன்றாக ஆகி, லோகத்தை மறந்து, வெளிப்பட்டதையாவது உட்பட்டதையாவது யாதொன்றையும் அறியாமலிருக்கிறார்களோ, அப்படிப் போல், இந்த ஜீவன் ஸுஷுப்தி காலத்தில் தன் நிஜஸ்வரூபமாகிய பரஞ்ஜ்யோதிஸுடன் கலந்து, ஒன்றாகி, ஒன்றையும் அறிவதில்லை.

(ஆனால், அநேக ஜீவராசிகள் இருக்கின்றார்களே, ஆதலால், அநேக ஜீவாத்மாக்கள் இருக்கின்றார்கள் என்றால், அப்படியன்று. ஒரு பெரிதான உப்புக் கட்டியிலிருந்து, சிறு சிறு துணுக்குகள் விழுந்தால், அவைகள், எப்படி பெரிய கட்டியிலிருந்து பிரிந்தனவாகக் காணப்படுகின்றவோ, அப்படிப் பிரிந்த போதிலும் அந்தத் துணுக்குகளுக்கு உப்பின் ஸ்வபாவம் போவதில்லையோ, அப்படிப்போல், பரமாத்மாவினுடைய அம்சர்களான ஜீவர்களின் ஸ்வபாவம் ஒன்றுதான். இன்னும் எப்படி

அந்த பரமாத்மா அநேக தேஹங்களில் பிரவேசித்திருக்கிறு ரென்றால், ஒரே சந்திரனுடைய பிரதிபிம்பங்கள் அநேக ஜலா சயங்களில் அநேக சந்திரர்களாகத் தோன்றுகின்றனவோ, அப் படிப்போல் அநேக தேஹங்களில் ஒரே ஆத்ம பிரதிபிம்பங்கள் அநேக ஆத்மாக்களாகத் தோன்றுகின்றன.

நாநாத்வத்திற்குக் காரணம் அவித்யை; அந்த அவித்யை பிரிந்துபோய்விட்டால் அப்பொழுது எல்லாம் ஒன்றாய்ப் போய்விடுகிறது. ஞான, ஞேய, காரகன் இவைகளின் பிரிவு இல்லாவிடில் விசேஷ விக்ஞானத்தின் உத்பத்தியாவது, அல்லது காமமாவது எங்கு இருக்கும்; இருக்கமாட்டாது. ஆதலால் ஸுஷுப்தி காலத்தில் ஆத்மாவின் ஸ்வபாவம் எப்படிப்பட்ட தென்றால், கீழ்ச் சொல்லப்படுகிறது.)

ஆப்த காமம், எல்லா காமமும் இவரிடம் வந்து சேர்ந்த ஐக்யமாய்விட்டதால் அடையப்பட்ட காமமுள்ளவர்; ஆத்ம காமம், அப்பொழுது ஆத்மவஸ்துவைத் தவிர வேறு யாதொன் றும் இல்லாததனால் ஆத்மாவையே, அஃதாவது தன்னையே, காமமாக உடையவர்; அகாமம், அப்பொழுது காம்ய விஷயம் ஒன்றும் இல்லாததால் காமமற்றவர்; சோகாந்தரம், யாதொரு சோகமுமற்றவர்.

22. (ஆத்மா ஸ்வயஞ்ஜ்யோதிஸ் ஸ்வரூபராயும், அவித்யா காம கர்ம விநிர்முக்தராயும் இருக்கிறார் என்று சொல்லப்பட் டது. ஆத்மாவிற்கு அஸங்கத்வமும், மேற்படி அவித்யா காம கர்மாக்களுக்கு ஆகந்துகத்வமிருப்பதாலும் அப்படிச் சொல்லப் பட்டது. இந்த விஷயத்தில் ஒரு ஸந்தேஹ மிருக்கிறது. ஸுஷுப்தி காலத்தில் ஜீவன் பரத்துடன் ஏகீபாவமுண்டாய்விடு கிறபடியால், ஸ்திரீ புருஷர்களைப்போல் ஒன்றும் அறியவில்லை யென்று சொல்லப்பட்டிருக்கிறதே, அப்பொழுது தானே ஸ்வ யஞ் ஜ்யோதிஷ்ட்வம் வருகிறது; அதையும் ஏன் ஆகந்துகம் என்று சொல்லக்கூடாது? இந்த ஸந்தேஹத்தை நிவர்த்தி செய் யும்பொருட்டுத்தான் ஸ்திரீ புருஷ திருஷ்டாந்தம் சொல்லப் பட்டது; அதனால் ஸ்வயஞ்ஜ்யோதிஷ்ட்வம் எப்பொழுது மிருக்கிறது. ஆனால் அது ஸுஷுப்தி காலத்தில் ஸ்பஷ்டமாய்

கிரஹிக்கப்படுகிறது. அப்பொழுது யாதொரு கர்மாவினுலும் ஸம்பந்தபடாதவனு யிருக்கிறுன். எப்படியென்றுல்.)

பிதா அபிதாவாக ஆகிவிடுகிறுன். (அஃதாவது, புத்திர ஸம்பந்த நிமித்தமான கர்மாவிலிருந்து விடுபடுகிறுன்; அப்படிப் பட்ட கர்மாவோடு ஸம்பந்தப்படுவதில்லை). அப்படியே மாதா; அப்படியே, கர்மாவால் ஜயிக்கப்பட்டனவும், ஜயிக்கப்படவேண் டியனவு மாயிருக்கிற லோகங்கள்; அப்படியே கர்மாங்க பூதர்களா யிருக்கிற தேவர்களும்; அப்படியே ஸாத்ய ஸாதன ஸம்பந்த விதாயகங்களாயிருக்கிற வேதங்களும்.

(அப்படியே அசுபகர்மாவோடும் ஸம்பந்தப்படுவதில்லை.) திருடன் திருட்டுக் கர்மாவுடன் ஸம்பந்தபடுவதில்லை; அப்ப டியே சிசுஹத்தி செய்தவன்; அப்படியே சாண்டாளன் (பிரா மணயோனியில் சூத்ர பீஜத்திற்குப் பிறந்தவன்); அப்படியே பௌல்கஸன் (க்ஷத்திரிய யோனியில் சூத்ர பீஜத்திற்குப் பிறந்த வன்); அப்படியே ச்ரமணன் (ஸந்யாஸி); அப்படியே தாபஸன் (வானப்ரஸ்தன்); மேலும், யாதொரு புண்ணிய பாபங்களுடன் ஸம்பந்தப்படுவதில்லை. அப்பொழுது (ஸுஷுப்தியில்) ஹிரு தயத்திலுள்ள (புத்தியை ஆச்ரயித்துக்கொண்டிருக்கிற) எல்லா சோகத்தையும் (காமத்தையும்) தாண்டினவனுய் ஆகிறுன். (இத ஞல் காமம் ஆத்மாச்ரயமல்ல.)

23. (ஸ்திரீ புருஷர்களைப்போல் ஐக்யமிருப்பதால் ஸுஷுப்தியில் ஆத்மா ஒன்றையும் பார்ப்பதில்லை யென்றும், ஸ்வயஞ்ஜ்யோதிஸ் என்றும் சொல்லப்பட்டது; ஸ்வயஞ் ஜ்யோதிஷ்ட்வம் என்றுல் சைதன்யாத்ம ஸ்வபாவம்; அஃ தாவது அக்நிக்கு உஷ்ண ஸ்வபாவமிருப்பதுபோல, ஆத்மாவிற்கு மேற்படி ஸ்வபாவமிருக்கிறது. அப்படியிருக்க அந்த ஸ்வபாவம் ஆத்மாவை எப்படி விடும்? அப்பொழுது எப்படி யறியாமலிருப் பார்? சரிதான், அறிகிறுர் என்றுலும், அப்பொழுது ஒன்றை யும் அறிய வில்லை யென்று சொல்லப்படுகிறதே. ஒன்றுக் கொன்று விரோதப் படுகிறதே என்றுல், அப்படி விரோதமில்லை என்பதைப்பற்றிச் சொல்லப்படுகிறது.)

ஸுஷுப்தியில் அவர் பார்க்கவில்லை யென்று சொல்லுவ தானது, அவர் அப்பொழுது பார்த்துக்கொண் டிருப்பவராக விருந்தே பார்க்காமலிருக்கிறார் என்று அர்த்தம்.

(அதை, எப்படிப் பார்ப்பவர் என்று சொல்லலாம்? ஸுஷுப்தியில் மனஸ் முதலிய யாதொரு கரணமு மில்லையே யென்றால்.)

திரஷ்டாவினுடைய திருஷ்டிக்கு நாசம் வராது; அந்த திருஷ்டிக்கு அவிநாசித்வம் இருப்பதால் (அதாவது, பார்ப்ப வன் என்று சொன்னால் பார்க்குந்தொழில் இருந்தால் அல்லவோ அவனை அப்படிச் சொல்லலாம்; அந்தத் தொழில் இல்லாவிடில் அவனைப் பார்ப்பவன் என்று சொல்லலாமா? ஆத்மா திரஷ்டா வென்று ஏற்பட்டிருக்கிறதே! அப்படியிருக்க திரஷ்ட்ருத்வம் எப்படிப்போகும்; போகாது; ஆதித்யாதிகள் எப்படி ஸ்வபாவ மான ஜ்யோதிஸால் எல்லாவற்றையும் பிரகாசப்படுத்துகிறார் களோ, அப்படிப்போல், ஆத்மா, நாசமற்ற, எப்பொழுதுமுள்ள ஜ்யோதிஸ் ஸ்வரூபமான திருஷ்டியினால் எல்லாவற்றையும் பிரகாசப்படுத்துகிறார். அப்படி திருஷ்டி ஒருநாளும் அவரை விட்டுப் போகாது. இதனால்தான் பார்த்துக்கொண்டே யிருக் கிறார் என்று சொல்லப்படுகிறது).

(இது சரிதான்; அவர் பார்ப்பதில்லை யென்று மறுபடியும் சொல்லப்படுகிறதே, அது விரோதமல்லவா? என்றால்.)

தனக்கு வேறாக, இரண்டாவதாக விருக்கிற யாதொரு விஷ யத்தையும் பார்ப்பதில்லை யென்று அர்த்தம். (விசேஷ தர்சன மில்லை; தன்னைக்காட்டிலும் வேறாகவும், பிரிக்கப்பட்டதாகவும் ஏதாகிலும் இருந்தால் அல்லவோ அதைப் பார்க்கிறார் என்று சொல்லலாம்; அப்படிப்பட்ட விஷயம் ஒன்றுமில்லையே, ஆதலால் பார்ப்பதில்லை யென்று சொல்வது யுக்தமாயிருக்கிறது.)

24-30. (பார்வை விஷயத்தில் சொல்லப்பட்டதுபோல் அடியிற் கண்ட ஏழு விஷயங்களிலும் அந்த அந்த விஷயத்திற்குத் தக்கபடி பொருள் படுத்தவேண்டும்.)

அப்படியே முகருவதில்லை; ருசிபார்ப்பதில்லை; பேசுவ தில்லை; கேட்பதில்லை; நினைப்பதில்லை; ஸ்பரிசிப்பதில்லை; அறிவதில்லை.

(அக்னிக்கு ஔஷ்ண்யம், பிரகாசம், ஜ்வலனம் என்ற பேதமுள்ள தர்மங்களிருப்பது போல் ஆத்மாவிற்கு திருஷ்ட்யாதி தர்மபேதங்கள் சொல்லப்பட்டிருக்கின்றனவே, அப்பொழுது நாநாத்வம் உண்டாகிறதே, என்றால், அப்படியில்லை ; அப்படிப்பட்ட பேதங்களைக் காட்டுவதற்காக திருஷ்டியாதி தர்மங்களை எடுத்துச் சொல்லவில்லை; ஆனால் ஸுஷுப்தி யில் ஆத்மா அறிவதில்லை என்று சொல்லப்பட்டதால் அவருக்குச் சைதன்ய ஜ்யோதிஸ் ஸ்வபாவமில்லை யென்ற சங்கை வரத்தெரிய, அந்த சங்கையை நிவர்த்திசெய்ய வேண்டிய நிமித்தம் அப்படி பேதாபேதமாக எடுத்துக் காண்பிக்கப்பட்டதே தவிர வேறில்லை.

ஜாக்ரத் ஸ்வப்நங்களில் சக்ஷுராதி அநேக உபாதிக ளிருப்பதால், அவைகளின் வழியாக, ஆத்மாவினுடைய சைதன்ய ஜ்யோதிஸ் ஸ்பாவம் தோன்றுகிறது. அந்த உபாதிகளின் வ்யாபாரங்களற்ற ஸுஷுப்தி யில் மேற்படி ஸ்வபாவம் செவ்வையாக விளங்காமலிருப்பதால், உபாதி களிருப்பதுபோல் காட்டி மேற்படி ஸ்வபாவம் செவ்வையாய் எடுத்துக் காண்பிக்கப்படுகிறது. ஆதலால், ஸுஷுப்தியில் திருஷ்டியாதிபேத தர்மங்கள் இல்லை. ஆத்மா, உப்புக்கட்டிபோல், பிரக்ஞான ஏகரஸகன மென்றும், விக்ஞானம் ஆனந்தம், ஸத்யம், ஞானம் பிரக்ஞானம் என்றும் அநேக சுருதிகளாற் சொல்லப்படுகிறது. இது பிராம்மணம். இதற்கு திருஷ்டாந்தமும் இருக்கிறது. எப்படி லோகத்தில் ஸ்வச்ச ஸ்வபாவ முள்ள ஸ்படிகமானது மஞ்சள், நீலம், சிவப்பு முதலிய வர்ணமுள்ள உபாதிகள் ஸமீபத்திலிருக்கும்பொழுது அந்த அந்த வர்ணமுள்ளதாகத் தோன்றுகிறதோ, அப்படி, ஆத்மா உபாதி பேதங்களாக, பலவாகத் தோன்றுகிறார். ஸ்படிகம் ஒன்றுதான்; அப்படியே ஆத்மாவும் ஒன்றுதான். சக்ஷுராதி உபாதிபேத ஸம்யோகத்தால் அந்த பிரக்ஞானகனத்திற்கு திருஷ்ட்யாதி சக்திபேதம் தோன்றுகிறது. எப்படி ஆதித்யாதி ஜ்யோதி ஸானது, அது ஸம்பந்தப்பட்ட வஸ்துவின் வர்ணமாகக் காணப்படுகிறதோ, அப்படி ஆத்மா, உபாதியால், பேததர்மமுள்ளவராகத் தோன்றுகிறார்.

ஆதலால்; அவயவமில்லாத வஸ்துவில் நாநாத்வம் கல்பிக்கக்கூடாது. ஏனென்றால், அதற்குத் திருஷ்டாந்த மில்லை.

ஆகாசம் எங்கும் போகிறது என்று சொல்வதும், பரமாணுக்களுக்கு கந்த ரஸாதி குணம் உண்டு என்று சொல்வதும் கல்பனைகள்தான். ஆகாசம் போவதுமில்லை, வருவதுமில்லை; அஃது எங்கும் நிறைந்திருக்கிற வெட்ட வெளி. பரமாணு வென்பது கந்தாத்மகமாயிருக்கிற அதி ஸூக்ஷ்மமான அவயவம்; அதற்கு மறுபடியும் கந்தத்வத்தை கல்பிப்பது சரியன்று.

அப்படிப்போல ஆத்மாவிற்குத் தர்மபேதங்கள் கல்பிக்கப்பட்டிருக்கின்றனவே யன்றி யதார்த்தத்தில் பேதங்கள் இல்லை.)

31. (ஜாக்ரத் ஸ்வப்னங்களில் போல், ஸுஷுப்தியில் ஆத்மாவிற்கு வேறான தாயும், பிரிவுபட்டதாயுமிருக்கிற யாதொரு விசேஷத்தையும் ஆத்மா பார்ப்பதில்லை யென்று சொல்லப்பட்டிருக்கிறது. இவருக்கு இப்படிப்பட்ட ஸ்வபாவம் இருக்கும் பக்ஷத்தில் ஏன் ஜாக்ரத் ஸ்வப்னங்களில் மேற்படி ஸ்வபாவம் மாறுபட்டுப் போய், விசேஷத்தை ஆத்மா அறிகிறார்? அல்லது, விசேஷவிக்ஞானமே இவருடையஸ்வபாவமாயிருக்கும் பக்ஷத்தில் ஏன் அது ஸுஷுப்தியில் இல்லாமல்போய்விடுகிறது? என்ற ஸந்தேஹம் அதற்காக அடியில் சொல்லப்படுகிறது.)

ஜாகரத் ஸ்வப்னங்களில் ஆத்மாவிற்கு அன்யமாயும், பிரிவு பட்டதாயுமிருக்கிற வஸ்துக்கள் இருக்கின்றனபோல் அவித்யையால் தோன்றுகிறபடியால், அன்யன் அன்யவஸ்துவைக் பார்ப்பதுபோலும், முகருவதுபோலும், ருசிபார்ப்பதுபோலும், பேசுவதுபோலும், கேட்பதுபோலும் நினைப்பதுபோலும், தொடுவதுபோலும், அறிவதுபோலும், தோன்றுகிறது. (யதார்த்தத்தில் ஆத்மா ஒன்றும் செய்வதில்லை; ஆதலால் ஆத்மாவிற்கு எப்பொழுதும் ஒரே ஸ்வபாவம்தான்.)

32. (ஸுஷுப்தியில் அந்த அவித்யை சாந்தமாய்ப் போய் விடுவதால், அப்பொழுது ஜீவன் ஸ்வயஞ்ஜ்யோதிஸ் ஸ்வபாவமாகிற பரமாத்மாவுடன் கலந்து) ஜலம்போல் ஸ்வச்சமாயும், ஏகராயும், திரஷ்டாவாயும், அத்வைதராயும் ஆகிறார். அவரே பிரம்மலோகம்(பிரம்மமாகிற லோகம் ஸ்தானம்), ஹே! ஸம்ராட்! கேளும், என்று யாக்ஞவல்க்யர் சொன்னார்.

மறுபடியும் அவர் உபதேசிப்பதாவது — இதுதான் (ஸுஷுப்தியில் பரமாத்மாவுடன் ஐக்கியமாவதுபோல் ஐக்கியமாவதுதான்) ஜீவனுக்குப் பரமமான (உத்தமமான) கதி; இது தான் ஸம்பத்துகளுக்கெல்லாம் உயர்ந்தது; இதுதான் பரமமான ஆனந்தம்; இந்த ஆனந்தத்தின் ஓர் அம்சத்தைப் பிடித்துக் கொண்டு (பிரம்மன் முதல் மனுஷ்யன் வரையுள்ள) மற்ற பூதங்

கள் பிழைத்திருக்கின்றன. (அஃதாவது, மேற்படி ஆனந்தத்திலே நின்றும், அவித்யையால் பிரிவுபட்ட ஸ்வபாவமுள்ளவர்களாக விஷயேந்திரியங்களுடன் சேர்ந்து இருக்கிறார்கள்.)

33. (இப்பொழுது பிரம்மன் முதல் மனுஷ்யன்வரையிலுள்ள பூதங்களுடைய ஆனந்தங்களின் அளவு, தாரதம்யக் கிரமமாகச் சொல்லப்படுகிறது; உப்புத் துண்டுகளினால் உப்பு மலையை அறிவதுபோல் அந்த பிரம்மானந்தத்தை யறியவேண்டிய நிமித்தம் சொல்லப்படுகிறது.)

மனுஷ்யர்களுக்குள் எவன் எல்லா அவயவங்களுடன் கூடியவனோ, ஸமிருத்தியுள்ள உபபோக உபகரணங்கள் உள்ளவனோ, எல்லாருக்கும் எஜமானனோ, மனுஷ்ய ஸம்பந்தமான எல்லா போகங்களுடன் ஸம்பன்னனோ அந்த மனுஷ்யனுடைய ஆனந்தம் மனுஷ்யர்களின் பரம ஆனந்தமென்று சொல்லப்படும். இந்த ஆனந்தத்திற்கு நூறு பங்குகள் கொண்டது ஜிதலோகர்களான (சிராத்தம் முதலிய கர்மாக்களால் ஸந்தோஷத்தையடைந்தும், இந்த லோகத்தில் தங்கள் பெயரை விளங்கச் செய்துகொண்டும், ஸ்வர்க்கத்தில் ஸு[illegible]கத்தை யநுபவித்துக்கொண்டுமிருக்கிற) பிதிருக்களுடைய ஆனந்தம். இதற்கு நூறு பங்குள்ளது கந்தர்வர்களுடைய ஆனந்தம், இதற்கு நூறு பங்குள்ளது காம தேவர்களினுடைய (யாகாதி கர்மாக்களால் தேவத்வத்தை யடைந்தவர்களின்) ஆனந்தம். இதற்கு நூறு பங்குள்ளது ஆஜான தேவர்களின் (பிறப்பினாலேயே தேவர்களாயிருப்பவர்களின்) ஆனந்தம்; மேலும், மனுஷ்யர்களுக்குள் எவன் வேதாத்யயனஞ் செய்தவனாயும், பாபரஹிதனாயும், இச்சையற்றவனாயு மிருக்கிறானோ அவனுடைய ஆனந்தம் இந்த ஆஜான தேவர்களின் ஆனந்தத்திற்கு ஸமானமானது. இந்த ஆனந்தத்திற்கு நூறு பங்குள்ளது பிரஜாபதியுடைய (விராட் புருஷனுடைய) ஆனந்தம்; மேலும், முன் சொல்லப்பட்ட சுரோத்ரியன், அவ்ரஜினன், அகாமஹதன் மேலான படியிலிருந்தால் அவனுடைய ஆனந்தம் இந்த பிரஜாபதியின் ஆனந்தத்திற்கு ஸமானம். இந்த ஆனந்தத்திற்கு நூறுபங்குள்ளது பிரம்மானந்தம் (ஹிரண்யகர்ப்பருடைய ஆனந்தம்); மேலும்,

மேற்சொன்ன சுரோத்ரியன், அவ்ரஜினன், அகாமஹதன் இன்னும் மேலானபடியில் இருந்தால் அவனுடைய ஆனந்தம் இந்த பிரம்மானந்ததிற்கு ஸமம். இதுதான் பரம ஆனந்தம்; இந்த பரமானந்தம்தான் பிரம்மலோகம், ஹே! ஸம்ராட்! கேளும்! என்று யாக்ஞவல்க்யர் சொன்னார்.

ஜனகர்:—இதற்காக உங்களுக்கு ஆயிரம் மாடுகள் கொடுக்கிறேன். இன்னும் மேல் மோக்ஷத்தைப்பற்றிச் சொல்லுங்கள்.

இப்படி ஜனகர் சொல்ல, யாக்ஞவல்க்யர் பயமடைந்தார். எதற்காகவெனில், மிகவும் புத்திசாலியாயிருக்கிற ஜனக ராஜா, தான் என்ன முடிவுகள் சொல்லியிருந்தபோதிலும் அவைகள் போதாவெனத் தடுத்து மறுபடியும் மோக்ஷ ஸங்கதியைப்பற்றிக் கேட்கிறாரே என்று பயந்தார்.

34. (இவ்வளவு தூரம் யாக்ஞவல்க்யர் சொல்லியிருக்க, மறுபடியும் ஜனகர் பிரச்னம் செய்வானேனென்றால், விக்ஞானமயராயிருக்கிற ஜீவாத்மா ஸ்வப்னத்தில் ஸ்வயஞ்ஜ்யோதிராத்மாவாகக் காட்டப்பட்டார்; ஜாக்ரத் ஸ்வப்னங்களில் ஆத்மாவிற்கு கார்ய காரண வ்யாதிரிக்தத்வத்தையும், காம கர்ம பிரவிவேகத்தையும், அஸங்கராயிருப்பதையுங்கொண்டு, மஹாமத்ஸ்யாதி திருஷ்டாந்தத்தினால் காண்பிக்கப்பட்டது; ஸ்வப்னத்தில் அவித்யையின் காரியமாயிருப்பதாகவும் காட்டப்பட்டது; அவித்யையின் இருக்கையையும் நிர்தாரணம் செய்யப்பட்டது; இல்லாமலிருக்கிற ஒரு வஸ்துவை உண்டு என்று சொல்லும்படியான குணமுள்ள அத்யாரோபண ரூபத்வமும், அநாத்ம தர்மத்வமும் நிர்த்தாரணம் செய்யப்பட்டது; வித்யையின் கார்யமும் ஸர்வாத்ம ஸ்வபாவமும், ஸ்வப்னத்தில் பிரத்யக்ஷமாக அறியப்படுவதாகவும் காட்டப்பட்டது; அந்த ஸர்வாத்மபாவந்தான் பரலோகமென்றும் ஸர்வாத்ம பாவம் ஆத்மாவினுடைய ஸ்வபாவமென்றும், அவித்யா காம கர்மாதி ஸர்வஸம்ஸார தர்ம ஸம்பந்த அதீதமான ரூபமென்றும், அப்படி ஸுஷுப்தியில் செவ்வையாகக் கிரஹிக்கப்படுவதென்றும் சொல்லப்பட்டிருக்கிறது; ஸுஷுப்தியில் ஸம்பிரஸாதம், பரமஸுகமென்றும் சொல்லப்பட்டது; அவித்யா காரியங்களாகவும், ஹேதுவுள்ளதுகளாகவுமிருக்கிற மோக்ஷம், பந்தம் இவைகளும் எடுத்துச் சொல்லப்பட்டன; ஆனால் இவைகளெல்லாம் திருஷ்டாந்த பூதங்களாகச் சொல்லப்படுகின்றன. எதைக் குறித்து திருஷ்டாந்தமாகச் சொல்லப்பட்டதோ அந்த மோக்ஷ பந்தங்களைப்பற்றி இப்பொழுது ஸவிஸ்தாரமாகச் சொல்ல வேண்டுமென்பதற்காக மறுபடியும் ஜனகர் கேள்விகேட்டார்.

எப்படி இந்த ஜீவன், ஸுஷுப்தியில், மிருத்யு ரூபங்களாயிருக்கிற கார்யகாரணங்களை விட்டுவிட்டு,மறுபடியும் அவைகளை வஹித்துக்கொண்டு, மஹாமத்ஸ்யம்போல், ஜாக்ரத் ஸ்வப்னங்களில் ஸஞ்சரிக்கிறானோ, அப்படி அவன், பிறந்தும், இறந்தும் மிருத்யு ரூபங்களுடன் சேர்ந்துகொண்டும், பிரிந்துகொண்டும், இஹபரலோகங்களில் ஸஞ்சரிக்கிறான். இந்த ஸஞ் சரணமானது திருஷ்டாந்த பூதமாகச் சொல்லப்பட்டது. அந்த ஸஞ்சர ணத்தை விஸ்தாரமாகவும், தெளிவாகவும் சொல்லும்பொருட்டு இஃது ஆரம்பிக்கப்படுகிறது. ஸுஷுப்தி ஸ்தானமானது மோக்ஷத்தினுடைய திருஷ்டாந்தம்.)

ஸம்ப்ரஸாதத்திலேயிருந்து (ஸுஷுப்தியில்), அதனின் றும் நழுவி ஸ்வப்னத்தில் வந்து, அவ்விடத்தில் ஸந்தோஷமடை ந்து, திரிந்து, சிரமப்பட்டு, புண்ய பாபங்களையும் காண்பது போல் கண்டு மறுபடியும் ஜாக்ரத் தசைக்கு இந்த ஜீவன் வருகிறான்.

35. (இனி ஸம்ஸாரம் வர்ணிக்கப்படுகிறது.)

எப்படி லோகத்தில், அதிக பாரமேற்றப்பட்ட ஒரு வண்டி யானது, வண்டிக்காரனுடன் கூடியதாய்ச் சப்தம் செய்துகொண்டு போகிறதோ, அப்படிப்போல், இந்தச் சரீரத்திலுள்ள ஆத்மா (லிங்க சரீரத்தை உபாதியாயுள்ள ஆத்மா, ஜீவாத்மா), ஸ்வயம் ஜ்யோதிஸ் ஸ்வபாவமுள்ள பரமாத்மாவால் அதிஷ்டிதனாக, பிர காசப்படுத்தப்பட்டவனாக, ஜாக்ரத் ஸ்வப்னங்களைப்போல், இஹ பரலோகங்களில் பாப ஸம்ஸர்க்க வியோக லக்ஷணமுள்ள ஜனன மரணங்களால் ஸஞ்சரிக்கிறான்; மேற்படி வண்டியைப்போல் கதறிக்கொண்டு போகிறான்.

(அஃதாவது, சைதன்யாத்ம ஜ்யோதிஸால் விளங்குவதும், பிராணனை பிரதானமாய் வைத்துக்கொண்டிருப்பதுமான லிங்க சரீரம் போகும்பொழுது, அதை உபாதியாகவுடைய ஆத்மாவும் போவதுபோல் தோன்றுகிறது. ஆத்மா எங்கும் நிறைந்த வஸ்துவானதால் அது போகிறதென்று சொல்லக்கூடாது.)

எப்பொழுது அப்படிப் போகிறான் என்றால், மேல் மூச்சு வாங்கும்பொழுது போகிறான்.

(இந்த கஷ்ட ஸங்கதிகள் எல்லாம் வைராக்யம் வரவேண்டிய தற்காகச் சொல்லப்படுகிறது.)

36. (மேற்படி பெருமூச்சு எந்த காலத்தில், எதனிமித்தம் எப்படி, எதற்காக உண்டாகிறதென்றால் அதைப்பற்றிச் சொல்லப்படுகிறது.)

சிரஸ் பாண்யாதிகளையுடைய, பிண்டமுள்ள பிராகிருதனான புருஷன், எப்பொழுது கிழத்தனத்தினாலாவது, வியாதியினாலாவது தேஹ கார்ச்யத்தை யடைகிறானோ, அப்பொழுது, மாம்பழம் அத்திப்பழம், அரசம்பழம் இவைகள் அதன் அதன் பிடிப்பாகிய காம்புகளிலிருந்து விழுவதுபோல், சக்ஷுராதி அங்கங்களிலிருந்து விடுபட்டு (ஸுஷுப்தியில் தேஹத்தைக் காப்பாற்றும்படி பிராணனை வைத்துவிட்டு ஆத்மா ஸஞ்சரிக்கப்போவதுபோல் அன்று, மரணத்தில் பிராணனுடனும், சுத்தமாய் இந்திரியங்களை விட்டு விட்டு), மறுபடியும் வேறு ஒரு தேஹத்தை யடையும் பொருட்டு, வந்த வழிப்படி கிளம்பிப்போகிறான்.

(அவனுடைய கர்மபலனுக்குத் தக்கபடி போகங்களை யநுபவிக்கவேண்டி மறுபடியும் ஜனிக்கிறான்.)

37. (இந்தச் சரீரத்தை விட்டுப்போகிறவனுக்கு தேஹேந்திரிய வியோகம் வந்து விடுவதால் வேறு தேஹத்தைக் கிரஹிக்கும் விஷயத்தில் ஸாமர்த்யம் இல்லை; அல்லது, ஒரு ராஜனுக்கு வேலைக்காரர்கள் கிருஹம் கட்டித் தயார் செய்வதுபோல், இவனுக்கு வேறு தேஹத்தைச்செய்து காத்துக்கொண்டிருக்கும் அன்யர்களுமில்லை; இப்படியிருக்க வேறு சரீரத்தைக் கிரஹிப்பது எப்படி யென்றால், சொல்லப்படுகிறது.)

எப்படியானால், லோகத்தில், ஒரு ராஜா தன் ராஜ்யத்தில், ஓர் ஊருக்கு வரும்பொழுது அந்தக் கிராமத்திலுள்ள உக்ரர்களும் (கிராமத்திலுள்ள திருடன் முதலியவர்களைத் தண்டிப்பதற்காக பாபகர்மாக்களைச் செய்யும்படி நியமிக்கப்பட்டிருப்பவர்கள், பிராமண ஸ்திரீகளுக்கும் சூத்ரர்களுக்கும் உண்டானவர்கள்), ஸூதர்களாகிற கிராம பெரியதனக்காரர்களும் (பிராம்மண ஸ்திரீக்கும் க்ஷத்திரியனுக்கும் பிறந்தவர்கள்) அன்னங்கள், பானங்கள் விடுதிகள் இவைகளெல்லாவற்றையும் தயார்செய்து வைத்துக்கொண்டும், ராஜா வருகிறார், வருகிறார் என்று சொல்லிக்கொண்

டும் தயாராக விருப்பார்களோ அப்படிப்போல் இந்த ஸம்ஸாரியை எதிர்ப்பார்த்துக்கொண்டு, எல்லா பூதங்களும் (சரீரத்தை உண்டு பண்ணத்தக்க பஞ்ச பூதங்களும், கரணங்களுக்கு அநுகிரஹம் செய்யத்தக்க எல்லா தேவதைகளும்), வேறொருசரீரத்தை உண்டு பண்ணிவைத்துக்கொண்டும், இந்த பிரம்மம் (போக்தா) வருகிறார், வருகிறார் என்று தயாராக விருப்பார்கள்.

38. (இப்படிப்போகிற சரீரியுடன் எவர்கள் கூடப்போகிறார்கள் என்றால்.)

எப்படி ஓர் இடத்திற்குப்போக இச்சைகொண்ட ஒரு ராஜனுடன், மேற்கண்ட அவருடைய பரிவாரங்கள், சொல்லப்படாமலே, தாங்களாகேவ, எதிர்முகமாய்ப் போவார்களோ, அப்படிப் போல், மரணகாலத்தில் இந்த ஆத்மாவுடன் வாகாதி எல்லா பிராணங்களும் முன்னோடிப் போகின்றன ; அப்பொழுதுதான் மேல் மூச்சு உண்டாகிறது.

---

## பிராம்மணம் 4.

(இதில் இன்னமும் ஸம்ஸாரத்தைப்பற்றிச் சொல்லப்படுகிறது. இந்த ஆத்மா இந்திரியங்களிலிருந்து விடுபடுகிறதென்று சொல்லப்பட்டிருக்கிறது. அந்த விடுதலை எக்காலத்தில், எவ்விதம் உண்டாகிற தென்று விஸ்தாரமாய்ச் சொல்லப்படுகிறது.)

1. இந்த ஆத்மா எப்பொழுது துர்பலத்தை (தேஹதௌர்பல்யத்தை) யடைந்து, விவேக அபாவத்தை யடைவதுபோல் இருக்கிறானோ (ஆத்மாவிற்கு ஸ்வயமாக விவேகாபாவமில்லாத தால், போல், என்று சொல்லப்பட்டது), அப்பொழுது இந்த பிராணன்கள் (வாக்முதலிய இந்திரியங்களின் சக்திகள்) அவனைப் பின் தொடருகின்றன ; (அஃதாவது, ஆத்மா அவயவங்களில் நின்றும் செவ்வையாகவும், சுத்தமாகவும் விடுபட்டுப்போகிறார்). (அஃது எப்படியென்றால்) இந்த ஆத்மா தேஜோ மாத்திரர்களாயிருக்கின்ற சக்ஷுஸ் முதலிய கரணங்களை (அஃதாவது, அந்த கரணங்களின் சக்திகளை)ச் செவ்வையாக (கொஞ்சமேனும் பாக்கி

யில்லாமல்) இழுத்துக்கொண்டு, ஹிருதயத்தை (புண்டரீக ஆகாரத்தை) யடைந்து, அவ்விடத்தில் அபிவ்யக்த விக்ஞானராக இருக்கிறார். (அஃதாவது, உள் அறிவு மாத்திரம் இருக்கிறது; இந்திரியங்கள் ஒன்றும் சலிக்கின்றதில்லை.) எப்பொழுது சக்ஷுஸ் ஸம்பந்தமான புருஷன் (சக்ஷுஸ் அபிமானிதேவதை, ஆதித்யன்) அந்த சக்ஷுஸை விட்டுத் திரும்பிவிடுகிறானே அப்பொழுது ரூபத்தைப் பார்க்கச் சக்தியற்றவனாகிறான்.

2. இந்த சக்ஷுஸ் ஜ்யோதிஸ் ஆத்மாவுடன் கலந்து ஒன்றாகிறது; அதனால் சுற்றத்தார்கள் இறந்துபோகிறவன் பார்க்கவில்லையே என்று சொல்லுகிறார்கள். அப்படியே (கிராணேந்திரியாபிமானி தேவதை, அஃதாவது அதிலிருக்கிற ஆத்மஜ்யோதிஸின் அம்சம், அதைவிட்டுப்பிரிந்தவுடன்) அவனுக்கு வாஸனை தெரியவில்லையே என்று சொல்லுகிறார்கள். அப்படியே நாக்கு, வாக்கு, காது, மனஸ், த்வக் இவைகளின் விஷயங்களிலும் அறிவில்லையென்றும் சொல்லுகிறார்கள். (மேற்கண்ட) ஹிருதய சித்ரமுகமானது மேற்படி கரணங்களின் தேஜோமாத்திரைகளுடனும் ஆத்ம ஜ்யோதிஸுடனும் விளங்கிக்கொண்டிருக்கிறது. இப்படிப்பட்ட ஜ்யோதிஸுடன் விக்ஞானமயனாயிருக்கிற (லிங்கோபாதியுள்ள) ஜீவன் வெளிக்கிளம்பிப்போகிறான்.

(எவ்வழியாகப் போகிறான் என்றால்), (ஆதித்ய லோக பிராப்திக்கு நிமித்தமான ஞானம் அல்லது கர்மா இவனுக்கு இருந்தால்) கண் வழியாக ஜீவன் வெளிப்போகிறான்; (பிரம்ம லோகபிராப்திக்கு அப்படி இடமிருந்தால்) உச்சந்தலை வழியாகப் போகிறான்; அப்படியே, அவனுடைய ஞானகர்மாக்களுக்குத் தக்கபடி சரீரத்தின் மற்ற அங்கங்களின் வழியாகப்போகிறான். அந்த விக்ஞானத்மாவைப் பின்தொடர்ந்து (ஒரு ராஜனை ஸர்வாதிகாரியான மந்திரிபோல்) பிராணன் போகிறது. அதைப் பின்பற்றி (பரிவாரஜனங்கள்போல்) வாக் முதலிய கரணங்கள் போகின்றன. அப்பொழுது (மரணகாலத்தில்), (இவனுடைய கர்மாவிற்குத் தக்கபடி, அந்தக்கரண விருத்தி விசேஷத்தை யாசிரயித்துக்கொண்டிருக்கிற வாஸனாத்மகமான) விசேஷ விக்ஞானமுள்ளவனாயிருக்கிறான். அப்படிப்பட்ட விக்ஞானத்துடனும் போகிறான்.

(ஆதலால், வாஸனைகள் நல்லனவாக விருந்தால் அதற்குத்தக்க படி நல்லகதி கிடைக்கும்; ஆதலால், மரணகாலத்தில் ஸ்வாதந்திரியம் வரவேண்டிய நிமித்தம் யோகதர்மாநுஸேவநமும், யோகாப்யாஸமும், எல்லாப் புண்யங்களின் ஸம்பாதனமும் சிரத்தையுள்ள விவேகிகளால் செய்யப்படவேண்டியன வென்பது எல்லா சாஸ்திரங்களின் விதியாயிருக்கிறது. மரணகாலத்தில் இவைகளையெல்லாம் ஸம்பாதிக்க முடியாது. கர்மாவால் இழுக்கப்பட்டவனுக்கு ஸ்வாதந்திரியம் எங்கு இருக்கும். ஆதலால் முன்பே புண்யாதிகளை ஸம்பாதித்து வைத்துக்கொள்ளவேண்டும். மேற்குறித்த ஸ்வதந்திரியாபாவம் முதலான அநர்த்தங்களைப் போக்கடிக்க வேண்டியதற்காகத்தான் இந்த உபநிஷத்துக்கள் பிரவிருத்தித்திருக்கின்றன. அவச்யமாய் வரவேண்டிய அநர்த்தத்தைப் போக்கடிக்க வேறு உபாயமில்லை.)

(நிறைந்த பாரத்துடன் கதறிக்கொண்டுபோகிற ஒரு வண்டியில் உட்கார்ந்து போகிறவன் போல ஆத்மா தேஹத்தை விட்டுப் பிரிந்துபோகிறான் என்று சொல்லப்பட்டது. அவனுக்குப் போகும்வழியில் சாப்பிட அன்னம் எதுவெனில் கீழ்ச்சொல்லப் படுகிறது.)

இவன் ஸம்பாதித்திருக்கிற வித்யை (ஞானம்), இவன் செய்திருக்கிற கர்மா, பூர்வ பிரக்ஞை (சென்றுபோன கர்மாநுபவ வாஸனை) இம்மூன்றுடன் போகிறான். (இம்மூன்றும் வழியில் அன்னமாயிருக்கின்றன; அஃதாவது, இவைகளுக்குத் தக்கபடி பலபோகங்களையும், சிரமங்களையும் அநுபவிக்கின்றான்.)

(இந்தப் பிராம்மணத்தின்) தாத்பரியம்—இந்த வாஸனை அதிர்ஷ்ட கர்மாவின் ஆரம்பத்திலும், எற்கனவே செய்யப்பட்ட கர்மாக்களின் பரிபாகத்திலும் அங்கமாயிருக்கிறது; அஃதாவது, இந்த வாஸனைக்குத் தக்கபடி அவைகள் உண்டாகின்றன. அந்த வாஸனை இல்லாவிடில் எவர்களுக்கும், எவ்விதமாகவும் கர்மாவைச் செய்யவும், கர்மபலனை யநுபவிக்கவும் முடியாது. அப்யாஸமில்லாத விஷயத்தில் இந்திரியங்களுக்கு ஸாமர்த்தியமில்லை. பூர்வாநுபவ வாஸனையுடன் பிரவிருத்தமாயிருக்கிற இந்திரியங்களுக்கு இந்த ஜன்மாவில் அப்யாஸமில்லாமல் ஸாமர்த்தியமுண்டாகிறது. உலகத்தில் சிலருக்கு அப்யாஸமில்லாமலே சித்திரம் எழுதுவது

முதலான கர்மாக்களில் ஸாமர்த்தியமிருப்பதைப் பார்க்கிறோம். எளிதான தர்மாவில்கூட சிலருக்கு ஸாமர்த்தியம் இல்லாமலிருப்பதையும் பார்க்கிறோம். ஆதலால் இவையெல்லாம் பூர்வாநுபவ வாஸனை நிமித்தமாக விருக்கின்றன. ஆதலால், பூர்வ பிரக்ஞையால் அல்லாமல் எவனுக்கும் கர்மா செய்கிற விஷயத்திலும் ஏற்கெனவே செய்யப்பட்ட கர்மாவின் பலனை அநுபவிக்கிற விஷயத்திலும் பிரவிருத்தி யுண்டாகமாட்டாது. ஆதலால் இம்மூன்றும் மேற்படி வண்டியில் செல்லுபவனுக்கு வழியில் அன்னமாயிருக்கின்றன. இந்தப் பிரகாரம் இம்மூன்றும் கர்மதேஹாந்தர பிரதிபத்யுபயோக ஸாதனமாயிருப்பதால் சுபமாயிருக்கிற வித்யையையும் கர்மாவையும் ஆசரிக்கவேண்டும். அப்படி யாசரித்தால் இஷ்டமான தேஹத்தையெடுத்து இஷ்டப்படி யநுபவிக்கலாம்.

3. வித்யை, கர்மா, பூர்வபிரக்ஞை இம்மூன்றுடன், ஒரு பக்ஷி ஒரு விருக்ஷத்தைவிட்டு மற்றொரு விருக்ஷத்திற்குப்போவதுபோல், ஆத்மா முந்திய தேஹத்தைவிட்டு வேறு தேஹத்திற்குப்போகிறது. கட்டாயமாக வரவேண்டிய சரீரத்துடன் கர்மபலனை யநுபவிக்கும்படியான ஸ்தலத்திற்கு நயிப்பிவிக்கப்படுகிறான். இதில் பூர்வ தேஹத்திலிருந்த கரணங்கள் இருந்தபடியே புது தேஹத்தில் புகுந்து தொழிலைச் செய்கின்றனவா? அல்லது, ஒரு குடத்திற்குள் வைக்கப்பட்டிருக்கிற ஒரு தீபத்தின் வெளிச்சம், அந்தக் குடத்தை எடுத்துவிட்டால் அந்த வெளிச்சம் எங்கும் பரவுகிறதோ, அப்படி கரணங்கள இந்தத் தேஹத்தை விட்டவுடன் எங்கும் வியாபித்து, பிறகு, சுருங்கி, வேறு தேஹத்தில் வந்து புகுகின்றனவா? அல்லது மனோமாத்திரமாக விருக்கின்றவா? அல்லது எவ்விதம் என்று சொல்லப்படுகின்றன.

ஒரு புல்லட்டையானது எவ்விதம் ஒரு திருணத்திலிருந்து மற்றொரு திருணத்திற்குப் போகிறதோ, (அஃதாவது, ஒரு திருணத்தை விட விட அந்த விட்ட பாகம் மற்றொரு திருணத்தில் போய்), கடைசியில் இதை முழுமையும் விட்டதும், அதை முழுவதும் வியாபித்துக்கொண்டும் ஆகிவிடுகிறதோ, அப்படி, இந்த சரீர ஆத்மா, இந்தச் சரீரத்தை விட்டு, அவித்யையைப் போக்கடித்து (அஃதாவது, சேதனத்வமாகச் செய்துகொண்டு), தன்னைச் சுருக்கிக்கொண்டு இன்னொரு தேஹத்திற்குப் போகிறது.

4. (இப்படி தேஹாந்தர ஆரம்பவிஷயத்தில் நித்ய உபாதான காரணமாயிருக்கிற பஞ்சபூதங்களில் நின்றும் அம்சம் எடுத்து வேறு தேஹம் செய்யப்படுகிறதா? அல்லது, அபூர்வமான ஒரு தேஹம் செய்யப்படுகிறதா வென்றால் சொல்லப்படுகிறது.)

ஒரு தட்டான் எவ்விதம் ஒரு பெரிய தங்கக்கட்டியிலிருந்து ஒரு துணுக்கை யெடுத்து, அதனால் நூதனமாகவும், அழகாகவும் இருக்கும் ஒரு நகையைச் செய்கிறானோ, அவ்விதம் அளவற்றதாகவிருக்கிற பஞ்சபூதங்களிலிருந்து ஓர் அம்சத்தை யெடுத்து அவித்யையைப் போக்கடித்து, நூதனமாகவும், அழகாகவுமிருக்கிற வேறு தேஹத்தைத் தானே யுண்டுபண்ணிக்கொள்ளுகிறான். அந்த தேஹம் பிதிருலோக போகத்துக்குத் தக்க தேஹமாகவாவது, அப்படியே, கந்தர்வ, தைவ, பிராஜாபத்ய, பிரம்மலோக போகத்துக்குத் தக்க தேஹமாகவாவது இருக்கும்.

5. அப்படிப்பட்ட ஆத்மாதான் பிரம்மம் (பரமாத்மா); விக்ஞானமயன் (புத்திமயன், ஜீவன்); மனோமயன் (மனஸில் எண்ணுபவன்); பிராணமயன் (ஐந்து விருத்திகளை யுடையவன்); சக்ஷுர்மயன் (கண் வழியாகப் பார்க்கிறவன்); காதுகள் வழியாகக் கேட்பவன்; பிருதிவீமயன் (பிருதிவீ அம்சம் அதிகமுள்ளசரீரங்கள்); ஜலாம்சம் அதிகமுள்ள சரீரங்கள்; வாயு அம்சம் அதிகமுள்ள சரீரங்கள்; ஆகாசமயன்; தேஜோமயன் (தேவர்கள்); அதேஜோமயன் (பிரேதாதி சரீரங்கள்); காமமயன் (இச்சையுள்ளவன்); அகாமமயன்; கோபமுள்ளவன்; கோபமில்லாதவன்; தர்மமயன்; அதர்மமயன்; ஸர்வமயன் (எல்லாமாக விருப்பவன்); அந்தமயன் (எது எது பரோக்ஷமாக விருக்கிறதோ அந்த வஸ்துமயமாக விருப்பவன்); இந்த மயன் (பிரத்யக்ஷமான வஸ்துமயமாக விருப்பவன்) எப்படிச் செய்ய இச்சையுள்ளவனோ அப்படிச் செய்பவன்; எப்படி நடக்க இச்சையுள்ளவனோ அப்படி நடப்பவன்.

ஸாது காரியத்தைச் செய்பவன் ஸாதுவாக விருப்பான்; பாபத்தைச் செய்பவன் பாபியாகிவிடுவான்; புண்ணியம் செய்வதால் புண்ணியசாலி; பாபம் செய்வதால் பாபி. (அஃதாவது, அதற்கு அதற்குத் தக்க பலனை யநுபவிக்கக் கடமைப்படுகிறான்.)

ஆதலால் சொல்லுகிறார்கள்—இந்த புருஷன் (ஜீவன்) காமமயன் என்றும் (காமம் பாபபுண்ணியத்திற்குக் காரணம்; பாப

புண்ணியம் சரீரகிரஹணத்திற்குக் காரணம்); எப்பொழுது காம முண்டாயிற்றோ அப்பொழுது ஒரு நிச்சய புத்தி யுண்டாகிறது; எப்பொழுது நிச்சய புத்தியுண்டோ எப்பொழுது கர்மாவைச் செய்கிறானோ அப்பொழுது அதனால் ஸம்பந்தப்பட்டுப் போகிறான். (அஃதாவது, அதனுடைய பலன்களை யநுபவிக்கும்படி நேரிடுகிறது.) ஆதலால், காமம் இந்த ஸம்ஸாரத்திற்கு மூலமாக விருக்கிறது ; அதை யறுத்துவிடவேண்டியது.)

6. இந்த விஷயத்தில் அடியிற்கண்ட மந்திரம் இருக்கிறது. அஃதாவது, இந்த ஜீவன் ஆசையால் கட்டுப்பட்டவனாக (கர்மபலனுடன் கட்டுப்பட்டவனாக), அந்தக் கர்மாவுடன்கூட அந்தக் குறிப்பை யடைகிறான்; (எதை யெனில்) எதனிடம் இவனுடைய அபிலாஷை நிச்சயமாக வைக்கப்பட்டிருக்கிறதோ அந்த மனஸாகிற குறிப்பை (யடைகிறான்), ஆதலால், ஸம்ஸாரத்திற்குக் காமமே மூலமென்பது ஸித்தம்; காமத்தை விட்டுவிட்ட பிரம்மவித்திற்குக் கர்மாக்களிருந்தபோதிலும் அவைகளுக்குப் பலன்கள் இல்லாமல் போய்விடும்.)

(அந்தக் குறிப்பை யடைந்து என்ன செய்கிறான் எனில்) எந்த எந்தக் கர்மாவை இவ் வுலகில் செய்திருக்கிறானோ அந்தக் கர்மாக்களுடைய பலன்களையெல்லாம் அநுபவித்து, மறுபடியும் கர்மாக்களைச்செய்ய, கர்மாவைப் பிரதானமாக வைத்துக்கொண்டிருக்கிற இந்த உலகத்திற்குச் செல்லுகிறான். (காமமுள்ள ஸம்ஸாரியின் கதி இதுவே.)

காமமற்றவன் ஒரு பக்கத்திலும் பிறப்பதில்லை; காமமில்லாதவனுக்குக் கிரியை யில்லை; காமமில்லாதவன் மோக்ஷத்தை யடைகிறான். அகாமயமானன் யாரெனில், அகாமன் (காமமில்லாதவன்); (அகாமன் யாரெனில்) நிஷ்காமன் (தன்னிடமிருந்து காமங்கள் வெளிப்பட்டுப் போனவன்); (நிஷ்காமன் யாரெனில்) ஆப்தகாமன்) எவனால் எல்லாக்காமங்களும் யடையபட்டனவோ அவன்); (ஆப்தகாமன் யாரெனில்) ஆத்மகாமன் (எவனுக்கு ஆத்ம வஸ்துவைத்தவிர வேறொன்றிலும் காமமில்லையோ அவன்). அப்படிப்பட்டவனுடைய பிராணன்கள் உயரக் கிளம்பிப்

போவன வல்ல; இவ்விடத்திலேயே (தேஹத்தை விடாமலே) பிரம்மமாகி, பிரம்மத்தை யடைகிறான்.

(எவனுக்கு ஆத்மா ஸர்வமாக விருக்கிறதோ அவனுக்கு ஆத்மாவைக்காட்டிலும் வேறான வஸ்து இச்சிக்கப்படவேண்டுவதாக ஒன்றும் இல்லை. அப்படிப்பட்டவனுக்கு இச்சிக்கப்படவேண்டுவது யாதொன்றுமில்லாததால் கர்மா இல்லை. எவர்கள் பிரத்யவாயம் வருமென்று நினைத்துக் கர்மாக்களைச் செய்கிறார்களோ அவர்களுக்கு எல்லாம் ஆத்மாவாகத் தோற்றமில்லை. அவர்கள் பிரம்மவித்துக்கள் அல்லர். ஆத்மாவைக்காட்டிலும் பிரத்யவாயம் என்பது ஒன்று வேறாக இருக்கிறது என்ற பாவம் உண்டாகிறபடியால் பிரம்மவித்துக்கள் ஆகமாட்டார்கள். ஆத்மா அசநாயாத்யதீதன், நித்யன், பிரத்யவாயத்தில் ஸம்பந்தப்படாதவன் என்று எவனால் அறியப்படுகிறதோ அவன்தான் பிரம்மவித். ஆதலால், காமமற்றவன் மோக்ஷத்தை யடைகிறான்.)

6. (இந்த ஆத்மா பிரம்மமாகவே யிருக்கிறபொழுது, பிரம்மமென்றது வேறுபோல் பிரம்மத்தை யடைகிறான் என்று சொல்லப்படுவானே யெனில்—பிரம்மத்தை யடைகிறான் என்பது உபசாரவார்த்தை யல்லாது வேறில்லை; தேஹங்கள்மாத்திரம் வெவ்வேறாக விருக்கின்றனவே தவிர ஆத்மா ஒன்றுதான்.

இதில், ஸம்ஸாரம் வர்ணிக்கப்பட்டது; ஸம்ஸாரத்திற்கு ஹேதுவாயிருக்கிற அவித்யா,கர்ம, பூர்வ பிரக்ஞைகளைப்பற்றியும் சொல்லப்பட்டது; உபாதிபூதங்களாகவும், காரியகாரண லக்ஷணங்களாகவுமிருக்கின்ற எந்த பூதங்களால் சூழப்பட்டவனாக ஸம்ஸாரித்வத்தை அநுபவிக்கிறானோ அவைகளைப்பற்றியும் சொல்லப்பட்டது; அவைகளுக்கு ஹேதுக்களான தர்மாதர்மங்களை, முதலில், பூர்வபக்ஷமாகக் காட்டி, பிறகு, காமமே ஸாக்ஷாத் ஹேதுவாக விருக்கிறதென்று காண்பிக்கப்பட்டது; பிறகு, ஸர்வாத்ம பாவமான மோக்ஷமும் சொல்லப்பட்டது; மோக்ஷத்திற்குக் காரணம் ஆத்மகாமதா வென்றும் சொல்லப்பட்டது; ஆத்மக்ஞானம் இல்லாமல் அஃது உண்டாகமாட்டாது; அதற்குக் காரணம்

பிரம்மவித்யை; பந்தன காரியம் அவித்யை; மோக்ஷமும், மோக்ஷ ஸாதனமும் சொல்லப்பட்டன; இவைகளை உறுதிப்படுத்திச் சொல்வதற்காக இந்த பிராம்மணம் ஏற்பட்டிருக்கிறது; அஃதாவது.)

இவ் விஷயத்தில் அடியிற்கண்ட சுலோகம் இருக்கிறது:— எப்பொழுது இவனுடைய ஹிருதயத்தில் ஆசிரயித்துக்கொண்டிருக்கிற (புத்திர, வித்த, லோகம் முதலான லக்ஷணமுள்ள) எல்லா ஆசைகளும், வேருடன், அற்றுப்போகின்றனவோ, அப்பொழுது, மர்த்தியன் அமிருதன் ஆகிறான். பிரம்மத்தைச் சேருகிறான். ஆதலால், வித்வானுடைய பிராணன்கள் உயரக் கிளம்பிப்போவதில்லை; இருந்தவிடத்திலேயே ஸ்வகாரணமாயிருக்கிற புருஷனாகிய பிரம்மத்தினிடத்தில் ஐக்கியமாகின்றன.

(இவ்விதம் ஐக்கியமாகிவிட்டால், எப்படி ஸர்வாத்மாவாக ஆகி, மறுபடியும் ஒரு தேஹத்தை யடையாமல், ஸம்ஸரிக்காமலிருக்கிறான் என்றால், அதற்குத் திருஷ்டாந்தத்துடன் சொல்லப்படுகிறது.) எப்படி, லோகத்தில், ஒரு பாம்புச்சட்டையானது அந்தப் பாம்பால் விடப்பட்டு மிருதமாகப் புற்றி னருகில் கிடக்கிறதோ, அப்படிப்போல், இந்தச் சரீரம், பாம்பு ஸ்தானீயனாகிய ஜீவனால் விடப்பட்டு, இறந்துபோய், கீழே கிடந்துபோகிறது; அப்பொழுது ஆத்மா அமிருதனாகிய பிரம்மதேஜஸாகவே ஆய்விடுகிறான்.

(ஜனகர்):—இப்படி உபதேசித்ததற்காகத் தங்களுக்கு (யாக்ஞவல்க்யருக்கு) இன்னும் ஆயிரம் மாடுகள் கொடுக்கிறேன்.

8. (ஆத்மகாமனாகிய பிரம்மவித்திற்குத்தான் மோக்ஷம் என்பதற்கு விஸ்தாரமாக அநேக மந்திரங்கள் சொல்லப்படுகின்றன.)

இவ்விஷயத்தில் அடியிற்கண்ட மந்திரங்கள் உள:—

ஸூக்ஷ்மமாயும் (அறிவது வருத்தமானதால் ஸூக்ஷ்மம்), விஸ்தாரமாயும் (ஸ்பஷ்டமான தரண ஹேதுவாயிருப்பதால் விஸ்தாரம்), புராணமாயும் (எப்பொழுது முள்ளதாயும்) இருக்கும் மார்க்கம் பிரம்மவித்யை என்பது; இஃது என்னால் அடையப்பட்டது (வேத புருஷன்சொல்); பின்னும், என்னால் அநுபவிக்கப்பட்டது; அப்படிப்பட்ட மார்க்கத்தால் பிரம்மவித்

துக்கள் ஸ்வர்க்கலோகமான பரபிரம்மத்தை யடைகிறார்கள். இந்தத் தேஹத்தை விடுவதற்கு முன்னமே (அஃதாவது, ஜீவ வந்தர்களாக விருக்கும்பொழுதே) யடைகிறார்கள்.

9. (இந்த மோக்ஷமார்க்கத்தில் சில முமுக்ஷுக்கள் விரோத ஸங்கதிகள் சொல்லுகிறார்கள்; எப்படியென்றால்.)

இந்த மார்க்கத்தில் சுத்தவெளுப்பாக இருக்கிற தென்று சிலரும், மஞ்சள் நிறமுள்ள தென்று சிலரும், கறுப்பு என்று சிலரும், பச்சை யென்று சிலரும், சிவப்பு என்று சிலரும் பலவித மாகச் சொல்லுகிறார்கள். (அஃதாவது, ச்லேஷ்மாதி ரஸங் களால் நிறைந்திருப்பதும், பலவர்ணங்களாகத் தோன்றுவதுமான ஸுஷும்னு முதலிய நாடிகளின் வழியாக இருக்கிறதென்று, அஃதாவது கேவலம் யோகாப்யாஸத்தால் மட்டும் பிரம்மத்தை யடையலாமென்று சொல்லுகிறார்கள்; அப்படியல்ல; இவைகள் மோக்ஷமார்க்கங்கள் அல்ல; ஸம்ஸாரத்திற்குப் போகும்படியான மார்க்கங்களே; பிரம்மலோகம் முதலிய லோகங்களுக்கு இந்த மார்க்கத்தின் வழியாகப் போகலாம்; ஆனால் மறுபடியும் திரும்பத் தான் வேண்டும். பின்னர் மோக்ஷமார்க்கம் எது வென்றால்.) ஆத்ம காமத்தால் ஆப்தகாமனாகி, எல்லாக் காமங்களேயும் விட்டு, அணைந்த தீபம்போல், சக்ஷுராதி இந்திரியங்களின் விருத்திகள் ஒழிவடைந்து இருக்கையானது ஞானமார்க்கம். இந்த மார்க் கத்தின் வழியாக பிரம்மவித் மாத்திரம் பிரம்மத்வத்தை யடைவ தில்லை; பிரம்மவித்திற்கு அந்யனும் யடைகிறான்; அவன் யாரெனில்—முன்னால் புண்யம்செய்து, பிறகு ஏஷணைகளைவிட் டுப் பரமாத்மதேஜஸில் தன்னாத்மாவைச் சேர்த்தவனும் (அஃதா வது யோகியும்) யடைகிறான்.

10. எவர்கள் அவித்யயை (ஸாத்ய ஸாதந லக்ஷணமா யிருக்கிற கர்மாவை) உபாஸிக்கிறார்களோ அவர்கள் இருளாகிற தமஸை (ஸம்ஸாரத்திற்குக் கொண்டுபோகும் கதியை) யடை கிறார்கள். அந்த அவித்யைக்கு உபயோகமாயிருக்கிற வேதங்க ளின் கர்மகாண்ட வித்யையில் எவர்கள் பற்றுள்ளவர்களாக விருக் கிறார்களோ அவர்கள் இன்னும் அந்த தமஸை யடைகிறார்கள்.

11. (அப்படி அவர்கள் தமஸை யடைவதால் என்ன தோஷம் ஸம்பவிக்கிறதெனில்.)

தமஸால் சூழப்பட்டிருக்கிற அஸுகமான லோகங்களை யடைகிறார்கள்; மறுபடியும் ஸம்ஸாரத்தை யடையும்படி செய்கிறது; இவர்கள் அவித்வான்கள்; புத்தியில்லாத பிராகிருத ஜனங்கள்.

12. எந்த புருஷன் தன் ஆத்மாவை ஸர்வ "பிராணி பிரத்யய ஸாக்ஷியாகவும், 'நேதி, நேதி' யென்று நிர்தேசிக்கப் பட்டவனாகவும், ஸர்வ பூதஸ்தனாகவும், நித்யனாகவும், சுத்தனாக வும், புத்தனாகவும், முக்தனாகவுமிருக்கிற பரமாத்மாவாக விருக்கிறோம்" என்று அறிகிறானோ, அவன், எதை இச்சித்துக்கொண்டு எதன் பிரயோஜனத்தின்பொருட்டுத் தன் சரீரத்தை வருத்தப் படுத்திக்கொள்ளவேண்டும். (அப்படிப்பட்டவனுக்கு யாதொரு காமமுமில்லை யென்பது தாத்பரியம்; காயக்லேசம் வேண்டியதில்லை.)

13. எவனுடைய ஆத்மா, 'நாம் பரபிரம்மமா யிருக்கிறோம்' என்று அநுபவிக்கப்பட்டு, ஸாக்ஷாத்கரிக்கப்பட்டிருக்கிறதோ அவன்தான் விச்வகிருத், ஜகத்தை உண்டாக்கினவன். ஸர்வத்தையும் ஸ்ருஷ்டித்தவன். ஸர்வமும் அவனுடைய லோகம்; கஹநமாயிருக்கிற இந்த தேஹத்தில் பிரவேசித்திருக்கிற ஆத்மா அவனுடைய லோகமே (அஃதாவது, பரமாத்மாவே.)

14. நாம், இவ்விடத்தில், தீர்க்க காலம் அக்ஞான நித்ரா மோஹிதர்களாக விருந்து, பிறகு, எப்படியோ வருத்தப்பட்டுப் பிரம்மத்வத்தை யடைந்து, அறிந்தவர்களாக ஆகிவிட்டோம். (இது பிரம்மஸாக்ஷாத்கார அநுபவம் வேண்டுமென்பதைக் காட்டுகிறது.) இல்லாவிடில் (அப்படி அறிந்துகொள்ளாவிடில்) பெரிய நஷ்டம் உண்டாகும். (எப்படி யெனில்) அறிந்தவர்கள் அமிருதத்வத்தை யடைகிறார்கள். தெரியாதவர்கள் துக்கத்தை யடைகிறார்கள்.

15. எப்பொழுது ஒருவன், (எப்படியோ கஷ்டப்பட்டு ஒரு பரம காருணிகனாகிய ஆசாரியனை யடைந்து அவரிடமிருந்து பிரஸாதம்பெற்ற) பிறகு, உண்டான யாவற்றிற்கும், உண்டாகப்

துக்கள் ஸ்வர்க்கலோகமான பரபிரம்மத்தை யடைகிறார்கள். இந்தத் தேஹத்தை விடுவதற்கு முன்னமே (அஃதாவது, ஜீவந்தர்களாக விருக்கும்பொழுதே) யடைகிறார்கள்.

9. (இந்த மோக்ஷமார்க்கத்தில் சில முமுக்ஷுக்கள் விரோத ஸங்கதிகள் சொல்லுகிறார்கள்; எப்படியென்றால்.)

இந்த மார்க்கத்தில் சுத்தவெளுப்பாக இருக்கிற தென்று சிலரும், மஞ்சள் நிறமுள்ள தென்று சிலரும், கறுப்பு என்று சிலரும், பச்சை யென்று சிலரும், சிவப்பு என்று சிலரும் பலவிதமாகச் சொல்லுகிறார்கள். (அஃதாவது, ச்லேஷ்மாதி ரஸங்களால் நிறைந்திருப்பதும், பலவர்ணங்களாகத் தோன்றுவதுமான ஸுஷும்னு முதலிய நாடிகளின் வழியாக இருக்கிறதென்று, அஃதாவது கேவலம் யோகாப்யாஸத்தால் மட்டும் பிரம்மத்தை யடையலாமென்று சொல்லுகிறார்கள்; அப்படியல்ல; இவைகள் மோக்ஷமார்க்கங்கள் அல்ல; ஸம்ஸாரத்திற்குப் போகும்படியான மார்க்கங்களே; பிரம்மலோகம் முதலிய லோகங்களுக்கு இந்த மார்க்கத்தின் வழியாகப் போகலாம்; ஆனால் மறுபடியும் திரும்பத்தான் வேண்டும். பின்னர் மோக்ஷமார்க்கம் எது வென்றால்.) ஆத்ம காமத்தால் ஆப்தகாமனாகி, எல்லாக் காமங்களையும் விட்டு, அணைந்த தீபம்போல், சக்ஷுராதி இந்திரியங்களின் விருத்திகள் ஒழிவடைந்து இருக்கையானது ஞாநமார்க்கம். இந்த மார்க்கத்தின் வழியாக பிரம்மவித் மாத்திரம் பிரம்மத்வத்தை யடைவதில்லை; பிரம்மவித்திற்கு அந்யனும் யடைகிறான்; அவன் யாரெனில்—முன்னால் புண்யம்செய்து, பிறகு ஏஷணைகளைவிட்டுப் பரமாத்மதேஜஸில் தன்னாத்மாவைச் சேர்த்தவனும் (அஃதாவது யோகியும்) யடைகிறான்.

10. எவர்கள் அவித்யயை (ஸாத்ய ஸாதந லக்ஷணமாயிருக்கிற கர்மாவை) உபாஸிக்கிறார்களோ அவர்கள் இருளாகிற தமஸை (ஸம்ஸாரத்திற்குக் கொண்டுபோகும் கதியை) யடைகிறார்கள். அந்த அவித்யைக்கு உபயோகமாயிருக்கிற வேதங்களின் கர்மகாண்ட வித்யையில் எவர்கள் பற்றுள்ளவர்களாக விருக்கிறார்களோ அவர்கள் இன்னும் அந்த தமஸை யடைகிறார்கள்.

11. (அப்படி அவர்கள் தமஸை யடைவதால் என்ன தோஷம் ஸம்பவிக்கிறதெனில்.)

தமஸால் சூழப்பட்டிருக்கிற அஸுகமான லோகங்களை யடைகிறார்கள்; மறுபடியும் ஸம்ஸாரத்தை யடையும்படி செய்கிறது; இவர்கள் அவித்வான்கள்; புத்தியில்லாத பிராகிருத ஜனங்கள்.

12. எந்த புருஷன் தன் ஆத்மாவை ஸர்வ "பிராணி பிரத்யய ஸாக்ஷியாகவும், 'நேதி, நேதி' யென்று நிர்தேசிக்கப் பட்டவனாகவும், ஸர்வ பூதஸ்தனாகவும், நித்யனாகவும், சுத்தனாகவும், புத்தனாகவும், முக்தனாகவுமிருக்கிற பரமாத்மாவாக விருக்கிறோம்" என்று அறிகிறானோ, அவன், எதை இச்சித்துக்கொண்டு எதன் பிரயோஜனத்தின்பொருட்டுத் தன் சரீரத்தை வருத்தப் படுத்திக்கொள்ளவேண்டும். (அப்படிப்பட்டவனுக்கு யாதொரு காமமுமில்லை யென்பது தாத்பரியம்; காயக்லேசம் வேண்டியதில்லை.)

13. எவனுடைய ஆத்மா, 'நாம் பரபிரம்மமா யிருக்கிறோம்' என்று அநுபவிக்கப்பட்டு, ஸாக்ஷாத்கரிக்கப்பட்டிருக்கிறதோ அவன்தான் விச்வகிருத், ஜகத்தை உண்டாக்கினவன். ஸர்வத்தையும் ஸ்ருஷ்டித்தவன். ஸர்வமும் அவனுடைய லோகம்; கஹநமாயிருக்கிற இந்த தேஹத்தில் பிரவேசித்திருக்கிற ஆத்மா அவனுடைய லோகமே (அஃதாவது, பரமாத்மாவே.)

14. நாம், இவ்விடத்தில், தீர்க்க காலம் அக்ஞான நித்ரா மோஹிதர்களாக விருந்து, பிறகு, எப்படியோ வருத்தப்பட்டுப் பிரம்மத்வத்தை யடைந்து, அறிந்தவர்களாக ஆகிவிட்டோம். (இது பிரம்மஸாக்ஷாத்கார அநுபவம் வேண்டுமென்பதைக் காட்டுகிறது.) இல்லாவிடில் (அப்படி அறிந்துகொள்ளாவிடில்) பெரிய நஷ்டம் உண்டாகும். (எப்படியெனில்) அறிந்தவர்கள் அமிருதத்வத்தை யடைகிறார்கள். தெரியாதவர்கள் துக்கத்தை யடைகிறார்கள்.

15. எப்பொழுது ஒருவன், (எப்படியோ கஷ்டப்பட்டு ஒரு பரம காருணிகனாகிய ஆசாரியனை யடைந்து அவரிடமிருந்து பிரஸாதம்பெற்ற) பிறகு, உண்டான யாவற்றிற்கும், உண்டாகப்

போகிற யாவற்றிற்கும் ஈசனுயிருக்கும் ஆத்மாவைப் பார்க்கிறானோ, அப்பொழுது அவனுக்கு அவரிடத்திலிருந்து ரக்ஷணை வேண்டியதில்லை. (அஃதாவது, அதனுடன் அவன் ஒன்றாகக் கலந்து போவதால் ரக்ஷணை அவசியமில்லை; தனிப்பட்டுப்பயந்து நின்றால் அன்றோ இவன் ஈசுவரனுடைய ரக்ஷணையை எதிர் பார்க்கவேண்டும்.)

16. ஸம்வத்ஸரமென்ற காலாத்மா, எந்த ஈசானனைக்காட்டிலும் (பரமாத்மாவைக்காட்டிலும்) கீழ்ப்பட்டவனோ, அது தன் அவயவங்களாகிய அஹோராத்ரங்களுடன் இருக்கிறது. இவன் ஜ்யோதிஸ்களுக்குள் ஜ்யோதிஸாக விருக்கிறான். (அஃதாவது, ஆதித்யாதி ஜ்யோதிஸ்களைப் பிரகாசப்படுத்துகிறான்.) அவன்தான் அமிருதம்; ஆயுஸ். இவ்விதமாகக் காலாத்மாவைத் தேவர்கள் உபாஸிக்கின்றார்கள். ஆதலால், அவர்கள் மரணமில்லாதவர்களாகவும், தீர்க்காயுஸ் உள்ளவர்களாகவும் இருக்கிறார்கள்.

17. மேலும், எந்த பிரம்மத்தில் ஐந்து, ஐந்து ஜனங்களும், ஆகாசமும் வைக்கப்பட்டிருக்கின்றனவோ, அந்த ஆத்மாவை அமிருதமான பிரம்மமென்று நினைக்கிறேன். (கந்தர்வர்கள், பிதிருக்கள் தேவர்கள், அஸுரர்கள், ரக்ஷஸ்கள் இவைகள் ஐந்து.) அப்பொழுது நான் வித்வானாகவும், அமிருதனாகவும் ஆய்விடுகிறேன்.

18. மேலும், எவர்கள் அந்த பிரம்மத்தைப் பிராணனுக்குப் பிராணனாகவும் (அஃதாவது பிராணனுடைய தொழிலை நடத்தும்படி பிரேரணைசெய்கிற ஜ்யோதிஸாகவும்), நேத்திரத்திற்கு நேத்திரமாகவும், சுரோத்திரத்திற்குச் சுரோத்திரமாகவும், மனஸுக்கு மனஸாகவும் இருப்பதாக அறிகிறார்களோ அவர்கள் அந்தப் பிரம்மத்தைச் சிரந்தன வஸ்துவாகவும், முன்பே யிருப்பதாகவும் நிச்சயமாய் அறிகிறார்கள்.

19. (அந்த பிரம்ம தர்சன ஸாதனம் சொல்லப்படுகிறது.) ஆசார்யரால் உபதேசிக்கப்பட்டு, பரமார்த்த ஞானத்தால் ஸம்ஸ்கரிக்கப்பட்ட மனஸால் அந்தப் பிரம்மம் பார்க்கப்படவேண்டியது. இவ்விடத்தில் நாநாவாக (பலவாக) ஒன்றுமில்லை. எல்லாம்

பிரம்மமே. எவன் இவ்விடத்தில் பலவாகப் பார்க்கிறுனே அவன் மரணத்தில் நின்றும் மரணத்தை யடைகிறுன் (அஃதாவது, ஸம்ஸாரமுண்டு).

20. இந்த பிரம்மம் ஒரே பிரகாரமாகவே பார்க்கப்பட வேண்டியது. (அஃதாவது, விக்ஞான கந ஏக ரஸமாகப் பார்க்கப் பட வேண்டியது.) அஃது இன்னும் எப்படிப்பட்டதெனில், அப்ரமேயம், அளவிலகப்படாதது; நித்யமுள்ளது; தர்மாதர்மாதி மலமற்றது ; அவ்யாகிருத ஆகாசத்தைக்காட்டிலும் உயர்ந்தது ; பிறப்பில்லாதது ; எல்லாவற்றைக்காட்டிலும் பெரிது ; நாசமற்றது.

21. இப்படிப்பட்ட ஆத்மாவைப் புத்திமானுகிய பிராமணன் (குருபதேசத்தாலும், சாஸ்திரத்தாலும்) அறிந்து, அதனுல் முடிவான பிரக்ஞையை யடையட்டும். (அஃதாவது, இந்தப் பிரக்ஞையைக் கொடுக்கத்தக்க ஸாதனங்களாகிற ஸந்யாஸம், சமம், தமம் முதலியவைகளைச் செய்யட்டும்.) வெகு சப்தங்களைத் தியானம் செய்ய வேண்டாம். (ஓம்கார, ஸ்வல்ப அக்ஷரத்தை தியாநம் செய்தால் போதும்; அல்லது, அதிகப் பேச்சுக்களை வளர்த்திச் சொல்லவேண்டாம்). அப்படி அதிகப் பேச்சுக்கள் பேசுவது வாக்கிற்கு சிரமமே தவிர வேறு பிரயோஜனமில்லை.

22. (இதில், பந்த மோக்ஷங்கள், அதன் அதன் ஹேதுக்களுடன், சொல்லப்பட்டன. பிறகு, மோக்ஷ ஸ்வரூபமும் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டது. இந்த ஆத்மவிஷயத்தில் எல்லா வேதங்களும் உபயோகப்படும் என்பதைப்பற்றிச் சொல்ல இந்த கண்டிகை ஆரம்பிக்கப்படுகிறது ; அஃதாவது, காம்ய விஷயமாயிருக்கிற பாகம் தவிர மற்ற பாகமெல்லாம் உபயோகப்படும்.)

அப்படிப்பட்ட இந்த ஆத்மாவானவர் மஹான் (எல்லாவற்றைக்காட்டிலும் பெரிது); பிறக்காதவர் ; பிராணன்களுள் விக்ஞானமயமானவர் ; அந்தர்ஹிருதயத்திலிருக்கிற ஆகாசத்தில் புத்தி விக்ஞானத்துடன் கூடியவர் (அல்லது, ஸுஷுப்தி காலத்தில் ஹிருதயாகாசமென்று பெயருள்ள நிருபாதிகராகவும், விக்ஞானமயராகவும், ஸ்வஸ்வரூபியாகவு மிருக்கிற பரமாத்மாவிடத்தில் கலந்து, சேர்ந்து இருக்கப்பட்ட ஜீவன்).(பிரம்மன், இந்திரன் முதலான) எல்லோரையும் தன்வசப்படுத்திக்கொண்டிருப்பவர் ;

அப்படிப்பட்ட எல்லோரையும் ஆளப்பட்டவர்; (மந்திரி முதலானவர்களின் ஒத்தாசையின்பேரில் ஆளுகின்ற ஒரு ராஜாவைப் போல் அன்று, ஆனல்) எல்லோருக்கும் அதிபதி; ஸ்வதந்திரர்; ஸாதுவாகவிருக்கப்பட்ட கர்மாவால் அவர் பெரியவராகப் போவதில்லை; அஸாதுவாக விருக்கப்பட்ட கர்மாவால் அவர் கீழ்ப்பட்டவராகப் போவதில்லை; (அஃதாவது, அவர் எந்தக் கர்மாவுடனும் ஸம்பந்தப்படவில்லை.)

மேலும், இவர் ஸர்வேசுவரர்; (பிரம்மன்முதல் ஸ்தம்பப் பூச்சி வரையுள்ள) எல்லா பூதங்களுக்கும் அதிபதி; அப்படிப்பட்ட எல்லா பூதங்களையும் ரக்ஷிப்பவர்; இந்த பதினன்கு லோகங்களையும் அதன் அதன் நிலைமை விட்டுப் பிசகாமல் நிலைநிறுத்தி தரித்துக்கொண்டிருக்கிற ஸேது, கரையாயிருப்பவர்; இப்படிப் பட்ட, உபநிஷத்தினல் பிரதிபாதிக்கப்பட்டிருக்கிற புருஷனை பிராம்மணர்கள் (பிரம்ம, க்ஷத்திரிய, வைச்யர்கள் எல்லோரும்) வேதாநுவசனத்தினல் (வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிற கர்ம காண்ட விதிப்படி அநுஷ்டிப்பதனல்) அறிய விரும்புகிறார்கள்; (அஃதாவது, காம்ய பாகங்களாயிருக்கிற கர்மாக்கள் அல்லாத மற்ற நித்ய கர்மாக்களைப் பிராம்மணன் கட்டாயமாக அநுஷ்டிக்க வேண்டும்; உபநிஷத்தாலேயே அறியப்படவேண்டிய பிரம்மத்தை இந்த நித்யகர்மாநுஷ்டானத்தால் எப்படி அறியக்கூடுமெனில், அப்படிப்பட்ட கர்மாவை யநுஷ்டிப்பதால் சித்தத்திற்குச் சுத்தி யுண்டாகிறது. அப்படி சுத்தமுள்ளவர்கள்தான் ஆத்மாவைத் தடையின்றி அறிய சக்தியுள்ளவர்களாயிருக்கிறார்கள்.)

(எப்படிபட்ட வேதாநுவசனத்தால் என்றால்) யக்ஞத்தாலும், தானத்தாலும், தபஸாலும் (அறிய விரும்புகிறார்கள்). (இவைகளெல்லாம் காம்ய ரஹிதமாகவிருக்கவேண்டும்.) இவைகளால் விசுத்த ஆத்மாவாகி, பிறகு, பிரம்மத்தை யறிந்து முனிகளென்ற யோகிகளாகிவிடுகிறார்கள். (இப்படி காம்யவர்ஜிதமாயிருக்கிற நித்யகர்மாவால் உண்டான ஞானேத்பத்தி மூலமாக மோக்ஷ ஸாதனத்வம் உண்டாகிறது; மநநம், நினைப்பு, அஃதாவது ததேகத்யானம், இதனல் முனியென்று பெயர்.)

இந்த ஆத்மாவையே தங்களுக்கு லோகமாக இச்சிப்பவர்கள் ஸர்வகர்மாக்களையும் விட்டுவிட்டுப் போகிறார்கள்.

(கர்மாக்களை எப்படி விட்டு எங்குப்போகிறார்கள் என்றால் அதற்குச் சொல்லப்படுகிறது; அர்த்தவாதமாக, அஃதாவது, அதிக ஸ்தோத்திரமாகச் சொல்லப்படுகிறது.) பூர்வத்தில் உள்ள வித்வான்கள் பிரஜையினால் நமக்கு என்னப் பிரயோஜனமென்று (எண்ணி) பிரஜையை இச்சிக்கவில்லை.

அப்படிப்பட்ட நமக்கு இந்த ஆத்மாதான் லோகமென்று கைக்கொண்டு, புத்திரேஷணை, வித்தேஷணை, லோகேஷணை இம் மூன்றையும் விட்டு விட்டுப் பிக்ஷைவாங்கித் திரிகின்றார்கள். (இந்த ஸங்கதி முன் சொல்லப்பட்டிருக்கிறபடி இங்கும் உள்ளது.)

(இந்த ஆத்ம லோகத்தை இச்சித்தால் அதையடைய ஸாதனமாயிருக்கிற கர்மாக்களை ஏன் ஆரம்பிக்கக்கூடாது? ஏன் கர்மா முதலான எல்லாவற்றையும் விட்டுவிடவேண்டுமென்றால், சொல்லப்படுகிறது; ஆத்மலோகத்திற்குக் கர்மாக்களோடு ஸம்பந்தமில்லை; ஆத்மாவை இச்சிப்பவர்கள் கர்மாவை விட்டுவிடத்தான் வேண்டும்; அந்த ஆத்மா யாதொரு ஸாதனம், பலன் இவைகளின் வழியாகவாவது கர்மாக்களுடன் ஸம்பந்தப் படுவதில்லை; எதனால் எனில்.) அவர் 'நேதி, நேதி' (அதுவுமல்ல இதுவுமல்ல) என்ற பெயரால் சொல்லப்பட்டவர்; கிரஹிக்கப் படாதவர்; குறைவு படாதவர்; யாதொன்றிலும் ஸம்பந்தப் படாதவர்; நாசமில்லாதவர்; இப்படிப்பட்டவரைப் பாபகர்மாவாவது, புண்ய கர்மாவாவது தாண்டுவதில்லை அஃதாவது, ஒருவன் பாபத்தைச் செய்துவிட்டு, பாபத்தைத் தெரியாத்தனமாகச் செய்துவிட்டோம், என்ன செய்வது என்று பச்சாதாபப் பட்டதனாலாவது புண்ய கர்மாவைச் செய்து, நாம் இப்படிப் பட்ட புண்யத்தைச் செய்திருக்கிறோம், நமக்கு என்ன குறைவு என்று ஸந்தோஷப்பட்டதனாலாவது ஆத்மக்ஞானம் வந்து விடாது); ஆதலால், பாப புண்யங்கள் ஸன்யாஸியாகிய ஆத்மவித்திற்குத் குறைந்துபோய்விடும்; மேலும் அப்படிப்பட்ட ஆத்மாவை, செய்யப்பட்டனவும், செய்யப்படாதனவுமாயிருக்கிற

நித்ய கர்மாக்களும் தாண்டுவதில்லை (அஃதாவது, அப்படிப்பட்ட கர்மாக்களும் ஆத்மவித்திற்கு ஸம்பந்தப்படமாட்டா; ஆத்ம வித்தானவன் ஆத்மவித்யை என்ற அக்நியால் எல்லாக் கர்மாக் களையும் சாம்பலாக அடித்துப்போடுகிறான்; ஆதலால், பிரம்ம வித்திற்குக் கர்ம ஸம்பந்தமே கிடையாது.)

23. இப்படிப்பட்ட ஆத்மா ருக்கினால் (வேத மந்திரத் தால்) செவ்வையாக எடுத்துச் சொல்லப்பட்டிருக்கிறார்; அவர் நித்யர்; பிரம்மவித்தினுடைய மஹிமையாயிருக்கிறார்; அவர் புண்ய கர்மாவால் விருத்தியை யடைவதுமில்லை; பாபகர்மாவால் விகாரப்படுவதுமில்லை; அந்த மஹிமையை யறிந்தவன்தான் பதவித் (மஹிமாஸ்வரூபத்தை யறிந்தவன்); அந்த மஹி மையை யறிந்து தர்மாதர்ம லக்ஷணமுள்ள கர்மாவுடன் ஸம்பந் தப்படுவதில்லை; ஆதலால், இப்படி யறிந்தவன் சாந்தனாகவும் (பஹிரிந்திரிய வியாபாரமற்றவனாகவும்), தாந்தனாகவும் (அந்த ரிந்திரிய விருத்தி யில்லாதவனாகவும்), உபரதனாகவும் (எல்லா ஏஷணைகளையும் விட்ட ஸன்யாஸியாகவும்), திதிக்ஷுவாகவும் (ஸுக துக்காதி இரட்டைகளைப் பொறுப்பவனாகவும்,) ஸமா ஹிதனாகவும் (இந்திரிய வியாபாரங்களைச் சுத்தமாக விட்டுவிட்டு, ஆத்மாவினிடத்தில் ஏகாக்ரசித்த முள்ளவனாகவும்) ஆகித் தன் னிடத்திலேயே ஆத்மாவைப் பார்க்கிறான். எல்லாவற்றையும் ஆத்மாவாகப் பார்க்கிறான். இவனைப் புண்ய பாபங்கள் அடைவ தில்லை. இவன் அவைகளைத் தாண்டிவிடுகிறான். இவனை கிருதா கிருதங்களாயிருக்கிற கர்மாக்கள் (இஷ்டபல பிரத்யவாயங்களை யுண்டுபண்ணிக்கொண்டு, அவைகளால்) வருத்தப்படுத்துவதில்லை. அப்படிபட்ட கர்மாக்களை இவன் எரித்துப்போடுகிறான். இவன் விபாபனையும், தர்மாதர்ம மற்றவனையும், விரஜனையும், இச்சை யற்றவனையும், ஸம்சயமற்றவனையும், பிராம்மணனையும், பிரம் மத்தை யறிந்தவனையு மாகிவிடுகிறான். இதுதான் பிரம்மலோகம், ஹே! ராஜாவே என்று யாக்ஞவல்க்யர் சொன்னார்.

ஜனகர்:—தங்களுக்கு என்னுடைய விதேஹ ராஜ்யங்களைக் கொடுத்துவிட்டேன்; நானும் உங்களுக்குத் தாஸனாக ஆகிவிட் டேன்.

24. (இந்த ஜனக யாக்ஞவல்க்யக் கதையால் சொல்லப்பட்ட) இந்த ஆத்மா மஹான்; அஜன்; அன்னாதன் (எல்லாப் பூதங்களிடத்திலுமிருந்துகொண்டு அன்னத்தைப் புஜிப்பவர்); வஸுதானர் பிராணிகளுக்குத் தகுந்த கர்ம பலன்களைக் கொடுப்பவர்); இப்படி அவரை எவன் அறிவானோ அவன் வஸுவை (தனத்தை, பலனை) யடைகிறான்.

25. (இப்பொழுது எல்லா ஆரண்யகத்திலும் சொல்லப் பட்ட மொத்த அர்த்தம் எதுவுண்டோ அது சொல்லப்படுகிறது.)

அப்படிப்பட்ட இந்த ஆத்மா (முன் சொல்லப்பட்ட ஆத்மா) மஹான்; அஜன்; அஜரன்; அமரன்; அம்ருதன்; அபயன்; அபயமாயிருக்கிற பிரம்மம். இப்படி யார் அறிகிறானோ அவன் அந்த அபய பிரம்மமாகவே ஆய்விடுகிறான்.

(இதுதான் எல்லா உபநிஷத்துக்களுடைய அர்த்தமாயுமிருக்கிறது; இந்த அர்த்தத்தைச் செவ்வையாக எடுத்துப் போதிக்கவேண்டிய நிமித்தம் ஆத்மாவினிடத்தில் உத்பத்தி, ஸ்திதி, பிரளயம் முதலானவைகளையும், கிரியை, காரகன், பலன் இவைகளையும் அவரிடத்தில் இல்லாமலிருக்கும்பொழுதே இருக்கின்றனவென்று அத்யாரோபணம் செய்யப்படுவதின் மூலமாக கல்பிக்கப்பட்டது. பிறகு, 'நேதி, நேதி' முதலியவைகள் அந்த அத்யாரோபணத்தை விலக்கித் தத்வம் சொல்லப்பட்டது. எப்படியானால், ஒன்று, இரண்டு முதலான ஸங்க்யைகள் சில கோடு அடையாளங்களால் காட்டப்பட்டபோதிலும், ஸங்க்யை அந்தக் கோடாக ஆகமாட்டாதோ; எப்படியானால் 'அ'காரம் முதலான அக்ஷரங்கள் ஒரு காகிதத்தில் மையால் எழுதப்பட்டுக் காண்பிக்கப்பட்டபோதிலும் அக்ஷரம் அந்தக் காகிதம் ஆகமாட்டாதோ அப்படிப்போல் உத்பத்யாதிகள் ஆத்மாவினிடத்தில் ஆரோபிக்கப்பட்டபோதிலும் அவர் அவைகளாகமாட்டார். அவர் ஒன்றிலும் ஸம்பந்தப்படாமல் சுத்தராயிருக்கிறார்.)

---

## பிராம்மணம் 5.

(ஆகமத்தையே முக்கியமாக வைத்துக்கொண்டிருக்கிற மது காண்டத்தினால் பிரம்மதத்வம் சொல்லப்பட்டது. பிறகு அதை

யறிவதற்கு ஸாதனமாயிருக்கிற யாக்ஞயவல்கீய காண்டத்தால் பக்ஷ ப்ரதிபக்ஷவாதங்கள் மூலமாக விசாரிக்கப்பட்டது. மறு படியும், ஸிஷ்யாசார்ய ஸம்பந்தமாக, கேள்வி உத்தரமூலமாக, விஸ்தாரமாக விசாரிக்கப்பட்டது. இப்பொழுது நிகமனம் (தீர் மானம்) செய்யும்பொருட்டு மைத்ரேயீ பிராம்மணம் ஆரம்பிக் கப்படுகிறது.)

1. யாக்ஞயவல்கியருக்கு இரண்டு பத்நிகள் இருந்தார்கள்; மைத்ரேயி யென்பவளும், காத்யாயனீ யென்பவளும். மைத் ரேயீ பிரம்மத்தைப்பற்றிச் சொல்லத்தக்கவள். காத்யாயனீ ஸ்திரீ பிரக்ஞையுள்ளவள். (அஃதாவது, கிருஹகிருத்யங்களைமட்டு மறிந்தவள்.) யாக்ஞவல்க்யர் கிருஹஸ்தாச்ரமத்திலிருந்து ஸன்யா ஸாச்ரமத்திற்குப்போக உத்தேசமுள்ளவராக சொல்லுகிறார்.

2-15. இந்த மந்திரங்களின் அர்த்தம் இவ்வுபநிஷத்தின் இரண்டாவது அத்யாயத்தின் 4-வது பிராம்மணத்தில் எழுதப் பட்டிருக்கிறது.

(ஜீவனுள்ளவரையில் கர்மாக்களைச் செய்து கொண்டிருக்க வேண்டுமென்று அநேக சுருதிவிதிகள் இருக்கின்றனவே, அவை களும் ஞானகாண்ட சுருதிகளும் விரோதமுள்ளவைகளா கின்றனவே அதற்கு ஸமாதானம் என்ன வென்ற கக்ஷியையெடுத் துக்கொண்டு, பாஷ்யத்தில், அதைக் குறித்துப் பல ஆக்ஷேப ஸமாதானங்கள் எடுத்துக்காட்டி, கடைசியில் தீர்மானம்:— நான்கு ஆச்ரமங்களுள், முந்திய மூன்று ஆச்ரமங்களில் கர்மாக் களை யநுஷ்டிக்க கர்மகாண்டம் பிரவிருத்தித்திருக்கிறதென்றும், நான்காவது ஆச்ரமமாகிய ஸந்யாஸ ஆச்ரமத்திற்கு ஞான காண் டம் ஏற்பட்டிருப்பதாகவும், ஒன்றற்கொன்று விரோதப்படா தென்றும் ஸித்தாந்தம் செய்யப்பட்டிருக்கிறது. இது முழுவதும் மூலத்தில் பார்க்கத்தகுந்தது.)

---

## பிராமம்ணம் 6.

1-3. இத்த யாக்ஞவல்கீய கண்டத்திற்கு ரிஷிகளின் வம்சம் சொல்லப்பட்டிருக்கிறது.

---

# ஐந்தாம் அத்தியாயம்.

## பிராம்மணம் 1.

இனி, கிலகாண்டம் ஆரம்பிக்கப்படுகிறது. நான்காவது அத்யாயத்தில் ஸாக்ஷாத் அபரோக்ஷராயும், ஸர்வாந்தரராயும், நிருபாதிகராயும், அசநாயாதீதராயும், 'நேதி, நேதி' யென்று குறிப்பிடப்பட்டவராயுமிருக்கிற பிரம்மத்தைப்பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. அதை யறிவதால் ஸோபாதிக ஜீவாத்மா அமிருதத்தை யடையவேண்டும். அதற்கு ஏற்கனவே சொல்லப்பட்ட ஸாதனங்கள் போக, சொல்லப்படாதனவும், கிரமமாக முக்தியை யடைவிக்கக்கூடிய ஸாதனங்களாகின்ற ஓம்காரம், தமம், தானம், தயை இவைகள் சொல்லப்படுகின்றன.

1. ஹரி: ஓம்! அது (பரபிரம்மம்) பூர்ணமான வஸ்து. இதுவும் (ஸோபாதிகமாயும், நாமரூபஸ்தமாயும், வியவஹாராபந்நமாயும், கார்யாத்மகமாயுமிருக்கிற ஜீவனும்) பூர்ண வஸ்து; (ஆகாசம்போல் எங்கும் நிறைந்த வஸ்து). அந்தப் பூர்ண வஸ்துவினின்றும் இந்தப்—பூர்ண வஸ்து கிளம்பிற்று. இந்தப் பூர்ண வஸ்துவிற்கு (ஜீவனுக்கு) வித்யையால்—பூர்ணத்வத்தைக் கிரஹித்தால் பூர்ணமாகிய பரமாத்மாவாகத்தான் மிஞ்சி நிற்கிறது. (அஃதாவது பரமார்த்த ஸ்வரூப வஸ்துவினிடத்தில் நின்றும் அந்நிய வஸ்துப்போல உண்டாகி விளங்குகிற ஜீவனாகிய தன்னை, அந்தப் பூர்ணமான பரபிரம்ம மென்று அறிந்து, அவித்யையாலுண்டான நாமரூபாதி கொள்கையை நிவிருத்திசெய்து, 'நான் பிரம்மமாகி யிருக்கிறேன்' என்று அறிந்தால் அவன் அந்தப் பிரம்மமாகவே ஆய்விடுகிறான். பாஷ்யத்தில், இந்த மந்திரார்த்தைப்பற்றிப் பலவித ஆக்ஷேபணைகள் வர, அவைகளையெல்லாம் கண்டித்து, பாஷ்யகாரர் தன்னுடைய மேற்கண்ட அர்த்தத்தை ஸாதித்திருக்கிறார்.)

ஓம்! கம் (ஆகாசம்) பிரமம்மாயிருக்கிறது; (ஓம் என்ற பிரணவத்திற்கு ஏற்கனவே அர்த்தம் சொல்லப்பட்டிருக்கிறது). (எப்படிப்பட்ட ஆகாசமென்றால்) புராணமாய் (நிரந்தரமாய்) இருக்கிற சித் ஆகாசம் (பூத ஆகாசமன்று); வாயு ஸம்பந்தமான

ஆகாச மென்று கௌரவியாயணீ என்ற ரிஷி சொன்னார்; இந்த ஓம்காரத்தை வேதம் என்று பிரம்மவித்துக்கள் சொல்லுகிறார்கள்; (ஏனெனில்) இதனால் அறியப்படவேண்டியது அறியப்படுவதால் வேத மென்று சொல்லப்படவேண்டும் (ஓம்காரம் பிரம்ம உபாஸனத்திற்கு ஸாதகமாயிருக்கிறது) ; இது பிரம்மத்திற்கு விக்ரஹமாயும், ரூபமாயும், நாமமாயுமிருக்கிறது; ஓம் என்று சொல்லிப் பிரம்மத்தைத் தியானிக்கவேண்டு மென்று சொல்லப்பட்டிருக்கிறது; இது பிரம்மத்தை யறிய ஒரு பலமான பிடிப்பாயிருக்கிறது; இந்த ஓம் நிருபாதிகமாயிருக்கிற பரப்பிரம்மத்திற்கும், ஸோபாதிகமாயிருக்கிற ஜீவாத்மாவிற்கும் நாமாவாயும், ரூபமாயு மிருக்கிறது.

---

## பிராம்மணம் 2.

(இப்பொழுது தமாதி ஸாதனங்கள் மூன்று சொல்லப்படுகின்றன.)

1. பிரஜாபதியின் குழந்தைகள் மூன்று வகுப்பினர்கள்; தேவர்கள், மனுஷ்யர்கள், அஸுரர்கள். இவர்கள் தங்கள் பிதாவினிடத்தில் பிரம்மசரியத்தை யநுஷ்டித்தார்கள். (அஃதாவது பிதாவைத் தங்கள் குருவாக வஹித்துச் சிஷ்யர்களாக விருந்தார்கள்.)

தேவர்கள்:—ஹே! குருவே! எங்களுக்கு என்ன உபதேசம் செய்கிறீர்கள் (என்று கேட்டார்கள்).

பிதா:—'த' என்ற அக்ஷரத்தை நான் உங்களுக்கு உபதேசிக்கிறேன். நீங்கள் அதை யறிந்து கொண்டீர்களா ? (என்று சொன்னார்.)

தேவர்கள்:—அறிந்துகொண்டோம்!

பிதா:—அப்படி யறிந்திருந்தால் அஃது என்ன என்று சொல்லுங்கள் என்றார்.

தேவர்கள்:—ஸ்வபாவத்தில் நீங்கள் (தேவர்கள்) அதாந்தர்களாக விருக்கிறீர்கள். ஆதலால் தாந்தர்களாக் விருங்கள் என்று உபதேசித்தீர் அன்றோ !

பிதா:—ஆம் ; சரி. செவ்வையாக அறிந்தீர்கள். (தம்ம் என்றால் அந்தரிந்திரியநிக்ரஹம்.)

2. பிறகு மனுஷ்யர்கள் எங்களுக்கு என்ன உபதேசிக்கிறீர்கள் என்று பிதாவைக் கேட்டார்கள். அதற்குப் பிதா அந்த 'த' என்ற அக்ஷரத்தையே மறுபடியும் சொன்னார்.

பிதா:—அறிந்தீர்களா? (என்று கேட்டார்.)

மனுஷ்யர்கள்:—அறிந்தோம் (என்றார்கள்.)

பிதா:—என்ன? (என்று கேட்டார்.)

மனுஷ்யர்கள்:—ஸ்வபாவத்தில் நீங்கள் லுப்தர்களாக (ஆசையுள்ளவர்களாக) விருக்கிறீர்கள். ஆதலால், கூடியவரையில் தானத்தைச் செய்யுங்கள் என்று நீங்கள் உபதேசித்தீர்கள் அன்றோ?

பிதா:—ஆம்! செவ்வையாக அறிந்தீர்கள்.

3. பிறகு, அஸுரர்கள் தங்களுக்கு யாது உபதேசம் என்று பிதாவைக் கேட்டார்கள். பிதா அந்த 'த' என்ற அக்ஷரத்தையே மறுபடியும் சொன்னார்.

பிதா:—அறிந்தீர்களா? (என்று கேட்டார்.)

அஸுரர்கள்:—அறிந்தோம் (என்றார்கள்.)

பிதா:—என்ன? (என்றார்.)

அஸுரர்கள்:—ஸ்வபாவத்தில் நீங்கள் குரூரர்கள்; ஆதலால் பிராணிகளிடத்தில் தயை புரியுங்கள் என்று உபதேசித்தீர் அன்றோ!

பிதா:—ஆம், செவ்வையாக யறிந்தீர்கள்.

அப்பொழுது இந்த அர்த்தத்தை தேவீவாக்கும் சொல்லிற்று; (எவ்வித மெனில்) மேகத்திலிருந்தும் த, த, த என்று வாக்கு (சப்தம்) உண்டாயிற்று. இதனால், தமம், தானம், தயை இம் மூன்றும் வேண்டு மென்பது உபதேசம்.

(இந்தப் பிரகாரம் பிரஜாபதியால் நமக்கு உபதேசிக்கப்பட்டிருக்கிறதென்று நினைத்து தமம், தானம், தயை இவைகளை எல்லோரும் அநுஷ்டிக்கவேண்டும், மேற்படி தேவாதி மூன்று வகுப்பார், 'த' என்று மாத்திரம் சொல்லியதைக்கொண்டு, எப்படி தமாதிகளை அர்த்தம் செய்துகொண்டார்கள் என்றால்—தங்களிடத்திலிருக்கிற குறை தங்களுக்குத் தோன்றி அக் குறையைத்தான் திருத்த உபதேசித்தார் என்று நினைத்து, அவர்வர்களுக்குத் தக்கப்படி அர்த்தம் செய்துகொண்டார்கள். நன்றாகத் தெரிந்தவர்களாதலால், ஜாடையாகச் சொன்ன உபதேசத்தைக் கொண்டு

ஸங்கதியை யறிந்துகொண்டார்கள். தேவர்களுக்கு தமமும், மனுஷ்யர்களுக்கு தானமும், அஸுரர்களுக்கு தயையும் சொல்லப்பட்டிருப்பதால் எவ்விதம் மூன்றையும் மனுஷ்யர்கள் அநுஷ்டிக்கவேண்டுமென்று சொல்லப்படுகிறதென்றால்—எல்லாக் குணங்களும் எல்லோருக்கும் பொதுவே; ஆனால், அந்த அந்த குணம் அவரவர்களுக்கு உரித்தாக ஜாஸ்தியாக விருக்கின்றது; அல்லது, வேறொரு ஸமாதானமிருப்பது—அஃதாவது மனுஷ்யர்களுள் மூன்று வகுப்புக்கள் உள்ளன; எப்படியெனில், தமத்தைத் தவிர மற்ற குணங்கள் நிறைந்தவர்கள் தேவர்கள் என்றும், அவ்விதமே லோபம் ஜாஸ்தியாக உள்ளவர்கள் மனுஷ்யர்கள் என்றும், குரூரமாயிருக்கப்பட்ட மனுஷ்யர்கள் அஸுரர்கள் என்றும் சொல்லப்படுகிறது. ஆதலால் மேற்படி மூன்றையும் மனுஷ்யர்கள் அநுஷ்டிக்கவேண்டும்.)

---

## பிராம்மணம் 3.

(இம் மூன்று குணங்களேயும் கைக்கொண்டால் அவன் ஆத்ம உபாஸனேக்கு அதிகாரியாகிறான். நிருபாதிக பிரம்மத்தில் தர்சன விஷயம் முன் சொல்லப்பட்டது; இப்பொழுது ஸோபாதிக பிரம்மத்தை உபாஸிப்பதால் உண்டாகும் பலன்களேப் பற்றிச் செல்லப்படுகிறது.)

1 எது ஹிருதயமோ (ஹிருதயத்திலிருக்கிற புத்தியோ) அதுதான் பிரஜாபதி; அதுதான் பிரம்மம்; அதுதான் எல்லாமாக விருக்கிறது. ‘ஹ்ருதயம்’ என்றது மூன்று அக்ஷரங்களுள்ளது. அவைகளில், ‘ஹ்ரு’ என்றது முதல் அக்ஷரம்; இந்த ஹிருதயாத்மாவின்பொருட்டு, தன் இந்திரியங்களும், அதன் அதன் விஷயங்களும் தங்கள் தங்கள் பலத்தை (இந்த அக்ஷர மூலமாக) கொடுக்கின்றன. (ஹிருதயமும் அவ்விதமே போக்தாவாகிய ஜீவனுக்குப் பலத்தைக் கொடுக்கிறது.) இப்படி யறிபவனுக்கு மேற்படி பலம் கிடைக்கும்.

‘த’ வென்றது இரண்டாவது அக்ஷரம்; இதுவும், இந்த ஹிருதயாத்மாவின்பொருட்டு, தன் இந்திரியங்களாலும், விஷயங்களாலும் தங்கள் தங்கள் வீரியத்தைக் கொடுக்கிறது. (ஹிருதயமும் இப்படியே ஜீவனுக்கு வீர்யத்தைக் கொடுக்கிறது.) இப்படி யறிபவனுக்கு மேற்படி பலன்கள் உள. ‘ய’ வென்றது மூன்றாவது

அக்ஷரம்; இது ஸ்வர்க்கத்திற்குச் செல்லும்படி செய்கிறது. இப்படி யறிபவன் ஸ்வர்க்கத்திற்குப் போகிறான்.

---

### பிராம்மணம் 4.

(இந்த ஹ்ருதயமென்று பெயருள்ள பிரம்மத்தை ஸத்ய மென்று உபாஸிக்க வேண்டு மென்று சொல்லப்படுகிறது.)

1. அந்த ஹ்ருதயமென்று பெயருள்ள பிரம்மமானது ஸத்யமாக விருந்தது. (ஸத்-பிருதிவி, ஜலம், அக்நி; த்யத்-வாயு, ஆகாசம்; அல்லது, ஸத்-மூர்த்தம், த்யத்-அமூர்த்தம்.) இவ்விதம் மஹத்தாயும், பூஜ்யமாயும், முந்தியதாயுமிருக்கிற பிரம்மத்தை ஸத்யம் என்று யார் அறிகிறானோ அவன் இந்த எல்லா உலகங்களை யும் ஜயிக்கிறான். அஸத்ய மென்று யார் அறிகிறானோ அவன், சத்ருவினால் போல, லோகங்களால் ஜயிக்கப்படுகின்றான்.

---

### பிராம்மணம் 5.

(அந்த ஸத்ய பிரம்மத்தையே இதில் ஸ்தோத்திரம் செய்யப் படுகிறது. முன்னுண்டானது என்று சொல்லப்பட்டதற்குக் காரணமும் சொல்லப்படுகிறது.)

1. ஆதியில் (அவ்யாகிருதமாயும் பீஜபூதமாயுமுள்ள) அப் புக்கள் (அக்நிஹோத்ராதிகளால் உண்டான திரவரூபமாயிருக் கிற ஜலம்; அஃதாவது, மற்ற பூதங்களுடன் கூடிய அவ்யாகிருத பஞ்ச பூதங்கள்) இருந்தன. அந்த அப்புக்கள் ஸத்யத்தை (வ்யா கிருத பஞ்ச மஹாபூதங்களை) ஸ்ருஷ்டித்தன. ஸத்யம் என்றது பிரம்மம் (அஃதாவது, ஹிரண்யகர்ப்பர் என்ற ஸூத்ராத்மா). அந்த ஸத்ய பிரம்மம் பிரஜாபதியாகிய விராட் சரீரத்தையும், பிரஜாபதி தேவர்களையும் ஸ்ருஷ்டித்தன. அத் தேவர்கள் அந்தப் பிரம்மத்தை ஸத்யமென்று உபாஸித்தார்கள். 'ஸத்யம்' என்பது மூன்று அக்ஷரங்கள் உள்ளது; ஸ - தி - யம்; இவைகளில் முத லாவதும் கடையாயதுமான அக்ஷரங்கள் ஸத்ய அக்ஷரங்கள்; மத்தியில் இருக்கிற 'த' அந்ருதம்; இரண்டு ஸத்யங்களுக்கு நடுவில் அகப்பட்டிருப்பதால் ஸத்யம் மேற்கொண்டிருக்கிறது. இப்படி யறிந்தவனை அந்ருதம் ஹிம்ஸிக்கமாட்டாது.

(அக்நிஹோத்திரத்தால் உண்டான திரவ வஸ்துவாகிற அப்பு என்றதால் முன்னால் மனுஷ்யர்களால் அக்நிஹோத்திராதிகள் செய்யப்பட்டு அந்த ஆஹுதிகள் எல்லாம் திரவ ரூபமாக இருந்திருக்கவேண்டும் என்றும், அஃதாவது அக்நிஹோத்திராதி கர்மாக்களின் பலன் ஜகத் ஸ்ருஷ்டி என்றும், ஏற்படுகிறது; இதனால், இந்தப் பிராம்மணத்தில் கல்பாந்தர ஸ்ருஷ்டி சொல்லப்படுகிறதே தவிர ஆதி ஸ்ருஷ்டி சொல்லப்படவில்லை யென்றும் அர்த்தமாகிறது.)

2. (இப்பொழுது அந்த ஸத்யமாகிற பிரம்மத்திற்கு ஸ்தானங்கள் சொல்லப்படுகின்றன.)

இதோ காணப்படுகிற ஆதித்யனிடத்தில் இருக்கிற புருஷன் அந்தப் பிரம்மமே; நமது வலது கண்ணில் இருக்கிற புருஷன் அந்தப் பிரம்மமே; இவ்விரண்டும் ஒன்றுக்கொன்று உபகாரோபகார்யங்களாக விருக்கின்றன. எப்படி யென்றால், ஆதித்ய புருஷன் தன் ரச்மிகளின் பிரகாசத்தால் கண்ணை அநுகிரஹித்து அதில் பிரதிஷ்டிதனாயிருக்கிறான். அக்ஷி புருஷன் இந்திரியங்களால் ஆதித்யனை பிரகாசப்படுத்தி, அநுகிரஹித்து அதில் பிரதிஷ்டிதனாயிருக்கிறான்.

எப்பொழுது பிராணன்போகும் காலம் ஸமீபிக்கிறதோ அப்பொழுது ஆதித்யன் ரச்மிகளன்றி, அஃதாவது சுத்தமாகச் சந்திரனைப் போல உஷ்ண பிரகாசமன்றி, கண்ணுக்குத் தோன்றுகிறது; ரச்மிகள் மறுபடி இவனை அணுகுகின்றனவல்ல.

3. அந்த ஆதித்ய மண்டலத்திலிருக்கிற புருஷனுக்கு வியாஹ்ருதிகள் அவயவங்களாக விருக்கின்றன; எப்படி யென்றால், 'பூ:' என்றது ஓர் அக்ஷரம்; அது சிரஸ், தலை; இது முதலாவது. 'புவ:' என்றது இரண்டு அக்ஷரங்கள்; இவைகள் இரண்டு கைகள். 'ஸுவ:' என்றது இரண்டு அக்ஷரங்கள்; இவைகள் இரண்டு பாதங்கள். 'அஹ:' (பகல்) என்றது இந்த பிரம்மத்திற்கு ரஹஸ்யமான பெயர்; அந்தகாரத்தை யடிப்பது அல்லது விட்டுவிடுவது என்று 'அஹ:' என்ற பெயர் வந்தது. இங்ஙனம் அறிபவன் பாபங்களை யடிக்கிறான் அல்லது விட்டுவிடுகிறான்.

4. அக்ஷி புருஷன் விஷயத்திலும் வியாஹிருதிகள் மேற்கண்டபடி அவயவங்கள்; இந்த புருஷனுக்கு 'அஹம்' என்றது ரஹஸ்யமான பெயர்; இதற்கும் மேற்கண்டபடியே பொருள் உள்ளது; பலனும் மேற்கண்டபடியே.

---

## பிராம்மணம் 6.

1. (பிரகிருத பிரம்மத்திற்கு உபாதிகள் அநேகமாயிருப்பதால், மனஸை உபாதியாக வைத்துக்கொண்டிருக்கிற பிரம்மத்தை யுபாஸிக்கும் விதம் சொல்லப்படுகிறது.)

இந்த புருஷன் மனோமயனுயிருக்கிறுன்; மனஸால் அறியப்படுபவனுயிருக்கிறுன். அந்தர்ஹிருதயத்தில், நெல் அல்லது யவம், இவைகளின் அளவினனுய், ஸத்ய வஸ்துவாய், காந்தியாக விளங்குகிறுன். எல்லாவற்றிற்கும் ஈசானன்; எல்லாவற்றிற்கும் அதிபதி; எல்லாவற்றையும் சாஸிக்கிறுன்.

---

## பிராம்மணம் 7.

(மேற்படி ஸத்ய பிரம்மத்திற்கு விசிஷ்ட பலனும் சொல்லப்படுகிறது.)

அந்த பிரம்மத்தை 'வித்யுத்' மின்னல் என்று சொல்லுகிறுர்கள். 'விதாநாத்'—மேகாந்தகாரத்தைப் பிளப்பதனுல், பாபங்களைப் பிளப்பதனுல் இவ்விதம் சொல்லப்படுகிறது. இப்படியறிபவனுடைய பாபங்களும் பிளந்துபோகின்றன. மின்னல் போல் பிரம்மமன்றோ?

---

## பிராம்மணம் 8.

1. (வாக் பிரம்மமென்று சொல்லப்படுகிறது.)

வாக்கை, வேதங்களை, கறக்கிற பசுமாட்டைப்போல் உபாஸிக்கவேண்டும். மேற்படி வாக்காகிற மாட்டுக்கு நான்கு ஸ்தனங்களுள. (i) ஸ்வாஹாகார:. (ii) வஷட்கார:. (iii) ஹந்தகார:. (iv) ஸ்வதாகார:. முந்திய இரண்டு ஸ்தனங்களைக்கொண்டு (யாகாதிகளில்) தேவர்கள் பிழைக்கிறுர்கள். மூன்றுவதைக்

(அக்நிஹோத்திரத்தால் உண்டான திரவ வஸ்துவாகிற அப்பு என்றதால் முன்னால் மனுஷ்யர்களால் அக்நிஹோத்தி ராதிகள் செய்யப்பட்டு அந்த ஆஹூதிகள் எல்லாம் திரவ ரூப மாக இருந்திருக்கவேண்டும் என்றும், அஃதாவது அக்நிஹோத் திராதி கர்மாக்களின் பலன் ஜகத் ஸ்ருஷ்டி என்றும், ஏற்படு கிறது; இதனால், இந்தப் பிராம்மணத்தில் கல்பாந்தர ஸ்ருஷ்டி சொல்லப்படுகிறதே தவிர ஆதி ஸ்ருஷ்டி சொல்லப்படவில்லை யென்றும் அர்த்தமாகிறது.)

2. (இப்பொழுது அந்த ஸத்யமாகிற பிரம்மத்திற்கு ஸ்தானங்கள் சொல்லப்படுகின்றன.)

இதோ காணப்படுகிற ஆதித்யனிடத்தில் இருக்கிற புருஷன் அந்தப் பிரம்மமே; நமது வலது கண்ணில் இருக்கிற புருஷன் அந்தப் பிரம்மமே; இவ்விரண்டும் ஒன்றுக்கொன்று உப காரோபகார்யங்களாக விருக்கின்றன. எப்படி யென்றால், ஆதித்ய புருஷன் தன் ரச்மிகளின் பிரகாசத்தால் கண்ணை அநுகிரஹித்து அதில் பிரதிஷ்டிதனாயிருக்கிறான். அக்ஷி புருஷன் இந்திரியங் களால் ஆதித்யனை பிரகாசப்படுத்தி, அநுகிரஹித்து அதில் பிரதிஷ்டிதனாயிருக்கிறான்.

எப்பொழுது பிராணன்போகும் காலம் ஸமீபிக்கிறதோ அப் பொழுது ஆதித்யன் ரச்மிகளன்றி, அஃதாவது சுத்தமாகச் சந்தி ரனைப் போல உஷ்ண பிரகாசமன்றி, கண்ணுக்குத் தோன்று கிறது; ரச்மிகள் மறுபடி இவனை அணுகுகின்றனவல்ல.

3. அந்த ஆதித்ய மண்டலத்திலிருக்கிற புருஷனுக்கு வியா ஹ்ருதிகள் அவயவங்களாக விருக்கின்றன; எப்படி யென்றால், 'பூ:' என்றது ஓர் அக்ஷரம்; அது சிரஸ், தலை; இது முதலாவது. 'புவ:' என்றது இரண்டு அக்ஷரங்கள்; இவைகள் இரண்டு கைகள். 'ஸுவ:' என்றது இரண்டு அக்ஷரங்கள்; இவைகள் இரண்டு பாதங்கள். 'அஹ:' (பகல்) என்றது இந்த பிரம்மத் திற்கு ரஹஸ்யமான பெயர்; அந்தகாரத்தை யடிப்பது அல்லது விட்டுவிடுவது என்று 'அஹ:' என்ற பெயர் வந்தது. இங்ஙனம் அறிபவன் பாபங்களை யடிக்கிறான் அல்லது விட்டுவிடுகிறான்.

4. அக்ஷி புருஷன் விஷயத்திலும் வியாஹ்ருதிகள் மேற் கண்டபடி அவயவங்கள்; இந்த புருஷனுக்கு 'அஹம்' என்றது ரஹஸ்யமான பெயர்; இதற்கும் மேற்கண்டபடியே பொருள் உள்ளது; பலனும் மேற்கண்டபடியே.

---

## பிராம்மணம் 6.

1. (பிரகிருத பிரம்மத்திற்கு உபாதிகள் அநேகமாயிருப்ப தால், மனஸை உபாதியாக வைத்துக்கொண்டிருக்கிற பிரம் மத்தை யுபாஸிக்கும் விதம் சொல்லப்படுகிறது.)

இந்த புருஷன் மனோமயனாயிருக்கிறான்; மனஸால் அறியப் படுபவனாயிருக்கிறான். அந்தர்ஹ்ருதயத்தில், நெல் அல்லது யவம், இவைகளின் அளவினனாய், ஸத்ய வஸ்துவாய், காந்தியாக விளங்குகிறான். எல்லாவற்றிற்கும் ஈசானன்; எல்லாவற்றிற்கும் அதிபதி; எல்லாவற்றையும் சாஸிக்கிறான்.

---

## பிராம்மணம் 7.

(மேற்படி ஸத்ய பிரம்மத்திற்கு விசிஷ்ட பலனும் சொல்லப் படுகிறது.)

அந்த பிரம்மத்தை 'வித்யுத்' மின்னல் என்று சொல்லுகிறார் கள். 'விதாநாத்'—மேகாந்தகாரத்தைப் பிளப்பதனால், பாபங் களைப் பிளப்பதனால் இவ்விதம் சொல்லப்படுகிறது. இப்படி யறிபவனுடைய பாபங்களும் பிளந்துபோகின்றன. மின்னல் போல் பிரம்மமன்றோ?

---

## பிராம்மணம் 8.

1. (வாக் பிரம்மமென்று சொல்லப்படுகிறது.)

வாக்கை, வேதங்களை, கறக்கிற பசுமாட்டைப்போல் உபா ஸிக்கவேண்டும். மேற்படி வாக்காகிற மாட்டுக்கு நான்கு ஸ்தனங் களுள. (i) ஸ்வாஹாகார:. (ii) வஷட்கார:. (iii) ஹந்தகார:. (iv) ஸ்வதாகார:. முந்திய இரண்டு ஸ்தனங்களைக்கொண்டு (யாகாதிகளில்) தேவர்கள் பிழைக்கிறார்கள். மூன்றாவதைக்

கொண்டு மனுஷ்யர்களும், நான்காவதைக்கொண்டு பிதிருக்களும் பிழைக்கின்றார்கள். அந்த மாட்டுக்குப் பிராணன் ரிஷபமாயிருக்கிறது. (பிராணனால் வாக் பிறந்துகொண்டிருக்கிறது.) மனஸ் கன்றுக் குட்டியாயிருக்கிறது. (மனஸால் வாக் பெருகுகிறது; அஃதாவது மனஸால் ஆலோசிக்கப்பட்டு வாக் வெளிப்புறப்படுகிறது.)

---

## பிராம்மணம் 9.

1. (ஜாடராக்நி பிரம்மம் என்று சொல்லப்படுகிறது.)

ஒரு புருஷனுக்குள்ளே வயிற்றில் இருக்கிற வைச்வாநரன் என்ற அக்நியை உபாஸிக்கவேண்டும். அந்த அக்நி சாப்பிடப்படுகிற அன்னங்களை யெல்லாம் பக்குவப்படுத்துகிறது. அதற்கு ஒரு சப்தமுண்டு; இருகைகளால் இரண்டு காதுகளையும் பொத்திக்கொண்டால் ஒரு சப்தம் கேட்கப்படுகிறதல்லவா? அதுதான் அந்த சப்தம். பிராணன் போகிற ஸமயத்தில் அப்படிப்பட்ட சப்தம் கேட்கப்படமாட்டாது.

---

## பிராம்மணம் 10.

1. (இத்தகைய உபாஸனைகளின் கதியும், பலனும் சொல்லப்படுகிறது.)

எப்பொழுது ஒரு வித்வான் இந்த லோகத்தை (தன் சரீரத்தை) விட்டுப்போகிறானோ அப்பொழுது அவன், முதலில், வாயுமண்டலத்தை யடைகிறான். அந்தரிக்ஷத்தில் சென்று வாயுவால் அசைக்கப்படாதவனாயிருக்கிறான்; அந்த வாயு, தனக்குள், ஒரு ரதசக்கரத்திலுள்ள துவாரப்பிரமாணம் இடங்கொடுக்கிறது; அதன் வழியாக உயரக்கிளம்பி ஸூர்யமண்டலத்தைச் சேருகிறான். அந்த ஆதித்யன், பிரம்மலோகத்திற்குப் போக இச்சிக்கிறவர்களுக்கு மார்க்கத்தைத் தடைசெய்துகொண்டிருந்த போதிலும், இந்த வித்வானுக்குத் தன்னிடத்தில் ஒரு லம்பரம் என்ற வாத்தியத்திலுள்ள துவாரப்பிரமாணம் இடம் கொடுக்கிறான். அதன் வழியாக உயரக்கிளம்பி சந்திரமண்டலத்தை யடைகிறான். அந்தச் சந்திரன் தன்னிடத்தில், ஒரு பேரீ வாத்தி

யத்திலுள்ள துவாரப் பிரமாணம் இடம் கொடுக்கிறான். அதன் வழியாக உயரக் கிளம்பி பிரஜாபதி லோகத்திற்குப் போகிறான். அந்த லோகம் மானஸதுக்க வர்ஜிதமாயும், சாரீரதுக்க வர்ஜித மாயும் இருக்கிறது. அந்த லோகத்தில் சாசுவத வருஷங்களாக (வெகு காலமாக) விருக்கிறான்.

## பிராம்மணம் 11.

1. எவன் ஒருவன் ஜாரதியால் கிரஹிக்கப்பட்டு வருத்தப் படும் காலத்தில் அந்த வருத்தத்தைத் தான்செய்யவேண்டிய ஒரு பெரிய தபஸ் என்று நினைத்து அதை ஸஹித்துக்கொண்டிருக் கிறானோ அப்படிப்பட்ட ஞானம் இவனுடைய பாபத்தைப் போக் கடித்து, பரமலோகத்தை யடையும்படி செய்கிறது. அப்படியே எவன் தான் மரித்த பிறகு தன் பிரேதம் வீட்டிலிருந்து சுடுகாட் டிற்குக் கொண்டுபோவதும், அந்த பிரேதத்தை அக்நியில் போடு வதும் பரம தபஸ் என்று இறந்துபோவதற்கு முன்னமே நினைத்து இறப்பு விஷயத்தில் வியஸனப்படாமல் தயாராக விருக் கிறானோ அவனும் பரமலோகத்தை யடைகிறான்.

## பிராம்மணம் 12.

1. அன்னம் பிரம்ம மென்று சிலர் சொல்லுகிறார்கள்; அப்படி யன்று. ஏனென்றால், அன்னம் பிராணனில்லாவிடில் கெட்டுப் போகிறது. பிராணன் பிரம்ம மென்று சிலர் சொல்லு கிறார்கள்; அப்படியு மன்று. ஏனென்றால், அன்னம் இல்லா விடில் பிராணன் குறுகிப்போகிறது. அன்னமும், பிராணனும் இரண்டும் சேர்ந்து மஹிமையை யடைகின்றன. அதை பிரம்ம மென்று சொல்லலாம். பிராதிருதர் என்பவர் தன் பிதாவைப் பார்த்துச் சொல்லுகிறார்.

(பிராதிருதர்) இப்படி இரண்டும் சேர்ந்து பிரம்மமென்று அறிந்தவன்தான் கிருதகிருத்யன். அவனுக்கு நன்மை செய்தா லும் அஃது அவனை மஹிமைப்படுத்தாது; தீங்குசெய்தாலும் அவனை அது பாதகப்படுத்தாது.

(பிதா) ஹே! பிராதிருதா! அப்படிச் சொல்லாதே. இரண்டிலும் சேர்ந்து எவன் பரம கதியை யடைந்திருக்கிறான்?

ஒருவருமில்லை; ஆனால், அப்படி யறிவதால் என்ன பிரயோஜனமெனில் :—அன்னம் என்பது 'வி'; இதில் எல்லாப் பூதங்களும் இருக்கின்றன; பிழைத்திருக்கின்றன. பிராணன் என்பது 'ரம்'; இதனால் எல்லாப் பூதங்களும் ரமிக்கின்றன; தம்தம் தொழில்களைச் செய்துகொண்டு ஆனந்தப்படுகின்றன; இப்படி யறிந்தவனிடத்தில் எல்லாப் பூதங்களும் ஸந்தோஷப்படுகின்றன.

---

## பிராம்மணம் 13.

1. 'உக்தத்தை' (ஒரு யாகத்தில் சொல்லப்படும் சஸ்த்ரம் என்ற மந்திரத்தை)ப் பிராணனாக உபாஸிக்கவேண்டும். ஏனென்றால், அஃது எல்லாவற்றையும் உயரக் கிளப்புகிறது; பிராணன் இல்லாவிடில் ஒருவன் எழுந்திருக்கமுடியுமா? இப்படி யறிந்தவனுக்குத் தீரனான புத்திரன் உண்டாகிறான். இது திருஷ்டபலன். அதிருஷ்டபலன் யாதெனில், அந்த உக்தத்தின் ஸாயுஜ்ய பதவியையும், ஸாலோக்யபதவியையும் யடைகிறான்.

2. யஜுஸை (யஜுர்வேத மந்திரத்தை)ப் பிராணனாக உபாஸிக்கவேண்டும். பிராணனால் எல்லாப் பூதங்களும் சேருகின்றன. பிராணன் இல்லாவிட்டால் எப்படி ஒன்று மற்றொன்றுடன் சேருவதற்கு ஸாமர்த்தியமுண்டாகும்? இப்படி யறிந்தவன் சிரேஷ்டனாயிருக்கிறான். யஜுஸின் ஸாயுஜ்ய, ஸாலோக்யங்களை அடைகிறான்.

3. ஸாமத்தை (ஸாமவேத மந்திரத்தை)ப் பிராணனாக உபாஸிக்கவேண்டும். ஸாம என்றால் பிராணன்; எல்லாப் பூதங்களையும் சேர்த்துவைப்பது. பலன் இதற்குத் தக்கது, மேற்கண்டபடி.

4. க்ஷத்திரத்தைப் பிராணனாக உபாஸிக்கவேண்டும். பிராணன் தேஹத்தைக் காயம் முதலிய துன்பத்திலிருந்து அதற்கு மாம்ஸ விருத்தியை யுண்டுபண்ணி ரக்ஷிக்கிறபடியால் (உபாஸிக்கவேண்டும்.) இப்படி யறிந்தவன், வேறொன்றால் ரக்ஷிக்கப்படாததை ரக்ஷிக்கத் தகுந்த பிராணனை யுடையவனாகிறான். க்ஷத்திரத்தின் ஸாயுஜ்ய ஸாலோக்யங்களை அடைகிறான்.

## பிராம்மணம் 14.

1. (இப்பொழுது காயத்திரி உபாதி விசிஷ்ட உபாஸநம் சொல்லப்படுகிறது; எல்லா சந்தஸ்களுக்குள் காயத்திரி பிரதானமானது. இந்து எல்லா சந்தஸ்களுக்கும் ஆத்மாவாக, பிராணனாக விருக்கிறது; இது பிராம்மண ஜந்மாவிற்கு ஹேதுவாயிருக்கிறது ; அஃதாவது, இந்து உபதேசமானல்தான் பிராம்மணன் ஆகிறுன். ஆதலால், இதன் உபாஸனு விதி சொல்லப்படுகிறது.)

'பூமி', 'அந்தரிக்ஷம்', 'த்யௌ:' என்ற சப்தங்களில் இருக்கும் எட்டு அக்ஷரங்களும் காயத்திரிக்கு முதலாவது பாதம் ; (அஃதாவது, காயத்திரியினுடைய முதற்பாதம்); மூன்று லோகத்திற்கும் ஆத்மாவாக விருக்கிறது. இப்படி யறிந்தவன் மேற்படி மூன்று லோகங்களில் இருக்கும் எல்லாவற்றையும் ஜயித்தவனுகிறுன்.

2. 'ரிச:', 'யஜூம்ஷி', 'ஸாமாநி' என்ற சப்தங்களிலுள்ள எட்டு அக்ஷரங்களும் காயத்திரியின் இரண்டாவது பாதம்; (அஃதாவது மேற்படி மூன்றும் இரண்டாவது பாதம்) ; இது மூன்று வேதாத்மகமாயிருக்கிறது. அப்படி யறிந்தவன் மேற்படி வேதங்களிலுள்ளவற்றை எல்லாம் அறிந்தவன்.

3. 'பிராண', 'அபான', 'வ்யாந' என்ற சப்தங்களிலுள்ள எட்டு அக்ஷரங்களும் மேற்படி காயத்திரியின் மூன்ருவது பாதம். அஃதாவது, மூன்ருவது பாதம் மேற்மடி மூன்று பிராணுத்மகமாயிருக்கிறது. இப்படி யறிந்தவன் அந்த பிராணன்களுள்ள எல்லா ஜீவராசிகளையும் ஜயிக்கிறுன்.

நான்காவதாயும், காணப்படுவதாயு மிருக்கிற பாதம் எதுவென்ருல் சொல்லப்படுகிறது ; இதோ, தபிக்கிற பரோரஜர் ; அஃதாவது, ஆதித்யமண்டல அந்தர்கதனுயிருக்கும் புருஷன் ; ரஜோகுணத்தால் உண்டான ஸமஸ்த லோகத்தையும் தபிக்கிறவன். இப்படி யறிந்தவன் ஸம்பத்தாலும், யசஸாலும் பெயர் போனவனுகிறுன்.

4. இப்படிப்பட்ட த்ரைலோக்ய த்ரைவித்ய பிராணலக்ஷணமுள்ளதும், மூன்று பாதங்களையுடையதுமான காயத்திரியானது

நான்காவது பாதமாகிய மேற்படி பரோரஜஸில் பிரதிஷ்டிதமாயிருக்கிறது. அப்படி நான்கு பாதங்களுடன் கூடிய காயத்திரி ஸத்யத்தில் பிரதிஷ்டிதமாயிருக்கிறது. ஸத்யமென்றால் சக்ஷுஸ்; எப்படி யென்றால், ஒரு விஷயத்தைப்பற்றி விவாதப்பட்டுக்கொண்டிருக்கிற இரண்டு மனுஷ்யர்களில் ஒருவன் 'நான் பார்த்தேன்' என்றும், மற்றொருவன் "நான் கேள்விப்பட்டேன்" என்றும் சொல்லிக்கொண்டுவந்தார்கள்; பார்த்ததாகச் சொல்லுபவனிடத்தில் நாம் நம்பிக்கை வைக்கிறோமல்லவா? ஆதலால், சக்ஷுஸ் ஸத்யம்: அந்த ஸத்யம் பலத்தில் பிரதிஷ்டிதம்; பலமென்றால் பிராணன்; ஆதலால் பலம் பிராணனில் பிரதிஷ்டிதம்; ஆதலால் பலம் ஸத்யத்தைக்காட்டிலும் பெரிது என்று சொல்லுகிறார்கள். அந்தப் பிராணன் ஆத்மாவில் பிரதிஷ்டிதமாயிருக்கிறது; இந்த காயத்திரி 'கயாக்களை' ரக்ஷிக்கிறது; 'கயா' வென்றால் பிராணங்கள், அஃதாவது வாகாதி இந்திரியங்கள். இதனால் அதற்கு 'காயத்திரி' என்ற பெயர் உண்டாயிற்று. அப்படிப்பட்ட ஸவிதிரு தேவதாத்மகமாயிருக்கிற காயத்திரியை ஆசாரியர் சிஷ்யனுக்கு உபதேசிக்கிறார். எந்த சிஷ்யனின்பொருட்டு மேற்படி காயத்திரி உபதேசிக்கப்படுகிறதோ அவனுடைய பிராணன்களை அந்த ஸாக்ஷாத் பிராணனாகிற ஜகத்தின் ஆத்மா நரகாதிகளில் விழுவதில் நின்று ரக்ஷிக்கிறார்.

5. இந்த காயத்திரியைச் சிலர் அநுஷ்டுப், அஃதாவது, வாக், ஸரஸ்வதீ யென்று சொல்லுகிறார்கள். அப்படியன்று. சிலர் ஸாவித்ரீ யென்று சொல்லுகிறார்கள்; அப்படியுமன்று. இந்த காயத்திரியை யறிந்தவன் வெகு தானம் வாங்கினாலும் சரி, அது காயத்திரியின் ஒரு பாதத்திற்குகூட ஈடாகமாட்டாது. (அஃதாவது, காயத்திரியை யறிந்தவன் எவ்வளவு தானம் வாங்கினாலும் தோஷமில்லை.)

6. காயத்திரியை யறிந்தவன் இந்த மூன்று லோகங்களையும் தானம் வாங்கட்டும்; அஃது ஒரு பாதத்திற்குச் சரியாயிருக்கும்; அஃதாவது, முதற் பாதத்தின் பலன் அநுபவிக்கப்பட்டது; பிரதிக்கிரஹத்தால் தோஷமில்லை. அப்படி மூன்று வேதங்களின்

வித்யையைத் தானம் வாங்கட்டும்; அஃது இரண்டாவது பாதத்தின் பலன்; பிரதிகிரஹத்தால் தோஷமில்லை. அப்படியே எல்லாப் பிராணிகளையும் தானம் வாங்கட்டும்; அது மூன்றாவது பாதத்தின் பலன்; பிரதிகிரஹத்தால் தோஷமில்லை. நான்காவது பாத விஷயத்தில் வாங்கப்பட்ட எதனாலேயும் தோஷமில்லை. காயத்திரி இப்படிப்பட்ட மாஹாத்ம்யம் உள்ளது.

7. காயத்திரியின் உபஸ்தான மந்திரம் இப்பொழுது சொல்லப்படுகிறது. ஹே! காயத்திரி! ஒரு பதம், இரண்டு பதங்கள், மூன்று பதங்கள், நான்கு பதங்கள் உள்ளவளாயிருக்கிறாய். (இது ஸோபாதிகமாகச் சொல்லப்பட்டது.) (நிருபாதிகமாயிருக்கும்பொழுது) யாதொரு பதமுமில்லாதவளா யிருக்கிறாய். உனக்கு நமஸ்காரம் செய்கிறேன். உன்னுடைய நான்காவது பாதத்திற்கு நமஸ்காரம். உன்பொருட்டு இந்த (என்) சத்ரு தன் காரியத்தை யடையாமலிருக்கட்டும். என் காமங்கள் நிறைவேறட்டும்.

8. இந்த விஷயத்தில் ஜனகர் புடிலரைப் பார்த்துச் சொல்லுகிறார்.

(ஜனகர்):—நீர் காயத்திரி தெரிந்தவர் என்று சொல்லிக் கொள்ளுகிறீரே! தானம் வாங்கிய தோஷத்தால் யானையாகப் போய் அவதிப்படுகிறீரே.

(புடிலர்):—நான் காயத்திரியின் முகத்தைத் தெரிந்து கொள்ளவில்லை; ஆதலால்தான் இப்படித் துன்பப்படுகிறேன்.

(ஜனகர்):—அதன் முகம் அக்நி; அது தெரிந்தவனுடைய எல்லாப் பாபங்களையும் எரித்துவிடும்; அவன் பரிசுத்தனாகவும், அஜரனாகவும் அமிருதனாகவும் ஆகிறான்.

---

## பிரம்மணம் 15.

1. (ஞானத்துடனும் கர்மாவுடனும் சேர்ந்திருப்பவர்கள் மரண காலத்தில் ஸூரியனை அடியிற்கண்டபடி பிரார்த்திக்க வேண்டும்.)

ஹே! பூஷன்! (போஷிக்கிறவரே); ஜோதிர்மயமாயிருக்கிற மண்டலத்தால் மூடப்பட்டிருக்கிற ஸத்யமென்று பெயருள்ள பிரம்மத்தின் முக்கியமான ஸ்வரூபத்தைப் பார்க்கும்பொருட்டு, ஸத்யத்தையே தர்மமாகவுடைய என்பொருட்டு மறைவை நீக்கி விடு; ஹே! பூஷன்! எல்லாவற்றையும் பார்க்கிற முக்கிய நேத்திரமே! எல்லாவற்றையும் தனக்குள் அடக்கிக் கொள்ளுபவரே! ரஸங்களைச் செவ்வையாக இழுப்பவரே! பிரஜாபதி புத்திரரே! மேற்படி ஸ்வரூபத்தை நான் பார்க்கும்பொருட்டுக் கிரணங்களை இழுத்துக்கொள்ளும்! தேஜஸைக் குறைத்துக்கொள்ளும்! கலியாணதமமாயிருக்கிற உம்முடைய ரூபத்தை நான் பார்க்கிறேன். வியாஹ்ருதிகளை அவயவங்களாகவுடைய யாதொரு புருஷன் உண்டோ அந்தப் புருஷனாகவே நான் ஆகிறேன். என் சரீர பாதானந்தரம் என் பிராணவாயு வெளிப்பட்டவாயுவுடன் கலந்து போகட்டும். அப்படி மற்றத் தேவதைகளும் அதன் அதன் வெளிப்பட்ட தேவதைகளுடன் கலந்து போகட்டும். இந்த தேஹமும் சுடப்பட்டு பஸ்மமாய்ப் போன பிறகு பிருதிவியுடன் கலந்துபோகட்டும்.

(ஸங்கல்பபூதமாயிருக்கிற மனஸில் இருக்கிற அக்நியைப் பிறகு அடியிற்கண்டபடி பிரார்த்திக்கவேண்டும்.)

ஹே! ஓம்! (ஓம்காரத்தைப் பிரதீகமாயுடையவரே!) மனோமய ரூபமுள்ளவரே! என்னாற் செய்யப்பட்ட காரியத்தை நினைத்துப் பார், நினைத்துப்பார், நினைத்துப்பார்! மரணகாலத்தில் உன்னை ஸ்மரிக்கிறேன். நீர் பிரஸாதம் செய்யும். ஹே! அக்நியே! கர்மபலனை யடையும்பொருட்டு எங்களை நல்வழியிற் சேரும். பிராணிகளின் எல்லாப் பிரக்ஞானத்தையும் அறிந்த தேவ! எங்களிடமிருந்து கடுமையான எல்லாப் பாபங்களையும் போக்கடியும். உமக்கு வெகு நமஸ்காரக் கிரியையால் பரிசாரம் செய்கிறோம்!.

---

# ஆரும் அத்தியாயம்

## பிராம்மணம் 1.

1. ஓம்! எவனொருவன் ஜ்யேஷ்டமாயும், சிரேஷ்டமாயும் இருக்கிற வஸ்துவை அறிகிருனே அவன் தன்னைச் சார்ந்தவர்களுக்குள் ஜ்யேஷ்டனுயும், சிரேஷ்டனுயுமிருப்பான். அப்படிப் பட்ட வஸ்து பிராணன்தான். ஜ்யைஷ்ட்யம் எவ்வாறு எனில்— சக்ஷுராதி இந்திரியங்களைக்காட்டிலும் பிராணன் முந்தியது; ஆதியில் சுக்ல சோணிதம் சேர்ந்து கர்ப்பமுண்டாகும்பொழுது, பிராணன் இல்லாவிடில் எப்படி உண்டாகும்? (ஆதலால், முதலில் பிராணன், பிறகுதான் மற்ற சக்ஷுராதி இந்திரியங்கள்.) ஜ்யைஷ்ட்யமும், சிரேஷ்டத்வமும் கிடைக்கவேண்டுமென்று இச்சித்துப் பிராணனை உபாஸிப்பவர்களைக்காட்டிலும், அப்படியறிந்தவன் மேலானவன். (இதனுல் சிரேஷ்டத்வமும் கிடைத்தது.)

2. எவனொருவன் வஸிஷ்ட வஸ்துவை யறிகிருனே அவன் தன்னைச் சார்ந்தவர்களுக்குள் வஸிஷ்டனுயிருக்கின்றுன். 'வஸிஷ்டம்' என்பது வாக்குத்தான். (வஸிஷ்டன் என்றுல், தன்னைச் சார்ந்தவர்களை வஸிக்கும்படி செய்பவன்.) அப்படியாகவேண்டும் என்று இச்சிப்பவர்களுக்குள்ளும் வஸிஷ்டனுயிருக்கிறுன்.

3. பிரதிஷ்டாகுணமுள்ளதை யறிந்தவன், எல்லாவிடத்திலும், எல்லாக் காலத்திலும் ஸமமாயிருப்பான். பிரதிஷ்டாவென்றுல் சக்ஷுஸ். கண்ணுல்தான் நல்லவழியும், கெட்டவழியும் தெரியும்.

4. ஸம்பத்குணமுள்ளதை யறிந்தவன் எதை எதை இச்சிக்கிருனே அவை எல்லாவற்றையும் அடைவான். ஸம்பத் என்றுல் சுரோத்ரம். காதுகளிருந்தால்தான் வேதங்களைக்கேட்டு அதிற் கண்ட கர்மாக்களைச் செய்யலாம். அதனுல் காமங்களை யடைகிறுன்.

5. ஆயதனத்தை (ஆச்ரயத்தை) யறிந்தவன், தன்னைச் சார்ந்தவர்களுக்கும், இதரர்களுக்கும் ஆச்ரயமான இடமாயிருப்

பான். (அஃதாவது எல்லோரையும் ரக்ஷிக்க சக்தியுண்டு.) 'ஆய தனம்' என்றால் மனஸ். (மனஸ் எல்லா இந்திரியங்களுக்கும், விஷயங்களுக்கும் ஆச்ரயம்; மனஸ் இல்லாவிடில் இந்திரியங் களுக்கு விருத்தி யிராது.)

6. பிரஜாபதியை யறிந்தவன் பிரஜையாலும், பசுக்களா லும் நிரம்பினவனாக விருப்பான். பிரஜாபதி யென்றால் ரேதஸ். (ரேதஸினால்தான் பிரஜைகள் உண்டாகின்றன.)

7. இந்தப் பிராணன்களெல்லாம் (வாகாதி இந்திரியங்கள்) தங்களுக்குள் 'நான் பெரிது', 'நான் பெரிது' என்று விவாதப் பட்டுக்கொண்டு, பிரம்மத்தினிடம் (பிரஜாபதியிடம்) சென்று, தங்களுக்குள் எவர் வஸிஷ்டர் (உயர்ந்தவர்) என்று கேட்டார் கள். எவர் இந்தச் சரீரத்தைவிட்டு வெளிப்புறப்பட்டுப் போனால் சரீரம் கெட்டுப்போகுமோ அவர்தான் பெரியவர் என்று பிரஜா பதி சொன்னார்.

8. அதன்மேல் வாக் இந்திரியம் வெளிக்கிளம்பிப்போய், ஒரு வருஷம் இருந்து, பிறகு வந்து, 'நீங்கள் எப்படிப் பிழைத் திருந்தீர்கள், என்னையன்றி' என்று மற்ற இந்திரியங்களைக் கேட்டது. உலகத்தில் ஓர் ஊமையன், வாக்கால் பேசாமலிருந்தும், எவ்விதம் கண்ணால் பார்த்துக்கொண்டும், காதால் கேட்டுக் கொண்டும், மனஸால் நினைத்துக்கொண்டும், ரேதஸால் பிரஜையை யுண்டு பண்ணிக்கொண்டும், பிராணனால் பிழைத்துக்கொண்டு மிருக்கிறானோ அப்படி இருந்தோம் என்று மற்ற இந்திரியங்கள் சொல்லின. அதன்மேல் வாக்கு சரீரத்தில் பிரவேசித்தது.

9. பிறகு சக்ஷுஸ் வெளிக்கிளம்பிற்று. (இதற்கு மேற் கண்டபடி) குருடன் உயிருடனிருப்பதுபோல்.

10. சுரோத்திர விஷயத்தில் முன்போல். செவிடன் உயி ருடனிருப்பதுபோல்.

11. மனஸ் மேற்கண்டபடி. மூடன் உயிருடனிருப்பது போல்.

12. ரேதஸ் மேற்கண்டபடி. நபும்ஸகன் உயிருடனிருப் பதுபோல்.

13. பிறகு, பிராணன், ஸிந்து தேசத்திலுண்டான லக்ஷணமுள்ள ஒரு பெரிய குதிரை, கால் (கட்டியிருக்கும்) முளை களைப் பிடுங்கிக்கொண்டு எவ்விதம் கிளம்புமோ, அப்படி, மற்ற வாகாதி இந்திரியங்களைப் பிடுங்கிக்கொண்டு கிளம்பத் தொடங் கியவுடன், மேற்படி வாகாதிகள், பிராணனை நோக்கி, ‘அப்படிக் கிளம்ப வேண்டாம்; உன்னை யன்றி நாங்கள் பிழைத்திருக்க மாட்டோம்’ என்று சொல்லின.

(பிராணன்):—அப்படியால், சிரேஷ்டனாயிருக்கிற எனக்கு பலி (கப்பம்) கொடுங்கள்.

(வாகாதிகள்):—அப்படியே கொடுக்கின்றோம்.

14. பலி கொடுக்கும்பொருட்டு அடியிற் கண்டவாறு சொல்லின :—

வாக்:—என் வஸிஷ்டத்வத்தை நீ எடுத்துக்கொள்.

சக்ஷுஸ்:—என் பிரதிஷ்டாத்வத்தை நீ எடுத்துக்கொள்.

மனஸ்:—என் ஆயதனத்வத்தை நீ எடுத்துக்கொள்.

ரேதஸ்:—என் பிரஜாதித்வத்தை நீ எடுத்துக்கொள்; என்று.

(மறுபடி பிராணன் கேட்டதாவது):—எனக்கு அன்னம் எது? இருப்பிடம் எது? (வாகாதிகள்):—அச்வம் முதல், புழு முதல், பூச்சி முதல், பக்ஷி முதல் உலகத்திலுள்ள எல்லாப் பிராணிகளாலும் உண்ணப்படுகிற அன்னம் எவை உளவோ அவை யெல்லாம் உன்னுடைய அன்னம்.

(இவ்விதம் சொல்லப்பட்டதால் ஸர்வ அன்னத்தையும் பக்ஷிப்பதால் தோஷமில்லை யென்று சிலர் சொல்லுகிறார்கள். அஃது அஸத்தான வார்த்தை. பிராணன் இவ்விதமென்று அறிய வேண்டி ஸ்தோத்திரமாகச் சொல்லப்பட்டது. இதர சாஸ்திரங் களால் எந்த எந்த அன்னம் பக்ஷிக்கக்கூடாதென்று சொல்லப் பட்டிருக்கிறதோ, அந்த விதியை இது தடுக்கமாட்டாது.)

வாகாதிகள்:—ஜலம்தான் உனக்கு வஸ்திரம்.

இவ்விதமாகப் பிராணனுக்கு அன்னம் இது வென்று அறிப வன்கூட பக்ஷிக்கக்கூடாததைப் பக்ஷிக்கக்கூடாது; பிரதிக்கிரஹிக்

கவும் கூடாது. ஆதலால் வித்வான்களாயும், ச்ரோத்ரியர்களாயு மிருக்கிற பிராம்மணர்கள் போஜனத்திற்கு முன்னும், பின்னும் ஆசமனம் செய்கிறார்கள். (இவ்விதம் வேதோக்த ஆசமனம் செய்வதால்) பிராணனுக்கு வஸ்திரம் கொடுக்கிற பாவனை யுண்டாகிறது. (ஸ்மிருதியில் சொல்லிய ஆசமனம் அன்ன பக்ஷணதோஷபரிஹாரத்திற்காக ஏற்பட்டது.)

---

## பிராம்மணம் 2.

இது கிலாதிகாரமானதால் எவை யெல்லாம் முன் சொல்லப்பட வில்லையோ அவை யெல்லாம் இதிற் சொல்லப்படுகின்றன. ஞானத்துடன் கூடிய கர்மா செய்பவன் நல்ல கதியையடைய அக்நியைப் பிரார்த்திக்கிற ஸங்கதி சொல்லப்பட்டது. இதனால் அவன் செய்யும் கர்மாவிற்குத் தக்க வாறு பல கதிகள் (மார்க்கங்கள்) இருப்பதாகத் தோன்றுகின்றன. அப்படிப் பட்ட மார்க்கங்கள் எவ்வளவு உள வென்று காண்பித்து, எல்லா ஸம்ஸாரங் களின் கதி இதுதான் என்று சொல்லிமுடிப்பதாக இந்தப் பிராம்மணம் தொடங்கப்படுகிறது. ஸ்வாபாவிகமாயும், சாஸ்திரீயமாயுமிருக்கிற ஞானத் திற்கு இவ்வளவுதான் ஸம்ஸாரகதி, இவ்வளவுதான் கர்மவிபாகம் என்றும் சொல்லப்படுகிறது. கேவல கர்மாவால் பிதிருலோகமும், ஞானத்துடன் கூடிய கர்மாவால் தேவலோகமும் கிடைக்கும் என்று ஏற்கெனவே சொல் லப்பட்டிருக்கிறது. ஆனால் விவரமாக எந்த மார்க்கத்தால் பிதிருலோகம், எந்த மார்க்கத்தால் தேவலோகம் என்பதைப்பற்றிச் சொல்லப்படவில்லை. இவை இதில் விவரமாகச் சொல்லப்படும். கடைசியில் சாஸ்திரத்தின் முடிவு சொல்லப்படும். மேலும், அமிருதத்வம் இத்தகையதென்றும், கர்மா வால் அமிருதத்வம் வரமாட்டாதென்றும் முன் சொல்லப்பட்டிருக்கிறது. ஆயினும் அதற்கு ஹேது சொல்லப்படவில்லை. அந்த ஹேதுவும் இப் பொழுது சொல்லப்படும். கர்த்தாவிற்கு ஆஹுதி லக்ஷணமான கர்மாவின் பலனும் சொல்லப்படும். மேற்படி கர்மாவின் பலன் கர்த்தாவை அநுஸரிக் காமல் தானாக உண்டாவதில்லை. அத்தகைய கர்மபலன் ஆறுவிதம் என்ப தும், உத்தரமார்க்க பிரதிபத்தி ஸாதனமாயிருக்கிற பஞ்சாக்நி தர்சனமும் சொல்லப்படும். கர்மகாண்டத்திற்கு இவ்வளவுதான் நிலைமை, ஸ்திதி, பலன்—என்று காட்ட வேண்டுவதற்காக ஒரு கதை சொல்லப்படுகிறது.

1. ஒரு வித்வானாகிய ச்வேதகேது வென்ற ஆருணேயர், பஞ்சால தேசத்திலுள்ள வித்வான்களின் கூட்டத்திற்குப்

போனார். (அந்தக் கூட்டத்தை ஜயித்து) ப்ரவாஹனர் என்றும் ஜைபலி யென்றும் பெயருள்ள ராஜாவிடம், அவருடைய வித்வத் கூட்டத்தையும் ஜயிக்க இச்சையுடன் சென்றார். அந்த ராஜா இவருடைய வித்யா கர்வத்தை முன்னதாகவே யறிந்து, (இவரை வணக்கக் கருதி) குமாரா—ரா—ரா வென்று நீட்டிக் கூப்பிட்டார். (அலக்ஷியம் என்பது கருத்து.) அதற்கு ச்வேதகேது போ—ஓ—ஓ வென்று நீட்டி மறுமொழி சொன்னார்.

(ஸம்பாஷணை)

ராஜா:—பிதாவால் ஏவப்பட்டு வந்திருக்கிறீரோ ?

ச்வேதகேது :—ஆம் ; வேண்டிய ஸந்தேஹங்களைக் கேட்கலாம்.

2. ராஜாவின் கேள்விகள்:—

(i) மரித்துப்போகிறவர்களும், ஒரே நாடிவழியாகப் போகிறவர்களுமான இந்தப் பிரஜைகளுள், எவ்விதம் சிலர் ஒரு வழியிலும், சிலர் வேறு வழியிலும் வித்யாஸப்பட்டுப் போகிறார்கள் ? உனக்குத் தெரியுமா ?

ச்வேதகேது:—தெரியாது.

(ii) ராஜா:—அப்படிச் சென்றவர்கள் எவ்விதம் மறுபடி இந்த லோகத்தை வந்தடைகிறார்கள் ? தெரியுமா ?

ச்வேதகேது:—தெரியாது.

(iii) ராஜா:—இவ்விதம் அடிக்கடி மரணத்தை யடைகின்ற வெகு பேர்களால் அந்த லோகம் (மேல் உலகம்) நிரம்பபடவில்லை ? தெரியுமா ?

ச்வேதகேது:—தெரியாது.

(iv) ராஜா:—எவ்வளவு ஆஹுதிகள் செய்யப்பட்டால் ஜலம் புருஷாகிருதியாகக் கிளம்பிப் பேசுகின்றது ? தெரியுமா ?

ச்வேதகேது:—தெரியாது.

(v) ராஜா:—மனிதர்களுக்கு, மரித்தபின்னர், தேவயானமென்றும், பிதிருயானமென்றும் இரண்டு மார்க்கங்கள் உளவென்றும், அவைகளின் வழியாக எல்லாம் போகின்றனவென்றும், அந்த மார்க்கங்கள், மாதாவாகிய இந்த

பூமிக்கும், பிதாவாகிய அந்த ஸ்வர்க்கத்திற்கும் மத்தியில் இருக்கின்றனதென்றும் (அஃதாவது, இவை அண்ட கபாலத்திற்குள்ளிருக்கக்கும் வழிகள்; ஆத்யந்திகமான அமிருதத்வத்தைக் கொடுக்கும் மார்க்கங்கள் அன்று என்றும்) நாம் கேள்விப்பட்டிருக்கிறோம் அல்லவா? அந்த மார்க்கங்களின் பிரதிபதத்தை, (அஃதாவது) அந்த மார்க்கங்களையடைய ஸாதனத்தை, (அஃதாவது) எந்த கர்மா செய்யின் இவைகள் கிடைக்கும் என்பது தெரியுமா?

ச்வேதகேது:—நீர் கேட்ட கேள்விகளில் யாதொன்றிற்கும் உத்தரம்சொல்ல எனக்குத் தெரியாது.

3. பிறகு ராஜா ச்வேதகேதுவை 'இருங்கள்' என்று மரியாதை செய்தார். அதை அலக்ஷ்யம்செய்து தன் பிதாவிடம் திரும்பிச் சென்றார். அவ்விடம் சென்று கோபத்துடன் பிதாவை (அடியிற்கண்டவாறு) கேட்கிறார்:—எங்களுக்கு முன்னர் இவ்விதமாகத்தான் சொல்லிக் கொடுத்தீர்!

பிதா:—ஏன்! அப்பா! இப்படி துக்கப்பட வேண்டிய காரணம்?

ச்வேதகேது:—சொல்லுகிறேன். கேளும்! அந்த எறிந்துபட்ட ராஜா, ஜைபலி, என்னை ஐந்து கேள்விகள் கேட்டான். அவைகளில் ஒன்றுக்காவது மறுமொழிகூற எனக்குத் தெரியவில்லை. (நீங்கள் எனக்கு வித்யாப்யாஸம் செய்வித்ததில் என்ன பிரயோஜனம்.)

பிதா:—என்ன கேள்விகள் கேட்டான்?

ச்வேதகேது:—இன்ன இன்ன கேள்விகள் என்று சொன்னான்.

4. பிதா:—அடே அப்பா! எனக்குத் தெரிந்ததை எல்லாம் உனக்குக் கற்றுக்கொடுத்ததாக அறி. (இந்தக் கேள்விகளுக்கு உத்தரம் எனக்கும் தெரியாது.) ஆகையால், வா! அந்த ராஜாவிடம்போய்க் கேட்போம்.

ச்வேதகேது:—நீர் போம். (எனக்கு அவர் முகத்தில் விழிக்க இஷ்டமில்லை.)

(பிறகு) மேற்படி பிதாவாகிய ஆருணி ராஜாவிடம் சென்றார். இவருக்கு ராஜா வேண்டிய மரியாதை அளித்து, இவரை நோக்கி, 'வேண்டும் வரம் கேட்கலாம், கொடுத்தேன்' என்று சொன்னார்.

5. ஆருணி:—வரம் கொடுப்பதாக பிரதிக்ஞைசெய்திருக்கிறீர் அல்லவா! தவறக்கூடாது. நான் வரம் கேட்கிறேன்; அஃதாவது, என் குமாரனை எந்தக் கேள்விகள் கேட்டீரோ அவைகளைப்பற்றிச் சொல்லும்.

6. ராஜா:—இவைகள் தைவ ஸம்பந்தமானவை; இவைகள் வேண்டாம். மாநுஷ ஸம்பந்தமான வரத்தைக் கேளும்.

7. ஆருணி:—எனக்கு ஹிரண்யம், பசு, குதிரை, தாஸீ, பரிவாரம் முதலியவையெல்லாம் நிறைந்திருக்கின்றன. அவைகளை நான் கேட்கவேண்டுவதுமில்லை. நீர் எனக்குக் கொடுக்க வேண்டுவதுமில்லை. எனக்கு வேண்டிய, முன்சொன்ன, வரத்தையே கொடும்.

ராஜா:—அப்படியானால், சாஸ்திரப்பிரகாரம் (குரு சிஷ்ய கிரமமாக) என்னைக் கேட்கவேண்டியது.

ஆருணி:—அப்படியே கேட்கிறேன். நீர்தான் குரு; நான் சிஷ்யன். உபதேசம் செய்க.

(பிராமணன் க்ஷத்திரியனிடமாவது, க்ஷத்திரியன் வைசயனிடமாவது உபதேசம் கேட்குங்கால், 'நான் சிஷ்யன்' என்று, வார்த்தை மாத்திரமாகச் சொல்லவேண்டியதே தவிர நமஸ்காரம் முதலியன செய்யக்கூடாது.) இந்தப்பிரகாரம், ஆருணி வார்த்தையால்மட்டும் சொல்லி ராஜாவை உபதேசிக்கும்படி கேட்கிறார்.

8. ராஜா:—ஹே! கௌதம! கோபித்துக்கொள்ள வேண்டாம்! என்னுடைய பிதாமஹரிடத்தில் உம்முடைய பிதாமஹர் வைத்திருந்த விச்வாஸம்போல் நீரும் என்மேல் பக்ஷம் வைக்கவும். நான் உமக்குச் சொல்லப்போகிற வித்யையானது இதற்குமுன் ஒரு பிராம்மணனுக்கும் சொல்லிக்கொடுக்கப்படவில்லை; தெரியவுமாட்டாது. க்ஷத்திரியனிடமே பரம்பரையாக

விருந்தது. அப்படிப்பட்டதை உமக்குச் சொல்லுகிறேன். 'சொல்லமாட்டேன்' என்று யாராவது உமக்குச் சொல்லலாமா? கூடாது.

9. ராஜா:—அந்த லோகம் (த்யுலோகம், ஸ்வர்க்கலோகம், ஆகாசலோகம்) அக்நி. (அந்த லோகத்தை அக்நியாக பாவித்துக்கொள்ளவேண்டும்.) அதற்கு, ஆதித்யன்—ஸமித்; அதன் கிரணங்கள்—புகை; பகல்—ஜ்வாலை; திக்குகள்—அணைந்த தணல்; மூலைத்திக்குகள்—பொரிகள்; இத்தகைய அக்நியில் இந்திராதி தேவர்கள் சிரத்தையை (ஜலத்தை) ஹோமம் செய்கிறார்கள். அதினின்றும் ஸோமராஜன் (சந்திரன்) உண்டாகிறான்.

[இவ்வுலகத்தில் ஒரு கல்பத்தில் ஜனங்களால் செய்யப்படும் அக்நி ஹோத்ராதி கர்மாவானது, அதன் அதன் ஸாதனங்களுடன், ஸூக்ஷ்மரூபமாக, அபூர்வம், அதிருஷ்டம் என்ற பெயர்களுள்ளதாக, அந்த கல்ப பிரளய காலத்தில், பரமாயிருக்கிற ஆத்மாவுடன் இருக்கிறது. அப்படிப்பட்ட கர்மா மறுகல்ப ஸ்ருஷ்டி யாரம்பகாலத்தில் அந்த அந்த கர்மாவிற்குத் தக்கவாறு பரிணமத்தை யடைகின்றது. ஆதலால், இந்த எல்லா ஜகத்தும் அக்நிஹோத்ராஹுத்யபூர்வவிபரிணமாத்மகமா யிருக்கிறதென்று ஆஹுதிகளை ஸ்தோத்ரம் செய்யக்கருதி, லோக பிரத்யுத்தாபிதங்களான இந்த ஆறு பதார்த்தங்களைக் குறித்துக் கர்மகாண்டத்தில் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. இந்த ஞானகாண்டத்திலோ வெனில், கர்மா செய்கிற கர்த்தாவின் கர்ம பல விஷயத்தில் உத்தரமார்க்கமடைய ஸாதனமான த்யுலோகாக்நி முதலிய ஐந்து அக்நிகளின் தர்சனத்தைப்பற்றி (ஞானத்தைப்பற்றி)ச் சொல்லப்படுகிறது. தேவர்கள் யாவரெனில், நம்முடைய ஆத்ம ஸம்பந்தமான பிராணன்களே; இந்த லோகத்தில் அவர்களே கர்மாவை நடத்துகிறவர்களாக, ஹோதாக்களாக விருக்கிறார்கள்; அவர்களே அந்த லோகத்தில் தேவத்வத்தை யடைந்தவர்களாக இந்திராதி தேவர்களாக விருக்கிறார்கள்; அவர்களே த்யுலோகாக்நியில், பலத்தை யடையும்பொருட்டு, ஹோமம் செய்கிறவர்கள்; அவர்களே பலனை யடைகின்றார்கள். ஹவிஸ் யாதெனில், ஹோமம் செய்யப்படும் பால் முதலிய திரவ்யம்; அஃது அக்நியால் பக்ஷிக்கப்பட்டு, ஸூக்ஷ்மரூபமாக, யஜமானனுகிற கர்த்தாவுடன் இவ்விடத்தினின்றும், தூமாதி கிரமமாக, அந்தரிக்ஷத்திற்குப் போகிறது; அங்கிருந்து த்யுலோகத்திற்குப் போகிறது; அது ஸூக்ஷ்மமான ஜலமாக விருக்கிறது; அதற்கு 'சிரத்தா' என்றும் பெயர், அந்த ஸூக்ஷ்ம ஜலம் ஸோம மண்டலத்தை யடைந்து, கர்த்தாவிற்குச் சரீராந்தரத்தை யுண்டுபண்ணுகிறது; ஆதலால் ஜலம் கர்மா

விற்கு வேண்டியது முக்கியம்: ஆயினும், மற்ற பூதங்கள் வேண்டுவ தில்லையோ வெனில், அப்படி யன்று; ஜலம் அதிகமாக வேண்டியதால் ஜலத்தைப் பிரதானமாகச் சொல்லப்பட்டது; கர்மாவால் சரீரம் உண்டாகிறது; கர்மாவோ ஜலத்தை அவச்யமாக வேண்டுகிறது; ஆதலால், சரீரம் உண்டாகிற விஷயத்தில் ஜலத்திற்குப் பிராதான்யம் சொல்லப்பட்டது; அதனால் ஜலம் புருஷவாசகமாக வ்யபதேசிக்கப்பட்டது. அக்நிஹோத்ர கர்மாவைக் குறித்து மாத்திரம் சொல்லப்பட்டிருந்தாலும், அது வேதோக்தங்களான எல்லாக் கர்மாக்களையும் குறிக்கும், எல்லாக் கர்மாக்களும் 'தாரா' என்ற அக்நிஸம்பந்தமுளதாயிருப்பதால்.

த்யுலோகாக்நியைப்பற்றிச் சொல்லப்படுகிற இந்த மந்திரத்திற்குச் தாத்பரியம் யாதெனில்—அக்நிக்குள்ள லக்ஷணத்தைக் காண்பிக்க 'ஆதித்யன்—ஸமித்' முதலியவைகளால் வர்ணிக்கப்பட்டது; இப்படிப் பட்ட த்யுலோகாக்நியில், தேவ சப்த வாச்யங்களாகிய பிராணன்கள், சிரத்தா சப்தவாச்யமாகிற, கர்மாஹுதியாகிற அபூர்வமென்று பெயருள்ள ஸூக்ஷ்ம கர்மாவை ஹோமம் செய்கிறான். (அஃதாவது போடுகிறான்.) அஃதாவது, இவ்வுலகத்தில் வேதோக்த கர்மாக்களைச்செய்த ஒருவனுடைய பிராணன்கள், சரீரத்தை விட்டபிறகு, அவன் செய்த கர்மாவுடன், த்யுலோகத்திற்குப் போகின்றன. அந்தக் கர்மாவை த்யுலோகத்தில் வைக்கிறான்; அதனால், அதை த்யுலோகாக்நியில் போட்டதாகச் சொல்லப்படுகின்றது. மேலும், மேற்படி பிராணன்கள், கர்மாவுடன் கூடி, வேறு சரீரத்தை யடைய ஸோம மண்டலத்தை யடைகின்றன; அஃதாவது அம்மண்டலமாகின்றன; அதனால் ஸோமராஜன் உண்டானார் என்று சொல்லப்படுகின்றது.]

10. பர்ஜந்யன் (இந்திரன், மழைக்கு அபிமானி தேவதை) அக்நி. (இரண்டாவது அக்நி.) இதற்கு, ஸம்வத்ஸரம் (காலம்)—ஸமித்; மேகங்கள்—புகை; மின்னல்—ஜ்வாலை; இடி—தணல்; இடி முழக்க சப்தங்கள்—பொரிகள்; இந்த அக்நியில், தேவர்கள் (பிராணன்கள்) ஸோமராஜனை ஹோமம் செய்கிறார்கள். அதினின்றும், மழை உண்டாகிறது. (அஃதாவது, சந்திரனிடத்தில் நின்ற ஜலம், ஸூர்ய கிரணங்களால் இழுக்கப்பட்டு, மேகங்களாகி மழையுண்டாகிறது; அஃதாவது, மேற்கூறிய கர்ம பரிபாகம், பிராம்மணனுடன் மழையாகிறது.)

11. இந்த லோகம் (பூலோகம்) (மூன்றாவது) அக்நி. இதற்கு, பூமி—ஸமித்; பார்த்திவாக்நி—தூமம்; இரவு—அர்ச்

சிஸ்; சந்திரன்—தணல்; நக்ஷத்திரங்கள்—பொறிகள்; இந்த அக்நி யில் தேவர்கள் (பிராணன்கள்) மேற்படி மழையை ஹோமம் செய்கிறார்கள். அதினின்றும் அன்னம் உண்டாகிறது. (அஃதா வது, மழை பூமியில் விழுந்து, அதினின்றும் அன்னமாகிற நெல் முதலான தான்யங்கள் உண்டாகின்றன. அஃதாவது மேற்படி கர்மபரிபாகம் பிராணனுடன் அன்னமாகிறது.)

12. புருஷன் (மனுஷ்யன்) (நான்காவது) அக்நி. அதற்கு அவன் திறந்தவாய்—ஸமித்; பிராணன்—தூமம்; பேச்சு—அர்ச் சிஸ்; நேத்திரங்கள்—தணல்; சுரோத்திரங்கள்—பொறிகள்; இந்த அக்நியில், தேவர்கள் (பிராணன்கள்) அன்னத்தை ஹோமம் செய்கிறார்கள். அதினின்றும் ரேதஸ் உண்டாகிறது. (அஃதா வது, புருஷன் அன்னத்தைச் சாப்பிடுகிறான்; அதனால் அவனிடம் ரேதஸ் உண்டாகிறது; அஃதாவது மேற்படி கர்மபரி பாகம், பிராணனுடன் ரேதஸாகிறது.)

13. ஸ்திரீ (ஐந்தாவது) அக்நி. உபஸ்தம்—ஸமித்; மயிர் கள்—தூமம்; யோநி—அர்ச்சிஸ்; மைதுனவியாபாரம்—தணல்; அதனால் ஜனிக்கிற ஆனந்தம்—பொறிகள்; இந்த அக்நியில் தேவர் கள் (பிராணன்கள்) மேற்படி ரேதஸை ஹோமம் செய்கிறார்கள். அதனின்றும் புருஷன் உண்டாகிறான்; உண்டாகி, அவனுடைய கர்மபரிபாகம் எவ்வளவுகாலம் ஜீவித்திருக்கும்படி இடம் கொடுக் கிறதோ அவ்வளவு காலம் ஜீவித்திருக்கிறான். பிறகு அவன் மரிக்கும்பொழுது (இன்னது ஆகிறதென்று மேல் மந்திரத்தில் சொல்லப்படும்).

(இப்படி நான்காவது கேள்விக்கு உத்தரம் நிர்ணயிக்கப் பட்டது; அஃதாவது, ஐந்து ஆஹுதிகளான பிறகு, ஜலம் புருஷாகிருதியாகிறதென்று.)

14. இறந்த உடலை அக்நியில் போடும்பொருட்டு புருஷனைத் தூக்கிக்கொண்டு போகிறார்கள். (ருத்விக்குகளாகிய புத்திராதி கள் அவனை அக்நியில் ஹோமம் செய்யும்பொருட்டு ச்மசானத் திற்கு எடுத்துக்கொண்டு போகிறார்கள்.) அந்த அக்நி நிஜ

அக்நியே (முன் சொல்லியதுபோல் பரிகல்பிதமான அக்நியன்று.) அங்ஙனமே, தூமம், அர்ச்சிஸ், அங்காரம், விஸ்புலிங்கம் இவைகளெல்லாம் நிஜமானவைகள். அந்த நிஜ அக்நியில் இந்தப் புருஷனை ஹோமம் செய்கிறார்கள். அதினின்றும், புருஷன் பிரகாசமுள்ளவனாக உண்டாகிறான்.

15. (இப்பொழுது முதல் கேள்விக்கு உத்தரம் சொல்லப் படுகிறது.)

இந்தப் பிரகாரம் பஞ்சாக்நி வித்யையை யறிந்த கிருஹஸ்தர்களும், (அஃதாவது, ஞானத்துடன் கர்மாவை யநுஷ்டிக்கிற கிருஹஸ்தர்களும்), சிரத்தையுடன், ஸத்யமாகிற பிரம்மத்தை உபாஸிக்கின்ற வானப்ரஸ்தர்களும், ஸந்யாஸிகளும் மரித்தபிறகு அர்ச்சிஸை (அர்ச்சிரபிமானி தேவதையை) யடைகிறார்கள்; (அஃதாவது, பிரகாசரூபியாகிறார்கள்); மேற்படி தேவதையால் வஹிக்கப்பட்டுப் பகல் தேவதையை யடைகிறார்கள். அதிலிருந்து (கிரமமாக அதனால் வஹிக்கப்பட்டு) சுக்லபக்ஷம், உத்தராயணம், தேவலோகம், ஆதித்ய மண்டலம், வித்யுத் (மின்னல்) (இவைகளை) வரிசையாக அந்த அந்த தேவதைகளை யடைகிறார்கள். அங்கிருந்து, மனதைக்கொண்டு பிரம்மனால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட ஒரு புருஷனால் பிரம்மலோகத்திற்கும் கொண்டு போகப்படுகிறார்கள். அப் பிரம்மலோகங்களில் உத்கிருஷ்டர்களாக அநேக பிரம்ம கல்பங்கள் வஸிக்கின்றார்கள். அவர்களுக்குப் புனராவிருத்தி கிடையாது. (கல்பாந்தரங்களில் ஆவிருத்தி உண்டு எனத் தோன்றுகிறது.)

16. யக்ஞத்தாலும், தானத்தாலும், தபஸாலும் (விரதாதிகளாலும்) லோகங்களை யார் ஜயிக்கிறார்களோ (ஞானமில்லாத கேவலகர்மிகள்) அவர்கள், இறந்தபிறகு, தூமதேவதையை யடைகிறார்கள். அதினின்றும் ராத்திரிதேவதையை; அதினின்றும் கிருஷ்ணபக்ஷத்தை ; பிறகு, தக்ஷிணாயணம், பிதிருலோகம், சந்திரலோகம் இவைகளை வரிசையாக அடைகிறார்கள். சந்திரனையடைந்து அன்னமாகிறார்கள். இவ்வுலகத்தில் ஒரு யாகத்தில் ஸோம ரஸத்தை 'ஆப்யாயஸ்வ,' 'அபக்ஷீயஸ்வ' என்று சொல்லி ருத்விக்குகள் பக்ஷிப்பதுபோல், மேற்படி அன்னபூதங்களான

கர்மிகளை தேவர்கள் பக்ஷிக்கிறார்கள். (அஃதாவது, வேலைக்காரர்களிடம் யஜமானர்கள் வேலைவாங்குவதுபோல் தேவர்கள் இந்தக் கர்மிகளிடத்தில் வேலைவாங்குகிறார்கள்; அஃதாவது, அவர் அவர்களின் கர்மாவிற்குத் தக்க பலனைக் கொடுத்து அதனை அநுபவிக்கும்படி செய்கிறார்கள்.) அந்த இடத்தில் கர்மா தொலைந்த பிறகு ஆகாசத்தை யடைகிறார்கள். (எப்படியென்றால்—முன் சொல்லியபடி த்யுலோகாக்நியில் ஹோமம் செய்யப்பட்ட சிரத்தா வென்று பெயருள்ள அப்புக்கள் ஸோமாகாரமாகப் பரிணமப் பட்டு கர்மிகளுக்குக் கர்மபலனை அநுபவிக்கும்பொருட்டு, அம்மய மான சரீரத்தை உண்டாக்குகின்றன; அப்படிப்பட்ட அப்புக்கள், கர்மாவுடன் கூடிய ஜீவர்கள், கர்மா க்ஷயித்தபிறகு வெயிலைக் கண்ட பனிக்கட்டிபோல் உருகி ஸூக்ஷ்ம ஆகாச பூதங்களாக ஆகிவிடுகின்றன.) ஆகாசத்தினின்றும் வாயுவை யடைகின்றன; அதினின்றும் மழையை யடைகின்றன (மழையாக ஆகின்றன); அவைகள் பூமியில் விழுகின்றன; பூமியிலிருந்து நெல்முதலிய அன்னமாக உத்பத்தியாகின்றன; அந்த அன்னத்தைப் புருஷன் சாப்பிடுகிறான்; அன்னம் ரேதஸ் ஆகிறது; அந்த ரேதஸ் ஸ்திரீயிடம் விடப்பட்டு, கர்ப்பமாகி, அதினின்றும் மறுபடியும் உண்டாகிறார்கள். இவ்விதம் உண்டாகி மறுபடி லோகங்களை யடையும்பொருட்டுக் கர்மாக்களைச் செய்கிறார்கள். பிறகு, இறந்து தூமாதி மார்கத்தால் மறுபடி சந்திரலோகத்தை யடைகிறார்கள்; இப்படி கிணற்றுச்சகடைபோல் போக்குவரத்தாகச் சுற்றிக் கொண்டிருக்கிறார்கள். (உத்தரமார்க்கத்தை யடைய, அல்லது உடன் முக்தியை யடைவதற்குப் பிரம்மத்தை யறியாமலிருக்கிற பரியந்தம் இந்தப்பிரகாரம் சுற்றிக்கொண்டிருக்கிறார்கள்.)

(உத்தரமார்க்கத்திற்கு வேண்டிய ஞானம், தக்ஷிணமார்க்கத்துக்கு வேண்டிய கர்மா, இவ்விரண்டையும் அநுஷ்டிக்காதவர்களுக்கு என்ன கதி யெனில்) பூச்சி, புழு, கொசு, பக்ஷி முதலிய ஜன்மாவை யடைகிறார்கள்.

(இந்தப்படி இந்த ஸம்ஸாரகதியானது நிரம்பக் கஷ்டமாயிருக்கிறது; ஆதலால் தக்ஷிணோத்தரமார்க்கங்களுக்குப் பிரதிபத்தி ஸாதனங்களான சாஸ்திரீயமான கர்மாவையாவது, ஞானத்தையாவது கூடியமட்டில் அநுஷ்டிக்கவேண்டியது அவச்யமாயிருக்கிறது.)

[இவ்வாறு ஐந்து கேள்விகளுக்கும் உத்தரங்கள் சொல்லப்பட்டன. எவ்வாறெனில்,

முதலாவதற்கு உத்தரம்—ஞானிகளும் கர்மிகளும், அக்நியில் போடப்படும் வரைக்கும் ஒரே மார்க்கமாய்ப் போய், அதிலின்றும் ஞானிகள் உத்தரமார்க்கத்திற்குப் போகவேண்டிய நிமித்தம் அர்ச்சிஸையும், கர்மிகள் தக்ஷிணமார்க்கத்திற்குப்போகும் நிமித்தம் தூமத்தையும் அடைகிறார்கள். இப்படி வழிகள் வித்யாஸப்படுகின்றன.

இரண்டாவது கேள்விக்கு உத்தரம்—கர்மிகள் ஸோமலோகத்தில் பலனை யநுபவித்து, கர்மா க்ஷயித்தபிறகு ஸூக்ஷ்மபூதர்களாக ஆகாசத்தையடைந்து, அதினின்றும் வாயு, விருஷ்டி, அன்னம், ரேதஸ்ஸாகி, மேற்படி ரேதஸ் ஸ்திரீயினிடம் சேர்ந்து கர்ப்பமாகி ஜன்மாவை யடைகிறார்கள்.

மூன்றாவது கேள்விக்கு உத்தரம்—ஞானிகளாகவாவது, கர்மிகளாகவாவது இராமலிருப்பவர்கள், மரித்தபின்னர் கீடம் முதலான ஜந்துக்களின் ஜன்மாவையடைகின்றனராதலால் அந்த லோகம் இறந்துபோனவர்களால் நிரம்பப்படவில்லை.

நான்காவது கேள்விக்கு உத்தரம்—த்யுலோகாக்நியில் ஆஹுதி—1; பர்ஜன்யாக்நியில் ஆஹுதி—1; பூலோகாக்நியில் ஆஹுதி—1; புருஷாக்நியில் ஆஹுதி—1; யோஷாக்நியில் ஆஹுதி—1; ஆக ஐந்து ஆஹுதிகள் செய்யப்பட்ட பிறகு ஜலம் புருஷாகிருதியாகிறது.

ஐந்தாவது கேள்விக்கு உத்தரம்—தேவயானமாகிற உத்தரமார்க்கப் பிரதிபத்தி ஸாதனம்—ஞானத்துடன் கூடிய கர்மா; பித்ருயானமாகிற தக்ஷிண மார்க்க பிரதிபத்தி ஸாதனம்—கேவல சாஸ்திரீய கர்மா.]

---

### ப்ராம்மணம் 3.

(ஞானத்தினுடையவும், கர்மாவினுடையவும் கதி சொல்லப்பட்டது. ஞானம் ஸ்வதந்திரம்; கர்மாவானது தைவ, மானுஷ வித்த இரண்டால் ஆகக்கூடியது. ஆதலால் வித்தம் ஸம்பாதிக்க வேண்டியது. அதை நல்ல வழியில் ஸம்பாதிக்கவேண்டும். அவ்விதம் ஸம்பாதிக்கவேண்டுவதற்காக 'மந்தம்' என்ற கர்மா இப்பொழுது சொல்லப்படப்போகிறது. அந்த கர்மா செய்தால் மஹத்வம், பெரியதனம் ஸித்திக்கும்; அதனால் வித்தமுண்டாகும்.)

1. மஹத்வத்தைக் கருதுபவன் (மேற்படி) மந்த கர்மாவை எவ்விதம் செய்யவேண்டுமெனில்—உத்தராயண சுக்லபக்ஷத்தில், ஒரு புண்ணியதினத்தில் தொடங்கி, அதுமுதல் பன்னிரண்டாம் நாள்வரை 'உபஸத்' விரதமாகவிருந்து, (பால்மட்டும் சாப்பிட்டு), அத்திக்கட்டையால் செய்யப்பட்ட 'கம்ஸம்' அல்லது 'சமஸ்' என்ற யக்ஞ பாத்திரத்தில், கூடியவரை, ஒஷதிகளேயும், பலங்கள் முதலியவைகளேயும் சேகரம் செய்து, சேர்த்து, ஜலத்தில் அலம்பி, பிறகு அக்நியை மூட்டி, அதை தர்ப்பையால் சுற்றி, ஆஜ்யத்தைச் சுத்தப்படுத்தி, புருஷ நக்ஷத்திர தினத்தில் 'மந்தம்' என்கிற ஸர்வௌஷத பலமென்கிற இஷ்டியை (யாகத்தை)ச் செய்யவேண்டும். (அஃதாவது, மேற்படி ஓஷதி பலங்களே, மேற்படி சமஸ் அல்லது கம்ஸ பாத்திரத்தில் நெய், தயிர், பால் இவைகளில் நனேத்து) ஹோமத்தை 'யாவந்தோ' முதலிய மந்திரங்களேச் சொல்லிச் செய்யவேண்டியது. (அந்த மந்திரத்தின் அர்த்தம்—எல்லாக் காமங்களேயும் எனக்குக் கொடுவென்று அக்நியைப் பிரார்த்திக்கலாம்.)

2—3. ஹோமம் செய்யவேண்டிய கிரமம்—அந்த அந்த ஸ்வாஹாக்களேச் சொல்லி ஹோமம் செய்தபிறகு, அந்த ஸ்ருக்கிலுள்ள மிச்சமான நெய் முதலான திரவ்யத்தை மந்தத்தில், (அஃதாவது முன்சொன்ன பாத்ர விசேஷத்தில்) சொட்டவேண்டியது.

4. பிறகு, 'பிரமதஸி' முதலான மந்திரங்களேச் சொல்லி அந்த மந்தத்தைத் தொடவேண்டியது.

5. பிறகு, 'ஆமம்ஸி' முதலான மந்திரங்களேச் சொல்லி அந்த மந்தத்தை உயரத் தூக்கவேண்டியது.

6. பிறகு அதிலிருப்பதை நான்குதடவை ஆசமனம் செய்யவேண்டியது. (சாப்பிடவேண்டிய கிரமம் எப்படியெனில்) காயத்ரீயின் முதல் பாதத்தையும், 'மதுமதீ' மந்திரத்தின் முதல் பாதத்தையும், முதலாவது வ்யாஹ்ருதியையும் சொல்லி முதல் ஆசமனம் செய்யவும். அங்ஙனமே இரண்டாவது அதன் அதன் பாதங்களேச்சொல்லி இரண்டாவது ஆசமனம். அப்படியேஅதன்

அதன் மூன்றுவதைச் சொல்லி மூன்றுவது ஆசமனம். முழு காயத்ரீ, முழு மதுமதீ, முழு வ்யாஹ்ருதிகளைச் சொல்லி நான்காவது ஆசமனம். பிறகு கைகளை அலம்பி, அக்நிக்குப் பின்ஞல், கீழ்ப்புறம் தலையை வைத்துக்கொண்டு படுத்துக்கொள்ளவும். பிறகு காலையில் எழுந்து, 'திசாம்' என்ற மந்திரத்தைச் சொல்லி, ஆதித்ய உபஸ்தானம் செய்யவேண்டியது. பிறகு அக்நியின் பின்புறம் உட்கார்ந்து 'வம்ச' மந்திரத்தை ஜபிக்கவேண்டும்.

7-12. இத்தகைய மந்தத்தை பட்ட கட்டையில் விட்டாலும் அந்தக் கட்டையினின்று கிளைகளும், இலைகளும் கிளம்பும். இவ்விதமென்று உத்தாலகர், வாஜஸனேயருக்கும், இவர் மதுகருக்கும், அவர் சூலருக்கும், அவர் ஜனகருக்கும், அவர் ஸத்யகாமருக்கும், அவர் தன் பல சிஷ்யர்களுக்கும் சொன்னூர்கள். இந்தப்பிரகாரம் குரு சிஷ்யக் கிரமமாகச் சொல்லியிருக்கிறூர்கள். இந்த உபதேசத்தைப் புத்திரனில்லாதவர்களுக்கும், சிஷ்யனில்லாதவர்களுக்கும் சொல்லக்கூடாது.

13. ஸ்ரவம், சமஸம், இத்மம், உபமந்தினி, இந் நான்கும் அத்திக்கட்டையால் செய்யப்பட்டிருக்க வேண்டியன வென்று ஏற்கனவே சொல்லப்பட்டிருக்கிறது. அப்படிப்பட்ட பாத்திரங்களில் நெல், யவம், உளுந்து, திலம், கோதுமை, கொள், மொச்சை முதலிய பத்து தானியங்களை மாவாகச் செய்து, அதைப் பிசைந்து, அதைத் தயிர், தேன், நெய்களில் நனைத்து, இந்த மாவை ஹோமம் செய்யவேண்டியது. (இதற்குப் பலன் முன் சொல்லப்பட்டிருக்கிறது.)

---

## பிராம்மணம் 4.

(ஜன்மா என்றது என்ன? புத்திரன் எவ்விதம் உண்டாகிறுன்? எக்குணங்களுடன் சேர்ந்திருக்கிறுன்? எவ்விதம் உலகத்தில் பிரசித்தனுகிறுன்? இவைகளைப்பற்றி இந்த பிராம்மணத்தில் சொல்லப்படுகிறது.

புத்திர மந்தத்தை இச்சிப்பவன் முதலில் முன் சொல்லிய ஸ்ரீமந்தத்தை, ஸ்ரீயை அபேக்ஷித்த யாகத்தைச் செய்து ருது காலத்தில் பத்னியிடம் சேரவேண்டும்.)

1. சராசரங்களாகிற பூதங்களுக்குள் பிருதிவி ஸாரமாயிருக்கிறது. இதைக்காட்டிலும் ஜலம் ஸாரமாயிருக்கிறது. (ஏனெனில் ஜலத்தில் பிருதிவி கோக்கப்பட்டிருக்கிறது.) ஜலத்தைக்காட்டிலும் ஔஷதிகள் ஸாரமுள்ளவை; இவைகளைக்காட்டிலும் புஷ்பங்கள் ஸாரமுள்ளன; இவைகளைக் காட்டிலும் பலங்கள் ஸாரமுள்ளன; இவைகளைக்காட்டிலும் புருஷன் ஸாரனுனவன். இதைக்காட்டிலும் ரேதஸ் ஸாரமானது. (இந்த ரேதஸுக்குப் பிரதிஷ்டை யென்ன வென்றால்.)

2. இதற்கு பிரதிஷ்டை உண்டாக்குவோம் என்று பிரஜாபதி நினைத்தார். ஸ்திரீயை அவர் ஸ்ருஷ்டித்தார். அவளை அவர் கீழே படுக்கவைத்தார். ஆதலால் நீங்கள் ஸ்திரீகளைக் கீழே படுக்கவையுங்கள். பிறகு, பிரஜாபதி, அந்த ஸ்திரீ வ்யஞ்சனத்தில், ஸோம லதையை இடிக்கிற கல்லுக்கு ஸமானமான தமது பிரஜனனேந்திரியத்தை உள்ளேவிட்டு நிரப்பினார். (ஸம்ஸர்க்கம் செய்தார்.)

3. (இந்த மைதுனகிரியை வாஜபேய யாகத்திற்கு ஸமானம்; எப்படியெனில்.)

அவளுடைய உபஸ்தம்—யாகத்திட்டாணி; மயிர்கள்—தர்ப்பைகள்; தோல்—ஸமித்; விருஷணங்கள்—யாகத்தில் அதிஷ்டான பலகங்கள், ஸ்நாநப்பலகைகள். இந்தப் பிரகாரம் அறிந்து மைதுனகிரியையைச் செய்பவன் வாஜபேயயாகம் செய்தவர்களுடையும் லோகத்திற்குப் போவான்; ஸ்திரீகளின் ஸுகிருதங்களையும் அபஹரித்துக்கொள்ளுவான். இவ்விதம் அறியாமல் மேற்படி கிரியையைச் செய்பவர்களின் ஸுகிருதத்தை ஸ்திரீகள் அபஹரித்துக்கொள்ளுவார்கள்.

4-5. உத்தாலகரும், நாகரும், குமாரஹாரிதரும் இவ்விதமே சொல்லியிருக்கிறார்கள். (எப்படியெனில்) மேற்சொல்லியபடியறியாமல் மைதுனம்செய்கிற மனிதர்கள் இந்திரியங்களற்றவர்களாகவும் ஸுகிருதமில்லாதவர்களாகவும் இவ்வுலகத்தை விட்டுப் போகிறார்கள். (அஃதாவது, அவர்களுக்கு நல்ல கதி கிடையாது.)

(அதிக காமத்தால்) ஜாக்ரத்திலாவது, ஸ்வப்னத்திலாவது (ஸ்திரீ ஸம்போகமன்றி) ரேதஸை நழுவவிடுகிறவர்கள் (என்ன செய்யவேண்டியது, எனில்.)

அதைத் தொட்டு 'யந்மே' என்ற மந்திரத்தைச் சொல்ல வேண்டியது; பிறகு 'புநர்மா' வென்ற மந்திரத்தைச்சொல்லி கட்டை பவித்ரவிரல்களால் அதை யெடுத்து இரண்டு புருவத்திற்கு நடுவில் அல்லது இரண்டு ஸ்தனங்களுக்கு நடுவில் வைத்துக்கொள்ளவேண்டியது.

(முதல் 'யந்மே' மந்திரத்திற்கு பாவம்—என்னிடமிருந்து வெளிப்பட்ட இந்த இந்திரியம், அதற்கு மூலங்களான பிருதிவி, ஓஷதிகள், ஜலம் இவைகளைப்போய்ச்சேரட்டும்; மறுபடியும் என்னை யடையட்டும்; அதை நான் இப்பொழுது கைகளால் எடுக்கிறேன்.

இரண்டாவது 'புநர்மா' என்ற மந்திரத்திற்கு பாவம்—மறுபடியும் இந்திரியமும், தேஜஸும், பாக்கியமும், அக்நியும் என்னை யடையட்டும். (யதாஸ்தானம் போகட்டும்.)

6. ஜலத்தில் தன் சாயையைப் பார்ப்பவன் (அந்த தோஷ நிவர்த்திக்காக) 'மயி தேஜ:' என்ற மந்திரத்தைச் சொல்ல வேண்டியது. ரஜஸ்வலையாயிருக்கிற பத்னீ, ஸ்திரீகளுள் ஸ்ரீமதியாயிருப்பவளிடத்தில் மூன்று ராத்திரிகள் கழித்து புத்ரோத்பத்தி நிமித்தம் பிரவேசிக்கவேண்டும்.

7. காமத்தைத் தீர்க்க அவள் புருஷனுக்கு இடம் கொடாவிடில், ஆபரணம் முதலானவைகளைக் கொடுத்து அவளுக்கு ஞாபகப்படுத்த வேண்டியது. அப்படிச்செய்தும் அவள் இடம் கொடாவிடில், அவளைக் கழியினாலாவது, கையினாலாவது 'அடித்து' அவளிடம் புணரவேண்டும். அவள் யசஸ் இல்லாதவள்; கெட்ட ஸ்திரீ; அப்பொழுது 'இந்திரியேணதே' என்ற மந்திரத்தைச் சொல்லவேண்டியது.

8. அவள் பர்த்தாவின் மனதின்படி நடந்து காமத்திற்கு இடம் கொடுத்தால், அப்பொழுது, 'இந்திரியேண' என்ற மந்திரத்தைச் சொல்லிக்கொண்டு அவளுடன் பிரவேசிக்க வேண்டியது. இரண்டுபேர்களும் யசஸ்விகளாக விருப்பார்கள்.

9. தன்னை அவள் இச்சிக்கிறாள் என்று நினைத்துப் புருஷன் அவளை இச்சித்தால் (பரஸ்பர இச்சையிருந்தால்), அப்பொழுது புருஷன் தன் பிரஜனனேந்திரியத்தைவைத்து, முகத்துடன் முகம் வைத்து, அவளுடைய உபஸ்தத்தை தொட்டு, 'அங்காதங்காத்' என்ற மந்திரத்தை ஜபிக்கவேண்டியது.

10. அவள் கர்ப்பவதி யாகவேண்டா மென்று இச்சிக்கிற புருஷன், அவளிடத்தில் முன்சொன்னபடி செய்து, 'இந்திரியேண தே' என்ற மந்திரத்தைச் சொல்லவேண்டியது. அப்படிச் செய்தால் கர்ப்பவதி யாகமாட்டாள்.

11. கர்ப்பமுள்ளவளாகவேண்டு மென்று இச்சிக்கிற புருஷன், முன்சொல்லியபடி அவளிடத்தில் செய்து 'இந்திரியேண ரேத ஆததாமி' என்ற மந்திரத்தைச் சொல்லவேண்டியது. அப்படிச்செய்தால் கர்ப்பவதியாவாள்.

12. எவனுடைய பத்னிக்கு ஜார புருஷனிருந்து, அவனைச் சொந்த புருஷன் த்வேஷித்தால் அவன் செய்யவேண்டிய தென்ன வென்றால்—சுடாத மண்பாத்திரத்தில் அக்னியை யெடுத்துத் தர்ப்பை முதலியவற்றைத் தலைகீழாகப் போடவேண்டியது. சுளுந்துக் கழிகளையும், தர்ப்பையையும் நெய்யில் நனைத்து அந்த அக்னியில் 'மம ஸமித்தே' என்ற மந்திரத்தைச் சொல்லிஹோமம் செய்யவேண்டியது. அப்படிச் செய்தால் ஜாரபுருஷன் நிரிந்திரியனாகவும், ஸுக்ருத மற்றவனாகவும் இவ்வுலகத்தை விடுவான். இப்படி யறிந்து நடக்கும் பிராம்மணனைப் பரிஹாஸம் செய்யக் கூடாது; அப்படிப் பரிஹாஸம் செய்பவன் அவருக்குச் சத்துரு ஆவான் (அஃதாவது கெடுதலுண்டு).

13. ஒருவனுடைய பத்னீ ரஜஸ்வலையானால் அவள் மூன்று தினங்கள் கம்ஸ பாத்திரத்தில் (மடக்கில்) அன்னம், ஜலம் சாப்பிடவேண்டியது. வஸ்திரத்தைத் தோய்க்காம லிருக்கவேண்டியது. இவளை சூத்திரனாவது, சூத்திரஸ்திரீயாவது தொடக் கூடாது. மூன்று நாள்கள் கழித்த பிறகு ஸ்நானம் செய்து, நெல் குத்தவேண்டியது.

14. ஒருவனுக்கு வெண்ணிறமுள்ளவனையும், ஒரு வேதம் தெரிந்தவனையும் இருக்கிற குமாரன் பிறக்கவேண்டுமென்ற இச்சையிருந்தால், இரண்டுபேர்களும் பால் அன்னம் சமைத்து நெய்யிற் கலந்து சாப்பிடவேண்டியது. இவர்கள் அப்படிப்பட்ட குமாரனைபெறத் தகுந்தவர்கள்.

15. மஞ்சள் வர்ணமுள்ளவனையும், இரண்டு வேதங்கள் தெரிந்தவனையும் இருக்கிற புத்திரனை இச்சித்தால் தயிர் அன்னம் சாப்பிட வேண்டியது.

16. கருப்பு வர்ணமுள்ளவனும், மூன்று வேதங்கள் தெரிந்தவனையுமுள்ள குமாரனை இச்சித்தால் ஜலம் சேர்ந்த அன்னத்தை மேற்கண்டபடி சாப்பிடவேண்டியது.

17. புத்திசாலியான புத்திரியை அபேக்ஷித்தால் எள்ளன்னத்தைச் சாப்பிடவேண்டியது.

18. பண்டிதனைகவும், ஸபைக்கு அர்ஹனைகவும், எல்லா வேதங்களும் தெரிந்தவனைகவுமுள்ள புத்திரனை இச்சித்தால் மாம்ஸத்துடன் சேர்ந்த அன்னத்தைச் சாப்பிடவேண்டும்.

(இதனல் எல்லோரும் மாம்ஸம் சாப்பிடலா மென்பதில்லை; தேசத்திற்குத் தக்கவாறும், காலத்திற்குத் தக்கவாறும், எவர் எவர் சாப்பிடலாமோ அவர்கள்மட்டும் சாப்பிடலாம்; மற்றவர்கள் சாப்பிடக்கூடாது.)

19. பிறகு காலையில், ஏற்கனவே குத்திய அரிசியை ஸ்தாலியில் பாகம்செய்து, அந்த அன்னத்தை 'அக்நயே ஸ்வாஹா' என்ற மந்திரத்தால் ஹோமம் செய்யவேண்டியது. பிறகு மீதி அன்னத்தை தான் சாப்பிட்டு, பத்னிக்கும் கொடுக்க வேண்டியது. பிறகு கையை அலம்பி, உதபாத்திரத்தில் ஜலம் எடுத்து, அந்த ஜலத்தால் அவளை 'உத்திஷ்டாதோ' வென்ற மந்திரத்தால் மூன்றுதரம் ப்ரோக்ஷிக்கவேண்டும்.

20. பிறகு ராத்திரி, முன்சொன்ன பிரஜா இச்சைக்குத் தக்கவாறு க்ஷீரான்னம் முதலியவற்றைச் சாப்பிட்டு, 'மோஹமஸ்மி' என்ற மந்திரத்தைச் சொல்லி அவளிடத்தில் சேர வேண்டியது.

21-22. பிறகு, 'விஜிஹீதாம்' என்ற மந்திரத்தைச்சொல்லி அவளுடைய தொடைகளைப் பிரிக்கவேண்டியது. பிறகு, தன் பிரஜனனேந்திரியத்தை அவளுடையதில் வைத்து, முகத்துடன் முகம்சேர்த்து, மூன்றுதடவை தலையிலிருந்து கீழாக கால்வரையில்தொட்டு, 'விஷ்ணுர்யோநிம்' என்ற மந்திரத்தைச் சொல்லவேண்டியது. (இப்படிச் செய்து ஸங்கமம் செய்தால் கர்ப்பமுண்டாகும்.)

23. பிறகு, பிரஸவகாலத்தில் 'ஸோஷ்யந்தி' என்ற மந்திரத்தைச் சொல்லவேண்டியது. ஸுகப்பிரஸவமாகும்.

24. குழந்தை பிறந்தபிறகு 'ஜாதேஹோத்யஸ்மின்' என்ற மந்திரத்தைச் சொல்லி ஹோமம் செய்து, ஜாதகர்மா செய்யவேண்டியது.

25. பிறகு, மேற்படி சிசுவின் வலதுகாதில், பிதா தன் முகத்தை வைத்து, 'வாக்' என்று மூன்றுதரம் சொல்லவேண்டியது. தயிர், நெய், தேன் மூன்றையும் கலந்து, 'பூஸ்தே ததாமி' என்ற மந்திரத்தைச் சொல்லி அன்னப்பிராசனம் செய்துவைக்கவேண்டியது.

26. பிறகு, மேற்படி சிசுவுக்கு 'உனக்கு வேதம் என்று பெயர்' என்று சொல்லி நாமகரணம் செய்யவேண்டியது. இது ரஹஸ்யப் பெயர். (வெளிப் பெயர் வேறு, ராமன், கிருஷ்ணன் முதலியவை.)

27. பிறகு, சிசுவை 'யஸ்தே ஸ்தன' மந்திரத்தைச் சொல்லி, மாதாவிடம் கொடுத்து, ஸ்தன்யபானம் கொடுக்கச் செய்யவேண்டியது.

28. பிறகு, அந்த மாதாவைத்தொட்டு, 'இலாஸி' என்ற மந்திரத்தைச் சொல்லவேண்டியது.

(இப்படியெல்லாம் செய்தால், பிறந்த புத்திரன், பிதாவைக்காட்டிலும் மேலானவனாக, ஸ்ரீ, யசஸ், பிரம்மவர்ச்சஸ்களுடன் கூடினவனாக ஆவான்.)

---

## பிராம்மணம் 5.

இதில் வேதங்களைச் சொல்லியிருக்கிற ரிஷிகளின் வம்சம் சொல்லப்பட்டிருக்கிறது.

1-4. பௌதிமாஷீ புத்திரன் முதல் மேல் மேல் பிரம்மன் வரையில் வம்சம் சொல்லப்படுகிறது.

ஓம். சாந்தி: சாந்தி: சாந்தி:

---

ப்ருஹதாரண்யகோபநிஷத் முற்றிற்று.

---

# (III) ஸாமவேதம்.

7. கேநோபநிஷத் என்ற தலவகாரோபநிஷத்.

8. சாந்தோக்யோபநிஷத்.

ஓம்

ஓம் தத் ஸத்

ஸாமவேதீய கேநோபநிஷத்

என்ற

# தலவகாரோபநிஷத்

---

## சாந்தி:

ஓம். உபநிஷத்தால் பிரதிபாதிக்கப்பட்ட பிரம்மமானது என்னுடைய அங்கங்கள், வாக், கண், பிராணன், காது, பலம், இந்திரியங்கள் முதலானவைகளைத் திருப்திசெய்யட்டும். பிரம்மம் என்னை நிராதரவு செய்யவேண்டாம். நான் பிரம்மத்தை நிராதரவு செய்யவில்லை. என் விஷயத்தில் அநிராதரவு இருக்கட்டும். ஆத்மா என்னால் அறியப்பட்டவுடன் உபநிஷத்தில் சொல்லப் பட்ட தர்மங்கள் என்னிடம் இருக்கட்டும். ஓம். சாந்தி: சாந்தி: சாந்தி:.

---

## கண்டம் 1.

1. எவரால் இச்சிக்கப்பட்டு ஏவப்பட்டதாய்க் கொண்டு மனஸ் (ஸ்வவிஷயத்தில்) விழுகிறது (பிரவேசிக்கிறது)? முதல் பிராணன் எவரால் ஏவப்பட்டு (தன் வியாபாரத்தைச்) செய்யப் போகிறது? எவரால் இச்சிக்கப்பட்ட வாக்கை (லோகத்திலுள்ளோர்) சொல்லுகிறார்கள்? எந்த தேவன் கண்ணையும், காதையும் (வேலை) ஏவுகிறான்?

2. (எது உன்னால் கேட்கப்பட்டதோ) அது காதுக்குக் காதாயும் (காதுக்குக் கேட்கும் சக்தியைக் கொடுப்பதாயும்), மனஸுக்கு மனஸாயும் (மனஸுக்கு நினைக்கும் சக்தியைக் கொடுப்பதாயும்), வாக்கிற்கு வாக்காயும் (பேசும் சக்தியைக் கொடுப்பதா

யும்), பிராணனுக்குப் பிராணனாயும் (வியாபார சக்தியைக் கொடுப்பதாயும்), நேத்திரத்திற்கு நேத்திரமாயும் (பார்க்கும் சக்தியைக் கொடுப்பதாயும்) இருக்கிறபடியால், (அதை யறிந்து வெருங் காதினிடத்தில் ஆத்மபாவத்தை) விட்டுவிட்ட புத்திமான்கள் (இந்த தேஹத்தைவிட்டு) அமிருதர்களாகிவிடுகிறார்கள்.

3. அந்த பிரம்மத்தினிடம் கண் போகமாட்டாது (கண் அறியாது); வாக்குப் போகாது (வாக்கு எட்டாது); மனஸ் போகாது (மனஸாலும் கண்டுபிடிக்க முடியாது); அது (இன்னதென்று) நமக்குத் தெரியவில்லை. அதை எவ்விதமாய் (சிஷ்யனுக்கு)க் காட்டிக்கொடுப்பதென்றும் தெரியவில்லை. (அஃதாவது, அறியப்பட்டதெல்லாம் விகாரவஸ்து; அது விகாரவஸ்துவாகிய ஜகத் அன்று, வேறு). அஃது அறியப்படாததைக்காட்டிலும் உயர்ந்தது (வேறு); (அறியப்படாதது அவ்யாகிருதமான மாயை; அதற்கு மேற்பட்டது, வேறு). எந்த பூர்வத்திலுள்ள பெரியவர்கள் நமக்காக வசனத்தைச் செவ்வையாகச் சொல்லியிருக்கிறார்களோ, அவர்களுடைய (இப்படிப்பட்ட) வசனத்தைக் கேட்கிறோம். (தாத்பரியம்—பிரம்மம் கரணங்களுக்கு அகோசரமாயிருக்கிறது; வேதம், குரு, உபதேசம் இவைகளுக்குமாத்திரம் கோசரம்; இவைகளால்மட்டும் அறியப்படத் தகுந்தது.)

4. எது வாக்கால் சொல்ல முடியாதோ, எதனால் வாக்கு பிரகாசிக்கிறதோ (பேசும்படியான சக்தியை யடைகிறதோ) அதுதான் பிரம்மமென்று அறி. எதை, இஃது என்று குறிப்பிட்டு (லோகத்தோர்) உபாஸிக்கிறார்களோ அது பிரம்மமல்ல. (அஃதாவது, உபாதியுடன் கூடியிருக்கிற ஸகுண ஈசுவரர்களையும், அநாத்மாவாயிருக்கிற வஸ்துக்களையும் பிரம்மமென்று சொல்லக்கூடாது.)

5. எதை மனஸால் எண்ண முடியாதோ, எதனால் மனஸ் எண்ணப்படுகிறது (விஷயீகரிக்கப்படுகிறது) என்று (பெரியோர்கள்) சொன்னார்களோ அதுதான் பிரம்மம் என்று அறி. (மற்றவை முன்போல்.)

6. எதைக் கண்ணால் பார்க்கமுடியாதோ, எதனால் நேத்திரங்கள் பார்க்கின்றனவோ (விஷயீகரிக்கின்றனவோ) அதுதான் பிரம்மம் என்று அறி.

7. எது காதால் கேட்கப்படமுடியாதோ, எதனால் காது கேட்கின்றதோ (விஷயீகரிக்கின்றதோ) அதுதான் பிரம்மம் என்று அறி.

8. எது கிராணத்தால் முகர்ந்துபார்க்கமுடியாதோ (அறியமுடியாதோ), எதனால் கிராணம் விஷயீகரிக்கின்றதோ (கிராணசக்தியை யடைகிறதோ) அதுதான் பிரம்மம் என்று அறி. (பிராணன் என்பதற்கு கிராணமென்று பாஷ்யத்தில் அர்த்தம் செய்யப்பட்டிருக்கிறது.)

---

## கண்டம் 2.

9. (ஒருகால் நீ) பிரம்மத்தை நன்றாக அறிந்துவிட்டேன் என்று நினைப்பாயாகில், எது இந்த பிரம்மத்தின் ரூபமோ அதை அல்பமாகமாத்திரம் நீ அறிந்திருப்பது நிச்சயம் (அஃதாவது, மனுஷ்ய தேஹத்தில், தஹராகாசத்தில் அத்யாத்ம உபாதி பரிச்சின்னமாயிருக்கிற ஆத்மாவைமட்டும் நீ அறிந்தாய்). எந்த பிரம்ம ரூபம் நிச்சயம் (அஃதாவது, அதிதேவதோபாதி பரிச்சின்னமாயிருக்கிற ஆத்மாவைமட்டும் நீ அறிந்திருக்கிறாய்). (ஆனால், ஸர்வோபாதி ரஹிதமாயிருக்கப்பட்ட அத்வைத பிரம்மத்தை நீ இன்னும் அறியவில்லை.) ஆகையால், உன்னால் அறியப்பட்டதாகச் சொல்லப்படுகிற பிரம்மம் இன்னமும் விசாரிக்கப்படவேண்டியதுதான் (என்று குரு சொன்னார்). (தாத்பரியம்—நான் அதை யறிந்தேன் என்று சொல்வது பிசகு; நீ வேறு என்றும், அறியப்படுகிற வஸ்து வேறு என்றும் ஆகிறது. எல்லாம் ஒன்றுதான் என்ற ஞானம் வரவேண்டும்.)

10. (சிஷ்யன் சொல்லுகிறான்):—பிரம்மத்தை நன்றாக அறிந்தேன் என்று நான் நினைக்கவில்லை நான் அறியவில்லை.

யும்), பிராணனுக்குப் பிராணனாயும் (வியாபார சக்தியைக் கொடுப்பதாயும்), நேத்திரத்திற்கு நேத்திரமாயும் (பார்க்கும் சக்தியைக் கொடுப்பதாயும்) இருக்கிறபடியால், (அதை யறிந்து வெருங் காதினிடத்தில் ஆத்மபாவத்தை) விட்டுவிட்ட புத்திமான்கள் (இந்த தேஹத்தைவிட்டு) அமிருதர்களாகிவிடுகிறார்கள்.

3. அந்த பிரம்மத்தினிடம் கண் போகமாட்டாது (கண் அறியாது); வாக்குப் போகாது (வாக்கு எட்டாது); மனஸ் போகாது (மனஸாலும் கண்டுபிடிக்க முடியாது); அது (இன்னதென்று) நமக்குத் தெரியவில்லை. அதை எவ்விதமாய் (சிஷ்யனுக்கு)க் காட்டிக்கொடுப்பதென்றும் தெரியவில்லை. (அஃதாவது, அறியப்பட்டதெல்லாம் விகாரவஸ்து; அது விகாரவஸ்துவாகிய ஜகத் அன்று, வேறு). அஃது அறியப்படாததைக்காட்டிலும் உயர்ந்தது (வேறு); (அறியப்படாதது அவ்யாகிருதமான மாயை; அதற்கு மேற்பட்டது, வேறு). எந்த பூர்வத்திலுள்ள பெரியவர்கள் நமக்காக வசனத்தைச் செவ்வையாகச் சொல்லியிருக்கிறார்களோ, அவர்களுடைய (இப்படிப்பபட்ட) வசனத்தைக் கேட்கிறோம். (தாத்பரியம்—பிரம்மம் கரணங்களுக்கு அகோசரமாயிருக்கிறது; வேதம், குரு, உபதேசம் இவைகளுக்குமாத்திரம் கோசரம்; இவைகளால்மட்டும் அறியப் படத் தகுந்தது.)

4. எது வாக்கால் சொல்ல முடியாதோ, எதனால் வாக்கு பிரகாசிக்கிறதோ (பேசும்படியான சக்தியை யடைகிறதோ) அதுதான் பிரம்மமென்று அறி. எதை, இஃது என்று குறிப்பிட்டு (லோகத்தோர்) உபாஸிக்கிறார்களோ அது பிரம்மமல்ல. (அஃதாவது, உபாதியுடன் கூடியிருக்கிற ஸகுண ஈசுவரர்களையும், அநாத்மாவாயிருக்கிற வஸ்துக்களையும் பிரம்மமென்று சொல்லக்கூடாது.)

5. எதை மனஸால் எண்ண முடியாதோ, எதனால் மனஸ் எண்ணப்படுகிறது (விஷயீகரிக்கப்படுகிறது) என்று (பெரியோர்கள்) சொன்னார்களோ அதுதான் பிரம்மம் என்று அறி. (மற்றவை முன்போல்.)

6. எதைக் கண்ணல் பார்க்கமுடியாதோ, எதனல் நேத்திரங்கள் பார்க்கின்றனவோ (விஷயீகரிக்கின்றனவோ) அதுதான் பிரம்மம் என்று அறி.

7. எது காதால் கேட்கப்படமுடியாதோ, எதனல் காது கேட்கின்றதோ (விஷயீகரிக்கின்றதோ) அதுதான் பிரம்மம் என்று அறி.

8. எது கிராணத்தால் முகர்ந்துபார்க்கமுடியாதோ (அறியமுடியாதோ), எதனல் கிராணம் விஷயீகரிக்கின்றதோ (கிராண சக்தியை யடைகிறதோ) அதுதான் பிரம்மம் என்று அறி. (பிராணன் என்பதற்கு கிராணமென்று பாஷ்யத்தில் அர்த்தம் செய்யப்பட்டிருக்கிறது.)

---

## கண்டம் 2.

9. (ஒருகால் நீ) பிரம்மத்தை நன்முக அறிந்துவிட்டேன் என்று நினைப்பாயாகில், எது இந்த பிரம்மத்தின் ரூபமோ அதை அல்பமாகமாத்திரம் நீ அறிந்திருப்பது நிச்சயம் (அஃதாவது, மனுஷ்ய தேஹத்தில், தஹராகாசத்தில் அத்யாத்ம உபாதி பரிச்சின்னமாயிருக்கிற ஆத்மாவைமட்டும் நீ அறிந்தாய்). எந்த பிரம்மரூபம் நிச்சயம் (அஃதாவது, அதிதேவதோபாதி பரிச்சின்னமாயிருக்கிற ஆத்மாவைமட்டும் நீ அறிந்திருக்கிருய்). (ஆனல், ஸர்வோபாதி ரஹிதமாயிருக்கப்பட்ட அத்வைத பிரம்மத்தை நீ இன்னும் அறியவில்லை.) ஆகையால், உன்னல் அறியப்பட்டதாகச் சொல்லப்படுகிற பிரம்மம் இன்னமும் விசாரிக்கப்படவேண்டியதுதான் (என்று குரு சொன்னர்). (தாத்பரியம்—நான் அதையறிந்தேன் என்று சொல்வது பிசகு; நீ வேறு என்றும், அறியப்படுகிற வஸ்து வேறு என்றும் ஆகிறது. எல்லாம் ஒன்றுதான் என்ற ஞானம் வரவேண்டும்.)

10. (சிஷ்யன் சொல்லுகிறுன்):—பிரம்மத்தை நன்முக அறிந்தேன் என்று நான் நினைக்கவில்லை நான் அறியவில்லை.

என்பதும் இல்லை; அறிந்தேன் என்பதும் இல்லை. எங்களுக்குள் (பிரம்மசாரிகளுக்குள்) யார் அதை 'நோ ; ந வேதேதி வேத ச' என்று என்னுற் சொல்லப்பட்டதை அறிகிருனே அவன் பிரம் மத்தை அறிகிருன்.

11. (இவ்விதம் குரு சிஷ்யர்கள் ஸம்வாதம்செய்ய சுருதி போதிப்பதாவது):—

எவனுல் பிரம்மம் அறியப்படவில்லையோ (அஃது அறியப் படாத வஸ்துவென்று அபிப்பிராயம் கொண்டிருப்பவனுக்கு) அவனுல் அஃது அறியப்பட்டது. எவனுல் அறியப்பட்டதோ (தன்னுல் அறியப்பட்டதென்ற அபிப்பிராயத்தை யுடையவனே) அவன் அதை யறியாதவன். பிரம்மம் அறிந்தவர்களால் அறியப் படாததாயும் அறியாதவர்களால் அறியப்பட்டதாயும் இருக் கிறது. (அஃதாவது, அறிந்தவர்கள் பிரம்மத்தை இந்திரியங் களுக்கு அகோசரமாயிருக்கிற அகண்ட ஸ்வரூபமென்றும், அறி யாதவர்கள் இந்திரியங்களுக்கு கோசரமாயிருக்கிற கண்ட ஸ்வ ரூபமென்றும் நினைக்கிருர்கள். இவ்விடத்தில், அறியாதவர்கள் என்முல் சுத்த மூடஜனங்கள் என்ற அர்த்தமன்று ; கொஞ்சம் ஞானமுடையவர்கள் என்பது பொருள்.)

12. பிரம்மம் ஒவ்வொரு போதத்திலும் அறியப்பட்ட வஸ்து வென்பது அபிப்பிராயம். (போதம் என்முல் விசுவாஸம், நம்பிக்கை ; எதை எதை அதுவாகவிருக்கிறதென்று விசுவாஸம், வைக்கிருேமோ அவ்வெல்லாவற்றிலேயும் அவர் விளங்குகிருர். ஸர்வ வியாபியாயும், விசுவாஸத்தால் அறியப்படத் தகுந்தவராயு மிருக்கிருர்.)

(இதனுல் என்ன? இப்படியறிவதால் என்ன பிரயோஜனம்?) மோக்ஷத்தை யடைகிருன். ஆத்மாவினுல் (தன் ஸ்வரூபத்தால்) மோக்ஷத்தை யடையும்படியான ஸாமர்த்தியத்தை யடைகிருன். (ஆத்ம விஷயமாயிருக்கிற) வித்யையால் மோக்ஷத்தை யடை கிருன்.

13. (ஒருவன்) இவ்விடத்தில் (இந்த மனுஷ்ய ஜன்மா வில்) பிரம்மத்தை மேற்கண்டபடி அறிந்தால் (அவனுக்கு) ஸத்யம் (அவிநாசம் ஸத்பாவம்) இருக்கிறது. அறியாவிடில் பெரிய

நஷ்டம் (உண்டாகிறது). புத்திமான்கள் ஒவ்வொரு பூதத்தினிடமும் பிரம்மத்தை யறிந்து இந்த லோகத்தினின்றும் திரும்பி அமிருதர்களாகிவிடுகிறார்கள்.

---

## கண்டம் 3.

14. பிரம்மமே தேவர்களின்பொருட்டு (தேவாஸுர யுத்தத்தில்) ஜயத்தை யடைந்தது. அந்த பிரம்மத்தின் ஜயவிஷயத்தில் தேவர்கள் பெருமைகொண்டு, "இந்த ஜயம் நம்முடையது, இந்த மஹிமை நம்முடையது" என்று பார்த்துக்கொண்டார்கள் (நினைத்துக்கொண்டாாகள்.)

15. இவர்களின் இக் கருத்தை பிரம்மம் அறிந்து, அவர்களின் (ஒரு யக்ஷரூபமாக) எதிரில் வந்தது. அதை அத் தேவர்கள் அறியவில்லை. இஃது என்ன? யக்ஷஸா? (என்று ஸம்சயப் பட்டார்கள்.)

16. அவர்கள் அக்நியைப்பார்த்துச் சொன்னதாவது:— 'ஹே! ஜாதவேதஸ்! இந்த யக்ஷஸ் இது வென்று அறி'. 'அப்படியே ஆகட்டும்' என்று அக்நி சொன்னார்.

17. (அக்நி) யக்ஷஸின் ஸமீபத்திற் சென்றார். 'நீ யார்?' என்று இவரை யக்ஷஸ் கேட்டது. 'நான் அக்நி, நான் ஜாதவேதஸ்' என்று அக்நி சொன்னார்.

18. 'அப்படிப்பட்ட உன்னிடம் என்ன ஸாமர்த்யம் இருக்கிறது?' என்று யக்ஷஸ் கேட்டது. 'பூமியில் எவை எவை இருக்கின்றனவோ அவை யெல்லாவற்றையும் எரித்துப்போடுவேன்' என்று அக்நி சொன்னார்.

19. 'இதை எரித்துப்போடு' என்று, யக்ஷஸ் ஒரு த்ருணத்தை யெடுத்து, (அக்நியின்) முன்னால் போட்டது. அக்நி முழுவேகத்துடன் அந்த தருணத்தில் பிரவேசித்தார். அதை எரிக்க முடியவில்லை. அதனிடமிருந்து திரும்பி, தேவர்களிடம் சென்று, 'இந்த யக்ஷஸ் இது வென்று அறியமுடியவில்லை' என்று அக்நி சொன்னார்.

20-23. (மேலே கண்டதுபோல் வாயுதேவன் சென்று யக்ஷஸை அறியமுடியவில்லை யென்று, அக்நி ஸங்கதிபோல், சொன்னார்.)

24. பிறகு, தேவர்கள் இந்திரனைப் பார்த்து, 'ஹே! மகவானே! இந்த யக்ஷஸ் இது வென்று நீ அறி' என்று சொன்னார்கள். அப்படியே ஆகட்டும் என்று இந்திரன் சொல்லி, அதற்குச் சமீபத்திற் சென்றார். உடனே (யக்ஷஸ்) மறைந்துவிட்டது.

25. அவர் அந்த ஆகாசத்தில் (யக்ஷஸ் மறைந்துபோன ஆகாசத்தில்) வெகு சோபையுள்ளவளாயும், உமையாயும், ஹிமவானுடைய புத்ரீயாயும், ஸ்திரீரூபமாயும் ஆவிர்பவித்திருக்கிறவளிடம் சென்று, அவளை இந்த யக்ஷஸ் என்னவென்று கேட்டார்.

---

## கண்டம் 4.

26. அது பிரம்மமென்றும், அந்த பிரம்மத்தினுடைய ஜயத்தில் (நீங்கள்) மஹிமையை யடைந்திருக்கிறீர்கள் என்றும் அவள் சொன்னாள். இந்த உபதேசத்தால் இந்திரன் அதை பிரம்மமென்று அறிந்தார்.

27. எதனால் அக்நி, வாயு, இந்திரன் இவர்கள் ஸமீபத்திலிருந்த பிரம்மத்தை ஸம்பந்தித்தார்களோ, பிரதான தேவர்களாக அதை பிரம்மமென்று அறிந்தார்களோ, அந்தக் காரணத்தால் இந்த மூன்று தேவர்களும் மற்ற தேவர்களைக்காட்டிலும் உயர்ந்தவர்கள்.

28. எதனால் இந்திரன் ஸமீபத்திலிருந்த பிரம்மத்தை ஸம்பந்தித்தாரோ, பிரதான தேவனாக அதை பிரம்மமென்று அறிந்தாரோ, அக்காரணத்தால் இந்திரன் மற்ற தேவர்களைக்காட்டிலும் உயர்ந்தவர்.

29. பிரம்மத்திற்கு இஃது ஆதேசம் (உபதேசம் அல்லது குறிப்பு); மின்னற் கொடியின் மின்னல் போலவும், கண்ணின் இமைக்கொட்டல் போலவும் (குறிப்பு). இஃது ஆதிதைவதமான உபதேசம். (தாத்பரியம்:—மின்னற்கொடி எப்படி பிரகாசித்து

உடனே மறைந்துபோகிறதோ, கண் எப்படி கொட்டி உடனே திறந்துபோகிறதோ அப்படி அதிசீக்கிர பிரகாச மறைதல்களையுடையது பிரம்மம்; அல்லது, மின்னற்கொடியின் மின்னல் என்பதில் மின்னற்கொடியில்லாமல் மின்னல் இல்லை, மின்னல் இல்லாமல் மின்னற்கொடி இருக்கமாட்டாது; இரண்டும் அபேதம்; வியவஹாரத்திற்குமட்டும் இரண்டாக ஏற்படுத்தப்படுகிறது; அப்படிப்போல், பிரம்மமும் சக்தியும் ஒன்று: இப்படியே கண் கொட்டல் விஷயத்திலும் பார்த்துக்கொள்க.)

30. இனி அத்யாத்ம உபதேசம்; யாதொரு இந்த பிரம்மத்தை மனஸ் விஷயீகரிக்கிறதோ, (அஃதாவது) மனஸால் பிரம்மத்தை (ஒருவன்) மிகவும் ஸ்மரிக்கிறான்; ஸங்கல்பம் (உண்டாகிறது); அதுபோல் இருக்கிறது. (மனஸினுடைய நம்பிக்கையால் பிரம்மம் விசிதமாகிறது; அஃதாவது, பிரம்மம் மனஸினுடைய நினைப்புப்போல் தோன்றுகிறது.)

31. அந்த பிரம்மம் 'தத்வநம்' என்று சொல்லப்படுகிறது. (தஸ்ய-பிராணிஜாதஸ்ய வநம், தத்வநம்; பிராணிக்கூட்டத்தின் வநமாய், பஜனீயமாயிருக்கப்பட்டது. அல்லது, வநம், காடு என்றும் சொல்லலாம்; விருக்ஷங்களின் கூட்டம் காடு; அப்படிப்போல், பிராணிகளின் கூட்டம் பிரம்மம்; விருக்ஷங்களில்லாமல் வநம் என்ற பெயர் வராது; வநம் என்ற பெயர்கொள்ளாமல் விருக்ஷங்கள் சேரா.) தத்வநம் என்று அதை உபாஸிக்கவேண்டியது. எவனொருவன் அவ்விதமாக அதை உபாஸிக்கிறானோ அவனை எல்லாப் பூதங்களும் பிரார்த்திக்கிரார்கள் (பணிவிடை செய்கிறார்கள்).

32. (சிஷ்யன் சொல்லுவதாவது):—ஹே! பகவன்! (எனக்கு) உபநிஷத்தைச் சொல்லுங்கள். (குருவசனம்):—உனக்கு உபநிஷத் (ஏற்கனவே) சொல்லப்பட்டிருக்கிறது. (இன்னமும்) பரமாத்ம ஸம்பந்தமான உபநிஷத்தையே சொல்லுகிறேன்.

33. அந்த உபநிஷத்தின்பொருட்டு (பிரம்மவித்யையின் பொருட்டு) தபஸ் (காய இந்திரிய, மனஸுகளுடைய ஸமா

தானம், அஃதாவது, பிரம்மத்தினிடத்தில் ஏகாக்ரசித்தம்), தமம் (இந்திரிய நிக்கிரஹம்), கர்மா (கர்மாநுஷ்டானம்) முதலியவை உபாயங்கள். வேதங்களும், அவைகளின் அங்கங்களும் (பிரம்ம வித்யையின்) ஆதாரம் (அஃதாவது, வேத சாஸ்திரங்களை அறிந்து கொள்ளவேண்டியது முக்கியம்). ஸத்யம் (பிரம்ம வித்யையின்) இருப்பிடம் (ஆயதனம்). (அஃதாவது, ஸத்யம் எல்லாவற்றைக்காட்டிலும் முக்கியம்.)

34. எவனொருவன் இந்த பிரம்மவித்யையை இவ்விதம் (மேற்சொல்லப்பட்டபிரகாரம்) அறிகிறானோ, அவன் பாபங்களைப் போக்கடித்து அநந்தமாயும், எல்லாவற்றிற்கும் சிரேஷ்டமாயு மிருக்கிற ஸ்வர்க்கலோகத்தில் (பிரம்மத்தினிடத்திலேயே) நிற்கிறான். (மோக்ஷத்தை யடைகிறான்; பிரம்மத்தினிடத்தில் ஸாயுஜ்யத்தை யடைகிறான்).

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:

---

கேநோபநிஷத் முற்றிற்று

---

ஓம்

ஓம் தத் ஸத்

ஸாமவேதிய

# சாந்தோக்யோபநிஷத்

---

## சாந்தி:

ஓம். இது ஸாமவேதத்தின் உபநிஷத்தாதலால் முன் சொல்லிய கேநோபநிஷத்தின் சாந்தியே இதற்கும்.

---

# முதல் பிரபாடகம் (அத்தியாயம்)

---

## கண்டம் 1.

1. உத்கீதம் என்று பெயருள்ள 'ஓம்' என்ற அக்ஷரத்தை உபாஸிக்கவேண்டும்; 'ஓம்' என்று (எங்கும், மிகவும்) கானம் செய்யப்படுகிறபடியால் (உச்சரிக்கப்படுகிறபடியால்) உத்கீதம் என்று சொல்லப்படுகிறது. அதனுடைய விவரம் (சொல்லப் படும்).

2. (சராசரங்களாயிருக்கிற இந்த) பூதங்களுக்குள் பிருதிவி யானது ரஸமாய் (ஸாரமாய், உத்தமமாய், உயர்ந்ததாய்) இருக் கிறது. பிருதிவிக்குள் ஜலம் ரஸமானது. ஜலத்திற்குள் ஓஷதிகள் ரஸமானவை. ஓஷதிகளுக்குள் புருஷன் ரஸமானவன். புருஷ னுக்குள் வாக் ரஸமானது. வாக்கிற்குள் ருக்வேதம் ரஸமானது. ருக்வேதத்திற்குள் ஸாமவேதம் ரஸமானது. ஸாமத்திற்குள் உத்கீதம் (ஓம்காரம்) ரஸமானது.

3. (இப்படி, எட்டாவதாயிருக்கிற எந்த உத்கீதமுண்டோ அது ரஸங்களுளெல்லாம் ரஸமாயிருக்கப்பட்டது. உத்தமமா னது. பிரம்மத்திற்கு இருப்பிடமாயிருக்கப்பட்டது.

4. ருக் எப்படிப்பட்டது; ஸாமா எப்படிப்பட்டது; உத்கீதம் எப்படிப்பட்டது என்பதைப்பற்றி ஆலோசிக்கப் பட்டது.

5. வாக்குத்தான் ருக்; பிராணன்தான் ஸாமா; ஓம் என்ற அக்ஷரந்தான் உத்கீதம். ருக்கிற்கும் ஸாமாவிற்கும் காரணங்களா யிருக்கிற வாக்கும் பிராணனும் இரட்டை (மிதுனம். ஒன்றோடொன்று பிரியாமலிருக்கிறது).

6. இந்த மிதுனம் (இரட்டை) ஓம் என்ற அக்ஷரத்தில் ஸம்பந்தப்பட்டிருக்கிறது. (உலகத்தில்) மிதுனங்கள் ஒன்றுடன் ஒன்று சேரும்பொழுது பரஸ்பரம் இச்சையை எப்படி யடை கின்றனவோ அப்படி (மேற்படி வாக்கு பிராணன் இரண்டும் சேர ஓங்காரம் ஸர்வகாமங்களையும் கொடுக்கும்).

7. உத்கீத அக்ஷரத்தை எந்த வித்வான் இந்தப் பிரகாரம் உபாஸிக்கிறுனே அவன் எல்லா இச்சைகளையு மடைகிறுன்.

8. உலகத்தில் எதற்கும் ஓம் என்று அனுமதி கொடுக்கப் படுவதால் அதற்கு அநுக்ஞா அக்ஷரம் என்று பெயர்; ஸம்ருத்தி (நிறைவு) என்றும் பெயர்; எந்த வித்வான் இந்த அக்ஷரத்தை இவ்விதமாக உபாஸிக்கிறுனே அவனுக்கும் காமங்களை ஸம்ருத்தி யாகக் கொடுப்பதால் (இந்தப் பெயர் வழங்குகிறது).

9. அதனுல் இந்த மூன்று வித்யைகள் இருக்கின்றன. (இந்த ஓம் அக்ஷரத்தின் பூஜ்யார்த்தம்.) (ஸோமயாகத்தில்) ஓம் என்று சொல்லி (தேவர்கள்) கேட்கும்படி செய்கிறது; ஓம் என்று ஸ்தோத்திரம் செய்யப்படுகிறது; ஓம் என்று கானம் செய்யப் படுகிறது. அதன் மஹிமையாலும், ரஸத்தாலும் (இவ்விதம் ஏற் பட்டிருக்கிறது).

10. தெரிந்தவன் தெரியாதவன் இருவர்களும் கர்மாவைச் செய்கிறுர்கள். வித்யை (ஞானம்) நாநாவிதம்; அவித்யை (அக்ஞா நம்) நாநாவிதம்; ஞானத்துடனும், சிரத்தையுடனும், விதிப்படி செய்யப்படுகிற கர்மாவிற்கு அதிக வீர்யமுள்ள பலன் உண்டு; இப்படி இந்த (உத்கீத) அக்ஷரத்தின் விவரமாயிருக்கிறது (அர்த்த மாயிருக்கிறது).

---

கண்டம் 2.

1. தேவர்களும் (பிரகாசமுள்ளவர்கள், இந்திரியங்களின் ஸத்விருத்திகள்), அஸுரர்களும் (தங்கள் பிழைப்பு விஷயத்தில் அதிக ஆஸக்தியுள்ளவர்கள், இந்திரியங்களின் அஸத் விருத்தி கள்) ஒருவரை மற்றொருவர் ஜயிக்கக் கருதி யுத்தம் செய்தார்கள். இருவகையாரும் பிரஜாபதியின் பிள்ளைகள்; (ஆத்மாவினிட மிருந்து உண்டானவர்கள்). தேவர்கள் அஸுரர்களை யடிக்கும் பொருட்டு உத்கீத உபலக்ஷிதமா யிருக்கப்பட்ட யாகாதி கர்மாக் களைக் கைக்கொண்டார்கள்.

2. தேவர்கள் (அஸுரர்களை ஜயிக்கும்பொருட்டு) கிராணேந்திரிய பிராணனை உத்கீத கர்த்தாவாக (உத்கீதத்தால் சொல்லப்படும் ஆத்மாவாக) உபாஸித்தார்கள். அதை அஸுரர்கள் பாபத்தால் அடித்தார்கள். ஆதலால், மேற்படி கிராணேந்திரிய பிராணன் பாபத்தால் அடிபட்டு நல்ல கந்தத்தையும் துர்கந்தத்தையும் முகர்ந்து பார்க்கிறது.

3-6. பிறகு (கிரமமாக) வாக் இந்திரியம், சக்ஷுரிந்திரியம், ச்ரோத்ர இந்திரியம், மன இந்திரியம் இவைகள் மேற்கண்டபடி யடிபட்டு அதற்கு அதற்குக் குறித்த நல்லதையும் கெட்டதையும் யடைந்தன.

7. பிறகு முக்கிய பிராணனை (ஆத்மாவை) உபாஸித்தார்கள். கல்லைக் குடைய எவ்விதம் முடியாதோ அவ்விதம் அதை நிர்ப்பந்திக்கமுடியாமல், அஸுரர்கள் அதனிடம் தாங்களே சிதறிப்போய்விட்டார்கள்.

8. இப்படி முக்கிய பிராணனை யறிந்தவனுக்கு எவன் தீங்கு செய்ய இச்சிக்கிறானோ, எவன் ஹிம்ஸை செய்ய இச்சிக்கிறானோ அவன் அப்படி சிதறிப்போவான் மேற்கூறியபடி யறிந்தவன் கெல்லப்படக் கூடாத கல்லை ஒத்தவன் (அடிபடாதவன்).

9. அந்த முக்கிய பிராணனால் நல்லவாஸனை, கெட்ட வாஸனை இரண்டும் அறியப்படுவதில்லை; அது பாபமற்றது; அஃது எதை உண்ணுகிறதோ எதைக் குடிக்கிறதோ அவைகளால் மற்ற பிராணன்களை ரக்ஷிக்கிறது; இதை மரணகாலத்தில் கிராணாதி இந்திரியங்கள் யடையாமல் வெளிக்கிளம்புகின்றன; வாயைத் திறக்கின்றன.

10. அந்த உத்கீதத்தை 'அங்கிரஸ்' என்ற ரிஷி (தன் பிராணனாகவே) உபாஸித்தார். அதனால் உத்கீதம் 'அங்கிரஸ்' என்றும் சொல்லப்பட்டது. (பிராணன்) அங்கங்களுக்குள் ஸாரமுள்ளதாதலால் (இந்தப் பெயர் கிடைத்தது).

11. அதனால், அந்த உத்கீதத்தை பிருஹஸ்பதியும் அப்படியே உபாஸித்தார். அதனால், அது 'பிருஹஸ்பதி' என்றும் சொல்லப்பட்டது; வாக்குக்கெல்லாம் பதியாதலால்.

12. அதனால், அந்த உத்கீதத்தை ஆயாஸ்யர் என்ற ரிஷியும் உபாஸித்தார்; அதனால், 'ஆயாஸ்யம்' என்றும் சொல்லப்பட்டது, வாயில் நின்றும் உண்டானதால்.

13. அதனால், தல்பருடைய புத்திரராகிய பகர் என்ற ரிஷி அந்த உத்கீதத்தை இப்படிப்பட்டதென்று அறிந்தார்; அவ்விதம் அறிந்து (ஸத்ரயாகத்தில்) நைமிசாரண்ய ரிஷிகளுக்கு உத்காதாவாக விருந்து அவர்களுக்கு இச்சையுள்ளவைகளை யெல்லாம் கானம் செய்தார்.

14. எந்த வித்வான் இப்படி யறிந்து உத்கீதத்தை உபாஸிக்கிறானோ அவன் எல்லாக் காமங்களையும் கானம் செய்பவனாக (அடைபவனாக) ஆகிவிடுவான்; ஆத்மஸம்பந்தமாக (இதுவரையில்) சொல்லப்பட்டது.

---

## கண்டம் 3

1. இனி ஆதிதைவதம் (தைய்வ ஸம்பந்தமாகச் சொல்லப்படும்). எந்த (இதோ காணப்படுகிற) இந்த ஸூரியன் தபிக்கிறாரோ அவரை உத்கீதமாக உபாஸிக்கவேண்டும்; உதயமாகி பிரஜைகளின் நிமித்தம் உயரக்கிளம்பிப்போகிறார்; உதயமாகி இருளையும், அதனால் உண்டாகிற பாபத்தையும் போக்கடிக்கிறார். எவன் இப்படி அறிகிறானோ அவன் (ஜனன மரணாதி) பயத்தையும் (அதற்குக் காரணமாயிருக்கிற அக்ஞானமாகிய) இருளையும் போக்கடிக்கிறான்.

2. இந்த ஸூரியனும் அந்தப் பிராணனும் ஸமானமானவை; இதுவும் உஷ்ணமுள்ளது; அதுவும் உஷ்ணமுள்ளது; அதற்கும் ஸ்வரம் (போகிறது, வெளியே போகிறது) என்று பெயர்; இதற்கும் (ஸூரியனுக்கும்) ஸ்வரம் (போகிறது), ப்ரத்யாஸ்வரம்

(திரும்பிவருகிறது) என்று பெயர் (ஆதலால், குணத்தாலும் பெயராலும் ஸமமாயிருக்கின்றன). ஆதலால் அதையும் இதையும் உத்கீதமாக உபாஸிக்கவேண்டும்.

3. வ்யாநவாயு பிராணனை உத்கீதம் என்று உபாஸிக்கவேண்டும்; எது பிழைத்திருக்கும்படி செய்கிறதோ (ச்வாஸம் மேலே போய்க்கொண்டிருக்கிறதோ) அது பிராணவாயு; எது கீழ்நோக்குகிறதோ அஃது அபாநவாயு; இந்த இரண்டிற்கும் மத்தியில் எது இருக்கிறதோ அது வ்யாநவாயு. எது வ்யாநவாயுவோ, அதுவே வாக்; அந்த வாயு மேல்நோக்காமலும் கீழ்நோக்காமலும் வாக்கை உச்சரிக்கிறது.

4. வாக்கே ருக்; ஆதலால் மேலே போகாமலும் கீழே போகாமலும் ருக்கை உச்சரிக்கிறது. ருக்கே ஸாமா; அப்படியே ஸாமாவை கானம் செய்கிறது. ஸாமாவே உத்கீதம்; அப்படியே உயர்ந்து கானம் செய்கிறது.

5. அக்நியைக் கடைதல், குறிப்பிட்ட எல்லைக்கு ஓடுதல், கெட்டியான தநுஸை வளைத்தல் முதலான வீர்யமுள்ள காரியங்கள் எவையுண்டோ அவைகளையெல்லாம் (வ்யாநவாயு) மேலேபோகாமலும் கீழேபோகாமலும் (ச்வாஸநிரோதத்தால்) செய்கிறது. ஆதலால் வ்யாநத்தை உத்கீதமாக உபாஸிக்கவேண்டும்.

6. மேலும், உத்கீதசப்தத்தின் ஒவ்வோர் அக்ஷரத்தையும் உத்கீதமாக உபாஸிக்கவேண்டும். 'உத்' என்றால் பிராணன்; பிராணனால் அன்றோ உயரக்கிளம்புகிறது. 'கீ' என்றால் வாக்கு; வாக்கு 'கீ:' என்று சொல்லப்படுகிறது. 'தம்' என்றது அன்னம்; அன்னத்தில் அன்றோ இந்த ஜகத்தெல்லாம் நிலைத்திருக்கிறது.

7. 'உத்' ஆகாசம் (உயரவிருப்பதால்); 'கீ' அந்தரிக்ஷம் (உலகங்களை யடக்கி வைத்துக்கொண்டிருப்பதால்); 'தம்' பிருதிவி (பிராணிகளுடைய ஸ்தானமானதால்).

'உத்' ஸூரியன் (உயரவிருப்பதால்); 'கீ' வாயு (அக்நியாதிகளைக் கக்குகிறபடியால்); 'தம்' அக்நி (கர்மாவை வைத்துக்கொண்டிருப்பதால்).

'உத்' ஸாமா (ஸ்வர்க்கத்தை ஸ்துதிப்பதால்); 'கீ' யஜுர் வேதம் (தேவர்களுக்கு ஹவிஸைக் கொடுப்பதால்); 'தம்' ருக் வேதம் (இதில் ஸாமா அடங்கியிருப்பதால்). (இப்படி உபாஸிப் பவனுக்குப் பலன்) எந்த வித்வான் உத்கீத அக்ஷரங்களை உத்கீதம் என்று உபாஸிக்கிறானோ அவனுக்கு வேதத்தால் சொல்லப்பட்ட கர்மாவாலுண்டாகும் பலன் எதுவுண்டோ அந்தப் பலனாகிய பாலைக் கறந்து கொடுக்கிறது. அவன் அன்னமுள்ளவனாயும் அதைப் புஜிக்க வல்லமையுள்ளவனாயு மிருப்பான்.

8. இனி காமத்தினுடைய ஸம்ருத்தி (சொல்லப்படும்). த்யானிக்கத் தகுந்தவைகளை யெல்லாம் உபாஸிக்கவேண்டும். எந்த ஸாமாவால் ஸ்தோத்திரம் செய்ய இச்சிப்பானோ அந்த ஸாமாவைச் சிந்திக்கிறான் (அஃதாவது, அதை த்யானம் செய்வ தால் அதற்குச் சொல்லப்பட்டிருக்கிற பலன்களை யடைகிறான்).

9. எந்த ருக்கில் எந்த ருஷியை, எந்தத் தேவதையை ஸ்தோத்திரம்செய்ய உத்தேசிப்பானோ அந்த ருக்கை, ருஷியை, தேவதையைச் சிந்திக்கிறான்.

10. எந்த சந்தஸால் எந்த ஸ்தோமத்தால் ஸ்தோத்திரம் செய்ய உத்தேசிப்பானோ அந்தச் சந்தஸை, ஸ்தோமத்தைச் சிந்திக்கிறான்.

11. எந்தத் திக்கை ஸ்தோத்திரம் செய்ய இச்சிப்பானோ அந்தத் திக்கை (திக்தேவதையை)ச் சிந்திக்கிறான்.

12. எவன் பிரமாதத்தை யடையாதவனாயும், தியானித்துக் கொண்டும், தன்னுடைய ஆத்மாவையே உள் அடைந்து எந்தக் காமத்தை உத்தேசித்து ஸதோத்திரம் செய்கிறானோ அந்தக் காமம் அவனுக்கு ஸம்ருத்தியாய்க் கிடைக்கும்.

---

### கண்டம் 4.

1. 'ஓம்' என்ற அக்ஷரத்தை உபாஸிக்கவேண்டும்; ஓம் என்று கானம் செய்கிறது. அதன் விவரம் (என்னவென்றால்).

2. தேவர்கள் மிருத்யுவிற்குப் பயந்து வேத வித்யையை (வேதங்களாற் சொல்லப்பட்டிருக்கிற கர்மாக்களை) அடைந்தார்கள் (அநுஷ்டித்தார்கள்). அவர்கள் சந்தஸ்களால் (வேத மந்திரங்களால்) கர்மாக்களைச் செய்து தங்களை மறைத்துக்கொண்டு விட்டபடியால் (தங்கள் ஆத்மாக்கள் இவை யென்று அறியாமல் கர்மாக்களிலே திருஷ்டி வைத்துக்கொண்டிருந்ததால்) வேதங்களுக்கு 'சந்தஸ்' (மறைவு) என்ற பெயர் உண்டாயிற்று.

3. எப்படி மீன் பிடிப்பவன் ஜலத்தில் மீனை (தூண்டிவலை போட்டுத்தான் பிடிக்கவேண்டுமென்று நினைத்து)ப் பார்ப்பானோ அப்படிப்போல் மிருத்யுவானவர் தேவர்களை மூன்று வேதகர்மாக்களிலே (கர்மாக்கள் நஷ்டமாய்ப் போனால்தான் தனக்குள் அகப்படுவார்கள் என்று நினைத்துப்) பார்க்கிறார். (மிருத்யுவின் இக் கருத்தை) அறிந்து தேவர்கள் மேற்படி மூன்று வேதங்களுக்கு மேலாக விருக்கிற 'ஓம்' காரத்தில் பிரவேசித்தார்கள் (அதை உபாஸனை செய்தார்கள்).

4. எப்பொழுது ருக்கை யடைகிறானோ (அத்யயநம்செய்து ஸ்வாதீனப்படுத்திக்கொள்ளுகிறானோ) அப்பொழுது 'ஓம்' என்று அதிஸ்வரம் செய்யவேண்டும் (பலமாக சப்திக்கவேண்டும்). அப்படியே ஸாமாவையும், யஜுஸ்ஸையும் செய்யவேண்டும். எது அக்ஷரமாயும், அமிருதமாயும், அபயமாயு மிருக்கிறதோ அது தான் ஸ்வரம் (ஓம்). அதை யடைந்து தேவர்கள் அமிருதர்களாயும், பயமற்றவர்களாயு மிருக்கிறார்கள்.

5. எந்த வித்வான் இப்படி அக்ஷரமாயும், அமிருதமாயும், அபயமாயுமிருக்கிற ஸ்வரத்தை (ஓம்காரத்தை) உபாஸிக்கிறானோ அவன் தேவர்களைப்போல அமிருதனாய்விடுகிறான்.

---

## கண்டம் 5.

1. உத்கீதம் எதுவோ அதே பிரணவம்; எது பிரணவமோ அதே உத்கீதம்; இந்த (காணப்படுகிற) ஸூர்யனும் உத்கீதம் இவரே பிரணவம்; இவர் 'ஓம்' என்று உச்சரித்துக்கொண்டு போகிறார்.

2. 'இந்த ஸூர்யனை (அவருடைய ரச்மிகளுக்கும் இவருக்கும் பேதமில்லாமல்) நான் உபாஸித்தேன்; அதனல் (நீ) ஒரு பிள்ளை எனக்கு உண்டாயிற்று. ரச்மிகளை நீ பேதமாய் உபாஸி; உனக்கு அநேக புத்திரர்கள் உண்டாவார்கள்' என்று கௌஷீதகி என்ற ரிஷி தன் புத்திரனைப்பார்த்துச் சொன்னர். இப்படி ஆதிதைவதம்.

3. இனி அத்யாத்மம் (சொல்லப்படும்). எந்த முக்கிய பிராணன் உண்டோ அதை உத்கீதமாக உபாஸிக்கவேண்டும். இந்த பிராணன் 'ஓம்' என்று உச்சரித்துக்கொண்டு மேலே கிளம்புகிறது.

4. 'இதை (இந்த முக்ய பிராணனை) (மற்ற பிராணன்களுக்கும் இதற்கும் பேதமன்றி) உபாஸித்தேன்; (நீ) ஒரு புத்திரன் எனக்கு உண்டாயிற்று; (வாகாதி பிராணங்களை) பேதமாய் நீ உபாஸி; உனக்குப் பல பிள்ளைகள் உண்டாவார்கள்'; என்று கௌஷீதகி என்ற ரிஷி தன் புத்திரனைப்பார்த்து சொன்னர்.

5. பிறகு, எது உத்கீதமோ அது பிரணவம்; எது பிரணவமோ அஃது உத்கீதம் என்ற ஏகத்வதர்சனமானது (யாகத்தில்) ஹோதா கர்மாக்களில் பிசகாக உத்கானம் செய்யப்படும் வாக்கைத் திருத்திப்போடுகிறது.

---

## கண்டம் 6.

1. இந்த பிருதிவீ ருக்; அக்நி ஸாமா; ருக்கில் ஸாமா உள்ளேயிருக்கிறது; ஆதலால், ஸாமா ருக்கில் இருப்பதாக கானம் செய்யப்படுகிறது. பிருதிவியே 'ஸா' ('ஸாம' என்ற சப்தத்தில் பாதியாகிய 'ஸா') அக்நி 'அம' (மற்ற பாதியாகிய 'அம்'). அது (இரண்டு பாதிகளும் சேர்ந்தது) 'ஸாம'.

2. மேற்கூறப்பட்டதுபோல் அந்தரிக்ஷம், வாயு விஷயத்தில் இரண்டும் சேர்ந்தது 'ஸாம'.

3. மேற்கூறப்பட்டதுபோல் ஸ்வர்க்கம், ஸூர்யன் இரண்டும் சேர்ந்தது 'ஸாம'.

2. தேவர்கள் மிருத்யுவிற்குப் பயந்து வேத வித்யையை (வேதங்களாற் சொல்லப்பட்டிருக்கிற கர்மாக்களை) அடைந்தார்கள் (அநுஷ்டித்தார்கள்). அவர்கள் சந்தஸ்களால் (வேத மந்திரங்களால்) கர்மாக்களைச் செய்து தங்களை மறைத்துக்கொண்டு விட்டபடியால் (தங்கள் ஆத்மாக்கள் இவை யென்று அறியாமல் கர்மாக்களிலே திருஷ்டி வைத்துக்கொண்டிருந்ததால்) வேதங்களுக்கு 'சந்தஸ்' (மறைவு) என்ற பெயர் உண்டாயிற்று.

3. எப்படி மீன் பிடிப்பவன் ஜலத்தில் மீனை (தூண்டிலை போட்டுத்தான் பிடிக்கவேண்டுமென்று நினைத்து)ப் பார்ப்பானோ அப்படிப்போல் மிருத்யுவானவர் தேவர்களை மூன்று வேதகர்மாக்களிலே (கர்மாக்கள் நஷ்டமாய்ப் போனால்தான் தனக்குள் அகப்படுவார்கள் என்று நினைத்துப்) பார்க்கிறார். (மிருத்யுவின் இக்கருத்தை) அறிந்து தேவர்கள் மேற்படி மூன்று வேதங்களுக்கு மேலாக விருக்கிற 'ஓம்' காரத்தில் பிரவேசித்தார்கள் (அதை உபாஸனை செய்தார்கள்).

4. எப்பொழுது ருக்கை யடைகிறானோ (அத்யயநம்செய்து ஸ்வாதீனப்படுத்திக்கொள்ளுகிறானோ) அப்பொழுது 'ஓம்' என்று அதிஸ்வரம் செய்யவேண்டும் (பலமாக சப்திக்கவேண்டும்). அப்படியே ஸாமாவையும், யஜுஸ்ஸையும் செய்யவேண்டும். எது அக்ஷரமாயும், அமிருதமாயும், அபயமாயு மிருக்கிறதோ அது தான் ஸ்வரம் (ஓம்). அதை யடைந்து தேவர்கள் அமிருதர்களாயும், பயமற்றவர்களாயு மிருக்கிறார்கள்.

5. எந்த வித்வான் இப்படி அக்ஷரமாயும், அமிருதமாயும், அபயமாயுமிருக்கிற ஸ்வரத்தை (ஓம்காரத்தை) உபாஸிக்கிறானோ அவன் தேவர்களைப்போல அமிருதனாய்விடுகிறான்.

---

## கண்டம் 5.

1. உத்கீதம் எதுவோ அதே பிரணவம்; எது பிரணவமோ அதே உத்கீதம்; இந்த (காணப்படுகிற) ஸூர்யனும் உத்கீதம்; இவரே பிரணவம்; இவர் 'ஓம்' என்று உச்சரித்துக்கொண்டு போகிறார்.

2. 'இந்த ஸூர்யனை (அவருடைய ரச்மிகளுக்கும் இவருக்கும் பேதமில்லாமல்) நான் உபாஸித்தேன்; அதனால் (நீ) ஒரு பிள்ளை எனக்கு உண்டாயிற்று. ரச்மிகளை நீ பேதமாய் உபாஸி; உனக்கு அநேக புத்திரர்கள் உண்டாவார்கள்' என்று கௌஷீதகி என்ற ரிஷி தன் புத்திரனைப்பார்த்துச் சொன்னார். இப்படி ஆதிதைவதம்.

3. இனி அத்யாத்மம் (சொல்லப்படும்). எந்த முக்கிய பிராணன் உண்டோ அதை உத்கீதமாக உபாஸிக்கவேண்டும். இந்த பிராணன் 'ஓம்' என்று உச்சரித்துக்கொண்டு மேலே கிளம்புகிறது.

4. 'இதை (இந்த முக்ய பிராணனை) (மற்ற பிராணன்களுக்கும் இதற்கும் பேதமன்றி) உபாஸித்தேன்; (நீ) ஒரு புத்திரன் எனக்கு உண்டாயிற்று; (வாகாதி பிராணங்களை) பேதமாய் நீ உபாஸி; உனக்குப் பல பிள்ளைகள் உண்டாவார்கள்'; என்று கௌஷீதகி என்ற ரிஷி தன் புத்திரனைப்பார்த்து சொன்னார்.

5. பிறகு, எது உத்கீதமோ அது பிரணவம்; எது பிரணவமோ அஃது உத்கீதம் என்ற ஏகத்வதர்சனமானது (யாகத்தில்) ஹோதா கர்மாக்களில் பிசகாக உத்கானம் செய்யப்படும் வாக்கைத் திருத்திப்போடுகிறது.

---

கண்டம் 6.

1. இந்த பிருதிவீ ருக்; அக்நி ஸாமா; ருக்கில் ஸாமா உள்ளேயிருக்கிறது; ஆதலால், ஸாமா ருக்கில் இருப்பதாக கானம் செய்யப்படுகிறது. பிருதிவியே 'ஸா' ('ஸாம' என்ற சப்தத்தில் பாதியாகிய 'ஸா') அக்நி 'அம' (மற்ற பாதியாகிய 'அம்'). அது (இரண்டு பாதிகளும் சேர்ந்தது) 'ஸாம'.

2. மேற்கூறப்பட்டதுபோல் அந்தரிக்ஷம், வாயு விஷயத்தில் இரண்டும் சேர்ந்தது 'ஸாம'.

3. மேற்கூறப்பட்டதுபோல் ஸ்வர்க்கம், ஸூர்யன் இரண்டும் சேர்ந்தது 'ஸாம'.

4. மேற்கூறப்பட்டதுபோல் நக்ஷத்திரம், சந்திரன் இரண்டும் சேர்ந்தது 'ஸாம'.

5. மேற்கூறப்பட்டதுபோல் ஆதித்யனுடைய சுக்ல காந்தி, கிருஷ்ணகாந்தி இரண்டும் சேர்ந்தது 'ஸாம'.

6. இந்த ஆதித்யனுக்குள் ஹிரண்மயமான (ஜ்யோதிர்மயமான) புருஷன் காணப்படுகிறான்; ஜ்யோதிர்மயமான வீசியுள்ளவர்; ஜ்யோதிர்மயமான மயிர் உள்ளவர்; கால் கட்டை விரல் நகத்தின் நுனிமுதற்கொண்டு ஜ்யோதிஸ் உள்ளது.

7. அவருடைய கண்கள் இரண்டும் குரங்கின் ஆஸனத்தையும் சிவந்த தாமரைப் பூவையும் ஒத்தது. அவருக்கு 'உத்' என்று பெயர்? ஸர்வ பாபங்களில் நின்றும் உயரக்கிளம்பிப் போகிறபடியால். எவன் இப்படி அறிகிறானோ அவனும் ஸர்வ பாபங்களில் நின்றும் உயரக்கிளம்பிப் போகிறான்.

8. அவருக்கு ருக்கும் ஸாமாவும் கேஷ்ணங்கள் (பர்வங்கள், கணுக்கள், அவயவங்கள்). அதனால் அவரே உத்கீதம். அதனால் உத்காதா இவரையே கானம் செய்கிறான். இந்த ஆதித்ய மண்டலத்திற்கு மேற்பட்டு எந்த உலகங்களிருக்கின்றனவோ அந்த உலகங்களுடையவும், தேவர்களுடைய இஷ்டங்களுடையவும் ஈசராயிருக்கிறார்; இப்படி ஆதிதைவதம் (சொல்லப்பட்டது).

---

## கண்டம் 7.

1. இனி அத்யாத்மம் (சொல்லப்படும்). (6-வது கண்டம் முதல் ருக்குப்போல்) வாக்கு, பிராணன் விஷயத்தில் இரண்டும் சேர்ந்தது 'ஸாம'.

2. மேலே கூறப்பட்டதுபோல் சக்ஷுஸ், ஆத்மா இரண்டும் சேர்ந்தது 'ஸாம'.

3. மேலே கூறப்பட்டதுபோல், ச்ரோத்ரம், மனஸ் இரண்டும் சேர்ந்தது 'ஸாம'.

4. மேலே கூறப்பட்டதுபோல் அக்ஷியின் (கண்ணின்) சுக்கிலகாந்தி கிருஷ்ணகாந்தி இரண்டும் சேர்ந்தது 'ஸாம'.

5. அக்ஷிக்குள் எந்தப் புருஷன் காணப்படுகிருனே அவனே ருக், ஸாம, உக்தம், யஜுஸ், பிரம்மம்; ஆதித்யனுக்கு எந்த ரூபம், பர்வங்கள், நாமா உளவோ அவைகளே இவனுக்கும் (அக்ஷி புருஷனுக்கும் உளது).

6. அப்படிப்பட்ட இவர் (அக்ஷிபுருஷன்) தனக்கு மேலிருக்கிற உலகங்களுக்கும், மனுஷ்ய இச்சைகளுக்கும் ஈசன். கானம் செய்பவர்கள் இவரையே கானம் செய்கிருர்கள். ஆதலால் அவர்கள் தனமுள்ளவர்கள்.

7. இப்படி எந்த வித்வான் ஸாமாவை கானம் செய்கிருனே அவன் இவ்விரண்டுபெயர்களேயும் (ஆதித்ய புருஷனேயும், அக்ஷிபுருஷனேயும்) கானம் செய்கிருன். அவன் இவரால் (ஆதித்யனுல்) அவருக்கு மேலான உலகங்களேயும், தேவகாமங்களேயும் அடைகிருன்.

8. இவரால் (அக்ஷிபுருஷனுல்) தனக்கு மேலான உலகங்களேயும், மனுஷ்ய காமங்களேயும் அடைகிருன். ஆதலால், உத்காதா யஜமானனேப் பார்த்துச் சொல்லுவதாவது (அடியில் வருமாறு).

9, "உனக்கு என்ன இச்சையிருக்கிறதோ அதைக் கொடுக்கிறேன்". இப்படி எந்த வித்வான் அறிந்து கானம் செய்கிருனே அவன் எல்லாக் காமங்களேயும் அடைகிருன்.

---

## கண்டம் 8.

1. உத்கீத விஷயத்தில் ஸமர்த்தர்கள் மூன்று பெயர்கள் இருந்தார்கள். அவர்கள், (i) சாலாவத்யர் என்ற விலகர்; (ii) சைகிதாயனர் என்ற தால்ப்யர்; (iii) ஜைவலி என்ற பிரவாஹணர். 'நாம் உத்கீத விஷயத்தில் ஸமர்த்தர்களாக விருக்கிறேமே,

அதைப்பற்றி ஸம்வாதம் செய்வோம்' என்று ஒருவருக்கொருவர் சொல்லிக்கொண்டார்கள்.

2. அந்தப்படி சரிதான் என்று எல்லோரும் (ஓர் இடத்தில்) உட்கார்ந்தார்கள். 'பிராம்மணர்களாகிய உங்கள் வசனத்தை நான் கேட்கிறேன், நீங்கள் சொல்லுங்கள்' என்று பிரவாஹணர் மற்ற இருவரையும் பார்த்துச் சொன்னார்.

3. 'நான் உம்மைக் கேள்வி கேட்கிறேன்,' என்று ஷிலகர் தால்ப்யரை நோக்கிச் சொன்னார். (ஷிலகர் கேட்கிறார், தால்ப்யர் பதில் சொல்லுகிறார்).

4. ஸாமாவிற்கு கதி (இருப்பிடம், மூலம், காரணம்) எது? ஸ்வரம் (ஓம்).

ஸ்வரத்திற்கு கதி எது? பிராணன்.

பிராணனுக்கு கதி எது? அன்னம்.

அன்னத்திற்கு கதி எது? ஜலம்.

5. ஜலத்திற்கு கதி எது? ஸ்வர்க்கலோகம்.

ஸ்வர்க்கலோகத்திற்கு கதி எது? ஸ்வர்க்கத்தைத் தாண்டி ஒருவரும் ஸாமாவை நயிப்பிவிக்கிறதில்லை (அதற்குமேல் ஒன்றுமில்லை). ஸாமாவை ஸ்வர்க்கத்தில் ஸ்தாபிப்போம்; ஸாமா ஸ்வர்க்கத்தைப்பற்றி ஸ்தோத்திரம் செய்கிறதன்றோ!

6. அதற்கு ஷிலகர் சொல்லியதாவது:—'ஸாமா பிரதிஷ்டிதமன்று; பிரதிஷ்டிதம் என்று எவன் விபரீதமாய்ச் சொல்லுகிறானோ அவனைப் பார்த்து உன் தலை வெடித்துப்போகும்' என்று சொல்.

7. தால்ப்யர்:—ஹந்த! (கஷ்டம்); இதை உம்மிடமிருந்து அறிந்துகொண்டேன்.

ஷிலகர்:—அறி. (இப்பொழுது இதற்கு பதில் சொல்).

ஸ்வர்க்கலோகத்திற்கு கதி எது? இந்த உலகம். இந்த உலகத்திற்கு கதி எது? இந்த உலகத்திற்குமேல் ஸாமாவை ஒருவரும் நயிப்பிவிக்கவில்லை. (இந்த உலகத்திற்குமேல் ஒன்றும்

இல்லை). இந்தப் பிரதிஷ்டையான உலகத்தில் ஸாமாவை ஸ்தாபிப்போம், ஸாமா பிரதிஷ்டையை ஸ்தோத்திரம் செய்கிறதல்லவோ!

8. இதற்கு பிரவாஹணர் சொல்லுகிறார்:—'அப்படிச் சொல்லாதே! அப்படிச் சொல்லுகிறவனைப் பார்த்து உன் தலை வெடித்துப்போகும்' என்று சொல்.

(தால்ப்யர்):—ஹந்த! (கஷ்டம்) இதை உம்மிடமிருந்து அறிந்துகொண்டேன்.

(பிரவாஹணர்) அறி.

---

## கண்டம் 9.

1. (ஷிலகர் கேள்வி):—இந்த உலகத்திற்கு கதி எது? (பிரவாஹணர் உத்தரம்):—ஆகாசம்; ஆகாசத்திலேயே எல்லாப் பூதங்ககளும் உண்டாகின்றன; லயிக்கின்றன; ஆகாசம் பெரிது; அதே பராயணம் (இருப்பிடம்).

2. இந்த உத்கீதம் பரோவரீயம் (பரமாத்ம ஸம்பன்னம்); அநந்தம்; எவன் இப்படி யறிந்து அதை உபாஸிக்கிறானோ அவனுக்குப் பரோவரீயமான ஜீவனம் உண்டாகிறது; பரோவரீயங்களா யிருக்கிற உலகங்களையும் ஜயிக்கிறான்.

3. இதைப்பற்றி சௌநகர் உதரசாண்டில்யருக்குச் சொல்லி, பிறகு சொன்னதாவது:—'உன்னுடைய பிரஜைகள் எந்தக் காலம்வரையில் இந்த உத்கீதத்தை உபாஸிக்கிறார்களோ அந்தக் காலம்வரையில் அவர்களுக்குப் பரோவரீயமாயிருக்கிற ஜீவனம் இருக்கும்.

4. அப்படியே இந்த உலகத்தில் எவன் உத்கீதத்தை உபாஸிக்கிறானோ அவனுக்குப் பரோவரீயமான ஜீவனமுண்டாகும்.

---

## கண்டம் 10.

1. குருதேசம் இடியினால் நாசமாய்ப் போனபொழுது (அஃதாவது துர்பிக்ஷ காலத்தில்), சாக்ராயணர் என்ற உஷஸ்

தியானவர் (பசியால்) தள்ளாடி நடப்பவராக ஆடிகீ என்ற தன் பத்நியுடன் ஒரு யானைக்காரர்கள் கிராமத்தில் வஸித்தார்.

2. அவர் (அன்னார்த்தம் போய்க்கொண்டிருக்கும்பொழுது) கொள்ளைத் தின்றுகொண்டிருந்த ஒரு யானைக்காரனை (கண்டு) யாசித்தார்; 'எச்சிலாகப் போய்விட்ட இதோவிருக்கிற கொள்களைத்தவிர வேறே யில்லை' என்று அவன் பதில் சொன்னான்.

3. 'அந்தக் கொள்ளையாவது எனக்குக் கொடு' என்று உஷஸ்தி கேட்டார். அவைகளை அவன் கொடுத்தான். குடிக்க ஜலத்தையும் கொடுத்தான். 'அந்த ஜலம் உச்சிஷ்டம், எனக்குத் தேவை யில்லை' என்றார்.

4. 'இந்தக் கொள்ளும் எச்சில்தானே! (அவைகளை மட்டும் சாப்பிடலாமா?' என்று யானைக்காரன்) கேட்டான். 'அவைகளைத் தின்னாவிடில் என் உயிர் போயிருக்கும் (ஆதலால் அப்படிப்பட்ட விஷயத்தில் எச்சில் தோஷமில்லை), எனக்குக் குடிக்க ஜலம் அகப்படும் (இப்பொழுது வேண்டியதில்லை)' என்று உஷஸ்தி சொன்னார்.

5. அந்தக் கொள்ளைச் சாப்பிட்டு மிஞ்சியதை தன் ஸ்திரீக்குக் கொடுத்தார். அப்பொழுது அவளுக்குப் பசிதீர்ந்ததால் புருஷன் கொடுத்த அன்னத்தை (பத்திரப்படுத்தி) வைத்திருந்தாள்.

6. அவர் காலையில் எழுந்து "எனக்குக் கொஞ்சம் அன்னம் அகப்பட்டால், அதைச் சாப்பிட்டு, பலங்கொண்டு கொஞ்சம் பணம் ஸம்பாதிப்பேன். எப்படி யெனில் இதோ ஸமீபத்தில் ராஜா யாகம் செய்கிறார், ருத்விக்காக என்னை வரிப்பார், அதனால் பணம் வரும்" என்று தன் ஸ்திரீக்குச் சொன்னார்.

7. '(நேற்றையதினம் நீங்கள் கொடுத்த) கொள் இருக்கின்றது; அதைத் தின்றுவிட்டு யாகத்திற்குப் போங்கள்' என்று தன் புருஷனுக்கு அந்த ஸ்திரீ சொன்னாள்.

8. அந்தப்படி சாப்பிட்டபிறகு, யாகம் செய்யுமிடத்திற்குப் போய் ஸ்தோத்திரம்செய்யப்போகிற உத்காத்தாக்கள் இருக்கிற

விடத்திற்குப்போய், உட்கார்ந்து, ப்ரஸ்தோதாவைப் பார்த்துச் சொன்னதாவது.

9. எந்த தேவதையைக்குறித்து நீ ஸ்தோத்திரம் செய்கிறாயோ அந்த தேவதையை நீ அறிந்துகொள்ளாமல் ஸ்தோத்திரம் செய்வாயாகில் உன் தலை வெடித்துப்போகும் என்று சொன்னார்.

10. இவ்விதமே உத்காதாவுக்குச் சொன்னார்.

11. இப்படியே ப்ரதிஹர்த்தாவுக்குச் சொன்னார். மூன்று பெயர்களும் கூடி பேசாமல் இருந்துவிட்டார்கள்.

---

## கண்டம் 11.

1. பிறகு, உஷஸ்தியைப்பார்த்து ராஜா 'உங்களைத் தெரிந்து கொள்ள இச்சைப்படுகிறேன்' என்று சொல்ல, 'நான் சாக்ராயணர் என்கிற உஷஸ்தி' என்று இவர் சொன்னார்.

2. 'இந்த ருத்விக்குகளுடன் உங்களையும் தேடினேன்; நீங்கள் அகப்படாததால் அந்யர்களை வரித்தேன்' என்று ராஜா சொன்னான்.

3. '(இப்பொழுது) தாங்களே இந்த எல்லா ருத்விக்குகளுடனிருந்து யாகத்தை நடத்தவேண்டும்' என்று சொன்னான். 'அப்படியே ஆகட்டும், இவர்களும் என் அநுமதிப்படி ஸ்தோத்திரம் செய்துகொண்டிருக்கட்டும்; அவர்களுக்கு எவ்வளவு தனம் கொடுக்கப்போகிறாயோ அவ்வளவு தனம் எனக்கும் கொடுக்கவேண்டும்' என்று ராஜாவுக்கு உஷஸ்தி சொன்னார்.

4. பிறகு இவருக்குச் சமீபத்தில்வந்து ப்ரஸ்தோதா சொன்னதாவது:—'எந்த தேவதையைக் குறித்து ஸ்தோத்திரம் செய்கிறாயோ, அந்த தேவதையை அறியாமலிருந்தால் உன் தலை வெடித்துப்போகும் என்று முன் எனக்குச் சொன்னீர்களே! அந்த தேவதை யார்?' என்று கேட்டான்.

5. 'பிராணன்' என்று சொன்னார். (ஏனெனில்) இந்த எல்லாப் பூதங்களும் (அந்தக் காலத்தில்) பிராணனிலேயே லயிக்

தியானவர் (பசியால்) தள்ளாடி நடப்பவராக ஆடிகீ என்ற தன் பத்நியுடன் ஒரு யானைக்காரர்கள் கிராமத்தில் வஸித்தார்.

2. அவர் (அன்னார்த்தம் போய்க்கொண்டிருக்கும்பொழுது) கொள்ளைத் தின்றுகொண்டிருந்த ஒரு யானைக்காரனை (கண்டு) யாசித்தார்; 'எச்சிலாகப் போய்விட்ட இதோவிருக்கிற கொள்களைத்தவிர வேறே யில்லை' என்று அவன் பதில் சொன்னான்.

3. 'அந்தக் கொள்ளையாவது எனக்குக் கொடு' என்று உஷஸ்தி கேட்டார். அவைகளை அவன் கொடுத்தான். குடிக்க ஜலத்தையும் கொடுத்தான். 'அந்த ஜலம் உச்சிஷ்டம், எனக்குத் தேவை யில்லை' என்றார்.

4. 'இந்தக் கொள்ளும் எச்சில்தானே! (அவைகளை மட்டும் சாப்பிடலாமா?' என்று யானைக்காரன்) கேட்டான். 'அவைகளைத் தின்னாவிடில் என் உயிர் போயிருக்கும் (ஆதலால் அப்படிப்பட்ட விஷயத்தில் எச்சில் தோஷமில்லை), எனக்குக் குடிக்க ஜலம் அகப்படும் (இப்பொழுது வேண்டியதில்லை)' என்று உஷஸ்தி சொன்னார்.

5. அந்தக் கொள்ளைச் சாப்பிட்டு மிஞ்சியதை தன் ஸ்திரீக்குக் கொடுத்தார். அப்பொழுது அவளுக்குப் பசிதீர்ந்ததால் புருஷன் கொடுத்த அன்னத்தை (பத்திரப்படுத்தி) வைத்திருந்தாள்.

6. அவர் காலையில் எழுந்து "எனக்குக் கொஞ்சம் அன்னம் அகப்பட்டால், அதைச் சாப்பிட்டு, பலங்கொண்டு கொஞ்சம் பணம் ஸம்பாதிப்பேன். எப்படி யெனில் இதோ ஸமீபத்தில் ராஜா யாகம் செய்கிறார், ருத்விக்காக என்னை வரிப்பார், அதனால் பணம் வரும்" என்று தன் ஸ்திரீக்குச் சொன்னார்.

7. '(நேற்றையதினம் நீங்கள் கொடுத்த) கொள் இருக்கின்றது; அதைத் தின்றுவிட்டு யாகத்திற்குப் போங்கள்' என்று தன் புருஷனுக்கு அந்த ஸ்திரீ சொன்னாள்.

8. அந்தப்படி சாப்பிட்டபிறகு, யாகம் செய்யுமிடத்திற்குப் போய் ஸ்தோத்திரம்செய்யப்போகிற உத்காத்தாக்கள் இருக்கிற

விடத்திற்குப்போய், உட்கார்ந்து, ப்ரஸ்தோதாவைப் பார்த்துச் சொன்னதாவது.

9. எந்த தேவதையைக்குறித்து நீ ஸ்தோத்திரம் செய்கிறாயோ அந்த தேவதையை நீ அறிந்துகொள்ளாமல் ஸ்தோத்திரம் செய்வாயாகில் உன் தலை வெடித்துப்போகும் என்று சொன்னார்.

10. இவ்விதமே உத்காதாவுக்குச் சொன்னார்.

11. இப்படியே ப்ரதிஹர்த்தாவுக்குச் சொன்னார். மூன்று பெயர்களும் கூடி பேசாமல் இருந்துவிட்டார்கள்.

---

## கண்டம் 11.

1. பிறகு, உஷஸ்தியைப்பார்த்து ராஜா 'உங்களைத் தெரிந்து கொள்ள இச்சைப்படுகிறேன்' என்று சொல்ல, 'நான் சாக்ராயணர் என்கிற உஷஸ்தி' என்று இவர் சொன்னார்.

2. 'இந்த ருத்விக்குகளுடன் உங்களையும் தேடினேன்; நீங்கள் அகப்படாததால் அந்யர்களை வரித்தேன்' என்று ராஜா சொன்னான்.

3. '(இப்பொழுது) தாங்களே இந்த எல்லா ருத்விக்குகளுடனிருந்து யாகத்தை நடத்தவேண்டும்' என்று சொன்னான். 'அப்படியே ஆகட்டும், இவர்களும் என் அனுமதிப்படி ஸ்தோத்திரம் செய்துகொண்டிருக்கட்டும்; அவர்களுக்கு எவ்வளவு தனம் கொடுக்கப்போகிறாயோ அவ்வளவு தனம் எனக்கும் கொடுக்கவேண்டும்' என்று ராஜாவுக்கு உஷஸ்தி சொன்னார்.

4. பிறகு இவருக்குச் சமீபத்தில்வந்து ப்ரஸ்தோதா சொன்னதாவது:—'எந்த தேவதையைக் குறித்து ஸ்தோத்திரம் செய்கிறாயோ, அந்த தேவதையை அறியாமலிருந்தால் உன் தலை வெடித்துப்போகும் என்று முன் எனக்குச் சொன்னீர்களே! அந்த தேவதை யார்?' என்று கேட்டான்.

5. 'பிராணன்' என்று சொன்னார். (ஏனெனில்) இந்த எல்லாப் பூதங்களும் (அந்தக் காலத்தில்) பிராணனிலேயே லயிக்

கின்றன; (உத்பத்திகாலத்தில்) அதனிடமிருந்தே உண்டாகின்றன; இந்த பிராண தேவதையை ஸ்தோத்திரம் சேருகிறது; அதை யறியாமல் ஸ்தோத்திரம் செய்தால் உன் தலை வெடித்துப் போகும் என்று முன் நான் உனக்குச் சொன்னதற்கு (இதுதான் பதில்).

6. பிறகு (ப்ரஸ்தோதா கேட்டதுபோல்) உத்காதா (தனக்குத் தக்கவாறு) எந்த தேவதை யென்று உஷஸ்தியைக் கேட்டான்.

7. 'ஆதித்யன்' என்று சொன்னார். (ஏனெனில்) இந்த எல்லாப் பூதங்களும் உயரவிருக்கிற ஆதித்யனையே கானம் செய்கின்றன. (மற்றவை 5-வது ருக்கில் சொல்லியதுபோல்.)

8. பிறகு, ப்ரதிஹர்த்தா (தனக்குத் தகுந்தபடி) எந்த தேவதை யென்று உஷஸ்தியைக் கேட்டான்.

9. 'அன்னம்' என்று சொன்னார்; (ஏனெனில்) இந்த எல்லாப் பிராணிகளும் அன்னத்தையே பிடித்துக்கொண்டு ஜீவிக்கின்றன. (மற்றவை முன் சொல்லியபடி.)

---

## கண்டம் 12.

1. இனி சௌவ (சுவாஸம்பந்தமான) உத்கீதம் சொல்லப்படும். பகர், தால்ப்யர், க்லாவர், மைத்ரேயர் என்று இந்நான்கு பெயர்களுள்ள ஒரு ருஷி (ஸாமாவை) அத்யயனம் (செய்யும் பொருட்டு) வெளியில் போனார்.

2. அவருக்கு அநுக்கிரஹம் செய்யும்பொருட்டு வேத புருஷன் (அல்லது முக்கிய பிராணன்) மற்ற தேவதைகளை (அல்லது இந்திரியங்களை)த் தன் குட்டிகளாக அழைத்துக்கொண்டு ஒரு வெள்ளைநாய் வேஷம் தரித்துக்கொண்டு, இந்த ரிஷியின் ஸமீபத்தில் வந்தான். அந்தக் குட்டிகள் 'எங்களுக்குப் பசிக்கிறது, அன்னம் கொடு' வென்று மேற்படி வெள்ளைநாயைக் கேட்டன.

3. அவைகளுக்கு மேற்படி நாய் 'காலையில் ஆகட்டும்' என்று பதில் சொல்லிற்று. இதைக் கேட்டு மேற்படி ரிஷி அந்த ஸமயத்தை எதிர்ப்பார்த்திருந்தார்.

4. (அப்படியே காலையில் நாய்கள் ரிஷி முன்பாக வந்தன.) அப்பொழுது அந்தக் குட்டிகள் பஹிஷ்பவமான என்கிற ஸாமாவால் (அன்னத்திற்காக) ஸ்தோத்திரம் செய்யப்போகிறவர்களாக ஒன்றுக்கொன்று மேலேவிழுந்து நக்கி விளையாடிக்கொண்டு, உட்கார்ந்து, 'ஹிம்' என்று சப்தம் செய்தன.

5. (பிறகு இந்த அடியிற்கண்ட ஸாமாவைச் சொல்லின.) 'ஓம்! தின்னப்போகிறேன்! குடிக்கப்போகிறோம்! தேவனும், வருணனும், பிரஜாபதியுமா யிருக்கப்பட்ட ஸூர்யன் அன்னத்தைக் கொண்டுவந்து கொடுக்கட்டும். ஹே! அன்னத்திற்குப் பதியே? அன்னத்தை எங்களுக்குக் கொண்டுவா' என்று. (தாத்பரியம். இந்த ஸாமாவைக் கானம் செய்தால் அன்னம் கிடைக்குமென்ற தாத்பரியத்தை ரிஷிக்குத் தெரியும்படி தன்குட்டிகளைக் கொண்டு மேற்படி வெள்ளை நாயாகிற வேதபுருஷன் உபதேசித்தார்.)

---

## கண்டம் 13.

1. (ஸாமாவில் பிரயோகிக்கபடுகிற ஸ்தோபாக்ஷரங்களுக்கு, அடையாளாக்ஷரங்களுக்கு அர்த்தம் சொல்லப்படுகிறது.)

ஹா உ-லோகம்; ஹா இ--வாயு; அத--சந்திரன்; இஹ--ஆத்மா; ஈ--அக்நி.

2. ஊ--ஸூர்யன்; ஏ-கூப்பிடுகிறது, ஸம்போதனம்; ஔஹோ இ--விச்வேதேவர்கள்; ஹிம்--பிரஜாபதி; ஸ்வரம்--பிராணன்; யா--அன்னம்; வாக்--விராட் அல்லது அன்னம்.

3. ஹூம்-சொல்லப்படாத பதின்மூன்றினுடைய அடையாளம்.

4. எந்த வித்வான் இந்த அர்த்தங்களோடுகூட உபநிஷத்தை யறிகிறானோ அவனுக்கு நல்ல வாக்கு உண்டாகும். அதனால் அவன் அன்னவானாகவும், அன்னத்தைப் புஜிப்பவனாகவு மிருப்பான்.

---

# இரண்டாம் ப்ரபாடகம்

---

## கண்டம் 1.

1. எல்லா ஸாமாக்களுடைய உபாஸனமும் ஸாது (நல்லது); எது ஸாதுவோ அதுவே ஸாமா; எது அஸாதுவோ அதுவே அஸாமா.

2. இவ்விஷயத்தில் லோகத்தில் அடியிற் கண்டபடி சொல்லப்படுகிறது:—இவனை (இந்த ராஜாவை அல்லது ஒரு பிரபுவை) ஸாமாவால் (நல்ல வார்த்தையால், ஸ்தோத்திரத்தால்) அடைந்தான். அஸாமாவால் (அஸாதுவால்) இவனை (இந்த துஷ்டனை) யடைந்தான். (ஸாது சப்தத்திற்கும் ஸாம சப்தத்திற்கும் ஒரே அர்த்தம் என்பது தாத்பர்யம்.)

3. மேலும் உலகத்தில் சொல்லப்படுகிறதாவது :— 'ஸாது எங்களுக்கு பத') (இருக்கட்டும், ஐயோ போகட்டும், நல்லதுதான் எங்களுக்கு வேண்டுமென்று இரக்கத்தால் சொல்லப்படுகிறது). எது ஸாதுவோ அதுவே (ஸாது) இருக்கட்டும். அஸாது (கெட்டது) எங்களுக்கு பத (கஷ்டம், வேண்டாம்). (எது அஸாதுவோ) அஃது (அஸாதுத்தான்) எங்களுக்கு வேண்டாம்'.

4. எந்த வித்வான் 'ஸாது' 'ஸாம' இவ்விரண்டு சப்தங்களையும் ஒன்றாகப் பாவித்து உபாஸிக்கிறானோ அவனுக்கு உடனே நல்ல தர்மங்கள் வந்தடைந்து பணிவிடை செய்யும்.

---

## கண்டம் 2.

1. உலகங்களை ஐந்துவித ஸாமாவாக உபாஸிக்கவேண்டியது; பிருதிவீ-ஹிம்காரம்; அக்நி—ப்ரஸ்தாவம்; அந்தரிக்ஷம் உத்கீதம்; ஸூரியன்—ப்ரதிஹாரம்; ஆகாசம்—நிதநம். இப்படி மேல் நோக்கிப்போகிற உலகங்களை உபாஸிக்கவேண்டியது.

2. அப்படியே தலைகீழாக; அஃதாவது, ஆகாசம்—ஹிம் காரம்; ஸூர்யன்—ப்ரஸ்தாவம்; அந்தரிக்ஷம்—உத்கீதம்; அக்நி—ப்ரதிஹாரம்; பிருதிவீ—நிதநம். இப்படியும் உபாஸிக்கவேண்டியது.

இப்படி உபாஸிப்பவன் ஸமர்த்தனாய் மேற்படி உலகங்களை ஜயிப்பான்.

---

## கண்டம் 3.

1. விருஷ்டியையும் ஐந்துவித ஸாமாவாக உபாஸிக்க வேண்டும். கீழ்காற்று (அஃதாவது மழையைக் கொண்டுவருகிற காற்று)—ஹிங்காரம; மேகம்—ப்ரஸ்தாவம்; வர்ஷம் (தூற்றல்)—உத்கீதம்; மின்னல் இடி—ப்ரதிஹாரம்.

2. மழை நிற்கிறது—நிதநம்; இப்படி உபாஸிப்பவனுக்கு அவனுடைய இச்சைக்குத் தகுந்த பலன்களை வர்ஷிக்கும்.

---

## கண்டம் 4.

1. ஜலத்தை ஐந்துவித ஸாமாவாக உபாஸிக்கவேண்டும். மேகத்திற்குள்ளிருக்கிற ஜலம்—ஹிங்காரம்; மழை விழுகிற ஜலம்—ப்ரஸ்தாவம்; நதிகளின் ஜலம்—உத்கீதம்; நதங்களின் ஜலம்—ப்ரதிஹாரம்; ஸமுத்திர ஜலம்—நிதநம்.

2. இப்படி உபாஸிப்பவனுக்கு ஜலத்திற்குக் குறைவில்லை.

---

## கண்டம் 5.

1. ருதுக்களை ஐந்துவித ஸாமாவாக உபாஸிக்கவேண்டும். வஸந்த—ஹிங்காரம்; க்ரீஷ்ம—ப்ரதிஹாரம்; வர்ஷா—உத்கீதம்; சரத்—ப்ரதிஹாரம் ; ஹேமந்த—நிதநம்.

2. இப்படி உபாஸிப்பவன் ருதுமானாக ஆவான் (ருதுக்கள் அவனுக்கு உதவிசெய்யும்).

---

## கண்டம் 6.

1. யாக பசுக்களை ஐந்துவித ஸாமாவாக உபாஸிக்க வேண்டியது. வெள்ளாடு—ஹிங்காரம்; செம்மறியாடு—ப்ரஸ்தாவம்; பசுமாடு—உத்கீதம்; குதிரை—ப்ரதிஹாரம்; நரன்—நிதனம்.

2. இப்படி உபாஸிப்பவனுக்கு யாகபலன் கிடைக்கும்.

---

### கண்டம் 7.

1. பிராணன்களை (ஞானேந்திரியங்களை) ஐந்துவித ஸாமாவாக, மேல் மேல் ச்லாக்யமாயிருக்கிற அவைகளை உபாஸிக்க வேண்டும். பிராணன் (நாஸிகா)—ஹிங்காரம்; வாக்—ப்ரஸ்தாவம்; சக்ஷுஸ்—உத்கீதம்; ச்ரோத்ரம்—ப்ரதிஹாரம்; மனஸ்—நிதநம்.

2. இப்படி யார் உபாஸிப்பானே அவனுடைய ஜீவனம் மேன்மேல் ச்லாக்யமாகும்; மேலான உலகங்களை ஜயிக்கிறான்.

---

### கண்டம் 8.

1-2. இனி ஸப்தவிதம் (ஏழுவித ஸாமா) சொல்லப்படுகின்றது. வாக்கை ஏழுவித ஸாமாவாக உபாஸிக்கவேண்டும்; எதாகிலும் ஒரு வார்த்தைக்கு விசேஷமாயிருக்கிற ஹூம் என்றது—ஹிங்காரம்; ப்ர—ப்ரஸ்தாவம்; ஆ—ஆதி (ஓம்); உத்—உத்கீதம்; ப்ரதி—ப்ரதிஹாரம்; உப—உபத்ரவம் (என்ற ஒரு ஸாமா); நி—நிதநம்.

3. இப்படி உபாஸிப்பவனுக்கு வாக் உண்டாகும்; அதனால் அன்னவானும், அன்னாதனுமாவான்.

---

### கண்டம் 9.

ஸூர்யனை ஏழுவித ஸாமாவாக உபாஸிக்கவேண்டும்; எப்பொழுதும் ஸமரூபமா யிருப்பதாலும், ஒவ்வொரு பிராணிக்கும் ஸமமாயிருப்பதாலும் அந்த ஸூர்யன் 'ஸாமா' என்று சொல்லப்பட்டது.

2. அவரிடத்தில் இனிச்சொல்லப்படப்போகிற எல்லா பூதங்களும் அநுஸரித்து ஜீவிக்கிறன வென்றறிய வேண்டியது.

3. ஸூர்ய உதயத்திற்குப் பூர்வமுள்ள ரூபம் (அஃதாவது, அருண உதயவேளை)—ஹிங்காரம்; அதை மிருகங்கள் அநுஸரிக்கின்றன அவ்வேளையில் 'ஹிம்' என்று சப்திக்கின்றன (அஃதாவது அந்த வேளையில் எழுந்திருந்து அதன் அதன் வேலையைப் பார்க்கின்றன).

4. முதலில் உதயமாகும் பொழுதுள்ள ரூபம்-ப்ரஸ்தாவம்; அதை மனுஷ்யர்கள் அநுஸரிக்கிறார்கள் (அஃதாவது, அந்த வேளையில் அவரவர் கர்மாக்களைச்செய்ய ஆரம்பிக்கிறார்கள்).

5. கிரணங்கள் பரவுகிறவேளை (அஃதாவது உதயத்திற்குப் பிற்பட்டகாலவேளை) ரூபம்—ஆதி; அதைப் பக்ஷிகள் அநுஸரிக்கின்றன; ஆகாசத்தில் பிடிப்பை விட்டுவிட்டுக் கீழே விழுகின்றன.

6. மத்யாஹ்நரூபம்—உத்கீதம்; அதைத் தேவர்கள் அநுஸரிக்கிறார்கள்; பிரஜாபதியின் புத்திரர்களுக்குள் உத்தமமானவர்கள்; அந்தக் காலத்தில் அவர்கள் ஸஞ்சரிக்கிறார்கள்.

7. மத்யாஹ்நத்திற்கடுத்தவேளை ரூபம்—ப்ரதிஹாரம்; அதைக் கர்ப்பங்கள் (கிரணங்கள்) அநுஸரிக்கின்றன. அவை கீழேயிருந்து மேலே போகின்றன.

8. ஸாயங்காலவேளை ரூபம்—உபத்ரவம்; அதை அரண்யமிருகங்கள் அநுஸரிக்கின்றன; மனிதர்களைப்பார்த்து பயந்து காடு குகைகளிற் போய் ஒளிந்து கொள்ளுகின்றன.

9. அஸ்தமன ரூபம்—நிதநம்; அதைப் பிதிருக்கள் அநுஸரிக்கிறார்கள்; அவர்கள் ஸஞ்சரிக்கிறார்கள். இப்படி உபாஸிப்பவனுக்குப் பலன் அந்த அந்த கிடைக்கும்.

---

## கண்டம் 10.

1. தன்னுடைய அவயவங்களின் எண்ணிக்கையால் அளக்கப் பட்டதும், மிருத்யுவை ஜயிப்பதாயுமிருக்கிற ஸாமாவை உபாஸிக்கவேண்டும். அஃதாவது, ஸப்தவித பக்தி நாமாக்ஷரங்களை மும்மூன்றாக வகுத்து அதை அதை ஒவ்வொரு பிரிவாக உபாஸிப்பது. எப்படியென்றால், 'ஹிம்காரம்' மூன்று அக்ஷரங்கள், ஒரு பங்கு; 'ப்ரஸ்தாவம்' மூன்று அக்ஷரங்கள், இஃது ஒரு பங்கு.

2. 'ஆதி,' இரண்டு அக்ஷரங்கள்; 'ப்ரதிஹாரம்' நான்கு அக்ஷரங்கள்; ஆக ஆறு அக்ஷரங்களில் மும்மூன்றாக இரண்டு பங்குகள்.

3. 'உத்கீதம்' மூன்று அக்ஷரங்கள்; 'உபத்ரவம்' நான்கு அக்ஷரங்கள்; ஆக ஏழு அக்ஷரங்களில் மும்மூன்ருக இரண்டு பங்குகள்போக ஓர் அக்ஷரம் மிச்சமாயிருக்கிறது. அந்த மீதி அக்ஷரத்தை மூன்ருகப் பாவித்து அஃது ஒரு பங்கு.

4. 'நிதநம்' மூன்று அக்ஷரங்கள், ஒரு பங்கு; எல்லாம் மொத்தம் 22 அக்ஷரங்கள்.

5. ஆதித்யன் 21 அக்ஷரமுள்ளது; அவ்விதம் வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. (எப்படி யென்ருல், மாதங்கள் 12; ருதுக்கள் 5; லோகங்கள் 3; ஆதித்யன் 1; ஆக 21.) இந்த ஸாமா 21-க்கு மேல் 22-ஆக ஆகிவிட்டதால், ஸங்கியையால் ஆதித்யனை ஜயித்துவிட்டது. அதுதான் ஸுகம், சோகமற்றது.

6. இப்படி யறிந்து உபாஸிப்பவனுக்குப் பலன், ஆதித்ய ஜயத்திற்குமேலான ஜயத்தை யடைகிருன்.

---

## கண்டம் 11.

1. மனஸ்—ஹிங்காரம்; வாக்—ப்ரஸ்தாவம்; சக்ஷுஸ்—உத்கீதம்; ச்ரோத்ரம்—ப்ரதிஹாரம்; பிராணன்—நிதநம்; இது காயத்ரியம் ஸாமா, பிராணன்களில் கோக்கப்பட்டிருக்கிறது.

2. இப்படி எவன் அறிகிருனே அவன் பிராணனுள்ளவன்; தீர்க்காயுஸ் உள்ளவன்; பிரகாசமுள்ளவன்; பசுக்களுடனும், பிரஜைகளுடனுங்கூட மஹா புருஷனுக விருப்பான்; மஹா கீர்த்தியுள்ளவன்; மஹா மனஸுள்ளவன். இது விரதம் (அநுஷ்டிக்க வேண்டியது, மஹா மனஸுள்ளவனுக இருக்கவேண்டியது).

---

## கண்டம் 12.

1. (அக்நி) கடையப்படுவது—ஹிங்காரம்; புகையுண்டாகும்போது—ப்ரஸ்தாவம்; ஜ்வலிக்கும்போது—உத்கீதம்; தணலாயிருக்கும்போது—ப்ரதிஹாரம்; அணையும்போதும், அணைந்த பிறகும்—நிதநம். இது ரதந்தரஸாமா; அக்நியில் கோக்கப்பட்டிருக்கிறது.

2. பலன் முன்சொல்லப்பட்டிருப்பதுபோல்; அக்நியைப் பின்புறத்தில் வைத்துக்கொண்டு சாப்பிடவும் கூடாது (இது விரதம்); சளி முதலியவற்றை விஸர்ஜனம் செய்யவும் கூடாது; இது விரதம்.

---

## கண்டம் 13.

1. (ஸ்திரீயிடம்) முதலில் ஸங்கேதம் செய்தல்—ஹிங்காரம்; ஞாபகப்படுத்தல்—ப்ரஸ்தாவம்; இருவரும் சேர்ந்து ஒரே சயநத்திற்குப் போதல்—உத்கீதம்; ஸ்திரீக்கு நேர்முகமாக விருந்து (ஸம்பாஷித்தல்)—ப்ரதிஹாரம்; சேர்க்கையால் காலம் கழித்தலும், முடிவையடைதலும்—நிதநம்; இது வாமதேவ்யம் ஸாமா; மிதுனத்தில் கோக்கப்பட்டிருக்கிறது.

2. (பலன்) ஸ்திரீயுள்ளவனாயிருப்பான்; (விரதம்) தானாகப் படுக்கைக்கு வருகிற ஒரு ஸ்திரீயையும் தள்ளக்கூடாது.

---

## கண்டம் 14.

1. (ஸூர்யன்) உதிக்கும்போது—ஹிங்காரம்; உதித்த பிறகு—ப்ரஸதாவம்; மத்யாஹ்நத்தில்—உத்கீதம்; அபராஹ்ணத்தில்—ப்ரதிஹாரம்; அஸ்தமனத்தில்—நிதநம்; இது ப்ருஹத் ஸாமா; ஆதித்யனிடத்தில் கோக்கப்பட்டிருக்கிறது.

2. (பலன் முன்போல்); தபிக்கிற ஸூர்யனை நிந்திக்கக் கூடாது; இது விரதம்.

---

## கண்டம் 15.

1. (முதலில்) ஆகாசத்தில் மிதக்கிற மேகங்கள்—ஹிங்காரம்; ஒன்றாகச் சேர்ந்த மேகம்—ப்ரஸ்தாவம்; மழை—உத்கீதம்; மின்னல் இடி—ப்ரதிஹாரம்; மழை நிற்றல்—நிதநம்; இது வைரூப்ய ஸாமா; மேகங்களில் கோக்கப்பட்டிருக்கிறது.

2. (பலன்) பலவிதமான நல்ல பசுக்களை யடைவான்; மழையை நிந்திக்கக்கூடாது; இது விரதம்.

---

### கண்டம் 16.

1. வஸந்த ருது—ஹிங்காரம்; க்ரீஷ்ம—ப்ரஸ்தாவம்; வர்ஷா—உத்கீதம்; சரத்—ப்ரதிஹாரம்; ஹேமந்த—நிதநம்; இது வைராஜஸாமா; ருதுக்களில் கோக்கப்பட்டிருக்கிறது.

2. (பலன்) நன்றாக விளங்குவான் (மற்றவை முன்போல்); ருதுக்களை நிந்திக்கக்கூடாது; இது விரதம்.

---

### கண்டம் 17.

1. பிருதிவி—ஹிங்காரம்; அந்தரிக்ஷம்—ப்ரஸ்தாவம்; ஸ்வர்க்கம்—உத்கீதம்; திக்குகள்—ப்ரதிஹாரம்; ஸமுத்திரம்—நிதநம்; இது சக்வர்யஸாமம்; லோகங்களில் கோக்கப்பட்டிருக்கிறது.

2. (பலன்) லோகமுள்ளவன் (மற்றவை போல்); உலகங்களை நிந்திக்கக்கூடாது; இது விரதம்.

---

### கண்டம் 18.

1. வெள்ளாடு—ஹிம்காரம்; செம்மறியாடு—ப்ரஸ்தாவம்; பசுமாடு—உத்கீதம்; அச்வம்—ப்ரதிஹாரம்; புருஷன்—நிதநம்; இது ரேவத்யஸாமா; பசுக்களில் கோவை.

2. (பலன்) பசுக்களுள்ளவனாயிருப்பான் (மற்றவை முன்போல்); பசுக்களை நிந்திக்கக்கூடாது; இது விரதம்.

---

### கண்டம் 19.

1. மயிர்—ஹிங்காரம்; தோல்—ப்ரஸ்தாவம்; மாம்ஸம்—உத்கீதம்; எலும்பு—ப்ரதிஹாரம்; மஜ்ஜை (எலும்புக்குள்ளிருக்கிற தாது)—நிதநம்; இது யக்ஞாயக்ஞீய ஸாமா; அங்கங்களில் கோவை.

2. (பலன்) அங்கஹீனனாயிருக்கமாட்டான் (மற்றவை முன்போல்); மாம்ஸத்தை உண்ணக்கூடாது; இது விரதம்.

---

## கண்டம் 20.

அக்நி—ஹிங்காரம்; வாயு—ப்ரஸ்தாவம்; ஸூர்யன்—உத்கீதம்; நக்ஷத்திரங்கள்—ப்ரதிஹாரம்; சந்திரன்—நிதநம்; இது ராஜனம் ஸாமா; தேவதைகளில் கோவை.

2. (பலன்) தேவதைகளுக்கு ஸமான உலகத்தையும், விருத்தியையும், ஸாயுஜ்யத்தையும் யடைவான் (மற்றவை முன் போல்); பிராம்மணனை நிந்திக்கக்கூடாது.

---

## கண்டம் 21.

1. மூன்று வேதங்கள்—ஹிங்காரம்; மூன்று உலகங்கள்—ப்ரஸ்தாவம்; அக்நி, வாயு, ஆதித்யன் மூன்றும்—உத்கீதம்; நக்ஷத்திரங்கள், பக்ஷிகள், கிரணங்கள் மூன்றும்—ப்ரதிஹாரம்; ஸர்ப்பங்கள், கந்தர்வர்கள், பிதிருக்கள் மூவரும்—நிதநம்; இது ஸமுதாய ஸாமா; எல்லாவற்றிலும் கோவை.

(பலன்) எல்லாமாக (ஸர்வேச்வரனாக) இருக்கிறான்.

3. இந்த மும்மூன்று, ஐந்து விதமாகச் சொல்லப்படுகிறது. இதைக்காட்டிலும் உயர்ந்தது வேறில்லை.

4. (பலன்) எல்லாம் தெரிந்தவன்; இவனுக்கு எல்லா திக்குகளும் பலியைக் கொடுக்கின்றன; 'எல்லாம் நானாக விருக்கிறேன்' என்று உபாஸிக்கவேண்டும்; இது விரதம்.

---

## கண்டம் 22.

1. (இதில் ஸாமகானத்திற்கு ஸ்வரபேதம் சொல்லப்படுகிறது; பிரம்மக்ஞானத்திற்குத் தேவையில்லை.)

2. 'தேவர்களுக்கு அமிருதத்வத்தையும், பிதிர்க்களுக்கு ஸ்வதையையும், மனிதர்களுக்கு ஆசையையும், பசுக்களுக்குப் ஜலம் இவைகளையும், யஜமானனுக்கு ஸ்வர்க்கலோகத்தையும், தனக்கு அன்னத்தையும் ஸாதிப்பிவிக்கிறேன்' என்று மனஸால் தியானம் செய்துகொண்டு அப்ரமத்தனாக (ஸாமாவால்) ஸ்தோத்ரம் செய்யவேண்டும்.

3. எல்லா அச் அக்ஷரங்களும் இந்திராத்மாக்கள்; எல்லா ஊஷ்மாக்களும் (ஶ, ஷ, ஸ முதலியவை) பிரஜாபதி ஆத்மாக்கள். எல்லா ஸ்பர்சங்களும் (க முதலான அக்ஷரங்கள்) மிருத்யு ஆத்மாக்கள்; எவன் அச்சுக்களைச் சரியாக உச்சரிக்கவில்லையோ அவனுக்கு இந்திரன் பதில் சொல்லுவார் (கண்டிப்பார்).

ஊஷ்மாவை எவன் சரியாக உச்சரிக்க வில்லையோ அவனை பிரஜாபதி பொடிப்பொடியாக்குவார்; ஸ்பர்சாக்ஷரத்தை எவன் சரியாக உச்சரிக்கவில்லையோ அவனை யமன் சாம்பராக்கி விடுவார்.

5. (மேற்படி அக்ஷரங்களை என்ன என்ன விதமாக உச்சரிக்க வேண்டுமென்று இதிற் சொல்லப்படுகிறது.)

---

## கண்டம் 23.

1-2. தர்ம ஸ்கந்தங்கள் மூன்று (கர்மாவில் பிடிப்புள்ள ஆச்ரமங்கள் மூன்று). யக்ஞயம், வேத அத்யயநம், தானம் இவை சேர்ந்தது ஒன்று (கிருஹஸ்த ஆச்ரமம்); தபஸ் இரண்டாவது (வானப்ரஸ்தாச்ரமமும், ஸந்யாஸாச்ரமும்); எப்பொழுதும் ஆசார்ய குலத்தில் வஸித்துக்கொண்டு இருத்தல் மூன்றாவது (பிரம்மசர்ய ஆச்ரமம்); இவைகளில் அந்த அந்த ஆச்ரமத்தி லிருப்பவர்கள் (அதற்கு அதற்கு உரிய புண்யலோகத்தை யடைகிறார்கள். (ஆனால்) பிரம்மஸம்ஸ்தன் (பிரம்மத்தை யறிந்தவன்) அமிருதத்வத்தை யடைகிறான்.

[இதில், ஸந்யாஸி என்றால் கர்மாநுஷ்டானமுள்ள ஸந்யாஸி; பரிவ்ராட் அல்ல; (எல்லாவற்றையும் விட்டவன் அல்ல), கர்மா எல்லாவற்றையும் விட்டு பிரம்மஸம்ஸ்தனாயிருப்பவனே பரிவ்ராட்; மேற்படி நான்கு ஆச்ரமங்களில் ஒவ்வொன்றி லிருப்பவனும் பிரம்மஸம்ஸ்தனாகலாம்; ஸந்யாஸிதான் ஆகவேண்டுமென்று சொல்லக்கூடாது; ஒவ்வோர் ஆச்ரமத் திலிருப்பவன் எப்பொழுது பிரம்மத்தை யறிந்து கர்மாவை விடுகிறானோ அப்பொழுது அவனுக்கு 'பரிவ்ராட்' என்ற பெயர் தானாகக் கிடைத்து விடுகிறது; எல்லாக் கர்மாவையும் விட்டால்தான் பரிவ்ராட் என்ற பெயர் கிடைக்கும்; வாஸ்தவத்தில் பிரம்மத்தை யறிந்தவன்தான் கர்மாவை விடலாம்; ஸாக்ஷாத்காரம் வராமல் கர்மாவை விடக்கூடாது; அப்படிவிடின்

ப்ரத்யவாய (தோஷம்) உண்டாகும்; ஸாக்ஷாத்காரம் வந்தபிறகு கர்மாவை விட்டால் ப்ரத்யவாயம் இல்லை; கர்மாக்களை விட்டுவிட்டால் பிரம்ம ஸம்ஸ்தனாய் விடலாமென்ற எண்ணத்தின்மேல், அப்படி ஆகாமலிருக்கும் பொழுது கர்மாவை விடுவது பிசகு. இது சங்கரபாஷ்யத்தின் கருத்து.]

3. உலகங்களை உத்தேசித்து அவைகளுக்குள் எது ஸாரம் என்று பிரஜாபதி (விராட் புருஷன், அல்லது காச்யப பிரஜாபதி, அல்லது பிரம்மன்) த்யானித்தார் (தபித்தார்). அவைகளுக்குள் மூன்று வேதங்கள் ஸாரம் என்ற தோற்றமுண்டாயிற்று. அவ் வேதங்களில் எது ஸாரம் என்று மறுபடியும் தியானித்தார்; பூ:, புவ:, ஸுவ: என்ற இம்மூன்று வ்யாஹ்ருதிகள் (பிரம்மத்தின் ஜகதாகார ஸ்வரூபம், அஃதாவது, பூமி, அந்தரிக்ஷம், ஸ்வர்க்கம் இம்மூன்றுக்குள் எல்லா ஜகத்தும் அடக்கம்; வ்யாஹ்ருதி என்றால் எல்லாவற்றையும் இழுத்துப் பிடித்துக்கொண்டிருப்பது) ஸாரமென்று தோற்றம் உண்டாயிற்று.

4. அவைகளுக்குள் எது ஸாரம் என்று மறுபடியும் தியானித்தார். 'ஓம்' என்ற ப்ரணவம் ஸாரம் என்றறிந்தார். (ஓம் என்ற நாதம் பிரம்மத்தின் சரீரம், அஃதாவது அதற்குள் பிரம்மம் ஜ்யோதிர்மயமாய்த் தோன்றுகிறது; அஃதாவது, ஓம் என்ற சக்தி, அதற்குள் பிரம்மம் பிரகாசிக்கிறது.) ஒரு காம்பில் இலைகள் கட்டுப்பட்டிருப்பதுபோல் இந்த ப்ரணவத்தில் எல்லா வாக்குகளும் (பேச்சுக்கள், பாஷைகள்) கட்டுப்பட்டிருக்கின்றன. எல்லாம் ஓம்காரமே.

---

## கண்டம் 24.

1-16. (யாகத்தில் ப்ராதஸ்ஸவநம், மாத்யந்தினஸவநம், ஸாயம்ஸவநம் இவைகளை அக்நி, வாயு, ஆதித்யன் இம்மூன்று தேவர்களின்பொருட்டுக் கொடுப்பதைப்பற்றிய முறை முதலானவை சொல்லப்படுகின்றன. பிரம்மக்ஞானத்திற்கு வேண்டியதில்லை.)

# மூன்றும் ப்ரபாடகம்

---

## கண்டம் 1.

1. இந்த ஆதித்யன் தேவமது (தேவர்களுக்குத் தேன், அமிருதம்); அதற்கு ஸ்வர்க்கலோகம் குறுக்கு மூங்கில் கழி அஃதாவது, தேனடை வைக்கப்பட்டிருக்கிற ஸ்தானம்); அந்த ரிக்ஷலோகம் தேனடை; பூமியிலிருந்து ஸூர்யனால் இழுக்கப் படும் ஜலகணங்களாகிற கிரணங்கள் புத்திரர்களாக விருக்கிறார் கள். (தேனடைக்கு தேனீக்கள்போல் ஹிதர்களாக விருக்கிற வர்கள்.)

2. அவருடைய கிழக்குக் கிரணங்கள் கிழக்குத்தேனடைத் துவாரங்கள்; ருக்குகள்; அடையில் தேன் கொண்டுவந்து வைக் கிற ஈக்கள்; ருக்வேதோக்தமாய்ச் செய்யப்படும் கர்மா தேன் எடுக்கப்படுகிற புஷ்பம்; அந்த யாக கர்மாவிலிருக்கிற நெய், ஸோமம் முதலான ரஸம் புஷ்பத்திலிருக்கிற தேன்ரஸம்.

3. ருக்குகளாகிற தேனீக்கள், யாக கர்மாவாகிற புஷ்பத் தில், ஆஜ்ய ஆஹுதியாகிற தேன்ரஸத்தை யெடுத்து, யாக மாகிற புஷ்பத்தைத் தபிக்கச் செய்கின்றன (முடிக்கின்றன, வாடச் செய்கின்றன); அப்படித் தபிக்கப்பட்ட கர்மாவாகிய புஷ்பத்தில் நின்றும் யசஸ், தேஜஸ், இந்திரிய பலம், வீர்யம், அன்னாத்யம் (அன்னத்தைக் கொடுக்கும் சக்தி) ஆகிற பலனாகிற தேன் உண் டாகிறது.

4. அந்த ரஸமாகிற தேன் சென்று ஆதித்யனைச் சுற்றி ஆச்ரயிக்கிறது (அஃதாவது, ஆதித்யன் தேனாக ஆகிறார்); இந்தத் தேன்ரூபந்தான் அவருடைய சிவப்பு ரூபம்.

---

## கண்டம் 2.

1-2. ஸூர்யனுடைய தெற்குக் கிரணங்களைப்பற்றி, மேற் கண்டபடி, யஜுஸ்ஸுகள் தேனீக்கள்; யஜுர்வேத கர்மா புஷ்பம்; இஃது அவருடைய வெளுப்பு ரூபம்.

---

## கண்டம் 3.

1-3. அவருடைய மேற்குத் திக்குக் கிரணங்களைப்பற்றி மேற்கண்டபடி, ஸாமாக்கள் தேனீக்கள்; ஸாமவேதகர்மா புஷ்பம்; இஃது அவருடைய கறுப்பு ரூபம்.

---

## கண்டம் 4.

1-3. அவருடைய வடக்குக் கிரணங்களைப்பற்றி, மேற்கண்டபடி, அதர்வ அங்கிரஸ தேனீக்கள்; இதிஹாஸ புராணம் புஷ்பம்; இது சுத்த கறுப்பு ரூபம்.

---

## கண்டம் 5.

1-3. அவருடைய ஊர்த்வ கிரணங்களைப்பற்றி, மேற்கண்டபடி, ரஹஸ்யமான ஆதேசங்கள் (வேதாந்த ரஹஸ்யங்கள்) தேனீக்கள்; ஓம் புஷ்பம்; சலித்துக்கொண்டிருக்கிற ஜ்யோதிர்மயரூபம்.

4. இவை (மேற்சொல்லப்பட்ட சிவப்பு ரூபாதி ரஸங்கள்) ரஸங்களுக்கெல்லாம் ரஸங்கள்; தேவர்கள் ரஸங்களாயிருக்கிறார்கள்; அவர்களுக்குள் மேற்சொல்லப்பட்டவை ரஸங்கள். அவ்விதமே அமிருதங்களுக்குள் அமிருதங்கள்.

---

## கண்டம் 6.

1. இவைகளுக்குள் முதலாவது அமிருதத்தை வஸுக்கள், அக்நிமுகமாய் புஜித்து, பிழைத்திருக்கிறார்கள்; தேவர்கள் உண்பதுமில்லை குடிப்பதுமில்லை; அமிருதத்தைப் பார்த்த மாத்திரத்தில் திருப்தியடைகிறார்கள்.

2. அந்த அமிருத ரூபத்தில் பிரவேசிக்கிறார்கள்; அதனால் உத்ஸாஹத்தை யடைகிறார்கள்.

3. மேற்படி அமிருதம் இப்படிப்பட்டது என்று எவன் அறிவானோ அவன் வஸுக்களுடன் ஒன்றாய்ச்சேர்ந்து, அக்நிமுகமாக அந்த அமிருதத்தையே பார்த்துத் திருப்தியடைகிறான். அந்த ரூபத்தையே அடைகிறான்; அதனால் உத்ஸாஹகப்படுகிறான்.

4. அவன் ஆதித்யன் கிழக்கே உத்யமாகி மேற்கே அஸ்தமிக்கிற பரியந்தம் வஸுக்களுடைய ஆதிபத்யமாகிற ஸ்வராஜ்யத்தை யடைகிறான்.

---

### கண்டம் 7.

1-4. இரண்டாவது அமிருதத்தைப்பற்றி (முன்போல்) ருத்ரதேவர்கள்; இந்திரமுகமாய் திருப்தி; ஆதித்யன் கிழக்கே உதயமாகி மேற்கே அஸ்தமிக்கிற பர்யந்தமும், தெற்கே உதயமாகி வடக்கே அஸதமிக்கிற பர்யந்தமும் போக காலம்.

---

### கண்டம் 8.

1-4. மூன்றாவது அமிருதத்தைப்பற்றி (முன்போல்) ஆதித்ய தேவர்கள்; வருணமுகமாய் திருப்தி; ஆதித்யன் தெற்கே உதயமாகி வடக்கே அஸ்தமிக்கிற பர்யந்தமும், மேற்கே உதயமாகி கிழக்கே அஸ்தமிக்கிற பர்யந்தமும் போக காலம்.

---

### கண்டம் 9.

1-4. நான்காவது அமிருதத்தைப்பற்றி (முன்போல்) மருத் தேவர்கள்; ஸோமமுகமாய் திருப்தி; ஆதித்யன் மேற்கே உதயமாகி கிழக்கே அஸ்தமிக்கிற பர்யந்தமும், வடக்கே உதயமாகி தெற்கே அஸ்தமிக்கிற பர்யந்தமும் போக காலம்.

---

### கண்டம் 10.

1-4. ஐந்தாவது அமிருதத்தைப்பற்றி (முன்போல) ஸாத்யா தேவர்கள்; பிரம்மமுகமாய் திருப்தி; ஆதித்யன் வடக்கே உதயமாகித் தெற்கே அஸ்தமிக்கிற பர்யந்தமும், உயர உதயமாகி கீழ் அஸ்தமிக்கிற பர்யந்தமும் போக காலம்.

---

### கண்டம் 11.

1. ஆதித்யன் (முன்சொன்னபடி) மேலே உதயமாகி (பிராணிகளுடைய கர்மபல போகத்தை அதனோடு ஒழித்துவிட்டு)

பிறகு உதயமாவதுமில்லை, அஸ்தமிப்பதுமில்லை, அத்விதீயனாய் நடுவில் இருந்துகொண்டு பிரகாசிக்கிறார். (மேற்படி ஸாத்யர்களுடைய லோகத்திற்குமேல் பிரம்மலோகம்; அதில் உதயாஸ்தமனம் கிடையாது; எப்பொழுதும் பிரகாசம்.) இந்த விஷயத்தில் அடியிற்கண்ட மந்திரம் இருக்கிறது.

2. (அந்த பிரம்மலோகத்தில் இவ்விடத்திற்போல் உதயாஸ்தமனமாகி பிராணிகளுடைய ஆயுளைக் குறையச்செய்யுமா அல்லது எப்படி என்று கேட்ட ஒருவனுக்கு பதில்.)

அவ்விடத்தில் இப்படிப்போல் இல்லை; ஒரு காலமும் உதயாஸ்தமயமில்லை; (பிரதிக்ஞையாய்ச் சொல்லப்படுகிறது); ஹே! தேவர்களே! (நீங்கள் ஸாக்ஷிகளாகவிருந்து கேளுங்கள்) இந்த ஸத்யவசனத்தால் பிரம்மத்தோடு நான் விரோதப்படமாட்டேன் (பிரம்மத்வம் எனக்குக் கிடைக்காமல் போகாது). (என்றச்லோகம்.)

3. இந்த உபநிஷத் ஞானத்தையறிந்த வித்வானுக்கு உதயாஸ்தமயமில்லை; எப்பொழுதும் பிரம்ம ஸ்வரூபம் பிரகாசித்துக் கொண்டிருக்கும் (ஸ்வபிரகாசனாகவே, பிரம்மமாகவே ஆகிறான்).

4. இந்த மது ஞானத்தை ஸாக்ஷாத் பிரம்மன் (ஹிரண்யகர்ப்பர், ஸகுண பிரம்மம்) பிரஜாபதிக்கு (ஸ்ருஷ்டிகர்மாவை வஹித்தவருக்கு)ச் சொன்னார். அவர் மனுவுக்குச் சொன்னார். அவர் இக்ஷ்வாகு முதான பிரஜைகளுக்குச் சொன்னார். உத்தாலகருடைய பிதா தன் ஜ்யேஷ்ட புத்திரனாகிய மேற்படி உத்தாலகருக்குச் சொன்னார்.

5. இந்த பிரம்மவித்யையை ஒருவன் தன் ஜ்யேஷ்ட புத்திரனுக்கு உபதேசிக்கவேண்டும்; அல்லது யோக்யனான சிஷ்யனுக்கு உபதேசிக்கவேண்டும்.

6. மற்றவர்களுக்கு உபதேசிக்கக்கூடாது; இதற்கு விலையில்லை; பூமியை முழுவதும் கொடுத்தாலும் போதாது; அதைக் காட்டிலும் உயர்ந்தது ஒன்றுமில்லை, ஒன்றுமில்லை.

---

### கண்டம் 12.

1. இந்த எல்லா பூதமும் (காணப்படுகிற ஸ்தாவர ஜங்கமாத்மகமாயிருக்கிற ஜகத்) காயத்ரீயாகவே விளங்குகிறது. (எப்படியென்றால்) வாக்குத்தான் காயத்ரீ; இந்த எல்லா பூதமும் வாக்காக விருக்கிறது; வாக்கே இவைகளை யெல்லாம் சப்திக்கிறது (சொல்லுகிறது); ரக்ஷிக்கிறது (ஆதலால் காயத்ரீ என்றபெயர்).

2. அப்படிப்பட்ட இந்த காயத்ரீ இந்த பிருதிவியாகவுமிருக்கிறது; (எப்படியென்றால்) இந்த பிருதிவியில் இந்த எல்லா பூதமும் வைக்கப்பட்டிருக்கிற தல்லவா? இந்த பிருதிவியை விட்டு அப்புறம் போகிறதில்லை.

3. அப்படிப்பட்ட இந்த பிருதிவி இந்தப் புருஷனிடத்திலிருக்கிற சரீரமாக விருக்கிறது; (எப்படியென்றால்) இந்தச் சரீரத்தில் பிராணன்கள் வைக்கப்பட்டிருக்கின்றன; இந்தச் சரீரத்தை விட்டு அப்புறம் போகிறதில்லை.

4. அப்படிப்பட்ட இந்தச் சரீரம் இந்த புருஷனுக்குள்ளிருக்கிற ஹிருதயமா யிருக்கிறது; (எப்படியென்றால்) இந்த ஹிருதயத்தில் பிராணன்கள் வைக்கப்பட்டிருக்கின்றனவன்றோ? இந்த ஹிருதயத்தை விட்டு அப்புறம் போகிறதில்லை.

5. அப்படிப்பட்ட காயத்ரீ நான்கு பாதங்களை உடையது; ஆறுவிதமுள்ளது (வாக், பூதம், பிருதிவி, சரீரம், ஹ்ருதயம், பிராணன்); இப்படி ருக்காலும் சொல்லப்பட்டிருக்கிறது.

6. அப்படிப்பட்ட காயத்ரீயால் சொல்லப்பட்ட புருஷன் மிகவும் பெரியவன்; அவ்வளவு மஹிமையுள்ளது; (எப்படிப் பட்டதென்றால்) அவருடைய ஒருபாதம் (காற்பங்கு) இந்த எல்லா பூதங்களுமாயிருக்கிறது. மற்ற மூன்று பாதங்களும் அவருடைய ஜ்யோதிர்மய அமிருத ஸ்வரூபம்.

7. அவர்தான் பிரம்மமென்று சொல்லப்படுகிறார்; அவர்தான் புருஷனுக்கு வெளிப்பட்ட ஆகாசமாகவு மிருக்கிறார்; அப்பொழுது 'பஹிர்தா புருஷாதாகாச:' என்று சொல்லப்படுகிறது (ஜாக்ரதவஸ்தை).

8. அவர்தான் புருஷனுக்குள்ளிருக்கிற ஆகாசமாயுமிருக்கிறார்; அப்பொழுது 'அந்த: புருஷ ஆகாச:' என்று சொல்லப்படுகிறார் (ஸ்வப்னாவஸ்தை).

9. அவர்தான், ஹிருதயத்துக்குள்ளிருக்கிற ஆகாசமாயுமிருக்கிறார்; அது பூர்ணம் (எங்கும் நிறைந்திருக்கிறது); அப்ரவிருத்தி (ஓர் இடத்திலும் சலிக்கிறதில்லை); (ஸுஷுப்தியவஸ்தை) இப்படி எவன் அறிகிறானோ அவன் பூர்ணமாயும் அப்ர விருத்தியுள்ளதாயுமிருக்கிற மங்களத்தை (பிரம்மத்தை) யடைவான்.

---

## கண்டம் 13.

1. இப்படிப்பட்ட இந்த ஹிருதயத்திற்கு (பிரம்மத்தின் இருப்பிடத்திற்கு) ஐந்து தேவத்வாரங்கள் (வாயில்கள்) உள; கிழக்கு வாயில் பிராணவாயு; அதுதான் நேத்திரம் (நேத்திரேந்திரியம்); அதுதான் ஆதித்யன் (தேவதை); அதைத் தேஜஸ், அன்னாத்யம் இக்குணங்களுடன் உபாஸிக்கவேண்டும்; இப்படியறிபவன் தேஜஸ்வியாகவும், அன்னாதனாகவு மாகிறான்.

2. தெற்கு வாயில் வ்யானவாயு; அது ச்ரோத்திரம் (இந்திரியம்); அது சந்திரன் (தேவதை); ஸ்ரீ, யசஸ் இக்குணங்களுடன் உபாஸிக்கவேண்டும்; இப்படி யறிபவன் ஸ்ரீமானாயும், யசஸ்வீயாகவு மாகிறான்.

மேற்கு வாயில் அபானவாயு; அதுதான் வாக் (இந்திரியம்); அதுதான் அக்நி (தேவதை); பிரம்மவர்ச்சஸம், அன்னாத்யம் இக்குணங்களுடன் உபாஸிக்கவேண்டும்; இப்படி யறிபவன் பிரம்மவர்ச்சஸ் உள்ளவனாயும், அன்னாத்யனாகவும் மிருப்பான்.

4. வடக்கு வாயில் ஸமான வாயு; அதுதான் மனஸ் (இந்திரியம்); அதுதான் பர்ஜன்யன் (வருண தேவதை); கீர்த்தி, வ்யஷ்டி (காந்தி) இங்குணங்களுடன் உபாஸிக்க வேண்டும்; இப்படி யறிபவன் கீர்த்தி, காந்தி உள்ளவனாவான்.

5. ஊர்த்வவாயில் உதானவாயு; அதுதான் வாயு (தேவதை); அதுதான் ஆகாசம் (இந்திரியங்களைத் தாண்டிவிட்டதால் இந்திரிய விஷயம் சொல்லப்படவில்லை; ஓஜஸ் (பலம்), மஹ: (மஹத்வம்) இக்குணங்களுடன் உபாஸிக்கவேண்டும். இப்படியறிபவன் பலமுள்ளவனுயும் மஹானுயுமிருப்பான்.

6. இந்த ஐந்து பிரம்மபுருஷர்களும் ஸ்வர்க்க லோகத்திற்குத் துவாரபாலகர்கள்; இவர்களை இப்படி யறிபவன் ஸ்வர்கத்தையடைவான். இவன் குலத்தில் வீரன் (பரமயோகி) பிறப்பான்.

7. இந்த ஸ்வர்க்கத்தைக்காட்டிலும் மேலாயிருக்கிற ஒரு ஜ்யோதிஸ் பிரகாசிக்கிறது; இந்த ஜகத், ஸம்ஸாரம், இவைகளைக் கடந்து உத்தமமாயிருக்கிற லோகங்களில் (ஸத்யலோக முதலான லோகங்களில்) பிரகாசிக்கிறது; (ஆனல் பிரமத்திற்கு இருப்பிடமுமில்லையே, ரூபமுமில்லையே, அப்படியிருக்க இப்படிச் சொல்லலாமா வென்ருல், ஹிரண்ய கர்ப்பாதி கார்ய பிரம்மத்தின் ஸ்தானமென்றறிந்தால் ஸமாதானமாகும்). அப்படிப்பட்ட வஸ்துவாகிய ஜ்யோதிஸ் இந்தப்புருஷனுக்குள்ளேயும் பிரகாசிக்கிறது; (அதைப் பார்க்கவும் பார்க்கலாம், கேட்கவும் கேட்கலாம்); அதன் பார்வை எப்படி யென்ருல் (பின்னல் சொல்லப்படுகிறது).

8. இந்தச் சரீரத்தைத் தொடுவதால் ஓர் உஷ்ணபாவம் அறியப்படுகிறதல்லவா? அந்த ஜ்யோதிஸ் இருப்பதால் தேஹத்தில் இந்தச் சூடு இருக்கிறது; அப்படியிருப்பது ப்ரத்யக்ஷமாய்க் காணப்படுகிறதல்லவா? அதனல் அது பார்க்கத்தகுந்தது; கேட்கத் தகுந்ததாயு மிருக்கிறது? (எப்படி யென்ருல்) இரண்டு காதுகளை விரல்களால் மூடிக்கொண்டு, கவனமாய்க் கேட்டால், ரதத்தினுடையதுபோல் ஓர் ஓசையாவது (நினதம்), ருஷபத்தின் கர்ஜனையைப்போல் ஓர் ஓசையாவது (நதது:) அக்நி எரிவதுபோல் ஓர் ஓசையாவது கேட்கப்படுகிறதல்லவா? அதனல்தான் பார்க்கப்படுவது, கேட்கப்படுவது; இப்படி அறிபவன் பார்க்கப் படத் தகுந்தவனுயும் (ரூபவானுயும்) கேட்கப்படத் தகுந்தவனுயும் (கீர்த்தியுள்ளவனுயும்) இருப்பான்.

---

## கண்டம் 14.

1. நாமரூபமுள்ளதாயிருக்கிற இந்த ஜகத் எல்லாம் பிரம்மம். (எப்படியெனில்) ஜகத் அதனிடமிருந்தே உண்டாகிறது; அதனிடத்திலேயே லயிக்கிறது; இருக்கும்பொழுது அதனாலேயே பிழைத்திருக்கிறது. இப்படி (ராகத்வேஷாதிகளை விட்டு விட்டு)ச் சாந்தனாக பிரம்மத்தை உபாஸிக்கவேண்டும் (அறிய வேண்டும்). (எப்படி உபாஸிப்பதெனில்) முதலில் ஒரு நிச்சயம் செய்துகொள்ளவேண்டும்; ஏனென்றால்; ஜீவன் அத்யவஸாயாத்மக: (நிச்சயமயன், புத்திநிச்சயமே ஜீவன்); இந்த லோகத்தில் எப்படிப்பட்ட நிச்சயமுள்ளவனோ ஜீவன், இந்த தேஹத்தை விட்டுப் போனபிறகு, அப்படிப்பட்ட நிச்சயமுள்ளவனாகவே இருப்பான் (அஃதாவது, அவனவன் நிச்சயத்திற்குத் தகுந்த பலன் கிடைக்கும்); (ஆதலால் ஒருவிதமான நிச்சயம் செய்யவேண்டும்; எவ்வித நிச்சய மென்றால் சொல்லப்படு கிறது).

2. (ஸகுண பிரம்ம உபாஸ்தி சொல்லப்படுகிறது). (பிரம்மம் எப்படிப்பட்டதென்றால்) மனோமயன் (மனஸாகவே, அஃதாவது, மனஸால் அறியப்படுகிறவனாகவே யிருக்கிறான்); பிராண சரீரன் ஸூக்ஷ்ம சரீரமுள்ளவன், அஃதாவது நம்மைப்போல் ஸ்தூல சரீர மில்லாதவன்); பாரூப: (பிரகாசரூபி, அஃதாவது எப்பொழுதும் பிரகாசித்துக்கொண்டிருக்கிறவர்); ஸ்த்யஸங்கல்ப: (வ்யர்த்தமாய்ப் போகாத ஸங்கல்பத்தை யுடையவர்); ஆகாச ஆத்மா (ஆகாச ஸ்வரூபி, அஃதாவது, எங்கும் பரவியிருப்பவர்); ஸர்வகர்மா (எல்லாவற்றையும் உண்டுபண்ணியவர்); ஸர்வகாம: (எல்லா இச்சைகளையும் உடையவர், அஃதாவது யாதொரு குறைவுமற்றவர்); ஸர்வகந்த:, ஸர்வரஸ: (எல்லா நல்ல வாஸனைகளை யுடையவர், எல்லா ரஸங்களையுடையவர். அஃதாவது, பாபஸம்பந்தமாயிருக்கிற கெட்டவாஸனை, கெட்டரஸமில்லாதவர்); ஸர்வமிதமப்யாத்த: (இந்த ஜகத் முழுதிலும் வ்யாபித்திருக்கிறவர்); அவாகீ (வாக்கில்லாதவன் அஃதாவது தசேந்திரியங்களில்லாதவர்); அநாதர: (ஸம்பிரமம் இல்லாதவர், அஃதாவது கிடைக்காதவஸ்து கிடைப்பதாலுண்டாகும் ஒரு பரபரப்புமில்லாதவர்; அவருக்கு யாதொரு குறையும் இல்லாததால்).

5. ஊர்த்வவாயில் உதானவாயு; அதுதான் வாயு (தேவதை); அதுதான் ஆகாசம் (இந்திரியங்களைத் தாண்டிவிட்டதால் இந்திரிய விஷயம் சொல்லப்படவில்லை; ஓஜஸ் (பலம்), மஹ: (மஹத்வம்) இக்குணங்களுடன் உபாஸிக்கவேண்டும். இப்படியறிபவன் பலமுள்ளவனும் மஹானுயுமிருப்பான்.

6. இந்த ஐந்து பிரம்மபுருஷர்களும் ஸ்வர்க்கலோகத்திற்குத் துவாரபாலகர்கள்; இவர்களை இப்படி யறிபவன் ஸ்வர்கத்தை யடைவான். இவன் குலத்தில் வீரன் (பரமயோகி) பிறப்பான்.

7. இந்த ஸ்வர்க்கத்தைக்காட்டிலும் மேலாயிருக்கிற ஒரு ஜ்யோதிஸ் பிரகாசிக்கிறது; இந்த ஜகத், ஸம்ஸாரம், இவைகளைக் கடந்து உத்தமமாயிருக்கிற லோகங்களில் (ஸத்யலோக முதலான லோகங்களில்) பிரகாசிக்கிறது; (ஆனல் பிரமத்திற்கு இருப்பிடமுமில்லையே, ரூபமுமில்லையே, அப்படியிருக்க இப்படிச் சொல்லலாமா வென்றால், ஹிரண்ய கர்ப்பாதி கார்ய பிரம்மத்தின் ஸ்தானமென்றறிந்தால் ஸமாதானமாகும்). அப்படிப்பட்ட வஸ்துவாகிய ஜ்யோதிஸ் இந்தப்புருஷனுக்குள்ளேயும் பிரகாசிக்கிறது; (அதைப் பார்க்கவும் பார்க்கலாம், கேட்கவும் கேட்கலாம்); அதன் பார்வை எப்படி யென்றால் (பின்னல் சொல்லப்படுகிறது).

8. இந்தச் சரீரத்தைத் தொடுவதால் ஓர் உஷ்ணபாவம் அறியப்படுகிறதல்லவா? அந்த ஜ்யோதிஸ் இருப்பதால் தேஹத்தில் இந்தச் சூடு இருக்கிறது; அப்படியிருப்பது ப்ரத்யக்ஷமாய்க் காணப்படுகிறதல்லவா? அதனல் அது பார்க்கத்தகுந்தது; கேட்கத் தகுந்ததாயு மிருக்கிறது? (எப்படி யென்றால்) இரண்டு காதுகளை விரல்களால் மூடிக்கொண்டு, கவனமாய்க் கேட்டால், ரதத்தினுடையதுபோல் ஓர் ஓசையாவது (நினதம்), ருஷபத்தின் கர்ஜனையைப்போல் ஓர் ஓசையாவது (நதது:) அக்கினி எரிவதுபோல் ஓர் ஓசையாவது கேட்கப்படுகிறதல்லவா? அதனல்தான் பார்க்கப்படுவது, கேட்கப்படுவது; இப்படி அறிபவன் பார்க்கப் படத் தகுந்தவனும் (ரூபவானும்) கேட்கப்படத் தகுந்தவனும் (கீர்த்தியுள்ளவனும்) இருப்பான்.

## கண்டம் 14.

1. நாமரூபமுள்ளதாயிருக்கிற இந்த ஜகத் எல்லாம் பிரம்மம். (எப்படியெனில்) ஜகத் அதனிடமிருந்தே உண்டாகிறது; அதனிடத்திலேயே லயிக்கிறது; இருக்கும்பொழுது அதனாலேயே பிழைத்திருக்கிறது. இப்படி (ராகத்வேஷாதிகளை விட்டு விட்டு)ச் சாந்தனாக பிரம்மத்தை உபாஸிக்கவேண்டும் (அறிய வேண்டும்). (எப்படி உபாஸிப்பதெனில்) முதலில் ஒரு நிச்சயம் செய்துகொள்ளவேண்டும்; ஏனென்றால்; ஜீவன் அத்யவஸாயாத்மக: (நிச்சயமயன், புத்திநிச்சயமே ஜீவன்); இந்த லோகத்தில் எப்படிப்பட்ட நிச்சயமுள்ளவனோ ஜீவன், இந்த தேஹத்தை விட்டுப் போனபிறகு, அப்படிப்பட்ட நிச்சயமுள்ளவனாகவே இருப்பான் (அஃதாவது, அவனவன் நிச்சயத்திற்குத் தகுந்த பலன் கிடைக்கும்); (ஆதலால் ஒருவிதமான நிச்சயம் செய்யவேண்டும்; எவ்வித நிச்சய மென்றால் சொல்லப்படுகிறது).

2. (ஸகுண பிரம்ம உபாஸ்தி சொல்லப்படுகிறது). (பிரம்மம் எப்படிப்பட்டதென்றால்) மனோமயன் (மனஸாகவே, அஃதாவது, மனஸால் அறியப்படுகிறவனாகவே யிருக்கிறான்); பிராண சரீரன் ஸூக்ஷ்ம சரீரமுள்ளவன், அஃதாவது நம்மைப்போல் ஸ்தூல சரீர மில்லாதவன்); பாரூப: (பிரகாசரூபி, அஃதாவது எப்பொழுதும் பிரகாசித்துக்கொண்டிருக்கிறவர்); ஸத்யஸங்கல்ப: (வ்யர்த்தமாய்ப் போகாத ஸங்கல்பத்தை யுடையவர்); ஆகாச ஆத்மா (ஆகாச ஸ்வரூபி, அஃதாவது, எங்கும் பரவியிருப்பவர்); ஸர்வகர்மா (எல்லாவற்றையும் உண்டுபண்ணியவர்); ஸர்வகாம: (எல்லா இச்சைகளையும் உடையவர், அஃதாவது யாதொரு குறைவுமற்றவர்); ஸர்வகந்த:, ஸர்வரஸ: (எல்லா நல்ல வாஸனைகளை யுடையவர், எல்லா ரஸங்களையுடையவர். அஃதாவது, பாபஸம்பந்தமாயிருக்கிற கெட்டவாஸனை, கெட்டரஸமில்லாதவர்); ஸர்வமிதமப்யாத்த: (இந்த ஜகத் முழுதிலும் வ்யாபித்திருக்கிறவர்); அவாகீ (வாக்கில்லாதவன் அஃதாவது தசேந்திரியங்களில்லாதவர்); அநாதர: (ஸம்பிரமம் இல்லாதவர், அஃதாவது கிடைக்காதவஸ்து கிடைப்பதாலுண்டாகும் ஒரு பரபரப்புமில்லாதவர்; அவருக்கு யாதொரு குறையும் இல்லாததால்).

3. இந்த என்னுடைய ஆத்மா (ஜீவாத்மா) ஹிருதயத்திற்குள் நெல், யவம், கடுகு, சாமை, அரிசி இவைகளைக்காட்டிலும் சிறிது (அதி ஸூக்ஷ்மமானது); ஹிருதயத்திற்குள் பிருதிவி, அந்தரிக்ஷம், ஸ்வர்க்கம் இந்த உலகங்களைக்காட்டிலும் பெரிது.

ஸர்வகர்மா, ஸர்வகாம:, ஸர்வகந்த:, ஸர்வரஸ:, ஸர்வமிதமப்யாத்த:, அவாகீ, அநாதர: (இவைகளுக்கு ஏற்கனவே அர்த்தம் சொல்லப்பட்டிருக்கிறது). இந்த என்னுடைய ஆத்மா, ஹிருதயத்திற்குள்ளிருக்கிற ஆத்மா, பிரம்மமே; இந்த பிரம்மத்தையே சரீரத்தைவிட்ட பிறகு (நான்) அடையப்போகிறேன். இப்படி எவனுக்கு நிச்சயமிருக்கிறதோ அவனுக்கு ஸம்சயமில்லை; (இந்தப் பிரகாரம்) சாண்டில்யர் சொன்னார்.

---

## கண்டம் 15.

1. (பிரதானம், மாயை அஃதாவது ஜகத்தாகப் பரிணமித்திருக்கிற பிரம்மோபாஸனம் சொல்லப்படுகிறது.)

இஃது ஒரு பெரிய பை (சாக்கு); அதற்கு அந்தரிக்ஷம் வயிறு (உள்வெளி); பூமி அடியிலிருக்கிறது; நாசமடையாதது; திக்குகள் அதற்கு மூலைகள் (ஓரங்கள்); ஸ்வர்க்கம் அதற்குமேல் துவாரம் (வாய்); பிராணிகளின் கர்மபலன் அதற்குள் வைக்கப்பட்டிருக்குற பணம்; அந்த பலனுடன் இந்த ஜகத் முழுவதிலும் வைக்கப்பட்டிருக்கிறது.

2. அதனுடைய கிழக்குத் திக்கிற்கு 'ஜுஹூ:' என்று பெயர் (கிழக்கே பார்த்து ஹோமாதி கர்மாக்கள் செய்யயப்படுகின்றன); தெற்கிற்கு 'ஸஹமாநா' என்று பெயர் (பாபிகள் தெற்கே யமபட்டணத்தில் பாபபலன்களை ஸஹித்து அநுபவிக்கிறார்கள்); மேற்கு திக்கிற்கு 'ராக்ஞீ' என்று பெயர் (வருணராஜன், அல்லது ஸந்தியாராகத்துடன் சேர்ந்திருப்பது); வடக்கு திக்கிற்கு 'ஸுபூதா' என்று பெயர் (குபேரன் முதலானவர்களுடைய விபூதி ஐச்வர்யமிருக்கிறது); இந்தத் திக்குகளின் பிள்ளை வாயு; இப்படி வாயுவை அறிந்தால், அறிந்தவனுக்குப் புத்திர சோகமில்லை; புத்திரன் தீர்க்காயுஸுடனிருப்பான்.

3. (இப்படி அறிந்தவன் அடியிற்கண்டபடி சொல்லுகிறான்) இந்தப் புத்திரனால் (மூன்றாதரம்) நாசமில்லாத கோசத்தை யடைகிறேன்; பிராணனை யடைகிறேன்; (பூ:) பூமியை யடைகிறேன்; (புவ:) அந்தரிக்ஷத்தை யடைகிறேன்; (ஸ்வ:) ஸ்வர்க்கத்தை யடைகிறேன்.

4. பிராணனை யடைகிறேன் என்று சொல்லப்பட்டதே, இந்த எல்லாப் பூதமும் பிராணனாகவிருப்பதால் அப்படிச் சொன்னேன்.

5. பூ: அடைகிறேன் என்றதற்கு அர்த்தம் பூமி, அந்தரிக்ஷம், ஸ்வர்க்கம் என்று சொன்னதாக எண்ணவேண்டியது.

6. புவ: என்றதற்கு அக்நி, வாயு, ஆதித்யன் என்று சொன்னதாக எண்ணவேண்டியது.

7. ஸ்வ: என்று சொன்னதற்கு ருக், யஜுஸ், ஸாமா இவ்வேதங்கள் என்று எண்ணவேண்டியது.

---

## கண்டம் 16.

1. (ஒருவன் தன்னுடைய ஆயுர்விருத்திக்காகச் செய்ய வேண்டிய உபாஸனையும் ஜபமும் சொல்லப்படுகிறது.)

புருஷன் (ஜீவாத்மா) யக்ஞமாகவே யிருக்கிறான் (யக்ஞமாக பாவிக்கப்படவேண்டும்). அவனுடைய 24 வயதுவரையுள்ள ஆயுஸ் ப்ராதஸ்ஸவநம்; காய்த்ரீ 24 அக்ஷரங்கள்; காயத்ரீ ஸம்பந்தமே ப்ராதஸ்ஸவநம்: அதற்கு வஸுக்கள் தேவதைகள்; பிராணன்களே வஸுக்கள்; இவைதான் எல்லாவற்றையும் பிழைப்பிக்கின்றன.

2. இந்த 24 வயதுக்குள் ஏதாகிலும் ஆபத்து வந்தால் அப்பொழுது இந்த ஜபத்தைச் சொல்லவேண்டியது—"ஹே! ப்ராணன்களாகிற வஸுக்களே! ப்ராதஸ்ஸவநம் மாத்யந்திந ஸவநத்தை அநுஸரிக்கட்டும்! பிராணன்களுடைய மத்தியில் எனக்கு யாதொரு குறைவும் வரவேண்டாம்." அப்பொழுது அவன் அந்த ஆபத்திலிருந்து விடுபட்டு அரோகனாகவிருப்பான்.

3. அந்த 24 வயதுக்கு மேற்பட்டு 44 வருஷம் (அஃதாவது 68 வயது பரியந்தம்) மாத்யந்திநஸவநம்; த்ருஷ்டுப் 44 அக்ஷரங்கள்; ருத்திரர்கள் தேவதைகள்; (முதலாவது பாராவில் கண்டது போல் இதற்குத் தக்கபடி பார்த்துக்கொள்க).

4. இரண்டாவது பாராவில் சொல்லியது போல் இதற்குத் தக்கபடி ஜபம்.

5. அந்த வயதுக்கு மேல் 48 வருஷம் (அஃதாவது 116 வயதுவரையில்) ஸாயம்ஸவநம்; ஜகதிச்சந்தஸ்; 48 அக்ஷரங்கள்; ஆதித்யர்கள் தேவதை (மற்றவை முன்போல்).

6. இதற்குத் தக்கபடி ஜபம், இரண்டாவது பாராவில் சொல்லியது போல்.

7. இப்படி நிச்சயம் வந்த மஹிதாஸர் என்ற ரிஷி "ஹே! ரோகமே! உன்னால் என்ன செய்யக்கூடும்? ஏன் வீண் சிரமப்பட்டு என்னை வருத்தப்படுத்த உத்தேசிக்கிறாய்" என்று சொன்னார். அவர் 116 வயதை அடைந்தார்; இப்படி யார் உபாஸிக்கிறானோ அவனுக்கும் 116 வயதுண்டு.

---

## கண்டம் 17.

1. (இன்னும் புருஷனுக்கும் யக்ஞத்திற்கும் ஸாம்யம் சொல்லப்படுகிறது.)

எதை உண்ண இச்சிக்கிறானோ, குடிக்க இச்சிக்கிறானோ, எது கிடைக்காததால் துக்கப்படுகிறானோ, அதுதான் யக்ஞத்தில் தீக்ஷை (விரதம்).

2. எதை உண்கிறானோ, குடிக்கிறானோ, எது கிடைத்த போது ஸந்தோஷப்படுகிறானோ, அது யக்ஞத்தில் உபஸதம் அல்பஆஹாரம் (பால் முதலியன போல்).

சிரிப்பதும், பக்ஷிப்பதும், மைதுனம் செய்வதும் யக்ஞத்தில் ஸ்துதசஸ்திரங்கள் (ஸ்தோத்திரம் முதலியவை).

4. தபஸ், தானம் ருஜுபாவம், அஹிம்ஸை, ஸத்யவசனம் இவை யக்ஞத்தில் தக்ஷிணைகள்.

5. ஸோஷ்யதி, அஸோஷ்டா என்று இரண்டிலும் சொல்லப்படுகிறது. (புருஷ பரத்தில் பெறப்போகிறான், பெற்றான்; யக்ஞபரத்தில் ஸோம ரஸத்தைக் குடிக்கப்போகிறான், குடித்தான் என்று சொல்லப்படுகிறது; சப்தஸாம்யம்). மரணம் யக்ஞத்தில் அவபிருதஸ்நாநம் (முடிவு).

இந்த வித்யையைத் தேவகீபுத்ரனாகிய கிருஷ்ணனுக்கு கோரராகிய ஆங்கிரஸர் உபதேசித்தார்; அவர் மற்ற வித்யையை வேண்டவில்லை (அஃதாவது, இதையே உத்கிருஷ்டமென்று நினைத்தார்). இந்த புருஷயக்ஞவித்தையை அறிந்தவன் மரண காலத்தில் இப்படி ஜபம்செய்யவேண்டும். 'அக்ஷிதமஸி' (குறைவில்லாமலிருக்கிறாய்); 'அச்யுதமஸி' (நழுவுதல் இல்லாமலிருக்கிறாய்); பிராண ஸஞ்சிதமஸி (ஸூக்ஷ்ம பிராணனாயிருக்கிறாய்) என்று; இந்த விஷயத்தில் இரண்டு ருக்குகள் உள.

7. புராணராயும், காரணராயுமிருக்கிற (பிரம்மத்தினுடையதாயும்) தமஸுக்கு மேற்பட்டதாயும் உத்கிருஷ்டமாயும், தேவர்களுக்கு உயர்ந்ததாயும் உத்தமமாயுமிருக்கிற ஜ்யோதிஸைப் பார்த்தவர்களாக விருக்கிறோம், அடைந்தவர்களாக விருக்கிறோம்.

---

## கண்டம் 18.

1. மனஸைப் பிரம்மமாக உபாஸிக்கவேண்டும்; இஃது அத்யாத்மம் (ஆத்மஸம்பந்தமானது); ஆகாசத்தைப் பிரம்மமாக உபாஸிக்கவேண்டும் (இது தைவஸம்பந்தம்).

2. அந்த மனோமயபிரம்மம் நான்கு பாதங்களுடையது (பங்குள்ளது); வாக், பிராணன், சக்ஷுஸ், ச்ரோத்ரம்; ஆகாசமய பிரம்மம் நான்கு பங்கு; அக்னி, வாயு, ஆதித்யன்; திக்குகள்.

3. வாக் ஒரு பங்கு; அஃது அக்னிஜ்யோதிஸால் விளங்குகிறது. (பலன்) இப்படியறிந்தவன் கீர்த்தி, யசஸ், பிரம்மவர்ச்சஸம் இவைகளுடன் விளங்குகிறான்.

4. பிராணனுக்கும் வாயுவுக்கும் ஸம்பந்தம்; மற்றவை 3-வது பாராவைப்போல்.

3. அந்த 24 வயதுக்கு மேற்பட்டு 44 வருஷம் (அஃதாவது 68 வயது பரியந்தம்) மாத்யந்திநஸவநம்; த்ருஷ்டுப் 44 அக்ஷரங்கள்; ருத்திரர்கள் தேவதைகள்; (முதலாவது பாராவில் கண்டது போல் இதற்குத் தக்கபடி பார்த்துக்கொள்க).

4. இரண்டாவது பாராவில் சொல்லியது போல் இதற்குத் தக்கபடி ஜபம்.

5. அந்த வயதுக்கு மேல் 48 வருஷம் (அஃதாவது 116 வயதுவரையில்) ஸாயம்ஸவநம்; ஜகதீச்சந்தஸ்; 48 அக்ஷரங்கள்; ஆதித்யர்கள் தேவதை (மற்றவை முன்போல்).

6. இதற்குத் தக்கபடி ஜபம், இரண்டாவது பாராவில் சொல்லியது போல்.

7. இப்படி நிச்சயம் வந்த மஹிதாஸர் என்ற ரிஷி "ஹே! ரோகமே! உன்னால் என்ன செய்யக்கூடும்? ஏன் வீண் சிரமப்பட்டு என்னை வருத்தப்படுத்த உத்தேசிக்கிறாய்" என்று சொன்னார். அவர் 116 வயதை அடைந்தார்; இப்படி யார் உபாஸிக்கிறானோ அவனுக்கும் 116 வயதுண்டு.

---

## கண்டம் 17.

1. (இன்னும் புருஷனுக்கும் யக்ஞத்திற்கும் ஸாம்யம் சொல்லப்படுகிறது.)

எதை உண்ண இச்சிக்கிறானோ, குடிக்க இச்சிக்கிறானோ, எது கிடைக்காததால் துக்கப்படுகிறானோ, அதுதான் யக்ஞத்தில் தீக்ஷை (விரதம்).

2. எதை உண்கிறானோ, குடிக்கிறானோ, எது கிடைத்த போது ஸந்தோஷப்படுகிறானோ, அது யக்ஞத்தில் உபஸதம் அல்பஆஹாரம் (பால் முதலியன போல்).

சிரிப்பதும், பக்ஷிப்பதும், மைதுனம் செய்வதும் யக்ஞத்தில் ஸ்துதசஸ்திரங்கள் (ஸ்தோத்திரம் முதலியவை).

4. தபஸ், தானம் ருஜுபாவம், அஹிம்ஸை, ஸத்யவசனம் இவை யக்ஞத்தில் தக்ஷிணைகள்.

5. ஸோஷ்யதி, அஸோஷ்டா என்று இரண்டிலும் சொல்லப்படுகிறது. (புருஷ பரத்தில் பெறப்போகிறான், பெற்றான்; யக்ஞபாரத்தில் ஸோம ரஸத்தைக் குடிக்கப்போகிறான், குடித்தான் என்று சொல்லப்படுகிறது; சப்தஸாம்யம்). மரணம் யக்ஞத்தில் அவபிருதஸ்நாநம் (முடிவு).

இந்த வித்யையைத் தேவகீபுத்ரனாகிய கிருஷ்ணனுக்கு கோரராகிய ஆங்கிரஸர் உபதேசித்தார்; அவர் மற்ற வித்யையை வேண்டவில்லை (அஃதாவது, இதையே உத்கிருஷ்டமென்று நினைத்தார்). இந்த புருஷயக்ஞவித்தையை அறிந்தவன் மரண காலத்தில் இப்படி ஜபம்செய்யவேண்டும். 'அக்ஷிதமஸி' (குறைவில்லாமலிருக்கிறாய்); 'அச்யுதமஸி' (நழுவுதல் இல்லாமலிருக்கிறாய்); பிராண ஸஞ்சிதமஸி (ஸூக்ஷ்ம பிராணனாயிருக்கிறாய்) என்று; இந்த விஷயத்தில் இரண்டு ருக்குகள் உள.

7. புராணராயும், காரணராயுமிருக்கிற (பிரம்மத்தினுடையதாயும்) தமஸுக்கு மேற்பட்டதாயும் உத்கிருஷ்டமாயும், தேவர்களுக்கு உயர்ந்ததாயும் உத்தமமாயுமிருக்கிற ஜ்யோதிஸைப் பார்த்தவர்களாக விருக்கிறோம், அடைந்தவர்களாக விருக்கிறோம்.

---

## கண்டம் 18.

1. மனஸை பிரம்மமாக உபாஸிக்கவேண்டும்; இஃது அத்யாத்மம் (ஆத்மஸம்பந்தமானது); ஆகாசத்தைப் பிரம்மமாக உபாஸிக்கவேண்டும் (இது தைவஸம்பந்தம்).

2. அந்த மனோமயபிரம்மம் நான்கு பாதங்களுடையது (பங்குள்ளது); வாக், பிராணன், சக்ஷுஸ், ச்ரோத்ரம்; ஆகாசமய பிரம்மம் நான்கு பங்கு; அக்நி, வாயு, ஆதித்யன்; திக்குகள்.

3. வாக் ஒரு பங்கு; அஃது அக்நிஜ்யோதிஸால் விளங்குகிறது. (பலன்) இப்படியறிந்தவன் கீர்த்தி, யசஸ், பிரம்மவர்ச்சஸம் இவைகளுடன் விளங்குகிறான்.

4. பிராணனுக்கும் வாயுவுக்கும் ஸம்பந்தம்; மற்றவை 3-வது பாராவைப்போல்.

5. சக்ஷுஸ்ஸுக்கும் ஆதித்யனுக்கும் ஸம்பந்தம்; மற்றவை முன்போல்.

6. ச்ரோத்திரத்திற்கும் திக்குக்கும் ஸம்பந்தம்; மற்றவை முன்போல்.

---

## கண்டம் 19.

1. ஆதித்யனே பிரம்மம் என்று உபதேசம் செல்லப்படுகிறது. அதன் விஸ்தார ஆக்யானமாவது—முன்னால் (ஆதிகாலத்தில்) இந்த ஜகத் அஸத் ஆகவே இருந்தது. (இல்லாததைப் போல், அஃதாவது, நாம ரூபங்களால் வ்யக்தமாய்த் தோன்றாமலிருந்தது). பிறகு அது ஸத் ஆயிற்று; (தோன்றியது); (முளையைப்போல் முளைகண்டது); வரவர கொஞ்சம் கொஞ்சம் பெருத்தது; அஃது ஒரு முட்டையாயிற்று; அது ஸம்வத்ஸர காலம் இருந்தது; பிறகு அது வெடித்தது; (பிளர்ந்தது); அந்த இரண்டு பிளப்புகளில் ஒன்று வெள்ளியாகவும்; மற்றொன்று பொன்னாகவும் இருந்தது.

2. வெள்ளிமயப் பிளப்பு இந்த பூமி ஆயிற்று; பொன் மயப் பிளப்பு ஸ்வர்க்கமாயிற்று; கர்ப்ப ஸ்தூலப்பை பர்வதங்களாயிற்று; மேற்படி ஸூக்ஷ்மப்பை மேகம் பனி இவைகளாயிற்று; நாடிகள் நதிகளாயின; மூத்திரப்பைஜலம் ஸமுத்ரமாயிற்று.

3. அந்த முட்டையிலிருந்து எது (எந்த சிசு) உண்டாயிற்றோ அதுதான் இந்த ஸூர்யன். (அந்த சிசு பிறந்தவுடன்) எல்லா பூதங்களும் அவரவர்களுடைய இச்சைகளும் கோஷங்களாகவும், பெரும் சப்தங்களாகவும் ஆயின. அப்படி பிரதி ஸூர்ய உதயம் சப்தாதிகள் உண்டாகின்றன. (அஃதாவது, ஸூர்ய உதயமானவுடன் எல்லா பூதங்களும் எழுந்திருந்து தன் தன் காரியத்தை நடத்துகின்றன.)

4. (இந்த வித்யைக்குப் பலன்) இப்படி யறிந்து பிரம்மத்தை உபாஸிப்பவர்கள் நல்ல கோஷங்களை (இச்சைகளை) அடைகிறார்கள், அநுபவிக்கிறார்கள்.

---

# நான்காம் ப்ரபாடகம்

---

## கண்டம் 1.

1. ஒரு காலத்தில், சிரத்தையுடன் தானம் செய்தவரும், அதிகமாகக் கொடுத்தவரும், அதிகமாகப் பிறருக்குப் போஜனம் தன் வீட்டில் செய்து வைத்தவருவான பவுத்ராயணர் என்கிற ஜானச்ருதி என்று ஒரு ராஜா இருந்தார்; அவர் தன் அன்னத்தையே இதரர்கள் புஜிக்கும்பொருட்டு அநேக விடங்களில் சத்திரங்களைக் கட்டிவைத்தார்.

2. (இப்படி யிருக்கும்பொழுது, ஒரு நாள், இவருடைய அன்னதானத்தால் ஸந்தோஷத்தை யடைந்து ரிஷிகள் அல்லது தேவர்கள் இவனை ரக்ஷிக்கும்பொருட்டு) ஹம்ஸங்களாக ராத்திரியில் (அவனுக்கு ஸமீபத்தில்) உபரிகையின்பேரில் வந்து இறங்கினார்கள். அவைகளில் ஒரு ஹம்ஸம் மற்றொன்றைப் பார்த்துச் சொன்னதாவது:—'அடே! அடே! பல்லாக்ஷ! (ஒரு ஹம்ஸத்தின் பெயர்) ஸ்வர்க்கத்திற்கு அல்லது பகலுக்கு ஸமானமான இந்த ஜானச்ருதியின் ஜ்யோதிஸை (கீர்த்தியை) ஸம்பந்தப் படாதே. (அதைப்பற்றிக் குற்றமாய்ப் பேசாதே.) அஃது உன்னை தஹிக்காமலிருக்கட்டும். (மேற்படி கீர்த்தி அப்படிப்பட்ட மஹிமையுள்ளது.)'

3. பல்லாக்ஷன் பதில் சொன்னதாவது:—'அடே! யாரைப் பார்த்துச் சொல்லுகிறாய்! இந்த அற்பனைப்பற்றி ஏதோ ஸயுக்வான் என்கிற ரைக்வனைப்பற்றிச் சொல்லுவதுபோல் ச்லாகித்துக் கொள்ளுகிறாயே!

(கேட்ட ஹம்ஸம் சொன்னதாவது:—) அந்த ரைக்வன் என்பவர் எவர்? அவர் எப்படிப்பட்டவர்? சொல்' (என்று).

4. (பல்லாக்ஷன் சொல்லுகிறது):—(சொக்கட்டான் விளையாட்டில் காயின் நான்கு புள்ளியுள்ள பக்கமாகிற) கிருதாயம் என்று பெயருள்ளது விழுந்து, ஜயித்தால் மற்ற (மூன்று,

இரண்டு, ஒரு புள்ளியுள்ள அயங்கள்) எப்படி உள்ளடங்கிப் போகின்றனவோ, அப்படிப்போல், ரைக்வர் செய்யும் ஸுகிருதத்தில் மற்ற பிரஜைகள் செய்யும் ஸுகிருதங்கள் எல்லாம் உள்ளடங்கிப் போகின்றன. (அஃதாவது, இவருடைய ஸுகிருதம் எல்லோருடையதைக்காட்டிலும் ச்லாக்யம்.) இவருடைய அறிவில் மற்றவர்களுடைய அறிவுகளும் அடங்கியிருக்கின்றன. இப்படிப்பட்டவரைப்பற்றி என்னால் சொல்லப்பட்டது.

5. ஜானச்ருதியானவர் இப்படி ஹம்ஸவசனத்தைக் கேட்டுப் படுக்கையைவிட்டு எழுந்திருந்து ஸாரதியைக் கூப்பிட்டுச் சொன்னதாவது:—'அடே! ஸாரதி! ரைக்வருக்குச் சொல்லி (அவரை அழைத்துக்கொண்டுவா) என்று. 'அவர் எவர்?' என்று ஸாரதி கேட்டான்.

6. (நான்காவது மந்திரத்தில் கண்டபிரகாரம் ஜானச்ருதி சொன்னார்.)

7. ஸாரதி, தேடிப்பார்த்து அவரைக் காணமல் திரும்பி வந்தான். அவனுக்கு மறுபடியும் ஜானச்ருதி சொன்னதாவது:—'எங்குப் பிராம்மணனை (பெரியோர்களை)த் தேடவேண்டுமோ அங்கே போய் (தேடு)' என்பதாம்.

8. அவர் (ரைக்வர்) ஒரு வண்டியின் கீழ், சொறிகளைச் சொறிந்துகொண்டு உட்கார்ந்திருந்தார். 'ஐயா! நீர்தானு ரைக்வர்?' என்று அவரிடம்போய் ஸாரதி கேட்டான். அதற்கு 'நான் நீதான்' என்று பதில் சொன்னுர். இவர்தான் ரைக்வர் என்று தெரிந்துகொண்டு திரும்பிவந்தான்.

---

## கண்டம் 2.

1. இதை யறிந்து ஜானச்ருதி அறுநூறு பசுக்களையும், ஒரு ஹாரத்தையும், ஒரு ரதத்தையும் எடுத்துக்கொண்டு ரைக்வரிடம் சென்றான்.

2. அவரைப் பார்த்துச் சொன்னதாவது:—'இவைகளைக் கிரஹித்துக்கொண்டு எந்த தேவதையை நான் உபாஸிக்கவேண்டுமோ அதை எனக்கு உபதேசம் செய்யுங்கள்' என்பதாம்.

3. அதற்கு ரைக்வர் 'அடே! சூத்ர! (சோகத்தையடைந்து உருகுகிறவனே!) இந்தப் பசுக்கள் முதலியவையெல்லாம் உன்னிடமே இருக்கட்டும்' என்றார். மறுபடியும் ஜானச்ருதி ஆயிரம் பசுக்களையும், ஒரு ஹாரத்தையும், ஒரு ரதத்தையும், தன் பெண்ணையும் அழைத்துக்கொண்டு ரைக்வரிடம் சென்றான்.

4. சொன்னதாவது:—'இதோ! ஆயிரம் பசுக்கள், ஹாரம், ரதம், பார்யை, தாங்கள் வஸிக்கிற கிராமம் இவைகளை யெல்லாம் கிரஹித்துக்கொண்டு எனக்கு உபதேசம் செய்யுங்கள்' என்பதாம்.

5. ரைக்வர் இந்தப் பெண்ணுடைய முகத்தைப் பார்த்து, ஏற்றுக்கொண்டு, மற்றவைகளையும் கிரஹித்துக்கொண்டு சொன்னதாவது:—'இந்தமுகமாக என்னைப் பேசும்படி செய்து விட்டாய்; நான் வஸிக்கும் இந்த கிராமங்கள் மஹாவ்ருக்ஷம் என்ற தேசத்தில் ரைக்வபர்ணு வென்று ப்ரஸித்தமான பெயர் பெற்றிருக்கட்டும்' என்பதாம்; மறுபடியும் சொன்னார் (வித்யையை உபதேசித்தார்).

---

## கண்டம் 3.

1. வாயுவே ஸம்வர்க்கம் (எல்லாவற்றையும் இழுத்துக் கொள்ளுகிற குணமுள்ளது). (எப்படி யெனில்) எப்பொழுது அக்நி அணைகிறதோ அப்பொழுது வாயுவைச் சேருகிறது. (அஃதாவது, வாயுவாகவே ஆகிவிடுகிறது.) அஸ்தமிக்கும் ஸூர்யனும் சந்திரனும் வாயுவைச் சேருகின்றன. (வாயுவால் அசைக்கப்பட்டு அஸ்தமனத்தை யடைகின்றன.)

2. ஜலம் வற்றும்பொழுது வாயுவையே சேருகிறது. வாயுவே இவைகளை யெல்லாம் இழுக்கிறது. இஃது ஆதிதைவதம்.

3. இனி அத்யாத்மம்; ப்ராணன் (முக்கிய பிராணன்) ஸம் வர்க்கம்; (எப்படி யென்றால்) தூங்கும்பொழுது வாக் பிராணனையே சேருகிறது. சக்ஷுஸ், ச்ரோத்ரம், மனஸ் இவைகளும் அப்படியே (சேருகின்றன).

4. இந்த இரண்டு ஸம்வர்க்கங்களாகிற வாயுவும், பிராணனும் தேவர்களிடத்திலும் (பூதங்களிடத்திலும்) ப்ராணன் களிடத்திலும் (இந்திரியங்களிடத்திலும்) இருக்கின்றன.

5. பிறகு, சௌனகர் என்ற காபேயர், அபிப்ரதாரின் என்ற காக்ஷஸேனி இவர்கள் சாப்பிட உட்கார்ந்தபோது, ஒரு பிரம்மசாரி பிக்ஷைக்கு வந்தான். அவனுக்குப் பிக்ஷைபோட வில்லை (இவன் என்ன சொல்லப்போகிறுன், அதை யறிவோம் என்ற எண்ணத்துடன் போடவில்லை).

6. அந்த பிரம்மசாரி மேற்படி இரண்டு சதுரர்களைப்பார்த்துச் சொன்னதாவது:—'எவரோ ஒரு தேவன் இருக்கிறுன்; அவன் எல்லாவற்றையும் பக்ஷிக்கிறுன்; புவனத்தை ரக்ஷிக்கிறுன்; பல பிரகாரமாயிருக்கிறுன்; இப்படிப்பட்டவனை மனுஷ்யர்கள் (தெரியாதவர்கள்) பார்ப்பதில்லை; இந்த அன்னமெல்லாம் அவனுக்கேயிருக்க அவனுக்கு அன்னம் கொடுக்கப்படவில்லையே' என்பதாம்.

7. அதைக்கேட்டு சௌனகர் யோசித்து பிரம்மசாரியிடம் சென்று சொன்னதாவது:—'தேவர்களுடையவும், பிரஜைகளுடையவும் ஜனிதா; கெட்டியான பற்களையுடையவர்; உண்ணத்தகுந்தவர்; அதிமேதாவி; இப்படிப்பட்டவர்; அவர் மஹிமை மிகவும் உயர்ந்தது; அன்னமும் அவர்தான்; அத்தாவு (உண்பவரு)ம் அவர்தான் என்று எங்களுக்குத் தெரியும்; பிக்ஷை போடுகிறேம்' என்பதாம்.

8. பிக்ஷை போட்டார்கள்; இந்த ஐந்தும் (அத்தாவாகிற வாயு ஒன்று; அன்னங்களாகிற அக்னி, ஸூர்யன், சந்திரன், ஜலம் நான்கு; ஆக ஐந்து), மற்ற ஐந்தும் (அத்தாவாகிற பிராணன் ஒன்று; அன்னங்களாகிற வாக், சக்ஷுஸ், ச்ரோத்ரம், மனஸ் நான்கு; ஆக ஐந்து) சேர்ந்து பத்தாயிற்று. இதுதான் விராட்; அன்னுதி; இதனுல் எல்லாம் காணப்படுகிறது; இதற்கு எல்லாம் காணப்படுகிறது; இப்படி எவன் அறிகிறுனே அவன் அன்னுதனுகிறுன்.

---

## கண்டம் 4.

1. ஜாபாலன் என்ற ஸத்யகாமன் தன் தாயாராகிய ஜபாலாவைப் பார்த்து 'பிரம்மசர்யத்தை அநுஷ்டிக்கப்போகிறேன்; என் கோத்ரம் (வம்சம்) என்ன?' வென்று கேட்டான்.

2. அவள் சொன்னதாவது:—'அப்பா! உன் கோத்ரம் எனக்குத் தெரியாது; பல இடங்களில் வேலை செய்துகொண்டிருந்தேன்; யௌவன காலத்தில் உன்னைப் பெற்றேன்; உன் பெயர் ஸத்யகாமன்; என் பெயர் ஜபாலா; அந்தப்பிரகாரம் சொல்லு; போ' என்பதாம்.

3. (இதைக் கேட்டு) அவன் ஹாரித்ருமதர் என்ற கௌதமரிடத்திற்குச் சென்று 'பிரம்மசர்யத்தை அநுஷ்டிக்கத் தங்களிடம் வந்திருக்கிறேன்' என்றான்.

4. அவர் 'உன் கோத்ரம் என்ன?' என்று கேட்டார். அவன் 'எனக்குத் தெரியாது; என் தாயைக் கேட்டேன்; இப்படி (இரண்டாவது மந்திரத்தில் கண்டபடி) சொன்னாள்' என்றான்.

5. பிராம்மணன் இல்லாவிடில் இப்படிச் சொல்ல மாட்டான். (இவன் பிராம்மணன்தான் என்று நினைத்தார்.) 'ஸமித்தைக் கொண்டுவா, உனக்கு உபநயனம் செய்துவைக்கிறேன்' என்று அவர் சொன்னார். அந்தப்படி உபநயனம் செய்து வைத்து, மறுபடியும் சொன்னதாவது:—'இந்த இளைத்த நானூறு மாடுகளுடன் கூடப்போய், அவைகளை ஓட்டிக்கொண்டிரு; அவை ஆயிரமாகப் பெருகுகிறவரையில் இவ்விடம் வராமலிரு' என்பதாம். அந்தப்படி ஆயிரமாகும்வரை அநேக வருஷகாலம் மாடுகளை ஓட்டிக்கொண்டிருந்தான்.

---

கண்டம் 5.

1. (இப்படியிருக்கையில் ஒரு நாள், வாயுபகவான் ஒரு விருஷபத்தில் புகுந்துகொண்டு) விருஷபரூபம் சொன்னதாவது:—'ஹே! ஸத்யகாம!' என்று; 'ஏன் பகவன்!' என்று இவன் கேட்டான்; (விருஷபம்:—) 'ஆயிரமாகிவிட்டோம்; குருவிடத்திற்கு எங்களைக் கொண்டுபோ' என்றது.

2. (விருஷபம்:—) 'பிரம்மத்தினுடைய (ஒரு) பாதத்தை (நான்கில் ஒரு பங்கை)ச் சொல்லுகிறேன்.'

(ஸத்யகாமன் :—) சொல்லுங்கள்.

(விருஷபம் :—) மேற்படி பாதத்திற்கு நான்கு கலைகள்; அவையாவன:—கிழக்கு ஒரு கலை; தெற்கு ஒரு கலை; மேற்கு ஒரு கலை; வடக்கு ஒரு கலை; இந்த நான்கு கலைகளும் சேர்ந்து ஒருபாதம்; இதற்கு 'பிரகாசவான்' என்றுபெயர்.

3. (இப்படியறிந்து உபாஸிப்பவனுக்குப் பலன்) இந்த உலகத்தில் பிரகாசவானுயிருப்பான்; பிரகாசமுள்ள லோகங்களை ஜயிப்பான்.

---

## கண்டம் 6.

1. இன்னொரு பாதத்தை அக்நி உனக்குச் சொல்லும் என்று விருஷபம் பேச்சை முடித்தது; பிறகு, மறுநாள் காலையில் குருவீட்டை நோக்கி எல்லாப் பசுக்களையும் ஓட்டிக்கொண்டு புறப்பட்டான். ஸாயங்காலம் ஓர் இடத்தில் தங்கி, அக்நியை மூட்டி அதற்குப் பின்புறம் அதைப் பார்த்துக்கொண்டு உட்கார்ந்தான்.

2-3. அக்நி (முன் விருஷபம் சொல்லியதுபோல்) சொல்லி, பிருதிவி ஒரு கலை, அந்தரிக்ஷம் ஒரு கலை, ஸ்வர்க்கம் ஒரு கலை, ஸமுத்ரம் ஒரு கலை, ஆக நான்கு கலைகளுள்ள பாதத்திற்கு அநந்தவான்; என்று பெயர் என்று சொல்லிற்று.

4. இவ்விதம் அறிந்தவன் இவ்வுலகத்தில் அநந்தவானுக வும், அந்த அந்த லோகங்களை ஜயிப்பனுகவும் இருப்பான்.

---

## கண்டம் 7.

1. ஹம்ஸம் 'இன்னொரு பாதத்தைச் சொல்லும்' என்று அக்நி பேச்சைமுடித்தது. (மற்றவை 6-வது கண்டம் முதல் மந்திரம்போல்.)

2-3. ஹம்ஸம் (முன்போல்சொல்லி):—அக்நி ஒரு கலை, ஸூர்யன் ஒரு கலை, சந்திரன் ஒரு கலை, மின்னல் ஒரு கலை, ஆக நான்கு கலைகளுள்ள (பிரம்மத்தினுடைய மூன்றுவது) பாதம்; இதற்கு 'ஜ்யோதிஷ்மான்' என்றுபெயர்.

4. (பலன்) அதிக ஜ்யோதிஸுள்ளவனுயிருப்பான்.

## கண்டம் 8.

1. நீர்க்கோழி மற்றொரு பாதத்தைச் சொல்லும் என்று ஹம்ஸம் பேச்சை முடித்தது. (மற்றவை முன்போல்.)

2-3. நீர்க்கோழி சொன்னதாவது:—(முதலில் முன்போல் சொல்லி) பிராணன் ஒரு கலை, சக்ஷுஸ் ஒரு கலை, ச்ரோத்ரம் ஒரு கலை, மனஸ் ஒரு கலை, ஆக நான்கு கலைகளுள்ள பாதம் (பிரம்மத்தின் நான்காவது பாதம்); இதற்கு 'ஆயதநவான்' என்று பெயர்.

4. பலன், எல்லோருக்கும் இருப்பிடமாக விருப்பான்.

---

## கண்டம் 9.

1. குருவினிடம் போய் ஸத்யகாமன் சேர்ந்தான்; குரு இவனைப்பார்த்து சொல்லுகிறார். (அடியில் வருமாறு):—

2. நீ பிரம்மத்தை யறிந்தவன்போல் விளங்குகிறாயே! யார் உபதேசித்தான்?

ஸத்யகாமன்:—மனுஷ்யர்கள் அல்லாதவர்கள் சொன்னார்கள்; ஆகிலும் தாங்கள் எனக்குச் சொல்லவேண்டும்.

3. குருவால் உபதேசிக்கப்பட்டால்தான் வித்யை ஸாதுத்வத்தை யடையுமென்று தங்களை யொத்த பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள்.

குரு இவனுக்கு ஷோடசகலாவித்யையைக் கொஞ்சங்கூட விடாமல் உபதேசித்தார்.

---

## கண்டம் 10.

1. உபகோஸலர் என்ற காமலாயனர் மேற்படி ஸத்யகாமனைக் குருவாக வடைந்தான்; அவரிடமிருந்து 12 வருஷகாலம் அக்நிகளுக்கு சுச்ரூஷை செய்தான் (பிரம்மசரிய விரதத்தில் அக்நியை உபாஸித்தான்). ஸத்யகாமர் இவனைத்தவிர மற்ற சிஷ்யர்களுக்குமட்டும் உபதேசம் செய்து, ஸமாவர்த்தனம் செய்து (முடிவுக்குக் கொண்டுவந்து) அவனவன் கிருஹத்திற்கு அனுப்பிவிட்டார்.

2. 'இந்த பிரம்மசாரி (உபகோஸலர்) அக்நிகளைச் செவ்வையாக உபாஸித்திருக்கிறனே (அவனுக்கு இன்னும் பிரஸாதம் செய்யாமலிருக்கலாமா) அக்நி உங்களைக் கோபித்துக் கொள்ளாமலிருக்கவேண்டுமே' என்று ஸத்தியகாமரைப் பார்த்து அவர் பார்யை கேட்டாள். அதற்கு யாதொரு பதிலும் சொல்லாமல், சிஷ்யனிடத்தில் மேலும் மேலும் வேலை வாங்கினுர்.

3. அவன் மனோவ்யாதியால் சாப்பாட்டை நிறுத்திவிட்டான். 'சாப்பிடு அப்பா! சாப்படாமலிருப்பானே' என்று குரு பத்னி கேட்டாள். 'இந்த புருஷனிடத்தில (என்னிடத்தில்) அநேக காமங்கள் (அநுபவிக்க வேண்டிய பல துக்கங்கள்) இருக்கின்றன; அவைகளாகிற வ்யாதிகளால் நிறைந்திருக்கிறேன். அதனுல்தான் சாப்பிடவில்லை' என்று சிஷ்யன் பதில்சொன்னுன்.

4. பிறகு, இவனிடத்தில் அக்நிகள் ஸந்தோஷப்பட்டு, இவன் நம்மை மிகவும் சுச்ரூஷை செய்திருக்கிறுன், இவனுக்கு உபதேசம் செய்யவேண்டு மென்று நினைத்து, அவனுக்கு உபதேசம் செய்தன.

5. பிராணன்:—பிரம்மம்; கம் (ஸுகம்)—பிரம்மம்; க்கம் (ஆகாசம்)—பிரம்மம்; என்று அக்நிகள் சொல்லின; பிறகு இவன் சொன்னதாவது:—பிராணன் என்றது தெரிந்தது; கம், க்கம் என்றது தெரியவில்லை, என்பதாம். (அக்நிகள்) எது கம் என்றதோ அதே க்கம் (அஃதாவது, ஸுகமாயிருக்கிற ஆகாசம், அஃதாவது ஹிருதயாகாசம், பௌதிகாகாசம் அன்று); எது க்கம் என்றதோ அதே க்கம் (அஃதாவது, ஆகாசமாகிற ஸுகம், ஸ்வச்ச ஸுகம், விஷய ஸுக மன்று, அஃதாவது ஆநந்தம்). முடிவில் பிராணனும், ஆகாசமும் பிரம்மமென்று அக்நிகள் சொல்லின.

---

## கண்டம் 11.

1. பிறகு இவனைப்பார்த்து கார்ஹபத்யாக்நி சொன்னதாவது:—பிருதிவி, அக்நி, அன்னம், ஆதித்யன் இவை நான்கும் என் சரீரங்கள்; இவைகளில் ஆதித்யனிடத்தில் எந்த புருஷன் தோன்றுகிறுனே அவன்தான் நான்; நான்தான் அவன்.

2 இப்படி யறிந்து எவன் உபாஸிக்கிருனே அவன் பாபத்தில் நின்றும் விடுபட்டு, லோகமுள்ளவனுகிறுன்; தீர்க் காயுஸ் உள்ளவனுகிறுன்; ஜ்யோதிஸ் உள்ளவனுகிறுன்; அவனுடைய வம்சம் குறைவுபடுகிறதில்லை; அவனை இவ்வுலகத் திலும், பரலோகத்திலும் நாங்கள் காப்பாற்றுகிறோம்.

---

## கண்டம் 12.

1. பிறகு தக்ஷிணுக்நி உபதேசித்தது; ஜலங்கள், திக்குகள், நக்ஷத்திரங்கள், சந்திரன் இவைகள் என் சரீரங்கள்; சந்திர னிடத்திலிருக்கிற புருஷன் நான்தான்.

2. (பலன் முன் கண்டத்தில் சொல்லியதுபோல்.)

---

## கண்டம். 13.

1. பிறகு ஆஹவநீயாக்நி உபதேசித்தது; பிராணன், ஆகாசம், ஸ்வர்க்கம், மின்னல் இந்த நான்கும் என் சரீரங்கள்; இவைகளில் மின்னலில் தோன்றுகிற புருஷன் நான்தான்.

2. (பலன் முன்போல்.)

---

## கண்டம் 14.

1. இந்த அக்நிவித்யை ஆத்மவித்யை என்றும், உனக்கு குருவந்து கதியைச் சொல்வார் என்றும் அக்நிகள் சொல்லி விட்டு நின்றன; குருவந்து இவனைக் கூப்பிட்டார்.

2. 'ஏன்?' என்று இவன் கேட்டான். அவர் சொன்ன தாவது:—பிரம்மவித்தினுடைய முகம்போல் உன் முகம் விளங்கு கிறதே! எவர் உனக்கு உபதேசித்தார்?

சிஷ்யன்:—எனக்கு யார் உபதேசிப்பார் என்று (ஸமாசா ரத்தை) மறைத்தும், இந்த அக்நிகள் (உங்களைப் பார்த்தபிறகு) இப்படிப்பட்டதாக விருக்கின்றனவே, முன் வேறுவிதமாக இருந்தனவே; என்றும் சொன்னுன்.

குரு:—இந்த 'அக்நிகள் உபதேசித்தனவோ?' வென்று கேட்டார்.

3. அக்நிகள் உபதேசித்தபடி இவன் சொன்னான்; குரு சொன்னதாவது:—லோகங்களைப்பற்றி (கர்மாவைப்பற்றி) அக்நிகள் சொல்லின; தாமரை இலை ஜலத்தைப்போல் ஸம்பந்திக்காததும், பாபம், கர்மா இவைகளில் சேராததுமான (பிரம்மத்தைக் குறித்து) (வித்யையை) உனக்கு நான் சொல்லுகிறேன், என்று சிஷ்யனுக்குச் சொல்லத் தொடங்கினார்.

---

## கண்டம் 15.

1. அக்ஷியில் (கண்ணில்) ஒரு புருஷன் காணப்படுகிறானல்லவா! அவன்தான் பிரம்மம், ஆத்மா; அஃது அமிருதமாயும், அபயமாயு மிருக்கப்பட்ட பிரம்மம்; (இந்தப் புருஷனுடைய ஸ்தானமாகிற) அக்ஷியில் நெய் அல்லது ஜலத்தைப் போட்டால், அதில் ஒட்டாமல், கண்மூடிகள் வழியாக வழிந்து ஓடிப்போகிறது (ஸம்பந்திப்பதில்லை, தாமரையிலை ஜலம்போல்). (பிரம்ம ஸ்தானமே இப்படி இருக்கும்போது, பிரம்மத்தைப்பற்றிக் கேட்பானேன்! நிர்லேபம், நிரஞ்ஜனமே).

2. இதை (இந்த அக்ஷிபுருஷனாகிய பிரம்மத்தை) 'ஸம்யத் வாம' என்று சொல்லுகிறார்கள். எப்படி யென்றால், எல்லா வாமங்களையும் (சோபனங்களையும்) சேர்த்துவைக்கிறது; இப்படி யறிந்து உபாஸிப்பவனுக்கு எல்லாச் சோபனங்களும் சேரும்.

3. இவருக்கு (இந்த ஆத்மாவிற்கு) 'வாமநீ:' என்றும் பெயர்; ஏனெனில், எல்லா வாமங்களையும் (புண்ய கர்மபலன்களையும்) நயிப்பிவைக்கிறார்; இப்படி யறிபவன் எல்லா வாமங்களையு மடைகிறான்.

4. இவருக்கு 'பாமநீ:' என்றும் பெயர்; எல்லா லோகங்களிலேயும் விளங்குகிறார், (ஸூர்ய சந்திராதி ஜ்யோதிஸ்ஸ்வரூபமாக விளங்குகிறார். (அஃதாவது, அவர்களைப் பிரகாசிக்கும்படி செய்கிறார்). இப்படி யறிபவன் எல்லா லோகத்திலும் விளங்குவான்.

5. (இப்படி அறிந்த வித்வானுக்கு கதிசொல்லப்படுகிறது.)

இப்படிப்பட்ட வித்வான், அவன் இறந்தபிறகு அவனுடைய பிரேதத்திற்குக் கர்மாக்கள் செய்தாலும் சரி, செய்யாவிட்டாலும்

சரி, (முதலில்) அர்ச்சிஸை (காந்தியை) யடைகிறான்; பிறகு பகல் அபிமானி தேவதை, சுக்லபக்ஷ தேவதை, உத்தராயண தேவதை, வருஷ தேவதை, ஆதித்ய தேவதை, சந்திர தேவதை, மின்னல் தேவதை, இப்படி வரிசையாக அடைகிறான்; அமானவனாக (மனுஷ்யனல்லாதவனாக, தேவனாக) ஆகிவிடுகிறான்.

6. இந்தப் புருஷன் இவைகளையும் (மேற்சொன்னவைகளையும்) கடைசியில் பிரம்மத்தையும் அடையும்படி செய்கிறார். இது தான் தேவமார்க்கம்; இந்த மார்க்கத்தின் வழியாக பிரம்மத்தை யடைந்து மறுபடியும் திரும்பமாட்டார்கள் (புனர் ஜனன மரண மில்லை).

---

கண்டம் 16.

1. இந்த வாயு யக்ஞத்திற்கு ஸமானமாயிருக்கிறது; அந்த வாயு சலித்துக்கொண்டு எல்லாவற்றையும் பரிசுத்தம் செய்கிறது; ஆதலால் அது யக்ஞம் என்று சொல்லப்பட்டது. அதற்கு இரண்டு மார்க்கங்கள்; வாக் ஒன்று, மனஸ் ஒன்று, ஆக இரண்டு.

2-3. அவைகளுக்குள் வாக்கை மனஸால் பிரம்மா என்ற ருத்விக் ஸம்ஸ்காரம் செய்கிறான். மனஸை வாக்கால் ஹோதா, அத்வர்யு, உத்காதா இவர்கள் ஸம்ஸ்காரம் செய்கிறார்கள். பிராதரநுவாக ஆரம்பத்திற்குப் பிறகு பரிதாநீய கிரியைக்கு முன், பிரம்மா மௌனமாக இராமல் பேசிவிட்டால், ஒருவழி ஸம்ஸ்கரிக்கப்படுகிறது; அப்பொழுது யக்ஞம் கெட்டுப்போகிறது; யஜமானனும் பாபியாகிவிடுகிறான். ஒரு காலால் நடக்கிற புருஷனும், ஒற்றைச் சக்கர வண்டியும் எப்படி கெட்டுப்போகுமோ அப்படிப்போல்.

4-5. மௌனமாயிருந்தால் இரண்டு வழிகளும் ஸமஸ்கரிக்கப்படுகின்றன; அப்பொழுது யக்ஞம் பலத்தை யடைகிறது; யஜமானனும், ச்ரேயஸ் உள்ளவனாகிறான்; இருகாலால் நடக்கிற புருஷனும், இரு சக்கர வண்டியும்போலச் செம்மைப்படுகிறது.

## கண்டம் 17.

1. பிரஜாபதி லோகங்களைக்குறித்து அவைகளில் எவை ஸாரங்கள் என்று கண்டுபிடிக்க உத்தேசித்துத் தபித்தார் (த்யானம் செய்தார்); பிருதிவியிடமிருந்து அக்நி ரஸமென்றும், அந்த ரிக்ஷத்தினிடமிருந்து வாயு ரஸமென்றும், ஸ்வர்க்கத்தினிடமிருந்து ஆதித்யன் ரஸமென்றும் கண்டுபிடித்தார்.

கண்டுபிடிக்கப்பட்டவைகளுள் எது ரஸமென்று மறுபடியும் யோசித்தார்; அக்நியிடமிருந்து ருக்வேதத்தையும், வாயுவிடமிருந்து யஜுர்வேதத்தையும், ஆதித்யனிடமிருந்து ஸாமவேதத்தையும் கண்டுபிடித்தார்.

3. அவைகளுக்குள் ரஸங்களைப்பற்றி மறுபடியும் யோசித்தார்; ருக்கிலிருந்து 'பூ:' என்ற வ்யாஹ்ருதியையும், யஜுஸிலிருந்து 'புவ:' என்ற வ்யாஹ்ருதியையும், ஸாமாவிலிருந்து 'ஸ்வ:' என்ற வ்யாஹ்ருதியையும் ரஸங்களாகக் கண்டுபிடித்தார்.

4-6. யக்ஞத்தில் ருக்கில் தோஷம் வந்தால் 'பூ:' என்று ஹோமம் செய்தல் ப்ராயச்சித்தம்; அப்படியே யஜுஸ் விஷயத்தில் 'புவ:' என்றதும், ஸாம விஷயத்தில் 'ஸ்வ:' என்றதும் ப்ராயச்சித்தம்.

7-10. (யக்ஞத்தில் பிரம்மா வென்ற ருத்விக்கினுடைய லக்ஷணம் முதலானவை சொல்லப்படுகின்றன (அவை) அமுக்யமானதால் எழுதப்படவில்லை.)

---

# ஐந்தாம் ப்ரபாடகம்

---

## கண்டம் 1.

1. ஜ்யேஷ்டமாயும், ச்ரேஷ்டமாயும் இருப்பதை எவன் அறிவானோ அவன் ஜ்யேஷ்டனாயும் ச்ரேஷ்டனாயும் இருப்பான். ப்ராணன்தான் ஜ்யேஷ்டமாயும் ச்ரேஷ்டமாயுமிருக்கிறது.

2. வஸிஷ்டமாயிருப்பதை (எல்லாவற்றையும் மறைத்துக் கொண்டு தான் முன்னிட்டுப் பிழைத்திருக்கிற தன்மையுள்ளதை) எவன் அறிவானோ அவன் தன் கூட்டத்தாருக்குள் வஸிஷ்டனா யிருப்பான். வாக்குத்தான் அப்படிப்பட்டதாயிருக்கிறது.

3. ப்ரதிஷ்டை யுள்ளதை (நிலைத்திருக்கை) எவன் அறிவா னோ அவன் இஹபரலோகங்களில் ப்ரதிஷ்டையுள்ளவனாயிருப் பான். சக்ஷுஸ்தான் ப்ரதிஷ்டையாக விருக்கிறது.

4. ஸம்பத்துள்ளதை (ச்ரோத்ரத்தால் வேதச்ரவணம், பிறகு கர்மாநுஷ்டானம், பிறகு பலன் அஃதாவது ஸம்பத்) எவன் அறிவானோ அவன் ஸம்பத்துள்ளவனாக விருப்பான். தேவர்களும், மனுஷ்யர்களும் அவனுக்குக் காமங்களை யடைவிப் பார்கள். ச்ரோத்ரம்தான் ஸம்பத்து.

5. எவன் ஆயதனத்தை (இருப்பிடத்தை) அறிவானோ அவன் தன்னைச் சார்ந்தவர்களுக்குள் இருப்பிடமாக (ஆச்ரய ஸ்தானமாக) விருப்பான். மனஸ்தான் ஆயதனம்.

6. இந்த (ஐந்து) பிராணன்களும் (அவையாவன, பிரா ணன், சக்ஷுஸ், ச்ரோத்ரம், மனஸ்) ஒன்றற்கொன்று நான்தான் பெரியவன், நான் பெரியவன் என்று சொல்லிக்கொண்டு, பிரஜா பதியினிடம்போய் 'எங்களுக்குள் எது பெரிது?' என்று கேட்டன. 'எது இந்தச் சரீரத்தைவிட்டு வெளிப்பட்டால் சரீரம் உபயோகமில்லாமல் போகுமோ, அதுதான் பெரிது' என்று அவர் பதில் சொன்னார்.

7. வாக் வெளிப்புறப்பட்டு, ஒரு வருஷகாலம் இருந்து, மறுபடியும் திரும்பிவந்து, 'என்னையன்றி எப்படிப் பிழைத் திருந்தீர்கள்' என்று மற்றவைகளைக் கேட்டது. 'ஊமை எவ்விதம் பேசாமல், பிராணனை வைத்துக்கொண்டும், காதால் கேட்டுக் கொண்டும் கண்ணால் பார்த்துக்கொண்டும், மனஸால் நினைத்துக் கொண்டும் இருப்பானோ அவ்விதம் இருந்தோம்' என்று சொல்லின. பிறகு வாக்கு உள்ளே புகுந்தது.

பிறகு சக்ஷுஸ் வெளிப்பட்டது; (இதற்குத்தக்கபடி முன் போல் கேட்டுப் புகுந்தது).

9. பிறகு ச்ரோத்ரம் வெளிப்பட்டது; (இதற்குத்தக்கபடி முன்போல் கேட்டுப் புகுந்தது).

10. பிறகு மனஸ் வெளிப்பட்டது; (இதற்குத்தக்கபடி முன்போல் கேட்டுப் புகுந்தது).

11. பிறகு பிராணன் வெளிக்கிளம்ப இச்சித்து, குதிரை முளைகளைப் பிடுங்கிக்கொண்டு புறப்படுவதுபோல், மற்ற பிராணன் களைக் கிளப்பிக்கொண்டு புறப்படும்பொழுது, 'இரு, எங்களுக் குள் நீதான் ச்ரேஷ்டன், இந்தச் சரீரத்தைவிட்டு போகாதே' என்று பிராணனைப் பார்த்து மற்றவை சொல்லின.

12-13. 'நான் வஸிஷ்டன், அந்த வஸிஷ்டன் நீதான்' என்று வாக்கும், மற்றவை அதற்கு அதற்குத் தக்கவாறும் சொல்லின.

14. வாக்கும், நேத்ரமும், ச்ரோத்ரமும், மனஸும் பிராணனாக மாட்டா; பிராணன்தான் எல்லாமாக விருக்கிறது.

---

## கண்டம் 2.

1. 'எனக்கு அன்னம் எது?' என்று பிராணன் கேட்டது; 'எல்லாப் பிராணிகளும் எந்த எந்த அன்னத்தைப் புஜிக்கின்றன வோ அந்த அந்த அன்னமே உனக்கு' என்று மற்றவை சொல் லின; இதுதான் பிராணனுக்கு அன்னம்; 'அந, என்று பிராண னுக்கும் பெயர்; இப்படி யறிந்தவனுக்கு அன்னம் (போஜனம்) இல்லாமை இருக்கமாட்டாது.

2. 'எனக்கு வஸ்திரம் எது?' என்று பிராணன் கேட்டது; 'ஜலங்கள் வஸ்திரம்' என்று மற்றவை சொல்லின; பிராம்மணர்கள் போஜனத்திற்கு முன்னும், பின்னும் ஆசமன ஜலத்தால் அன்னத்தை மூடுகிறார்கள்.

3. ஸத்யகாமர் என்ற ஜாபாலர் கோச்ருதிக்குச் சொன்னதாவது:—'இந்த வித்யையைக் காய்ந்துபோன கட்டைக்குச் சொன்னாலும் அது தளிர்க்கும்' என்பதாம்.

4-9. (மஹத்வத்தை யடைவதற்கு 'மந்தம்' என்ற யாகம் விவரமாகச் சொல்லப்படுகிறது; பிரம்மக்ஞானத்திற்கு முக்கியமல்ல.)

---

கண்டம் 3.

(வைராக்ய மடையும்பொருட்டுப் பிராணிகளின் ஸம்ஸார கதி ஒரு கதைரூபமாகச் சொல்லப்படுகிறது.)

1. ச்வேதகேது என்பவன் பாஞ்சால தேசத்தாருடைய கூட்டத்தை (ஸபையை)ப் போய்ச்சேர்ந்தான். அந்த ஸபையிலுள்ள ப்ரவாஹணர் என்பவர்—'ஹே! குமார! உன் பிதாவால் உபதேசிக்கப்பட்டிருக்கிறாயா?' என்று கேட்டார். 'ஸ்வாமி! ஆம்' என்று ச்வேதகேது பதில் சொன்னான்.

2. ப்ரவாஹணர்:—நீ அப்படி உபதேசிக்கப்பட்டிருந்தால் (i) பிரஜைகள் இவ்வுலகத்தில் நின்றும் எவ்விடத்திற்குப் போய்ச் சேருகிறார்கள் என்பது தெரியுமா?

ச்வேதகேது:—தெரியாது.

ப்ரவாஹணர்:—(ii) அவர்கள் எவ்விதமாக மறுபடியும் திரும்பி வருகிறார்கள் என்பது தெரியுமா?

ச்வேதகேது:—தெரியாது.

ப்ரவாஹணர்:—(iii) ஞானமுள்ள கர்மிகளுக்குத் தேவயாந மார்க்கம், கேவல கர்மிகளுக்குப் பிதிருயாந மார்க்கம் என்று இரண்டு ஏற்பட்டிருக்கின்றனவே; இந்த இரண்டு மார்க்கங்களி

லும் கூடச்சேர்ந்து போகிறவர்களுக்கு எவ்விடத்தில் வியோக ஸ்தானம் (பிரிவுபடவேண்டிய இடம்) என்பது தெரியுமா?

ச்வேதகேது:—தெரியாது.

3. ப்ரவாஹணர்:—(iv) இந்த பிதிரு ஸம்பந்தமுள்ள லோகம் எந்தப் பிரகாரத்தால் நிரம்பிவிக்கப்படவில்லை என்பது தெரியுமா?

ச்வேதகேது:—தெரியாது.

ப்ரவாஹணர்—(v) ஐந்தாவது ஆஹுதியில் அப்புக்கள் ரஸ்வத்துக்கள்) எப்படி புருஷவாச்யங்களாக (புருஷன் என்று கூப்பிடப்படுகின்றனவாக) ஆகின்றன என்பது தெரியுமா?

ச்வேதகேது:—தெரியாது.

4. ப்ரவாஹணர்—அப்படியிருக்க, இவைகளெல்லாம் தெரியாமலிருக்க, 'உபதேசிக்கப்பட்டிருக்கிறேன்' என்று எப்படிச் சொன்னாய்?

ச்வேதகேது இவ்விதம் கேட்கப்பட்டவனாக, ஆயாஸத்தை யடைந்து, பிதாவிடம் சென்று 'எனக்கு உபதேசிக்காமலிருக்கும் பொழுது எப்படி உபதேசித்ததாகச் சொன்னீர்?' என்று கேட்டான்.

5. மறுபடியும் சொன்னதாவது:—ப்ரவாஹணர் என்னை ஐந்து கேள்விகள் கேட்டார். ஒன்றுக்காவது பதில் சொல்ல என்னால் முடியவில்லை. பிதா சொல்லுகிறார்:—இந்தக் கேள்விகளை இப்பொழுதுதான் நான் கேள்விப்பட்டேன்; இதற்குமுன் தெரியாது; அவைகளுக்குப் பதில் சொல்லவும் எனக்குத் தெரியாது.

6. இப்படிச் சொல்லிவிட்டு மேற்படி பிதா கௌதமர், ராஜாவாகிய ப்ரவாஹணரிடம் சென்றார்; மனுஷ்ய ஸம்பந்தமான வித்தம் வேண்டியதைக் கேட்டுக்கொள்ளும்படி ப்ரவாஹணர் சொன்னார். அவையெல்லாம் இருக்கட்டும், என் புத்திரனைக் கேட்ட ஐந்து கேள்விகளுக்கு பதில் எனக்கு உபதேசிக்கவேண்டுமென்று கௌதமர் சொன்னார்.

7. பலநாள் காத்திருந்தால் உபதேசிக்கப்படும் என்றும்; இதற்குமுன் இந்த வித்யை பிராம்மணர்களுக்கு உபதேசிக்கப்பட

வில்லை, க்ஷத்ரியர்களுக்குள் பரம்பரையாக உபதேசிக்கப்பட்டு வந்ததென்றும், அதை உனக்குச் சொல்லுகிறேன், கேள்! என்றும் ப்ரவாஹணர் சொன்னார்.

---

## கண்டம் 4.

1-2. (ஐந்தாவது கேள்விக்குப் பதில்) இந்த லோகம் (ஸ்வர்க்க லோகம்) அக்நி; அதற்கு ஆதித்யன் ஸமித்; கிரணங்கள் புகை; பகல் பிரகாசம்; சந்திரன் தணல்; நக்ஷத்ரங்கள் பொறிகள்; இந்த அக்நியில் தேவர்கள் (பிராணுதி இந்திரியாபிமானி தேவர்கள்) ச்ரத்தையை (ச்ரத்தாவாகிற ஜலத்தை) ஹோமம் செய்கிறார்கள். அதிலே நின்றும் ஸோமராஜன் (சந்திரமண்டலம்) உண்டாகிறார்.

---

## கண்டம் 5.

1-2. பர்ஜன்யன் (மழை தேவதை, இந்திரன்) அக்நி; அதற்கு வாயு ஸமித்; மேகம் புகை; மின்னல் பிரகாசம்; இடி தணல்; சப்தங்கள் பொறிகள்; இந்த அக்நியில் தேவர்கள் ஸோமனை ஹோமம் செய்கிறார்கள்; அதிலே நின்றும் மழை உண்டாகிறது.

---

## கண்டம் 6.

1-2. பிருதிவி அக்நி; அதற்கு ஸம்வத்ஸரம் ஸமித்; ஆகாசம் புகை; ராத்திரி பிரகாசம்; திக்குகள் தணல்; மூலை திக்குகள் பொறிகள்; இந்த அக்நியில் தேவர்கள் மழையை ஹோமம் செய்கிறார்கள்; அதிலே நின்றும் அன்னம் உண்டாகிறது.

---

## கண்டம் 7.

1-2. புருஷன் அக்நி; அதற்கு வாக்கு ஸமித்; பிராணன் புகை; நாக்கு பிரகாசம்; நேத்ரம் தணல்; ச்ரோத்ரம் பொறிகள்; இந்த அக்நியில் தேவர்கள் அன்னத்தை ஹோமம் செய்கிறார்கள்; அதிலே நின்றும் ரேதஸ் உண்டாகிறது.

---

## கண்டம் 8.

1-2. ஸ்திரீ அக்நி; உபஸ்தம் ஸமித்; ரதிக்கு ஸ்திரீயைக் கூப்பிடுதல் புகை; யோனி பிரகாசம்; உள்ளே செய்கிறது (ஸம்போகம்) தணல்; உண்டாகும் ஆனந்தம் பொறிகள்; இந்த அக்நியில் தேவர்கள் ரேதஸை ஹோமம் செய்கிறார்கள்; கர்ப்பம் உண்டாகிறது.

---

## கண்டம் 9.

1. இப்படி ஐந்தாவது அக்நியில் ஹோமம் செய்யப்பட்ட ஜலம் புருஷனாக ஆகிறது; இந்த கர்ப்பம், கருப்பையில் சுத்தப் பட்டு, அதிகக் கஷ்டப்பட்டு, ஒன்பது அல்லது பத்து மாதங்கள் வயிற்றுக்குள் இருந்து பிறகு வெளிப்பட்டு உண்டாகிறது.

2. அப்படிப் பிறந்தவன் ஆயஸுள்ளவரையில் இருக் கிறான். இறந்துபோனபிறகு அவன் ப்ரேதத்தை எந்த அக்நியி லிருந்து ஆதியில் உண்டானானோ அந்த அக்நியில் போட்டு எரிக்கும்பொருட்டுக் கொண்டுபோகிறார்கள்.

---

## கண்டம் 10.

1-2. (முதல் கேள்விக்கு பதில் சொல்லப்படுகிறது.)

இந்த பஞ்சாக்நி வித்யையை அறிந்த கிருஹஸ்தர்களும், அரண்யவாஸிகளான வானப்ரஸ்தர்களும், ஸந்யாஸிகளும், நைஷ்டிக பிரம்மசாரிகளும் ச்ரத்தையையும் தபஸையும் உபாஸிக் கிறார்கள் (அநுஷ்டிக்கிறார்கள்). அவர்கள் (இறந்தபிறகு) அர்ச்சிஸை (காந்தியை, ப்ரகாசாபிமான தேவதையை) அடை கிறார்கள்; அதிலே நின்றும் பகலையும், அதினின்றும் வரிசையாக சுக்லபக்ஷம், உத்தராயணம், ஸம்வத்ஸரம், ஆதித்யன், சந்திரன், மின்னல் அபிமானி தேவதைகளை அடைகிறார்கள்: அப்பொழுது அமானவன் (தேவர்கள்) ஆகிறார்கள்; பிரம்மத்தை (ஸத்ய லோகத்தை) யடைகிறார்கள்; இதுதான் தேவயானம் என்ற வழி.

3-4. கேவலம் கர்மடர்களாக விருக்கிற கிருஹஸ்தர்கள் இஷ்டா (யக்ஞம்), பூர்த்தம் (குளம் வெட்டுதல் முதலிய தர்மம்)

தானம் முதலிய தர்மங்களை அநுஷ்டிக்கிறார்கள். அவர்கள் தூமாபிமானி தேவதையை யடைகிறார்கள்: அதினின்றும் வரிசையாக ராத்திரி, கிருஷ்ணபக்ஷம், தக்ஷிணாயனம், பிதிரு லோகம், ஆகாசம், சந்திரன், இப்படி அந்த அந்த அபிமானி தேவதைகளை அடைகிறார்கள். அந்த ஸோமராஜன் தேவர்களுக்கு அன்னம்; அதைப் பக்ஷிக்கிறார்கள் (அஃதாவது, அதைத் தங்கள் அதிகாரத்திற்குள் வைத்துக்கொள்ளுகிறார்கள்).

5-6. (இரண்டாவது கேள்விக்கு பதில்.)

கர்மபலன் நசிக்கும்வரையில் அந்த சந்திரனிடத்தில் இருந்து விட்டு, பிறகு, சொல்லப்போகிற வழியாக மறுபடியும் திரும்பு கிறார்கள். எப்படி யென்றால், முதலில் ஆகாசமாகிறது; பிறகு, வரிசையாக, வாயு, தூமம், அப்ரம் (மழை பொழியத் தயாராக விராத மேகம்), மேகம் (மழைக்குத் தயாராக விருப்பது), மழை, வ்ரீஹி முதலான அன்னம், இப்படி ஆகிறது. அந்த அன்னத்தை உண்பவனுக்கு ரேதஸ் உண்டாகிறது. அந்த ரேதஸ் ஸ்திரீயினிடத்தில் ருதுகாலத்தில் விடப்படுகிறது. அப்பொழுது மறுபடியும் உண்டாகிறது.

[மூன்றாவது கேள்விக்கு பதில்—மூன்றாவது, நான்காவது மந்திரங்கள்படி வ்யாக்யானத்தில் சொல்லப்படுகிறது; அஃதாவது, தேவயாநம், பிதிருயாநம் இவ்வழிகளில் ஏககாலத்தில் புறப் பட்டுப் போகிறவர்கள் அயநங்கள் வரைக்கும் கூடச்சேர்ந்து போகிறார்கள்; அப்பொழுது பிரிந்து, ஞானி உத்தராயணத்தி லிருந்து ஸம்வத்ஸரத்திற்குப் போகிறான்; கர்மி தக்ஷிணாயணத்தி லிருந்து பிதிருலோகத்திற்குப் போகிறான்.]

7-8. புண்யசாலிகள் சீக்கிரத்தில் ரமணீயமாயிருக்கிற (ச்லாக்கியமாயிருக்கிற) யோநியை, அஃதாவது, பிராம்மண, க்ஷத்திரிய, வைச்யயோநியை யடைகிறார்கள். பாபிகள் கெட்ட யோநிகளை, (அவையாவன, நாய், பன்றி, சண்டாளன் இவர்க ளுடைய யோநிகளை) அடைகிறார்கள்; எப்பொழுதும் கெட்ட விருத்தியில் இருப்பவர்களுக்கு மேற் சொன்ன இரண்டு மார்க்கங் களும் இல்லை; அடிக்கடி சீக்கிரம் இறப்பு பிறப்புத் தன்மை

என்கிற மூன்றாவது ஸ்தானத்தை (மார்க்கத்தை) யுடையவர்கள்; அடிக்கடி கெட்ட ஜன்மாவை யடைகிறார்கள்.

[நான்காவது கேள்விக்கு பதில்; மேற்படி பாபிகளுக்குப் பிதிருலோகங்கூட இல்லாமலிருப்பதால்] பிதிருலோகம் நிரப்பப் படவில்லை. (அஃதாவது, பிதிருலோகத்திற்கு எல்லோரும் வருவதில்லை; சிலபேர்கள்மட்டுந்தான் வருகிறார்கள்.)

ஆதலால், இந்த மூன்றாவது வழிக்குக் கூச்சப்படவேண்டியது (பாபத்திற்குப் பயப்படவேண்டியது). அதைக் குறித்து (அடியிற்கண்ட) ச்லோகம் இருக்கிறது.

9. பிராம்மணனுடைய ஸொத்தைத் திருடுபவன் (i), ஸுராபானம் செய்பவன் (ii), குருதல்பகமனம் செய்பவன் (iii), பிரம்மஹத்தி செய்பவன் (iv), மேற்படியார்களுடன் சேருபவன் (v) இவர்கள் விழுகிறார்கள். (ஜனந மரணத்தில் விழுகிறார்கள்; அஃதாவது, பாபிகளாக இரண்டு வழிகளுமற்றுக் கெட்ட ஜன்மாவை அடிக்கடி அடைந்து கஷ்டப்படுகிறார்கள்.)

10. இப்படி பஞ்சாக்நி வித்யையை அறிந்தவர்களுக்குப் பாபமில்லை; புண்யலோகத்தை யடைகிறார்கள்.

---

## கண்டம் 11.

1. ப்ராசீனசாலர் என்ற ஔபமன்யவர் (ஒன்று), ஸத்யயக்ஞயர் என்ற பௌலுஷி (இரண்டு), இந்திரத்யும்நர் என்ற பால்லவேயர் (மூன்று), ஜநர் என்ற சார்க்கராக்ஷ்யர் (நான்கு), புடிலர் என்ற ஆச்வதராச்வி (ஐந்து), கிருஹஸ்தர்களாயும், மஹாச்ரோத்ரியர்களாயு முள்ள இவ்வைந்துபேர்களும், ஒன்றுகூடி, நம்முடைய ஆத்மா எவர்? பிரம்மம் என்றது எது? என்ற ஸங்கதியைப்பற்றி வ்யவஹரித்துக் கொண்டிருந்தார்கள்.

2. 'உத்தாலகர் என்ற ஆருணியானவர் இந்த வைச்வநர ஆத்மாவை அறிந்திருக்கிறார். அவரிடம்போய்க் கேட்போம்' என்று எல்லோரும் ஒரு முடிவு செய்துகொண்டு அவரிடம் சென்றார்கள்.

3. அவர், இவர்கள் வரும் ஸங்கதியை அறிந்துகொண்டு நமக்குத் தெரிந்தவைகளை யெல்லாம் இவர்களுக்குச் சொல்லக் கூடாது; வேறு ஒருவரை கைகாட்டிவிடுவோம் என்று நிச்சயத் துக்கொண்டார்.

4. வந்த இவர்களைப் பார்த்து அவர் சொன்னதாவது:—'அச்வபதி என்ற கைகேயர் ஆத்மாவை அறிந்தவராக விருக் கிறார்; அவரிடம் எல்லோரும் போய்க் கேட்போம்' என்பதாம். எல்லோரும் அவரிடம் சென்றார்கள்.

5. அவர் இவர்களுக்குத் தக்கவாறு மரியாதை செய்தார்; மறுநாள் எழுந்து (வந்தவர்களுக்கு அநேக தனத்தைக் கொடுக்கப் போனார்; அவர்கள் அங்கீகரிக்கவில்லை; ஏதோ நம்மிடத்தில் குற்றம் இருக்கிறது, அதனால்தான் பெற நிராகரிக்கிறார்கள் என்று நினைத்து, மனஸ்தாபத்துடன்) இவர் சொன்னதாவது—'என் ராஜ்யத்தில் திருடன் இல்லை; கொடாதவன் இல்லை; ஸுராபானம் செய்கிற பிராம்மணன் இல்லை; யாகம் செய்யாதவன் இல்லை; அவித்வான் இல்லை; வ்யபிசாரம் செய்கிறவன் இல்லை; செய்கிற வளும் இல்லை; நான் யாகம் செய்யப்போகிறேன்; ருத்விக்கள் பொருட்டும் தங்கள்பொருட்டும் மிகுந்த தனம் கொடுக் கிறேன்; இருங்கள்; இருந்து யக்ஞத்தைப் பாருங்கள்' என்பதாம்.

6. இதற்கு அவர்கள் சொன்னதாவது:—'(எங்களுக்குத் தனம் வேண்டாம்) எந்த பிரயோஜனத்திற்காகப் புருஷன் ஸஞ்சரிக்கிறானோ, அதை, அந்த வைச்வாநர ஆத்மாவை நீர் அறிந்திருக்கிறீர்; அதை, எங்களுக்கு உபதேசம் செய்யும்' என்பதாம்.

7. 'காலையில் சொல்லுகிறேன்' என்று சொல்லி, மறுநாள் காலையில் அவர்களுக்குச் சொல்லத் தொடங்கினார்.

---

### கண்டம் 12.

1-2. ஹே! ஔபமன்யவ! நீ எதை வைச்வாநர ஆத்மா வாக உபாஸிக்கிறாய்?

ஔபமன்யவர்:—ஸ்வர்க்கத்தை.

அச்வபதி:—இது தேஜஸ் உள்ளது; வைச்வாநரன்; நீ இதை ஆத்மாவாக உபாஸிக்கிறபடியால் உன்குலத்தில் யாகக்கிரியை ஸபலமாகக் காணப்படுகிறது; அன்னத்தைப் புஜிக்கிறாய்; பிரிய வஸ்துவைப் பார்க்கிறாய்; அப்படியே எவனும் செய்கிறான்; எவன் இப்படி வைச்வாநர ஆத்மாவை உபாஸிக்கிறானோ அவனுடைய குலத்தில் பிரம்மவர்ச்சஸ் உண்டாகும்; இதுதான் (ஸ்வர்க்க லோகந்தான்) ஆத்மாவினுடைய தலை; என்னிடம் வந்து இப்படி அறியாவிட்டால் தலை கீழே விழுந்துபோய் இருக்கும்.

---

## கண்டம் 13.

1-2. ஸத்யயக்ஞரைக் கேட்டார்; ஆதித்யனை வைச்வாநரனாக உபாஸிப்பதாகச் சொன்னார்; (மற்றவை இதற்குத் தக்கபடி மேற்கண்டவாறு); பலன், விச்வரூபம்; ஆதித்யன் வைசவாநரனுடைய சக்ஷுஸ்.

---

## கண்டம் 14.

1-2. சந்திரத்யும்நரைக் கேட்டார். அவர் வாயுவை உபாஸிப்பதாகச் சொன்னார்; (மற்றவை முன்போல் இதற்குத் தக்கவாறு), பலன்—நாநாவிதமான வஸ்திராதி ஸொத்துக்கள், வாயு வைச்வாநரனுடைய பிராணன்.

---

## கண்டம் 15.

1-2. ஜனகரைக் கேட்டார்; ஆகாசத்தை உபாஸிப்பதாகச் சொன்னார் (மற்றவை முன்போல் இதற்குத் தக்கபடி); பலன்—பிரஜையும், தனமும் விசேஷமாக விருக்கும்; ஆகாசம் வைச்வாநரனுடைய நடுதேஹம்.

---

## கண்டம் 16.

1-2. புடிலரைக் கேட்டார்; ஜலத்தை உபாஸிப்பதாகச் சொன்னார்; (மற்றவை இதற்குத் தக்கபடி முன்போல்); பலன்—ரயி (ஐச்வர்யம்); ஜலம் வைச்வாநரனுடைய மூத்திரப்பை.

---

## கண்டம் 17.

1-2. உத்தாலகரைக் கேட்டார்; பிருதிவியை உபாஸிப்பதாகச் சொன்னார்; (மற்றவை முன்போல் இதற்குத் தக்கவாறு); பலன் —பிரஜையாலும், பசுக்களாலும், பிரதிஷ்டை (மேன்மை); பிருதிவி வைச்வாநரனுடைய பாதங்கள்.

---

## கண்டம் 18.

1. எல்லோரையும் பார்த்துச் சொன்னார்—பிருதக்போல் மாத்திரம் தோன்றுவதும், ஒரே வஸ்துவாய் இருப்பதுமான ஆத்மாவை வைச்வாநரன் என்று அறிந்து அன்னத்தைப் புஜிக்கிறீர்கள்; எவன் இப்படிப்பட்ட ஆத்மாவை, ப்ராதேசமாத்திரன் என்றும் (பலவிதமாகப் பகுத்து அறியப்படுபவனாகமாத்திரம்), அபிவிமானன் என்றும் (நான் என்று அறியப்பட்டவனையும்), அறிந்து உபாஸிக்கிறானோ அவன் எல்லா லோகங்களிலும், எல்லாப் பூதங்களிலும், எல்லா ஆத்மாக்களிலும் (இந்திரியங்களிலும்) இருந்து அன்னத்தைப் புஜிக்கிறான்.

2. இப்படிப்பட்ட ஆத்மாவிற்குத் தலை ஸுதேஜஸ்; நேத்ரம் விச்வரூபம்; பிராணன் பிருதக்வர்த்தாத்மா; நடுதேஹம் பகுளம்; வஸ்தி ரயி; பிருதிவி பாதங்கள்; (இந்த வைச்வாநர வித்யையை அறிந்தவர்கள் புஜிக்கும்போழுது, இதை யாகமாக பாவிக்க, வர்ணிக்கப்படுகிறது). மார்-யாகவேதி; ரோமங்கள்—தர்ப்பைகள்; ஹிருதயம்—கார்ஹபத்யாக்நி; மனஸ்—தக்ஷிணாக்நி; வாய்—ஆஹவநீயாக்நி.

---

## கண்டம் 19—24.

(இவைகளில் பஞ்சப்ராண ஆஹுதி வைச்வாநரவித்யையை அறிந்தவனுக்குப் பலன் இவைகளைப்பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது; அமுக்யம்;)

---

அச்வபதி:—இது தேஜஸ் உள்ளது; வைச்வாநரன்; நீ இதை ஆத்மாவாக உபாஸிக்கிறபடியால் உன்குலத்தில் யாகக்கிரியை ஸபலமாகக் காணப்படுகிறது; அன்னத்தைப் புஜிக்கிறாய்; பிரிய வஸ்துவைப் பார்க்கிறாய்; அப்படியே எவனும் செய்கிறான்; எவன் இப்படி வைச்வாநர ஆத்மாவை உபாஸிக்கிறானோ அவனுடைய குலத்தில் பிரம்மவர்ச்சஸ் உண்டாகும்; இதுதான் (ஸ்வர்க்க லோகந்தான்) ஆத்மாவினுடைய தலை; என்னிடம் வந்து இப்படி அறியாவிட்டால் தலை கீழே விழுந்துபோய் இருக்கும்.

---

## கண்டம் 13.

1-2. ஸத்யயக்ஞரைக் கேட்டார்; ஆதித்யனை வைச்வாநரனாக உபாஸிப்பதாகச் சொன்னார்; (மற்றவை இதற்குத் தக்கபடி மேற்கண்டவாறு); பலன், விச்வரூபம்; ஆதித்யன் வைசவாநரனுடைய சக்ஷுஸ்.

---

## கண்டம் 14.

1-2. சந்திரத்யும்நரைக் கேட்டார். அவர் வாயுவை உபாஸிப்பதாகச் சொன்னார்; (மற்றவை முன்போல் இதற்குத் தக்கவாறு), பலன்—நாநாவிதமான வஸ்திராதி ஸொத்துக்கள், வாயு வைச்வாநரனுடைய பிராணன்.

---

## கண்டம் 15.

1-2. ஜனகரைக் கேட்டார்; ஆகாசத்தை உபாஸிப்பதாகச் சொன்னார் (மற்றவை முன்போல் இதற்குத் தக்கபடி); பலன்—பிரஜையும், தனமும் விசேஷமாக விருக்கும்; ஆகாசம் வைச்வாநரனுடைய நடுதேஹம்.

---

## கண்டம் 16.

1-2. புடிலரைக் கேட்டார்; ஜலத்தை உபாஸிப்பதாகச் சொன்னார்; (மற்றவை இதற்குத் தக்கபடி முன்போல்); பலன்—ரயி (ஐச்வர்யம்); ஜலம் வைச்வாநரனுடைய மூத்திரப்பை.

---

## கண்டம் 17.

1-2. உத்தாலகரைக் கேட்டார்; பிருதிவியை உபாஸிப்பதாகச் சொன்னார்; (மற்றவை முன்போல் இதற்குத் தக்கவாறு); பலன்—பிரஜையாலும், பசுக்களாலும், பிரதிஷ்டை (மேன்மை); பிருதிவி வைச்வாநரனுடைய பாதங்கள்.

---

## கண்டம் 18.

1. எல்லோரையும் பார்த்துச் சொன்னார்—பிருதக்போல் மாத்திரம் தோன்றுவதும், ஒரே வஸ்துவாய் இருப்பதுமான ஆத்மாவை வைச்வாநரன் என்று அறிந்து அன்னத்தைப் புஜிக்கிறீர்கள்; எவன் இப்படிப்பட்ட ஆத்மாவை, ப்ராதேசமாத்திரன் என்றும் (பலவிதமாகப் பகுத்து அறியப்படுபவனாகமாத்திரம்), அபிவிமானன் என்றும் (நான் என்று அறியப்பட்டவனாயும்), அறிந்து உபாஸிக்கிறானோ அவன் எல்லா லோகங்களிலும், எல்லாப் பூதங்களிலும், எல்லா ஆத்மாக்களிலும் (இந்திரியங்களிலும்) இருந்து அன்னத்தைப் புஜிக்கிறான்.

2. இப்படிப்பட்ட ஆத்மாவிற்குத் தலை ஸுதேஜஸ்; நேத்ரம் விச்வரூபம்; பிராணன் பிருதக்வர்த்தாத்மா; நடுதேஹம் பகுளம்; வஸ்தி ரயி; பிருதிவி பாதங்கள்; (இந்த வைச்வாநர வித்யையை அறிந்தவர்கள் புஜிக்கும்போழுது, இதை யாகமாக பாவிக்க, வர்ணிக்கப்படுகிறது). மார்-யாகவேதி; ரோமங்கள்—தர்ப்பைகள்; ஹிருதயம்—கார்ஹபத்யாக்நி; மனஸ்—தக்ஷிணாக்நி; வாய்—ஆஹவநீயாக்நி.

---

## கண்டம் 19—24.

(இவைகளில் பஞ்சப்ராண ஆஹுதி வைச்வாநரவித்யையை அறிந்தவனுக்குப் பலன் இவைகளைப்பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது; அமுக்யம்;)

---

# ஆறும் ப்ரபாடகம்

## கண்டம் 1.

1. ச்வேதகேது என்ற ஆருணேயர் ஒருவர் இருந்தார். அவருடைய பிதா 'ஒரு தக்க குருவையடைந்து பிரம்மசர்யத்தை அநுஷ்டி; நம்முடைய குலத்தில் ஒருவரும் அப்படி அநுஷ்டிக்காமல் கேவலம் பிரம்மபந்துவாக (விருத்தியால் பிராம்மணனன்றி, பெயருக்கு மாத்திரம் பிராம்மணன் ஆக) மட்டும் இருக்கவில்லை' என்று அவருக்குச் சொன்னார்.

2. அப்பொழுது பன்னிரண்டு வயதுள்ள ச்வேதகேது ஒரு குருவை யடைந்து 24 வயது வரையில் எல்லா வேதங்களையும் அத்யயநஞ் செய்து முடித்தார். பிறகு, ஆழ்ந்த மனமுள்ளவனும், அத்யயநம் செய்திருக்கிறோம் என்ற பெருமையுள்ளவனும், கர்வமுள்ளவனும் ஆகித் தன் வீட்டிற்கு வந்தான்.

3. அவனைப் பார்த்து பிதா கேட்டதாவது:—'என்ன! அப்பா! இம்மாதிரி இருக்கிறாயே! எந்த உபதேசத்தால் கேட்கப்படாதது கேட்கப்படுகிறதோ, எண்ணப்படாதது எண்ணப்படுகிறதோ (தர்க்கிக்கப்படுகிறதோ), அறியப்படாதது அறியப்படுகிறதோ (நிச்சயிக்கப்படுகிறதோ), அந்த உபதேசத்தைச் செய்யும்படி குருவைக் கேட்டாயா?' என்பதாம்.

4. ச்வேதகேது:—அந்த உபதேசம் எப்படியிருக்கும்?

பிதா:—எப்படியென்றால், சொல்லுகிறேன்; கேள். ஒரு மண்கட்டியால் மண்மயமாயிருக்கிற (சட்டி பானை முதலான பண்டங்கள்) எல்லாம் அறியப்படுகின்றனவோ, பெயரால் மாத்திரம் வித்யாஸமாயிருக்கின்றனவோ, எல்லாம் மண்ணே என்பது ஸத்யமோ அப்படியும்;

5. ஒரு தங்கக்கட்டியால் எப்படி தங்கமயமாயிருக்கிற எல்லாம் அறியப்படுகின்றனவோ, பெயரால் மட்டும் வித்யாஸமாயிருக்கின்றனவோ, எல்லாம் தங்கமே என்பது ஸத்யமோ, அப்படியும்;

6. ஓர் இரும்பு முள்வாங்கியால் இரும்புமயமாயிருக்கின்றவெல்லாம் அறியப்படுகின்றனவோ, பெயரால் மட்டும் வித்யாஸப்படுகின்றனவோ, எல்லாம் இரும்பு என்பது ஸத்யமோ, அப்படியே அறிவிக்கிற உபதேசமும்.

7. ச்வேதகேது:—'இது நான் அடைந்திருந்த குருக்களுக்குத் தெரியாதுபோல இருக்கிறது; தெரிந்திருந்தால் எனக்குச் சொல்லியிருக்க மாட்டார்களா? ஸ்வாமி! எனக்குத் தாங்கள் சொல்லுங்கள்.'

பிதா:—அப்படியே சொல்லுகிறேன்; கேளப்பா!

---

## கண்டம் 2.

1-2. நாமரூப விசேஷங்களோடுகூட காணப்படுகிற இந்த ஜகத், உத்பத்திக்குமுன், ஸத்தாகவே (ஸூக்ஷ்மமாயும், நிர்விசேஷமாயும், ஸர்வகதமாயும், நிரஞ்ஜனமாயும், நிரவயவமாயும், விக்ஞானமாயும், 'இருக்கிறது' என்று சொல்லப்படுவதாக மாத்திரம் இருக்கிறவஸ்துவாகவே), ஏகமாயும், அத்விதீயமாயும் இருந்தது. இஃது (இந்த ஜகத்) அஸத்தாகவே (இல்லாமையாகவே), ஏகமாயும், அத்விதீயமாயுமிருந்தது; அந்த அஸத்திலே நின்றும் ஸத் உண்டாயிற்று, என்று சிலர் சொல்லுகிறார்கள்; (அது சரியன்று) அஃது எப்படிக் கூடும்? அதற்கு என்ன பிரமாணம்? அஸத்திலே நின்றும் ஸத் உண்டாகுமா? ஆகாது. ஆதலால் இந்த ஜகத் ஸத்தாகவேதான் முன்னே இருந்தது; ஏகமாயும், அத்விதீயமாயுமிருந்தது.

3. அந்த ஸத் 'பஹுப்ரகாரமாக உண்டாவோம்' என்று பார்த்தது (நினைத்தது). தேஜஸை ஸ்ருஷ்டித்தது. அப்படி தேஜஸாகப்போன ஸத் 'பஹுப்ரகாரமாக ஆவோம்' என்று மறுபடியும் பார்த்தது; ஜலத்தை ஸ்ருஷ்டித்தது. ஆதலால்தான் ஒரு புருஷன் தபித்தால் வியர்வை விடுகிறான்; அதனால் அக்நியிலிருந்து ஜலம் உண்டாகிறதென்று சொல்லப்படுகிறது

4. அப்படி ஜலமாய்ப்போன ஸத் 'பஹுப்ரகாரமாக ஆவோம்' என்று மறுபடியும் பார்த்தது; அன்னத்தை (பிருதிவியை) ஸ்ருஷ்டித்தது. ஆதலால்தான் எங்கு அதிக

மழை பொழிகிறதோ அங்கு அன்னம் மிகுதியாய் உண்டாகிறது. அதனால் ஜலத்திலிருந்து அன்னம் உண்டாகிறதென்று சொல்லப் படுகிறது.

---

கண்டம் 3.

1. இதோ காணப்படுகிற (பசு, பக்ஷி, ஸ்தாவராதிகள்) பூதங்களுக்கெல்லாம் மூன்று விதைகள் (காரணங்கள்) உள. (i) முட்டையினின்றும் உண்டான பக்ஷிஜாதி; (ii) கருப்பையி லிருந்து உண்டான மனுஷ்ய பசுவாதி ஜாதி; (iii) பூமியைப் பிளந்துகொண்டு கிளம்புகிற மலை, மரம் முதலான ஸ்தாவரா திகள்.

2-4. இப்படிப்பட்ட (தேஜஸ், ஜலம், பூமி இவைகளுக்குக் காரணமாயும், ஸத் என்று பெயருள்ளதுமான தேவதை, இப் பொழுது நாம் மேற்படி மூன்று தேவதைகளுக்குள் இந்த ஜீவாத் மாவை (ஸ்வபுத்திஸ்தமாயும், பூர்வ ஸ்ருஷ்டி அநுபூதமாயும், தன் ஆபாஸமாயும், கண்ணாடியில் புருஷன்போலும், ஜலத்தில் ஸூர்யன் போலும் தன் பிரதிபிம்பரூபியாயும், சாயாமாத்திரரூபி யாயும் இருக்கிற ஜீவன் என்று பெயருள்ள தன் அம்சத்தை)ப் பிரவேசிக்கச்செய்து, 'பலவித நாமரூபங்களைச் செய்வோம்' என் றும் 'அந்த மூன்று தேவதைகளுள் ஒவ்வொன்றையும் மும்மூன் றாகச் செய்வோம்' என்றும் மறுபடியும் நினைத்தது. பிறகு அப் படியே செய்தது. 'இந்த த்ரிவித்கரணத்தை எப்படிச் செய்தது என்பதை என்னிடமிருந்து அறிந்துகொள்' என்று சிஷ்யனுக்கு குரு சொன்னார்.

(த்ரிவித்கரணம் என்றால், மேற்படி மூன்று பூதங்களில் ஒவ் வொன்றை முதலில் இரண்டு இரண்டு பாகங்களாக ஆக்கி, அதில் ஒரு பாகத்தை வைத்துக்கொண்டு, மற்றொரு பாகத்தை இரண்டு டாகப் பிரித்து, அவைகளில் ஒவ்வொன்றை மற்ற பூதங்கள் ஒவ்வொன்றிலும் கொடுத்துச் சேர்ப்பது.)

---

கண்டம் 4.

1. த்ரிவித்கிருதமான அக்நியின் சிவப்புரூபம் எது வுண்டோ அஃது அத்ரிவித்கிருதமான தேஜஸின் ரூபம்;

வெளுப்பு ரூபமானது ஜலத்தின் ரூபம்; கருப்பு ரூபமானது அன்னத்தின் ரூபம்; இப்படி யறிந்தபிறகு அக்கியின் அக்கித்வ மானது போய்விடுகிறது. அக்கி யென்றது வாய்ப்பேச்சு மாத்திரம்; பெயர் மாத்திரமான விகாரம்; மேற்படி மூன்று ரூபங்கள் மாத்திரம் ஸத்யம்.

2-4. இவ்விதமே ஸூர்யன், சந்திரன், மின்னல் இவைகள் விஷயங்களில் சொல்லப்படவேண்டியது.

5. 'இப்பொழுது நமக்குள் ஒருவனுலாவது கேட்கப்படாததையும், நினைக்கப்படாததையும், அறியப்படாததையும், உதாஹரிக்கப்படவேண்டாம்' என்று முன்னிருந்த மஹாயோக்யர்களாக விருந்த பெரியோர்கள் சொல்லியிருக்கிறுர்கள். அவர்கள் இவைகளைக் கொண்டு (மேற்சொன்ன திருஷ்டாந்தங்களைக் கொண்டு) அறிந்தார்கள்.

6-7. எது சிவப்பு ரூபம்போல் தோன்றுகிறதோ அதைத் தேஜஸின் ரூபமென்றும், எது வெளுப்பு ரூபம்போல் தோன்றுகிறதோ அதை ஜலத்தின் ரூபமென்றும், எது கருப்பு ரூபம் போல் தோன்றுகிறதோ அதை அன்னத்தின் ரூபமென்றும், எது செவ்வையாக அறியப்படாமலிருக்கிறதோ அதை மேற்படி மூன்று ரூபங்களின் சேர்க்கையென்றும் அறிந்தார்கள். 'எப்படி மேற்படி மூன்று தேவதைகளும் புருஷனை யடைந்து மும்மூன்ருக விருக்கின்றுர்களோ அதை என்னிடமிருந்து அறிந்துகொள்' என்று குரு சொன்னுர்.

---

## கண்டம் 5.

1. உண்ணப்படுகிற அன்னம் ஜாடராக்கியால் பக்குவப்பட்டு மூன்றுவிதமாக ஆகிறது. அதன் ஸ்தூல அம்சம் மலமாகவும், மத்யம அம்சம் ரஸவத்தாகப் பரிணமித்து மாம்ஸமாகவும் (அஃதாவது, மாம்ஸத்துடன் சேர்ந்தும்) ஸூக்ஷ்ம அம்சம் (ஸத்தாக விருக்கிற அம்சம்) மேல்போய் ஹ்ருதயத்தை யடைந்து, ஹிதமென்று பெயருள்ள நாடிகளுக்குள் பிரவேசித்து வாக் முதலிய கரணத்தைத் தொழில் செய்யும்படி செய்துகொண்டிருக்கிற மனஸ் ஆகிறது (அஃதாவது, மனஸைப் பலப்படுத்துகிறது).

2. குடிக்கப்பட்ட ஜலம், ஜீர்ணமாகி, மூன்றுவிதமாக ஆகிறது; எப்படியென்றால், ஸ்தூல அம்சம் மூத்திரமாகவும், மத்யமாம்சம் ரக்தமாகவும் (ரக்தத்துடன் சேர்ந்ததாகவும்), ஸூக்ஷ்ம அம்சம் ப்ராணனாகவும் (ப்ராணனைப் பலப்படுத்துவதாகவும்) ஆகிறது.

3. புஜிக்கப்பட்ட தேஜஸ் (தைலம், நெய் முதலான தேஜஸ் ஸம்பந்தமுள்ள வஸ்துக்கள்) ஜீர்ணமாகி, மூன்றுவிதமாகிறது. எப்படியென்றால், ஸ்தூலாம்சம் எலும்பாகவும் எலும்புடன் சேர்ந்தும்), மத்யமாம்சம் எலும்புக்குள்ளிருக்கிற மஜ்ஜையாகவும் (மஞ்சள் நிறமான வைரபாகம்), ஸூக்ஷ்மாம்சம் வாக்காகவும் (வாக்கிற்குப் பேசும்படியான ஸாமர்த்யத்தை யுண்டு பண்ணுவதாகவும்) ஆகிறது.

4. இப்படி மனஸ் அன்னமயமாயும், ப்ராணன் அம்மயமாயும், வாக் தேஜோமயமாயுமிருக்கிறது. 'ஹே! ஸோம்ய!' என்று குரு சொல்ல, 'எனக்கு இன்னும் புரியவில்லை; செவ்வையாகச் சொல்லவேண்டும்' என்று சிஷ்யன் கேட்க, குரு சொல்லுகிறார்.

---

## கண்டம் 6.

1-4. கடையப்பட்ட தயிரிலிருந்து ஸூக்ஷ்மாம்சம் வெண்ணெயாக உயரக்கிளம்பி எப்படி நெய்யாகிறதோ, அப்படிப் போல் அன்னத்தின் ஸூக்ஷ்மாம்சம் உயரக்கிளம்பி மனஸாகவும், ஜலத்தின் மேற்படி அம்சம் பிராணனாகவும் தேஜஸின் மேற்படி அம்சம் வாக்காகவும் ஆகிறது.

5. (5-வது கண்டத்தின் நான்காம் மந்திரம்போல்.)

---

## கண்டம் 7.

1. ஒரு புருஷன் 16 கலைகள் உள்ளவன்; 15 நாள் சாப்பிடாமலிரு; உன் இச்சைப்படி ஜலத்தைக் குடி; ப்ராணன் ஜலமயமானதால் ஜலம் குடிப்பவனுடைய ப்ராணன் போகமாட்டாது.

2. அப்படி அவன் (சிஷ்யனாயிருக்கிற புத்திரன்) 15 நாள் சாப்பிடவில்லை; குருவினிடம்வந்து 'நான் என்ன சொல்லவேண்டும்?' என்று கேட்டான். 'ருக், யஜுஸ், ஸாமா இவ்வேதங்

களைச் சொல்' என்றார். 'அவைகள் என் மனதில் இப்பொழுது தோன்றவில்லை' என்று பதில் சொன்னான்.

3. குரு:—எப்படி பெரிதாக மூட்டப்பட்ட நெருப்பிலிருந்து, மின்மினிப்பூச்சி யளவு காத்ரமுள்ளதாய் மிஞ்சியிருக்கிற ஒருபொறி (மற்ற நெருப்பு அணைந்துபோயிருக்க) பல வஸ்துக்களை எரிக்கமுடியாதோ, அப்படி, உனக்குள்ள 16 கலைகளில் ஒரு கலைமாத்திரம் மிஞ்சியிருப்பதால்தான் வேதங்களைச் சொல்ல முடியவில்லை; ஆதலால் சாப்பிடு.

4. பிறகு என்னிடமிருந்து அறிவாய். பிறகு சிஷ்யன் சாப்பிட்டுக் குருவினிடம் மறுபடியும் வந்தான். அப்பொழுது (வேதங்களில்) சிலபாகத்தைக் கேட்டார். எல்லாவற்றையும் சரியாகச் சொன்னான். மறுபடியும் குரு சொல்லுகிறார்.

5. எப்படி மேற்கண்டபடியுள்ள நெருப்புப் பொறியை, த்ருணங்களைக்கொண்டு மூட்டி, ஜ்வாலை செய்தால், அப்பொழுது அதனால் பலவற்றை எரித்துப்போடலாமோ, அப்படி.

6. உன்னிடம் மிஞ்சியிருந்த ஒரு கலையானது, நீ சாப்பிட்ட அன்னத்தால், மனஸ் பலத்தையடைந்து அதனால் வேதங்களைச் சொல்ல முடிந்தது. ஆதலால், மனஸ் அன்னமயம், ப்ராணன் ஜலமயம், வாக் தேஜோமயம். இப்படி சிஷ்யன் அறிந்தான்.

---

## கண்டம் 8.

1. உத்தாலகர் தன்புத்திரன் ச்வேதகேதுவைப் பார்த்து (அடியிற் கண்டபடி) சொன்னார்:—'ஸுஷுப்தியை என்னிடமிருந்து அறிந்துகொள்; ஒரு புருஷன் தூங்கும்பொழுது ஸத்துடன் ஸம்பன்னனாகக் கூடியிருக்கிறான்; தன்னைத் தானே சேருகிறான்; (அஃதாவது, பிரதிபிம்பியாயிருக்கிற ஜீவன், ஸகல வ்யவஹாரங்களைவிட்டு, சுத்த ஆத்மாவுடன் சேர்ந்துபோகிறான்). அதனால்தான் தூங்குகிறான் என்று சொல்லப்படுகிறது.'

2. எப்படிக் கயிற்றால் கட்டப்பட்ட ஒரு பக்ஷியானது, திக்குதோறும் கிளம்பிப்போய் விழுந்து, வேறு இருப்பிடம் அகப்படாமல், மறுபடியும் கட்டுக்கயிறிடம் வந்து சேருகிறதோ,

அப்படி அந்த மனஸ் (மனஸ்ஸந்தமாயிருக்கிற ஆத்மா, ஜீவன்) திக்குதோறும் விழுந்து (ஜாக்ரத் ஸ்வப்ன அவஸ்தைகளில், ஸுக துக்காதி லக்ஷணமுள்ள கர்மாக்களை யநுபவித்து, மிக சிரமப்பட்டுக் கடைசியில்) வேறு இடம் அகப்படாமல், ஸுஷுப்தி காலத்தில்) ப்ராணனையே (ப்ராணன் என்று பெயர் பெற்ற பரமாத்மாவையே, ஸத்தையே) வந்தடைகிறது. மனஸ் ப்ராணனால் (ஜீவன் ஸத்தினால்) கட்டுப்பட்டிருக்கிறதல்லவா.

3. (அன்னாதி காரிய காரண பரம்பரையினால் ஜகத்தின் மூலம் காட்டப்படுகிறது.)

குரு மறுபடியும் சொல்லுகிறார்; பசி, தாஹம் இவைகளின் வரலாற்றைக் கேள். அப்பா! ஒரு புருஷன் சாப்பிட இச்சிக்கிறான் என்ற பெயரானது முக்கியமல்ல, கௌணம்; (அஃதாவது, புருஷன், ஜீவன், சாப்பிட இச்சிக்கவில்லை, அடியிற்கண்டபடி ஜலம் அன்னத்தை வேண்டுகிறது); சாப்பிட்ட அன்னத்தை ஜலம் நடத்துகிறது. (கரைத்து, பக்குவப்படுத்தி, மலத்தை நீக்கி ஸாரத்தைத் தன்னோடு சேர்த்துக்கொள்ளுகிறது; அன்னத்தை ஜீர்ணமாக்குகிறது); மாட்டை நடத்துபவன், குதிரையை நடத்துபவன், ஜனங்களை நடத்துபவன் என்று சொல்லப்படுவதுபோல அன்னத்தை நடத்துவது என்று ஜலம் சொல்லப்படுகிறது. அந்த அன்னத்தால் முளைத்த முளை இந்தச் சரீரம் (அஃதாவது, அன்ன ரஸம் வரிசையாய்ச் சுக்ல சோணிதமாய்த் தேஹமாகிறது; இதற்கு மூலம் இல்லாமலிருக்கவில்லை.

4. சிஷ்யன்:—இதற்கு அன்னத்தைக்காட்டிலும் வேறு எது மூலம்?

குரு:—அன்னம் முளையாயிருப்பதால் (அழிவுள்ளதால்) அதற்கு அப் மூலம் என்றறி; அப் முளையாயிருப்பதால் அதற்குத் தேஜஸ் மூலமென்றறி; அதுவும் முளையாயிருப்பதால் அதற்கு ஸத் மூலம் என்றறி. இந்தப் பிரஜைகள் ஸத்திலிருந்து உத்பத்தியானவை; ஸத்தினால் பிழைத்திருக்கின்றன; ஸத்தையே கடைசியில் அடைகின்றன.

5. அப்படியே 'குடிக்க இச்சையுள்ளவனாயிருக்கிறான் புருஷன்' என்ற பெயரும் கௌணந்தான்; 'புருஷன்' என்ற பெயரும் கௌணந்தான்; புருஷன் குடிக்கவில்லை; தேஜஸ் குடிக்க இச்சிக்கிறது; எப்படியென்றால், குடிக்கப்பட்ட ஜலத்தை தேஜஸ் நடத்துகிறது (வற்ற அடிக்கிறது); (முன் சொன்ன திருஷ்டாந்தம் சொல்லப்படுகிறது; ஜலத்தை நடத்துவது என்று தேஜஸுக்குப் பெயர் கிடைத்தது; அதனால்தான் இந்தச் சரீரமுளை முளைத்தது; அதற்கு மூலம் உண்டு.

6. சிஷ்யன்:—அந்த மூலம் ஜலத்தைத் தவிர வேறாக இருக்கக் கூடுமா?

குரு:—முன் சொன்னபடி வரிசையாக ஸத்தே மூலம் என்றறி. எல்லாம் ஸத்திலிருந்து உண்டாகி, அதனால் பிழைத்து அதிலேயே லயத்தை யடைகின்றன. இந்த மூன்று தேவதைகளும் புருஷனையடைந்து மும்மூன்றாக ஆகிறார்களென்று ஏற்கனவே சொல்லப்பட்டிருக்கிற தல்லவா; இறந்துபோன புருஷனுடைய வாக் மனஸைப்போய்ச் சேருகிறது, மனஸ் ப்ராணனையும், ப்ராணன் தேஜஸையும், தேஜஸ் பரமாத்மாவையும் அடைகின்றன. (இவ்விதமாக மனஸ்த்தமாயிருக்கிற ஜீவன், ஆத்மக்ஞன், ஸுஷுப்தி காலத்தில்போல ஸத்தோடு கலந்துபோகிறான்; அவன் மறுபடியும் வேறு தேஹத்தை எடுக்க, ஸுஷுப்தியிலிருந்து எழுந்திருப்பதுபோல எழுந்திருந்து வருவதில்லை; ஆனால் அனாத்மக்ஞனா யிருப்பவன், லோகத்தில் ஒருவன் ஒரு பயமுள்ள பிரதேசத்தை விட்டுப் பயமில்லாத இடத்திற்குப் போவதுபோல, ஸத்திலே நின்று மறுபடியும், ஸுஷுப்தியிலிருந்து கிளம்புவது போல, கிளம்பி, செத்து, மறுபடியும் வேறு தேஹத்தை யடைகிறான்). இந்த பரமாத்மாதான் ஸர்வ ஜகத்திற்கும் காரணமான அணுப்ரமாண வஸ்து (அஃதாவது, அதிஸூக்ஷ்மமான வஸ்து).

7. இந்த எல்லா ஜகத்தும் இந்த ஆத்மாவுள்ளது; அது ஸத்ய வஸ்து; அதுதான் ஆத்மா வென்று சொல்லப்பட்டது; அதுதான் நீயாயிருக்கிறாய்.

சிஷ்யன்:—(ஒவ்வொரு நாளும் எல்லா ஜீவர்களும் ஸுஷுப்தி அவஸ்தையில் ஸத்துடன் கலந்து போகிறார்கள் என்று சொல்லி யிருக்கிறீரே, அப்படி யிருந்தால், ஸத்மயமாகி

விட்டவர்கள் அப்படி ஸன்மயமாகிவிட்டோம் என்று ஏன் அறிய வில்லை? பிறகு விழித்துக்கொண்டு விடுகிறார்கள்; ஆதலால் இந்த ஸந்தேஹம் இருக்கிறது) இன்னொருதரம் திருஷ்டாந்தத்துடன் செவ்வையாகச் சொல்லும்.

குரு:—அப்படியே என்று சொல்லுகிறார்.

---

கண்டம் 9.

1. பலவிடங்களிலிருக்கிற விருக்ஷங்களுடைய ரஸங்களை ஒன்றாகச் சேர்த்து, ஒரே ரஸமாக ஆக்கி, தேனைத் தேனீக்கள் உண்டுபண்ணுகின்றன.

2. அந்த ரஸங்களில் ஒவ்வொன்றும் தான் இன்ன விருக்ஷத்தின் ரஸமாய் இருக்கிறேன் என்று அறிகின்றனவா? இல்லையே; அப்படிப்போல் இந்த எல்லா ப்ரஜைகளும் ஸத்தை யடைந்தும் ஸத்தினிடத்தில் சேர்ந்துவிட்டோம் என்பதை அறியவில்லை (ஸுஷுப்தி, மரணம், பிரளயம், மூர்ச்சை முதலான காலங்களில் அறியவில்லை).

3. (ஆனால் அவைகள் எப்படி யாகின்றன வென்றால்) அவரவர்கள் கர்மாநுஸாரப்படி இவ்வுலகத்திற்குத் திரும்பிவந்து வ்யாக்ரம், ஸிம்ஹம் முதலான ஜந்துக்களாக ஆய்விடுகின்றார்கள்.

4. அப்படிப்பட்ட பரமாத்மா, இந்த எல்லா ஜகத்தும் அவரால் நிரம்பியிருக்கிறது; அவர்தான் ஸத்யம்; அவர்தான் ஆத்மா வென்று சொல்லப்பட்டவர்; அவர் நீயாயிருக்கிறாய் என்று குரு சொல்ல, சிஷ்யன் (ஒருவன் தூங்கி எழுந்திருந்தபிறகு ஓரிடத்திற்குப் போகும்போது தான் வீட்டிலிருந்து வருவதாகச் சொல்லுகிறான்; ஸத்தினிடமிருந்து வருவதாகச் சொல்லாமல் இப்படிச் சொல்லக் காரணமென்ன? அதனால் எனக்கு ஸந்தேஹ மாயிருக்கிறது) இன்னொருதரம் தெளிவாகச் சொல்லும் என்று கேட்டான்.

குரு:—அப்படியே சொல்லுகிறேன்.

---

## கண்டம் 10.

1—2. ஸமுத்திரத்தினின்றும் மேகவழியாக வண்டான நதிகளும் நதங்களும், அந்த ஸமுத்திரத்தையே மறுபடியு மடைந்து ஸமுத்திரமாகக் கலந்துபோய், பிறகு இன்ன நதியாக நாம் இருந்தோம் என்பதை எப்படி அவைகள் அறியாவோ, அப்படி இந்த ப்ரஜைகள் எல்லோரும், ஸத்தினிடமிருந்து வந்திருந்த போதிலும், ஸத்தினிடமிருந்து வந்தோம் என்பதை அறியாமலிருக்கிறார்கள். புலி முதலியவைகளாய் மறுபடியும் ஜன்மாவை அடைகிறார்கள்.

3. அவர்தான் அணுப்ரமாணவஸ்து; இந்த எல்லா ஜகத்திலும் இந்த ஆத்மாவுள்ளது; அது ஸத்யவஸ்து; அதுதான் ஆத்மாவென்று சொல்லப்பட்டது; அவர் நீயாகவிருக்கிறாய்.

சிஷ்யன்:—(ஜீவர்கள் அவைகளின் காரணபாவத்தை, ஸத்தை, தினந்தோறும் அடைந்தபோதிலும், ஸுஷுப்தி, மரணம், பிரளயம் இவ் வஸ்த்தைகளில் நசித்துப்போக வில்லையென்று சொல்லப் படுகிறதே! அதற்குத் திருஷ்டாந்த மென்ன வென்று) இன்னொரு தரம் தெளிவாகச் சொல்லும்.

குரு:—அப்படியே சொல்லுகிறேன்.

---

## கண்டம் 11.

1. ஒரு பெரிய மரத்தின் அடியில் ஒரு பக்கத்தில் ஒரு வெட்டு வெட்டினால் அந்த மரம் சாவதில்லை; பிழைத்துக்கொண்டிருந்தே ஸாரம் வடிகிறது; நடுவில் வெட்டினாலும் அப்படியே; நுனியில் வெட்டினாலும் அப்படியே; அது ஜீவனால் வ்யாபித்துக் கொள்ளப்பட்டுப் பூதஸம்பந்தான ஜலத்தைக் குடித்து ஸந்தோஷமாயிருக்கிறது.

2. அந்த மரத்தில் ஒரு கிளையிலிருக்கிற ஜீவன் போய்விட்டால் அந்தக் கிளை பட்டுப்போகிறது; இரண்டாவது, மூன்றாவது கிளைகளும் அப்படியே; எல்லாவற்றையும் ஜீவன் விட்டுவிட்டால் எல்லாம் பட்டுப்போகிறது, அப்படிப்போல் அறி.

3. ஜீவனால் விடப்பட்ட இந்தத் தேஹம் நசிக்கிறதே யல்லாது ஜீவன் சாவதில்லை. அவர்தான் அணுப்ரமாணவஸ்து;

இந்த எல்லா ஜகத்திலும் இந்த ஆத்மா வுள்ளது; அது ஸத்ய வஸ்து; அதுதான் ஆத்மா வென்று சொல்லப்பட்டது; அவர் நீயா யிருக்கிறாய்.

சிஷ்யன்:—(அத்யந்தம் ஸூக்ஷ்மமாயிருக்கிற ஸத்தினிட மிருந்து இந்த மஹத்தான ஜகத் எப்படி உண்டாயிற்று; அதைத் திருஷ்டாந்தத்துடன் சொல்ல) இன்னொருதரம் தெளிவாகச் சொல்லும், என்றான்.

குரு:—அப்படியே சொல்லுகிறேன்.

(ஒரு காரியம் செய்துகொண்டிருந்தவன் தூங்கியெழுந்த பிறகு, 'அந்தக் காரியம் பாக்கி இருக்கிறது. அதைச் செய்ய வேண்டும்' என்று சொல்லுகிறான்; இதனால் ஜீவனுக்கு ஞாபக மிருப்பதாகத் தெரியவருகிறது; மேலும், ஒரு குழந்தை பிறந்த வுடன் ஸ்தன்யபான ஆசையும் பயமும் இருக்கிறது; இதனால் பூர்வஜன்ம வாஸனை யிருக்கிறதென்றும் தெரியும்; மேலும் ஸ்வர்க்காதி போகத்திற்காக யாகம் செய்யப்படுகிறது; தேஹம் போன பிறகு ஜீவன் ஸ்வர்க்கத்திற்குப் போய் அநுபவிக்கிறான். இத்யாதி காரணங்களால் ஜீவன் சாவதில்லை.)

---

## கண்டம் 12.

1—3. ஒரு ஆலம்பழத்தைக் கொண்டுவா.

சிஷ்யன்:—இதோ கொண்டுவந்தேன்.

குரு:—அதைப் பிள.

சிஷ்யன்:—பிளந்தேன்.

குரு:—அதில் என்ன பார்க்கிறாய்?

சிஷ்யன்:—அத்யந்தம் அணுக்களாகவிருக்கிற விதைகளைப் பார்க்கிறேன்.

குரு:—அவைகளில் ஒரு விதையையெடுத்துப் பிள.

சிஷ்யன்:—பிளந்தேன்.

குரு:—அதில் என்ன பார்க்கிறாய்?

சிஷ்யன்:—ஒன்றுமில்லை.

குரு:—இப்படி ஒருவிதமாகவும் தோன்றாத ஸூக்ஷ்மத்தி லிருந்து இந்த மஹா பெரிய ஆலமரம் எப்படி வெளிபுறப்பட்ட

தோ அப்படிப்போல் அதிஸூக்ஷ்மமாயிருக்கிற ஸத்தினிடமிருந்து இந்த மஹா ஜகத் உண்டாயிற்று என்று அறி. அது தான் அணுப்ரமாணவஸ்து; இந்த எல்லா ஜகத்திலும் இந்த ஆத்மாவுள்ளது; அது ஸத்யவஸ்து; அதுதான் ஆத்மா வென்று சொல்லப்பட்டது; அவர் நீயாயிருக்கிறாய்.

சிஷ்யன்:—(இப்படி இந்த ஸூக்ஷ்மமான ஸத்வஸ்து ஜகத்திற்கு மூலமாகவிருந்தால் ஏன் அஃது அறியப்படவில்லை, திருஷ்டாந்தத்துடன் கேட்கக் கருதி) இன்னொருதரம் தெளிவாய்ச் சொல்லும், என்றான்.

குரு:—அப்படியே சொல்லுகிறேன்.

---

## கண்டம் 13.

1—3. 'ஓர் உப்புக்கட்டியை ஒரு செம்பு ஜலத்தில் போட்டுவிட்டுக் காலையில் என்னிடம் வா' என்று குரு சொன்னார்; சிஷ்யன் அப்படியே செய்தான். 'எந்த உப்பை ராத்ரியில் ஜலத்தில் போட்டனையோ அதை இப்பொழுது எடுத்துவா' என்று குரு சொன்னார். அதைச் சிஷ்யன் ஜலத்தில் தேடிப்பார்த்தான்; அகப்படவில்லை, ஜலத்தில் கரைந்துபோயிற்று. குரு:—(அது ஜலத்தில் கரைந்து மறைந்துபோயிற்று; அதைக் கண்ணால் பார்க்க முடியாது, தொட்டுப்பார்க்கவும் முடியாது; வேறு விதமாக அறியலாம் பார் என்று) மேல் ஜலத்தைக் குடித்துப்பார் என்றார்.

சிஷ்யன்:—உப்பாயிருக்கிறது.

குரு:—நடுவில் எடுத்துக் குடித்துப்பார்.

சிஷ்யன்:—உப்பாயிருக்கிறது.

குரு:—அடியில் எடுத்துக் குடி.

சிஷ்யன்:—உப்பாயிருக்கிறது.

குரு:—அந்த ஜலத்தை விட்டுவிட்டு இங்குவா சொல்லுகிறேன்.

சிஷ்யன்:—அப்படியே வந்தான்.

குரு:—ஜலத்தில் உப்பு எப்பொழுதும் இருக்கிறது; எப்படி இந்த உப்பு (கண்ணால் பார்க்கக்கூடாமலும், கையால் தொடக்கூடாமலும் நாவால் சுவைத்து மட்டும் அறியப்படுவ

தாக ஜலத்தில்) மறைந்திருக்கிறதோ, அப்படி ஸத் (இந்தத் தேஹத்தில்) மறைந்திருக்கிறது. (இந்திரியங்களால் அறியப் படக் கூடாதது; வேறு விதமாக அறியவேண்டும்.) அவர்தான் அணுப்ரமாண வஸ்து; இந்த எல்லா ஜகத்திலும் இந்த ஆத்மா வுள்ளது; அது ஸத்யவஸ்து; அதுதான் ஆத்மா வென்று சொல்லப்பட்டது; அவர் நீயாகவிருக்கிறாய்.

சிஷ்யன்:—(அப்படி வேறுவிதமாக அறிவதற்கு உபாய மென்ன என்று கேட்க) இன்னொருதரம் தெளிவாகச் சொல்லும் என்றான்.

குரு:—அப்படியே சொல்லுகிறேன்.

---

## கண்டம் 14.

1—3. கந்தார தேசத்திலிருந்து ஒருவனைக் கண்களையும், கைகளையும் கட்டிக் கொண்டுவந்து, ஜனமில்லாத ஒரு காட்டில் விட்டுவிட்டால் அவன் ஒரு திக்கிலும் போகக்கூடாமல், அங்கிருந்து 'கண் கை கட்டப்பட்டவனாக இவ்விடத்தில் கொண்டுவரப் பட்டு விடப்பட்டிருக்கிறேன் (யாரேனும் என்னை அவிழ்த்து விடுங்கள்),' என்று எப்படிக் கதறுகிறானோ, அப்பொழுது, (தெய்வவசாத்) தயையுள்ள ஒருவன் வந்து, அந்தக் கட்டுக்களை அவிழ்த்துவிட்டு, கந்தாரதேசம் இன்ன திக்கிலிருக்கிறது, இன்ன திக்குவழியாகப் போ, என்று சொல்ல, அதைக் கேட்டு அறிந்தவனாயிருக்கிற இவன் கிராமத்திற்குக் கிராமம் வழிகேட்டுக் கொண்டுபோய்க் கடைசியில் தன் தேசத்தை எப்படி யடைவானோ அப்படிப்போல். [புருஷன் ஸத்தினிடமிருந்து கிளம்பித் தேஜோ பன்னாதி மயமாயிருக்கிற தேஹாரண்யத்தை யடைந்து (வாத, பித்த, கப, ரக்த, மேதஸ், மாம்ஸ, அஸ்தி, மஜ்ஜை, சுக்ல, கிருமி, மூத்ர, புரீஷவத்தேஹம்) மோஹபடத்தினால் கட்டப்பட்ட கண்ணுள்ளவனாகவும், பார்யா புத்திர பசு பந்தாதி திருஷ்டா திருஷ்ட அநேக விஷயங்களாயிருக்கிற ஆசையாகிற கயிற்றால் கட்டப்பட்டவனாகவும், புண்ய பாபங்களாகிற திருடர்களால் கொண்டுவரப் பட்டவனாகவும், நான் இவன் புத்திரன், இவர்கள் என் பந்துக்கள், என் தனம் நஷ்டமாகப் போயிற்று, நான் எப்படிப் பிழைத் திருக்கப் போகிறேன் முதலான அநேக வார்த்தைகளைப்பேசி

கதறுகிறவனாகவும் ஆகி, பிறகு, ஏதோ புண்யவசத்தால் கருணை யுள்ள ஒரு குருவால் வழி காட்டப்பட்டு, ஸம்ஸாரத்தில் விரக்த னாய், கடைசியில் ஸத்தை யடைகிறான்.]

ஆசார்யவானாக விருக்கிற புருஷன் (பிரம்மத்தை) தெரிந்து கொள்ளுகிறான். அவன் தெரிந்துகொண்ட பிறகு ஸத்ஸம்பத் திற்கு (மோக்ஷத்திற்கு, ஸத்துடன் சேருவதற்குத் தாமஸம் எல்லாம் கூடி, ஆரப்த கர்மாவால் எதுவரை அநுபவமிருக்கிற தோ அந்த அநுபவம் முடிந்தவுடன் தேஹபாதம் வருகிறது; அதுதான் மோக்ஷகாலம்) அந்த மோக்ஷகாலம் வரையில்தான் தாமஸம்; உடனே ஸத்ஸம்பத்தி கிடைக்கிறது.

(பிரம்மக்ஞானம் வந்தவுடன் ஸஞ்சித கர்மாக்களும், ஆகாமி கர்மாக்களும் நசித்தபோதிலும் ஆரப்த கர்மாநுபவம்மட்டும் உண்டு; வில்லினிடத்திலே நின்றும் விடப்பட்ட ஒரு பாணமா னது லக்ஷ்யத்தில்பட்டு, அதனால் தடைப்பட்டபோதிலும், வேகமிச்சத்தால் மறுபடியும் லக்ஷ்யத்தைவிட்டு மேலும் போகிறதோ அப்படிப் போல் என்றறிக.)

4. அப்படிப்பட்ட இவர் அணுப்ரமாணவஸ்து; இந்த எல்லா ஜகத்திலும் இந்த ஆத்மாவுள்ளது; அது ஸத்யவஸ்து; அதுதான் ஆத்மா வென்று சொல்லப்படுகிறது; அவர், ஹே! ச்வேதகேதோ! நீயாயிருக்கிறாய்.

சிஷ்யன்:—(அப்படி ஆசார்யவானாயிருக்கிறவன் எந்தக் கிரமமாக ஸத்தை யடைகிறான், அதைத் திருஷ்டாந்தத்துடன் அறிய) இன்னொருதரம் தெளிவாகச் சொல்லும், என்றான்.

பிதா (குரு):—அப்படியே சொல்லுகிறேன்.

---

## கண்டம் 15.

1—2. மரணாவஸ்தையுள்ள ஒரு புருஷனைப் பந்துக்கள் சுற்றிக்கொண்டு, என்னைத் தெரியுமா?, என்னைத் தெரியுமா? என்று கேட்க, எதுவரையில் அவனுடைய வாக்கு மனஸிலும்,

மனஸ் ப்ராணனிடத்திலும், ப்ராணன் தேஜஸினிடத்திலும், தேஜஸ் பரமாத்மாவினிடத்திலும் அடைகிறதில்லையோ, அது வரையில் 'உன்னைத் தெரியும், உன்னைத் தெரியும்' என்று சொல்லுகிறான். பிறகு அவனுக்கு ஒன்றும் தெரியவில்லை.

3. அப்படிப்பட்ட இவர் அணுப்ரமாண வஸ்து; இந்த எல்லா ஜகத்திலும் இந்த ஆத்மாவுள்ளது; அது ஸத்யவஸ்து; அதுதான் ஆத்மா வென்று சொல்லப்படுகிறது; அவர், ஹே! ச்வேதகேதோ! நீயாயிருக்கிறாய்.

சிஷ்யன்:—(ஸத்ஸம்பத்தியானவுடன் வித்வான் திரும்புவதில்லை, அவித்வான் திரும்புகிறான் என்று சொல்லப்படுகிறதே, அதற்கு என்ன காரணம், திருஷ்டாந்தம் என்ன வென்றறிய) இன்னொருதரம் தெளிவாகச் சொல்லும், என்றான்.

குரு:—அப்படியே சொல்லுகிறேன்.

---

## கண்டம் 16.

1—2. ஒரு புருஷனை ராஜபுருஷர்கள் கையைப் பிடித்துக் கொண்டு வந்தார்கள்; 'இவன் என்ன செய்தான்?' என்று ஒருவன் கேட்க, 'திருடினான்' என்று சொன்னார்கள். பிடிபட்டவன் தான் திருடவில்லை என்று சொன்னால், 'ஒரு கோடரியைப் பழுக்கக் காய்ச்சி அவன் கையில் கொடு, அவன் திருடியிருந்தால் அஃது அவனை எரித்துவிடும், பொய்யாக விருந்தால் எரிக்கமாட்டாது' என்று ஒருவன் சொல்ல, அப்படிச் செய்யப்பட்டது. திருடியிருந்தால் அவனைச் சுட்டுப் போடுகிறது; இல்லாவிடில் சுடவில்லை. அப்படிப்போல் பிரம்மக்ஞானி திரும்பிவராமல் ஸத்தினிடமே இருந்துவிடுகிறான், (அஞாத்மவித் திரும்புகிறான்).

3. அப்படிப்பட்ட இவர் அணுப்ரமாணவஸ்து; இந்த எல்லா ஜகத்திலும் இந்த ஆத்மாவுள்ளது; அதுதான் ஆத்மா வென்று சொல்லப்படுகிறது; அவர், ஹே! ச்வேதகேதோ! நீயாயிருக்கிறாய்.

இந்தப்படி ச்வேதகேது அறிந்துகொண்டார்.

---

# ஏழாம் ப்ரபாடகம்

---

## கண்டம் 1.

1. நாரதர் ஸநத்குமாரரிடம்போய் அத்யயநம் செய்து வைய்யுங்கள் என்று கேட்டார். உனக்குத் தெரிந்ததைச் சொல், அதற்கு மேல் உனக்குச் சொல்லுகிறேன் என்று ஸநத்குமாரர் சொன்னார்.

2. நாரதர்:—ருக்வேதம், யஜுர்வேதம், ஸாமவேதம், நான்காவதாகிய அதர்வவேதம், ஐந்தாவது வேதமாகிய இதிஹாஸ புராணம், வேதங்களுக்கு வேதம் (வ்யாகரணம்), பிதிருக்கள் ஸம்பந்தமான கல்பம், ராசி கணித சாஸ்திரம், தைவசாஸ்திரம் (வால் நக்ஷத்ர முதலான உத்பாதங்களைப் பற்றியது,) நிதி சாஸ்திரம், தர்க்க சாஸ்திரம், ஏகாயநம், நீதி சாஸ்திரம், தேவ வித்யை (வேதங்களைப்பற்றிய சுருக்கமான தாத்பர்ய கிரந்தம்), பிரம்ம வித்யை (சிக்ஷா, கல்பம் முதலியவை), பூதவித்யை(பஞ்ச பூதங்களைப் பற்றிய சாஸ்திரம்), க்ஷத்ரவித்யை (தநுர்வேதம்), நக்ஷத்ரவித்யை (ஜ்யோதிஷம்), ஸர்ப்பவித்யை, கந்தர்வவித்யை (கீதம், நர்த்தனம் முதலியன) இவைகளை நான் அத்யயநம் செய்திருக்கிறேன், தெரியும்.

3—4. அப்படித் தெரிந்த நான் மந்திரவித்தாய் மாத்திரமிருக்கிறேன் (கர்மாவை யறிந்தவனாக மாத்திரம், சப்தார்த்தத்தைமாத்திரம் அறிந்தவன், உள்கருத்தறிந்தவன் அன்று); ஆத்மவித்தாக விருக்கவில்லை. 'ஆத்மவித்தே சோகத்தைக் கடக்கிறான்' என்று உங்களைப்போன்ற பெரியோர்களிடத்தில் கேள்விப்பட்டிருக்கிறேன். நான் சோகத்தை யடைந்திருக்கிறேன். அந்த சோக ஸமுத்திரத்திலிருந்து கரையேறும்படி செய்யுங்கள். (அஃதாவது, ஆத்மவித்யையைப் போதியுங்கள்.)

இப்படிச் சொல்ல, ஸநத்குமாரர் சொல்லுவதாவது:—நீ எவைகளை அத்யயநம் செய்து தெரிந்துகொண்டிருக்கிறாயோ

அவை எல்லாம் நாமாதான் (பெயர்மாத்திரம்தான்); ருக்வேதாதிகள் எல்லாம் நாமாவே (நாமாவால்மட்டும் ருக்வேதாதிகளை அறிந்திருக்கிறாய்); ஆதலால் நாமாவைப் பிரம்மமாக உபாஸி (நாமபஜனம் செய்).

5. (பலன் என்னவெனில்) நாமாவைப் பிரம்மமாக உபாஸிப்பவன் அந்த நாமாவிற்கு எவ்வளவு விஷயம் கோசரமாயிருக்கிறதோ அவ்வளவு விஷயங்களிலேயும் அவனுக்கு காமசரணம், ஸ்வேச்சானுபவம் இருக்கும். (அஃதாவது, அந்த விஷயங்களெல்லாம் அவனுக்குத் தெரியும்; கர்மாவைச்செய்து அதன் பயனையடைவான்.)

'நாமாவைக்காட்டிலும் பெரிது இருக்கிறதா?' என்று நாரதர் கேட்க, 'உண்டு' என்று ஸநத்குமாரர் சொல்ல, 'அப்படியிருந்தால் சொல்லுங்கள்' என்று நாரதர் கேட்க, ஸநத்குமாரர் சொல்லுகிறார்.

---

## கண்டம் 2.

1. நாமாவைக்காட்டிலும் வாக் பெரிது; வாக்குத்தான் ருக்வேதத்தைத் தெரியவைக்கிறது; அப்படியே யஜுர்வேதம் முதலியன முன் சொல்லப்பட்டவைகளையும் தெரியவைக்கிறது; மேலும், ஸ்வர்க்கம், பிருதிவி, வாயு, ஆகாசம், ஜலம், தேஜஸ், தேவர்கள், மனுஷ்யர்கள், மிருகங்கள், பக்ஷிகள், செடி மரங்கள், கெட்டஜந்துக்கள், தர்மம், அதர்மம், ஸத்யம், அந்ருதம், ஸாது, அஸாது, ஹ்ருதயத்திற்குப் பிரியமுள்ளவை, அப்படி இல்லாதவை, இவைகளையும் தெரிவிக்கிறது. வாக்கில்லாவிட்டால் தர்மம் இது வென்பதும், அதர்மம் இது வென்பதும் தெரியமாட்டாது (எப்படியென்றால், வாக்கில்லாவிட்டால் சொல்லுபவனில்லை; சொல்லுபவனில்லாதபொழுது கேட்பவனில்லை; அப்பொழுது தர்மாதர்மம் எப்படித் தெரியும்). அப்படியே ஸத்யம் முதலியவை இவை யென்பதும், அஸத்யம் முதலியவை இவை யென்பதும் தெரியமாட்டாது; வாக்குத்தான் எல்லாவற்றையும் தெரிவிக்கிறது. ஆதலால் வாக்கைப் பிரம்மமாக உபாஸி.

2. (பலன்) முன்போல் வாக்கிற்கு எவ்வளவு விஷயம் கோசரமோ அவ்வளவிலும் இவனுக்கு ஸ்வேச்சானுபவமிருக்கும்.

'வாக்கைக்காட்டிலும் பெரிதுண்டா?' என்று நாரதர் கேட்க, 'உண்டு' என்று ஸநத்குமாரர் சொல்ல, 'அப்படியிருந்தால் சொல்லும்' என்று நாரதர் கேட்க, ஸநத்குமாரர் சொல்லுகிறார்.

---

## கண்டம் 3.

**1.** வாக்கைக்காட்டிலும் மனஸ் பெரிது; எப்படி இரண்டு நெல்லிக்காய்களையாவது, இரண்டு இலந்தைப் பழங்களையாவது, இரண்டு தானிக்காய்களையாவது ஒரு கைமுஷ்டி தனக்குள் அடக்கிக் கொண்டிருக்கிறதோ, அப்படி நாமாவையும் வாக்கையும், மனஸ் தனக்குள் அடக்கிக்கொண்டிருக்கிறது; மந்திரங்களை அத்யயநம் செய்யவேண்டுமென்று மனஸால் நினைத்தபிறகுதான் அத்யயநம் செய்யப்படுகிறது. அப்படியே முதலில் நினைத்து பிறகு கர்மாக்கள் செய்யப்படுகின்றன. அப்படியே நினைத்துத்தான் புத்திராதிகளையும், லோகங்களையும் அடைகிறான். மனஸ்தான் ஆத்மா, லோகம், பிரம்மம். ஆதலால், மனஸைப் பிரம்மமாக உபாஸி.

**2.** (பலன் முன்போல் இதற்குதக்கபடி) 'மனஸைக்காட்டிலும் பெரிது உண்டோ?' வென்று நாரதர் கேட்க, 'உண்டு' என்று ஸநத்குமாரர் சொல்லுகிறார்.

---

## கண்டம் 4.

**1.** மனஸைக்காட்டிலும் ஸங்கல்பம் பெரிது. (ஸங்கல்பம்—மனஸினுடைய விருத்தி; விருத்தி இல்லாவிட்டால் மனஸ் இருக்கமாட்டாது, உஷ்ணபாவமில்லாவிட்டால் அக்நி யென்பது எப்படி யிருக்கமாட்டாதோ அப்படிப்போல்.) எப்பொழுது ஸங்கல்பிக்கிறதோ அப்பொழுது நினைக்கிறது; மனஸ் உண்டாகிறது; பிறகு வாக்கைக் கிளப்பிவிடுகிறது; வாக்கை நாமாவில் (நாமாக்களை உச்சரிக்கும்படி) கிளப்பிவிடுகிறது; நாமாக்களில் மந்திரங்கள் அடங்கியிருக்கின்றன; மந்திரங்களில் கர்மாக்கள் அடங்கியிருக்கின்றன; (அஃதாவது, மந்திரங்களால் கர்மாக்கள் சொல்லப்படுகின்றன.)

**2.** இவைகள் (மனஸ் முதலியன) ஸங்கல்பத்தில் லயத்தை யடைகின்றன; ஸங்கல்பத்தில் உத்பத்தியானவை. ஸங்கல்பத்தில்

இருக்கின்றன; ஸ்வர்க்கமும், பிருதிவியும் ஸங்கல்பிக்கின்றன; அப்படியே வாயுவும், ஆகாசமும்; அப்படியே அப்பும், தேஜஸும் இவைகள் ஸங்கல்பித்ததனால் மழை ஸங்கல்பித்தது (உண்டாயிற்று); மழையால் அன்னம், அன்னத்தால் ப்ராணன், ப்ராணனால் மந்திரம், மந்திரத்தால் அக்நிஹோத்ராதி கர்மா, அக்கர்மாவால் ஸ்வர்க்காதிலோக பலன்; அந்த பலத்தால் ஸர்வம் (எல்லாம்) ஸங்கல்பிக்கிறது (உண்டாகிறது); ஆதலால் எல்லாம் ஸங்கல்ப மூலமாயிருக்கிறது. ஆதலால் ஸங்கல்பத்தைப் பிரம்மமாக உபாஸி.

3. (பலன்) அப்படி உபாஸிப்பவனுக்கு, ஏற்பட்டிருக்கின்றனவும் த்ருவமாயிருக்கின்றனவுமான லோகங்கள் கிடைக்கின்றன. இவனும் த்ருவனாகப் ப்ரதிஷ்டிதனாகிறான் (உபகரண ஸம்பன்னனாகிறான்). இவனும் ப்ரதிஷ்டிதனாய் அவ்யதமானமாயிருப்பவைகளை (பயமற்ற மித்திரர் முதலானவர்களை) அடைகிறான். இவன் அவ்யதமானனாக எல்லாவற்றையும் அடைகிறான். (மற்றவை முன்போல்.)

'ஸங்கல்பத்தைகாட்டிலும் பெரிது உண்டோ என்று நாரதர் கேட்க, ஸநத்குமாரர் சொல்லுகிறார்.

---

## கண்டம் 5.

1. ஸங்கல்பத்தைக்காட்டிலும் சித்தம் பெரிது; (சித்தம் என்றால் சேதயித்ருத்வம், அறிவு; ஒருவஸ்து கிடைத்தகாலத்தில் அதுரூபமாயுண்டான ஓர் அறிவு; சென்றதும் இனிவரப்போவதுமான விஷயப்பிரயோஜனத்தை நிரூபணம் செய்யும்படியான ஸாமர்த்யம்; அஃதாவது, முதலில் உண்டாகிற வஸ்து ஞானம்; ஒரு வஸ்து கிடைத்த வுடனே 'இஃது இப்படிக் கிடைத்தது' என்ற அறிவு உண்டாகிறதே, அதுதான் சித்தம்). சித்தம் உண்டான பிறகு (இந்த வஸ்துவை யேற்றுக்கொள்வோமா அல்லது தள்ளி விடுவோமா என்பதைப்பற்றி) ஸங்கல்பிக்கிறது; உடனே மனஸாகிறது; பிறகு வரிசையாக மேல்கண்டபடி மந்திரம், கர்மா முதலானவை.

2. இவைகள் (ஸங்கல்பம் துவக்கி கர்மாவரை) சித்தத்தில் லயிக்கின்றன; அதில் உத்பத்தியாகின்றன; அதில் ஸ்திதியுள்ளவைகள்; ஆதலால், ஒருவன் பல சாஸ்திரம் தெரிந்தவனாக விருந்தாலும் இல்லாதவனை ஒப்ப இருக்கிறான் என்று சொல்லப்படுகிறது; அவனுக்கு ஏதாகிலும் தெரிந்திருப்பதும் வ்யர்த்தமாய்ப் போகிறது; ஒரு வித்வான் அசித்தனாயிருந்தால் அவன் வித்வானல்லனென்றே சொல்லுகிறார்கள். ஒருவன் ஸ்வல்பத்தை அறிந்தவனா யிருந்தாலும், சித்தமுள்ளவனா யிருந்தால் அவனுடைய உபதேசத்தை எல்லோரும் கேட்க விரும்புகிறார்கள். ஆதலால் சித்தம் எல்லாவற்றிற்கும் மூலம்; ஆதலால் அதை உபாஸி.

3. (பலன்) அப்படிப்பட்டவன் சித்தவானாகவிருப்பான். (மற்றவை முன்போல்.)

---

கண்டம் 6.

சித்தத்தைக்காட்டிலும் பெரியதை நாரதர் கேட்க, ஸநத்குமாரர் சொல்லுகிறார்.

1. சித்தத்தைக்காட்டிலும் த்யாநம் பெரிது; (த்யாநமென்றால், சித்தத்தின் விருத்தி; சாஸ்த்ரோக்த தேவதாதிகளைப் பிடிப்பாக வைத்துக்கொண்டு அதில் நிச்சலமானதும் வேறு வஸ்துவில் அண்டாததுமான ஒரு விசுவாஸம் வைப்பது). பிருதிவி, அந்தரிக்ஷம், ஸ்வர்க்கம், பர்வதங்கள், தேவர்கள், மனுஷ்யர்கள் அல்லது தேவமனுஷ்யர்கள் (அஃதாவது, ஸமாதிகுணஸம்பந்நர்கள்) த்யாநம் செய்கிறவர்கள்போலக் காணப்படுகிறார்கள்; (அஃதாவது, நிச்சலமாயிருக்கிறார்கள்; அஃதாவது, நிச்சலத்தன்மையால், அடக்கத்தால், ஒரு பெருமை, மஹத்வம் உண்டாகிறது). ஆதலால் இவ்வுலகத்தில் தனம், வித்யை, குணம் இவைகளால் மனுஷ்ய மஹத்வத்தை யடைந்தவர்கள் த்யாநபலாம்சத்தை யடைந்தவர்களாகக் காணப்படுகிறார்கள் (அடக்கமுள்ளவர்களா யிருக்கிறார்கள்; மற்றவர்கள் அல்பர்கள்; கலஹக்காரர்களாகவும், கோட்சொல்லுபவர்களாகவும், பிறவரைத் தூஷிப்பவர்களாகவும் இருக்கிறார்கள்; பரோபகாரிகளும் த்யாநபலாம்சத்தை யடைந்தவர்கள். ஆதலால், த்யாநம் பெரிது, அதை உபாஸி.

2. (பலன் முன்போல் இதற்கு தக்கபடி.) த்யாநத்தை விட பெரியதைக் கேட்க, ஸநத்குமாரர் சொல்லுகிறார்.

---

## கண்டம் 7.

1. த்யாநத்தைக்காட்டிலும் விக்ஞானம் பெரிது. (விக்ஞானம் என்றால் சாஸ்திரார்த்த விஷயக்ஞானம்; ஞானம் என்றால் இதரவிஷயநைபுண்யம்; சாஸ்திரார்த்தத்தை முதலில் தெரிந்துகொண்டுதான், பிறகு, அதனால் அறியப்பட்ட ஒரு தேவதையைப் பிடிப்பாக வைத்துக்கொண்டு த்யாநம் செய்யலாம்.) விக்ஞாநத்தால்தான் ருக்வேதம் முதலியன அறியப்படுகின்றன; ஆதலால் விக்ஞானத்தைப் பிரம்மமாக உபாஸி.

2. (பலன்) விக்ஞானமுள்ளவைகளாயும், ஞானமுள்ளவைகளாயுமிருக்கிற லோகங்களை யடைகிறான். (மற்றவை முன்போல்.) விக்ஞானத்தைக்காட்டிலும் பெரியதை நாரதர்கேட்க, ஸநத்குமாரர் சொல்லுகிறார்.

---

## கண்டம் 8.

1. விக்ஞானத்தைக்காட்டிலும் பலம் பெரிது. (பலம் என்றால் அன்ன பானங்களை உபயோகப்படுத்துவதால் உண்டாவதும், மனஸில் தோன்றப்பண்ணுவதற்கு ஸாமர்த்தியத்தைக் கொடுப்பதுமான தன்மையுள்ளது.) விக்ஞானவான்கள் நூறுபெயர்களிருந்தாலும் பலவானாயிருக்கிற ஒருவன் மற்றவர்களை நடுங்கச் செய்கிறான். பலமுள்ளவனாயிருந்தால் எழுந்திருக்கச் சக்தி உண்டாகிறது; எழுந்திருந்து ஆசார்யர்களுக்கும், குருக்களுக்கும் சுச்ரூஷை செய்கிறான்; அப்படிச்செய்து அவர்கள் ஸமீபத்தில் சேருகிறான் (அவர்களுக்குப் பிரியமுள்ளவனாயிருக்கிறான்); அப்படிப்போய் அவர்களைப் பார்க்கிறவனாகிறான் (தனக்கு உபதேசம் செய்யும்பொருட்டுப் பார்க்கிறான்); அப்படிப்பார்த்து அவர்கள் உபதேசிப்பதைக் கேட்பவனாகிறான்; கேட்டு, கேட்டதை நினைப்பவனாகிறான்; அப்படி நினைத்து அறிபவனாகிறான்! அப்படியறிந்து சொல்லப்பட்ட கர்மாக்களைச் செய்பவனாகிறான்; அப்படி செய்து பலத்தை அநுபவிப்பவனாகிறான்; பிருதிவீ

முதலியவை பலத்தினுலேயே இருக்கின்றன ; பலத்திலேயே லோகமிருக்கிறது ; ஆதலால் பலத்தைப் பிரம்மமாக உபாஸி.

2. (பலன்) முன் சொன்னதுபோல; பலத்தைக் காட்டிலும பெரியதை நாரதர் கேட்க, ஸநத்குமாரர் சொல்லு கிருர்.

---

## கண்டம் 9.

1. பலத்தைக்காட்டிலும் அன்னம் பெரிது ; அன்ன பானத்தாலேயே பலம் உண்டாகிறது ; ஒருவன் பத்து நாட்கள் சாப்பிடாமலிருந்தால், பலம் போய் இறந்துபோவான் ; ஒருகால் பிழைத்திருந்தாலும் திரஷ்டா (பார்ப்பவன்) முதலானவனுக விருக்கமாட்டான் ; அன்னத்தைச் சாப்பிட்டால் அப்படி யிருப்பான். அன்னத்தை உபாஸி.

2. (பலன்) அன்னமுள்ளவைகளாகவும், பானமுள்ளவைக ளாகவுமிருக்கிற லோகங்களை யடைகிருன். (மற்றவை முன் போல்.) அன்னத்தைவிட பெரியது உண்டோ வென்று நாரதர் கேட்க, ஸநத்குமாரர் சொல்லுகிருர்.

---

## கண்டம் 10.

1. அன்னத்தை (பிருதிவியை)க்காட்டிலும் ஜலம் பெரிது. (அன்னத்திற்குக் காரணமாயிருப்பதால்) நல்ல மழை இல்லாத பொழுது (இந்த வருஷம் விளைவு இல்லை) அன்னமும் குறைந்து போய்விடும் என்று ப்ராணிகள் வருத்தப்படுகிருர்கள் ; மழை யிருக்கும் பொழுது வெகு அன்னம் உண்டாகப் போகிறதென்று ஸந்தோஷப்படுகிருர்கள் ; ஜலமே இதோ காணப்படும் மூர்த்தங் களாக (உருப்படிகளாக)ப் பரிணமித்திருக்கிறது. ஜலமே பிருதிவீ முதலான மூர்த்தங்களாகப் பரிணமித்திருக்கிறது. ஆதலால் ஜலத்தைப் பிரம்மமென்று உபாஸி.

2. (பலன்) எல்லாக் காமங்களையும் அடைந்து திருப்தியாக விருப்பான். (மற்றவை முன்போல்.) ஜலத்தைக்காட்டிலும் பெரியதை நாரதர் கேட்க, ஸநத்குமாரர் சொல்லுகிருர்.

---

## கண்டம் 11.

1. ஜலத்தைக்காட்டிலும் தேஜஸ் பெரிது; (ஜலத்திற்குக் காரணமாயிருப்பதால்). தேஜஸானது வாயுவைச் சலிக்காமல் செய்துகொண்டு, ஆகாசத்தில் பரவி, தபிக்கச் செய்கிறது; இறுக்கமுண்டாயிருக்கிறது; மழைபொழியப்போகிறது என்று சொல்லுகிறார்கள்; முதலில் தன்னைக் காண்பித்துக்கொண்டு பிறகு தேஜஸ் ஜலத்தை உண்டாக்குகிறது; ஆதலால் மேகங்கள் உயரப்போகின்றனவைகளும், குறுக்கேபோகின்றவைகளுமான மின்னல்களுடன் ஸஞ்சரிக்கின்றன; ஆதலால் லோகத்தார் மின்னுகிறது, இடிக்கிறது, மழை வரப்போகிறது என்று சொல்லுகிறார்கள். ஆதலால் தேஜஸைப் பிரம்மமாக உபாஸி.

2. (பலன்) தேஜஸ்வியாக, பிரகாசமுள்ளதும் இருள் இல்லாததுமான லோகங்களை யடைகிறான். (மற்றவை முன்போல்.)

தேஜஸைக்காட்டிலும் பெரியது உண்டோ வென்று நாரதர் கேட்க, ஸநத்குமாரர் சொல்லுகிறார்.

(இதனால், பிரத்யேகமாகச் சொல்லப்படாதபோதிலும், தேஜஸைக்காட்டிலும் வாயு பெரியதென்று ஏற்படுகிறது; தேஜஸுக்குக் காரணமாயிருப்பதால்; வாயுவில்லாவிட்டால் தேஜஸுக்கு விருத்தி இல்லை.)

---

## கண்டம் 12.

1. (வாயுஸஹிதமாயிருக்கிற) தேஜஸைக்காட்டிலும் ஆகாசம் (வெட்டவெளி) பெரியது; வாயு முதலியவற்றிற்குக் காரணமாயிருப்பதால்), ஸூர்யன், சந்திரன், மின்னல், நக்ஷத்ரங்கள், அக்நி இந்தத்தேஜஸ்களெல்லாம் ஆகாசத்திற்குள் அடங்கியிருக்கின்றன; ஆகாசத்தினால் கூப்பிடுகிறான், கேட்கிறான், பதில் சொல்லுகிறான் (அஃதாவது, வெளியில்லாவிட்டால் சப்தம் கேட்கமாட்டாது), விளையாடுகிறான், விளையாடாமல் இருக்கிறான், உண்டாவது (வெளியில்லாவிட்டால் சிசு எப்படி உத்பத்தியாகும், தடையிருந்தால் வெளிவராது), முளைகள் வெளியிலேயே கிளம்புகின்றன, கீழே முளைக்கிறதில்லை. ஆதலால் ஆகாசத்தைப் பிரம்மமாக உபாஸி.

2. (பலன்) ஆகாசவத்துக்களாகவும், பிரகாசமுள்ளவைகளாகவும், நெருக்கமில்லாதவைகளாகவும், அதிகமாகப் பரவி இருப்பவைகளுமான லோகங்களை யடைகிறான். (மற்றவை முன்போல்.) இதைவிடப் பெரியதைக் கேட்க, ஸநத்குமாரர் சொல்லுகிறார்.

---

## கண்டம் 13.

1. ஆகாசத்தைக்காட்டிலும் ஸ்மரணம் பெரிது (ஸ்மரணம்—நினைப்பு; அறிவு; அந்தக்கரணதர்மம்; ஏற்கனவே அறிந்திருப்பதை மறவாமலிருக்கிற ஞானம்; ஞாபகப்படுத்திக்கொள்ளும் அறிவு; ஞாபகசக்தி). ஸ்மரணையிருந்தால் அன்றோ ஆகாசாதிகள் ப்ரயோஜனப்படும்; அநுபவிக்கலாம்; ஸ்மரணையில்லாவிட்டால் இருப்பதும் இல்லாதிருப்பதும் ஒன்றே; ஸ்மரணையில்லாவிட்டால் ஆகாசாதிகளை அறிவதற்கும் முடியாது; எப்படியெனில், ஒரு பக்கத்தில் அநேகம் பெயர்கள் கூட்டமாய் உட்காருகிறார்கள்; ஸ்மரணையில்லாவிட்டால் ஒருவருக்கொருவர் சொல்வதைக் கேட்க முடியாது; நினைத்துப் பார்க்க முடியாது; அறிந்து நடக்கமுடியாது; ஸ்மரணையினாலேயே தன் புத்ரன், பசு முதலியவைகளை ஒருவன் அறிகிறான். ஆதலால், ஸ்மரணையைப் பிரம்மமாக உபாஸி.

2. (பலன்) மேற்கண்டபடி ஸ்மரணையைவிடப் பெரியதைக் கேட்க, ஸநத்குமாரர் சொல்லுகிறார்.

---

## கண்டம் 14.

1. ஸ்மரணையைக்காட்டிலும் ஆசை பெரிது; (ஆசை—கிடைக்காத வஸ்து விஷயத்தில் கிடைக்கவேண்டுமென்ற இச்சை; காமம்; திருஷ்ணை). அந்தக்கரணஸ்தமாயிருக்கிற ஆசையினாலேயே ஸ்மரிக்கவேண்டியதை ஸ்மரிக்கிறான்; அதாவது, பல இச்சையால் வேதத்தை அத்யயநம் செய்யவேண்டுமென்று ஸ்மரிக்கிறான்; அத்தியயநம் செய்து கர்மாக்களைச் செய்கிறான்; பிறகு புத்திராதிகளை அடைய இச்சிக்கிறான். லோகாதிகளை இச்சிக்கிறான். ஆதலால் ஆசையைப் பிரம்மமென்று உபாஸி.

## கண்டம் 11.

1. ஜலத்தைக்காட்டிலும் தேஜஸ் பெரிது; (ஜலத்திற்குக் காரணமாயிருப்பதால்). தேஜஸானது வாயுவைச் சலிக்காமல் செய்துகொண்டு, ஆகாசத்தில் பரவி, தபிக்கச் செய்கிறது; இறுக்கமுண்டாயிருக்கிறது; மழைபொழியப்போகிறது என்று சொல்லுகிறார்கள்; முதலில் தன்னைக் காண்பித்துக்கொண்டு பிறகு தேஜஸ் ஜலத்தை உண்டாக்குகிறது; ஆதலால் மேகங்கள் உயரப்போகின்றனவைகளும், குறுக்கேபோகின்றனவைகளுமான மின்னல்களுடன் ஸஞ்சரிக்கின்றன; ஆதலால் லோகத்தார் மின்னுகிறது, இடிக்கிறது, மழை வரப்போகிறது என்று சொல்லுகிறார்கள். ஆதலால் தேஜஸைப் பிரம்மமாக உபாஸி.

2. (பலன்) தேஜஸ்வியாக, பிரகாசமுள்ளதும் இருள் இல்லாததுமான லோகங்களை யடைகிறான். (மற்றவை முன்போல்.)

தேஜஸைக்காட்டிலும் பெரியது உண்டோ வென்று நாரதர் கேட்க, ஸநத்குமாரர் சொல்லுகிறார்.

(இதனால், பிரத்யேகமாகச் சொல்லப்படாதபோதிலும், தேஜஸைக்காட்டிலும் வாயு பெரியதென்று ஏற்படுகிறது; தேஜஸுக்குக் காரணமாயிருப்பதால்; வாயுவில்லாவிட்டால் தேஜஸுக்கு விருத்தி இல்லை.)

---

## கண்டம் 12.

1. (வாயுஸஹிதமாயிருக்கிற) தேஜஸைக்காட்டிலும் ஆகாசம் (வெட்டவெளி) பெரியது; வாயு முதலியவற்றிற்குக் காரணமாயிருப்பதால்), ஸூர்யன், சந்திரன், மின்னல், நக்ஷத்ரங்கள், அக்நி இந்தத்தேஜஸ்களெல்லாம் ஆகாசத்திற்குள் அடங்கியிருக்கின்றன; ஆகாசத்தினால் கூப்பிடுகிறான், கேட்கிறான், பதில் சொல்லுகிறான் (அஃதாவது, வெளியில்லாவிட்டால் சப்தம் கேட்கமாட்டாது), விளையாடுகிறான், விளையாடாமல் இருக்கிறான், உண்டாவது (வெளியில்லாவிட்டால் சிசு எப்படி உத்பத்தியாகும், தடையிருந்தால் வெளிவராது), முளைகள் வெளியிலேயே கிளம்புகின்றன, கீழே முளைக்கிறதில்லை. ஆதலால் ஆகாசத்தைப் பிரம்மமாக உபாஸி.

2. (பலன்) ஆகாசவத்துக்களாகவும், பிரகாசமுள்ளவைகளாகவும், நெருக்கமில்லாதவைகளாகவும், அதிகமாகப் பரவி இருப்பவைகளுமான லோகங்களை யடைகிறான். (மற்றவை முன்போல்.) இதைவிடப் பெரியதைக் கேட்க, ஸநத்குமாரர் சொல்லுகிறார்.

---

## கண்டம் 13.

1. ஆகாசத்தைக்காட்டிலும் ஸ்மரணம் பெரிது (ஸ்மரணம்—நினைப்பு; அறிவு; அந்தக்கரணதர்மம்; ஏற்கனவே அறிந்திருப்பதை மறவாமலிருக்கிற ஞானம்; ஞாபகப்படுத்திக்கொள்ளும் அறிவு; ஞாபகசக்தி). ஸ்மரணையிருந்தால் அன்றோ ஆகாசாதிகள் ப்ரயோஜனப்படும்; அநுபவிக்கலாம்; ஸ்மரணையில்லாவிட்டால் இருப்பதும் இல்லாதிருப்பதும் ஒன்றே; ஸ்மரணையில்லாவிட்டால் ஆகாசாதிகளை அறிவதற்கும் முடியாது; எப்படி யெனில், ஒரு பக்கத்தில் அநேகம் பெயர்கள் கூட்டமாய் உட்காருகிறார்கள்; ஸ்மரணையில்லாவிட்டால் ஒருவருக்கொருவர் சொல்வதைக் கேட்க முடியாது; நினைத்துப் பார்க்க முடியாது; அறிந்து நடக்கமுடியாது; ஸ்மரணையினாலேயே தன் புத்ரன், பசு முதலியவைகளை ஒருவன் அறிகிறான். ஆதலால், ஸ்மரணையைப் பிரம்மமாக உபாஸி.

2. (பலன்) மேற்கண்டபடி ஸ்மரணையைவிடப் பெரியதைக் கேட்க, ஸநத்குமாரர் சொல்லுகிறார்.

---

## கண்டம் 14.

1. ஸ்மரணையைக்காட்டிலும் ஆசை பெரிது; (ஆசை—கிடைக்காத வஸ்து விஷயத்தில் கிடைக்கவேண்டுமென்ற இச்சை; காமம்; திருஷ்ணை). அந்தக்கரணஸ்தமாயிருக்கிற ஆசையினாலேயே ஸ்மரிக்கவேண்டியதை ஸ்மரிக்கிறான்; அஃதாவது, பல இச்சையால் வேதத்தை அத்யயநம் செய்யவேண்டுமென்று ஸ்மரிக்கிறான்; அத்தியயநம் செய்து கர்மாக்களைச் செய்கிறான்; பிறகு புத்திராதிகளை அடைய இச்சிக்கிறான். லோகாதிகளை இச்சிக்கிறான். ஆதலால் ஆசையைப் பிரம்மமென்று உபாஸி.

2. (பலன்) எல்லா இச்சைகளும் கைகூடும்; எல்லா பிரார்த்தனைகளும் நிறைவேறும். (மற்றவை முன்போல்.)

ஆசையைவிடப் பெரியதை நாரதர் கேட்க, ஸநத்குமாரர் சொல்லுகிறார்.

---

## கண்டம் 15.

1. ஆசையைக்காட்டிலும் ப்ராணன் பெரிது; (ப்ராணன்—முக்கிய ப்ராணன்; தேஹத்திலிருக்கிற ப்ரக்ஞாத்மா; எதில், கண்ணாடியில் போல, பரமாத்மா ப்ரதிபிம்பப்பட்டிருக்கிறதோ அதுவே பிராணன்; எது, ஒரு ராஜாவினுடைய ஸர்வாதிகாரியான புருஷன்போல், பரமாத்மாவுக்கு ஸர்வாதிகாரியா யிருந்து காரியங்களை நடத்துகிறதோ அது; எது, நிழல்போல, பரமாத்மாவைப் பின் தொடர்ந்து கொண்டிருக்கிறதோ). அஃது ஒரு வண்டிச் சக்கரக் குடத்தில் ஆரங்கள் எப்படிக் கோக்கப்பட்டிருக்கின்றனவோ, அப்படி ப்ராணனிடத்தில் ஆசை முதலியவை கோக்கப் பட்டிருக்கின்றன; ப்ராணனில்லாவிடில் ஆசை முதலியவை எங்கே யிருக்கும்; ப்ராணன் ஸ்வதந்திரன்; தானே போவது; ப்ராணன் தன்னையே கொடுத்துக்கொள்ளுவது (எல்லாம் தன் மயமாயிருப்பது) ப்ராணன் தனக்கே கொடுத்துக்கொள்ளுவது; பிதா, மாதா முதலானவர்களும் ப்ராணனே.

2. ஒருவன் தன் பிதா முதலியவர்களில் யாரையாவது, கொஞ்சம் அவமரியாதையாய்ப் பேசினால், அவனை உலகத்தோர், 'நீ கெட்டாய்! நீ பிதிருஹத்தி முதலியவை பண்ணியவன்! உன்னைச் சுடு!' என்று சொல்லுகிறார்கள்.

3. ப்ராணன் போன பிறகு பிதா முதலியவர்களுடைய தேஹத்தைச் சேர்த்துவைத்து எரிக்கின்றான்; இது க்ரூர கர்மாவாக விருந்தபோதிலும் இவனைப் பிதிருஹத்தி செய்பவன் என்று ஒருவரும் சொல்லவில்லை.

4. ப்ராணனே எல்லாமாயிருக்கிறது; எவன் இப்படி (ப்ராணனே எல்லாவற்றினும் பெரிதென்று) பார்த்து, நினைத்து, அறிந்து அநுபவிக்கிறானோ அவன் அதிவாதியாகிறான் (கீழ்ப்

பட்ட ஆகாசாதிகளைக்கடந்து ப்ராணனே உயர்ந்ததென்று சொல்லுகிறவனாகிறான்). நீ அதிவாதியாய் இருக்கிறாய் என்று அவனைச் சொன்னால், அவன், ஆம்! அப்படியே யிருக்கிறேன்! என்று சொல்லுகிறான். அவனை நிந்திக்கக்கூடாது.

---

## கண்டம் 16.

[இப்படிக் கேட்டுக்கொண்டுவந்த நாரதர், வழக்கமாய்க் கேட்டுவந்ததுபோல், ப்ராணனைக்காட்டிலும் ஏதாவது பெரியது உண்டோ வென்பதைக் கேட்காமல், ப்ராணனே உயர்ந்த வஸ்து, அதைக்காட்டிலும் பெரியது ஒன்றுமில்லை யென்று நினைத்துக் கொண்டு சும்மாயிருக்க, விகாரமாயும், அந்ருதமாயு மிருப்பதைப் பிரம்மமென்று அறிந்து சந்தோஷத்தை யடைந்திருப்பவரும், பரமார்த்த ஸத்யவாதி தான் என்று எண்ணிக்கொண்டிருப்பவரும், அக்ருதார்த்தரும், யோக்யருமான நாரதரிடத்தில் தயைவைத்து ஸநத்குமாரர் மறுபடியும் சொல்லுகிறார்.]

1. ஸநத்குமாரர்:—ப்ராணனை யறிந்தவன் அதிவாதியாக மாட்டான்; நாமாதியை ஆபேக்ஷித்து அவன் அதிவாதிதான். ஆனால் பரமார்த்தப்படி அவன் அதிவாதியன்று, ஆனால், எவர் அதிவாதி யென்றால், எவர் ஸத்யத்துடன் (பரமார்த்த ஸத்ய வஸ்துவை யறிந்து, அந்த அறிவுடன்) சொல்லுகிறாரோ அவர் தான் அதிவாதி (உயர்ந்த வஸ்துவைச் சொல்லுபவன்; பிரம்மக்ஞானி; பிரம்மவித்; ஆத்மவித்).

நாரதர்:—அந்த ஸத்யத்துடன் அதிவாதியாய் இருக்கும்படி என்னைச் செய்யும்.

ஸநத்குமாரர்:—அப்பொழுது ஸத்யம் அறியப்பட வேண்டியது.

நாரதர்:—ஸத்யத்தைத் தங்களிடமிருந்து அறியவிரும்பு கிறேன்.

---

## கண்டம் 17.

1. ஸநத்குமாரர்:—எப்பொழுது ஒருவன் (ஸத்வஸ்துவை) அறிகிறானோ (அந்ருதமாயும், விகாரஜாதமாயுமிருக்கிற ஜகத்தைத் தள்ளி ஸத் ஒன்றே ஸத்ய மென்று விசேஷித்த ஞானம்

எப்பொழுது உண்டாகிறதோ), அப்பொழுது ஸத்யத்தைச் சொல்லுபவனாகிறான்; செவ்வையாக அறியாமல் ஸத்யத்தைச் சொல்லமாட்டான்; அறிந்தே சொல்லுவான். ஆகையால் அப்படிப்பட்ட விக்ஞானம் அறியப்படவேண்டும்.

நாரதர்:—அப்படிப்பட்ட விக்ஞானத்தைத் தங்களிட மிருந்து அறிய இச்சிக்கிறேன்.

---

கண்டம் 18.

1. ஸநத்குமாரர்:—(விக்ஞானத்திற்கு ஹேது மதி, மனனம், செவ்வையாக விசாரித்துப் பார்த்தல்); எப்பொழுது விசாரிக்கிறானோ அப்பொழுது அறிகிறான். (மற்றவை முன்போல்.)

நாரதர்:—மதியை அறிய விரும்புகிறேன்.

---

கண்டம் 19.

1. ஸநத்குமாரர்:—(மதிக்கு ஹேது சிரத்தை, விசுவாஸம், ஆஸ்திக்யபுத்தி ஆவல்); எப்பொழுது சிரத்தைப்படுகிறானோ அப்பொழுது மநநம் செய்கிறான். (மற்றவை முன்போல்.)

நாரதர்:—சிரத்தையை அறிய விரும்புகிறேன்.

---

கண்டம் 20.

1. ஸநத்குமாரர்:—(சிரத்தைக்கு ஹேது நிஷ்டை; பிரம்ம விக்ஞானத்தின்பொருட்டு குரு சுச்ரூஷை முதலிய காரியம்); எப்பொழுது நிஷ்டாகார்யத்தைச் செய்கிறானோ அப்பொழுது (நல்ல ஸஹவாஸத்தால்) சிரத்தையை யடைகிறான். (மற்றவை முன்போல் இதற்குத் தக்கவாறு.)

நாரதர்:—நிஷ்டையை அறிய விரும்புகிறேன்.

---

கண்டம் 21.

1. ஸநத்குமாரர்:—(நிஷ்டைக்கு ஹேது க்ருதி; இந்திரிய, ஸம்யமம்; சித்தைகாக்ரதா; இந்திரியங்களை, பஹிர்வ்யாபாரங்க

ளில் ப்ரவேசிக்க வொட்டாமல், அடக்கிவைத்துக்கொள்ளுதல்; அப்படி அடக்கிவைத்துக்கொண்டால்தான் பிரம்மத்தை அறியும்படி நிஷ்டாகார்யத்தில் ப்ரவேசிப்பான்; எப்பொழுது க்ருதி செய்கிறானோ அப்பொழுது நிஷ்டையைச் செய்கிறான். (மற்றவை இதற்குத் தக்கபடி முன்போல்.)

நாரதர்:—க்ருதியை அறிய விரும்புகிறேன்.

---

கண்டம் 22.

1. ஸநத்குமாரர்:—(ஸுகத்தை உத்தேசித்து க்ருதிக்கு இடம் உண்டாகிறது); (இனிச் சொல்லப்படப்போகிற நிரதிசயமான) ஸுகம் என்றால் அடையப்படவேண்டியது என்று எப்பொழுது நினைக்கிறானோ அப்பொழுது க்ருதியைச் செய்கிறான்; ஒரு ஸுகத்தை உத்தேசிக்காமல் ஒருவனும் ஒரு காரியத்தைச் செய்யமாட்டான். (மற்றவை முன்போல் இதற்குத் தக்கபடி.)

நாரதர்:—ஸுகத்தை அறிய இச்சிக்கிறேன்.

---

கண்டம் 23.

1. பூமா (பெரிது, மஹத்) என்றது ஸுகம்; (ஆனந்தம், பிரம்மம், ஆத்மா). அல்பத்தில் ஸுகம் இருக்கமாட்டாது. ஆதலால் பெரியதே ஸுகம்; ஆதாலால் பூமா என்றது அறியப்படவேண்டியது.

நாரதர்:—பூமாவை அறிய விரும்புகிறேன்.

---

கண்டம் 24.

1. ஸநத்குமாரர்:—எதனிடத்தில் அதையே தவிர மற்ற எதுவும் காணப்படவில்லையோ, கேட்கப்படவில்லையோ, (நினைக்கப்படவில்லையோ), அறியப்படவில்லையோ அதுவே பூமா; இதற்கு அந்யமாயிருப்பது அல்பம்; பூமாவிற்கு நாசமில்லை; அல்பத்திற்கு நாசமுண்டு.

நாரதர்:—அப்படிப்பட்ட பூமா எதில் ப்ரதிஷ்டிதமாயிருக்கிறது?

ஸநத்குமாரர்:—அதன் சொந்த மஹிமையில் ப்ரதிஷ்டிதமாயிருக்கிறது என்று சொல்லலாமோவெனில், அப்படியுமன்று.

2. உலகத்தில், ஒருவனுக்கு இருக்கும் கோ, அச்வம் முதலான ஸம்பத்துக்களில் அவனுக்கு மஹிமையுண்டு; அப்படிப் போல் இந்த பூமா விஷயத்தில் அந்யத்தில் அந்யம் ப்ரதிஷ்டிதமாயிருக்கிறது என்று சொல்லக்கூடாது (பின்னையோ வென்றால், சொல்லுகிறேன், கேள் !)

---

கண்டம் 25.

1. அந்த பூமாவே கீழும், மேலும், பின்னும், முன்னும், தெற்கிலும், வடக்கிலும் இருக்கிறது ; இதோ காணப்படுகிற எல்லாம் அதுவே. பிறகு, அஹங்காரத்தால் உபதேசம் (சொல்லப்படுகிறது); அதுவே நான்; நானே கீழும், மேலும் எங்கும் இருக்கிறேன் ; எல்லாமாகவும் இருக்கிறேன்.

2. ஆத்மாவாக ஆதேசம். (சொல்லப்படுகிறது.) கீழும், மேலும் எங்கும் ஆத்ம ஸ்வரூபமிருக்கிறது ; எங்கும் ஆத்மா ; எல்லாம் ஆத்மா ; இப்படிப் பார்த்து, இப்படி நினைத்து, இப்படி அறிபவன் ஆத்மாவினிடத்தில் ரதியுள்ளவன் (ஆத்மாவினிடத்தில் தேஹஸம்பந்தமான விளையாட்டுள்ளவன் ; அஃதாவது, தன்னிடத்திலேயே ஆத்மா இருக்கிறதென்று அறிந்து ஆநந்தப்படுபவன்;) ஆத்மாவினிடத்தில் க்ரீடையுள்ளவன் (வெளி ஸம்பந்தமான விளையாட்டுள் ளவன் ; அஃதாவது, வெளியில் காணப்படும் எல்லாம் ஆத்மா வென்று அறிந்து ஸந்தோஷப்படுபவன்); ஆத்மாவினிடத்தில் மிதுனமுள்ளவன் (ஆத்மாவினிடத்திலேயே சேர்ந்து ஸுகப்படுபவன்); ஆத்மாநந்தன் (அவனுடைய ஆனந்தம் ஆத்ம மயமாயிருக்கும்;) தானே ராஜாவாயிருப்பான் ; எல்லா லோகங்களிலும் தன் இஷ்டப்படி நடப்பான். எவன் வேறு விதமாக அறிகிறானோ (அவித்வான்), அவன் வேறு ராஜாவுக்குட்பட்டிருப்பான் ; நாசமுள்ள லோகங்களை யடைவான் ; எல்லா லோகங்களிலும் தன்னிச்சைப்படி நடக்க முடியாது.

1. இப்படிப் பார்த்து, நினைத்து, அறிந்தவனுக்கு ப்ராணன் முதலான எல்லாவற்றையும் ஆத்ம ஸ்வரூபமாகப் பார்க்கிறான். ஆத்மாவினிடத்திலிருந்து வந்ததாகவே தோன்றுகிறது.

2. இதைப்பற்றி ஒரு ச்லோகம் இருக்கிறது. (அஃதாவது) இப்படிப் பார்ப்பவன் மிருத்யுவை (மரணத்தை)ப் பார்க்கமாட்டான்; ரோகத்தைப் பார்க்கமாட்டான்; துக்கத்தைப் பார்க்கமாட்டான்; எல்லாவற்றையும் ஆத்மாவாகப் பார்க்கிறான்; எல்லாவற்றையும் எல்லாப் பிரகாரமாகவும் அடைகிறான்: ஸ்ருஷ்டிக்குமுன் அவனே ஒன்றாக விருந்தான் அஃதாவது, அவனே ஆத்மா. பிறகு மூன்று ஆனான்; ஐந்து, ஏழு, ஒன்பது, பதினொன்று முதலான பலவாக ஆனான்.

முதலில், ஆஹாரசுத்தி யிருக்கவேண்டும் (ஆஹாரம் என்றால் ரஸனாதி இந்திரியங்களின் விஷயங்கள்); (சுத்தமான அன்னத்தைச் சாப்பிடவேண்டும், சுத்தமாயிருப்பதைப் பார்க்கவேண்டும், சுத்தமாயிருப்பதைக் கேட்கவேண்டும், சுத்தமாயிருப்பதை முகரவேண்டும், சுத்தமாயிருப்பதைத் தொடவேண்டும்). அப்படிச் செய்தால் அந்தக்கரணசுத்தி உண்டாகும்; அதனால் நிச்சயமான சக்தியுண்டாகும்; அதனால் எல்லா ஸந்தேஹங்களும் நிவிருத்தியாகும்.

ராகத்வேஷாதி கல்மஷமற்றுப்போன நாரதருக்கு அஞ்ஞானத்தின் பாரத்தை (முடிவை) இந்தப்பிரகாரம் ஸநத்குமாரர் காண்பித்தார். மேற்படி ஸநத்குமாரரை ஸ்கந்தர் என்று சொல்லுவார்கள், ஸ்கந்தர் என்று சொல்லுவார்கள்.

---

# எட்டாம் ப்ரபாடகம்

## கண்டம் 1.

[முன் அத்யாயத்தில் சொல்லிய பிரகாரம் பிரம்மம் திக்தேச காலாதிபேதசூன்யமான ஏகவஸ்துவாக விருந்தபோதிலும், அவ்விதம் எளிதில் அறியக்கூடாத மந்தபுத்தி யுடையவர்களுக்கு மனதை ஓர் இடத்தில் நிலைநிறுத்தும்பொருட்டு, இந்தத் தேஹத்திலேயே ஓர் இடத்தில் அந்த பிரம்மம் இருக்கிறது என்று குறித்துக்காட்டி, அதை அறிய வேண்டுமென்று இந்த அத்யாயத்தில் சொல்லப்படும்; இது யோகிகளின் கொள்கை. ஞானிகளை அபேக்ஷித்து யோகிகள் மந்தபுத்தி யுள்ளவர்கள்; அப்படியிருந்தாலும் ஞானிகளாவதற்கு யோகம் உத்தமமான வழி.]

1. பிறகு, இந்தத் தேஹத்தில் பிரம்மபுரம் என்று பெயருள்ள (பிரம்மம் இருக்கிற பட்டணம்; இந்திரியாதிகள் ஜனங்கள், பிரம்மம் ராஜா) அல்பமாயிருப்பதும், தாமரைப் புஷ்பம்போ லிருப்பதுமான ஒரு வீடு (இருப்பிடம், ஸ்தானம்) இருக்கிறது. அந்த வீட்டுக்குள் மிகவும் அல்பமாயிருக்கிற ஓர் ஆகாசம் (வெளி ஓட்டை) இருக்கிறது; அந்த ஆகாசத்தில் எது (எந்த பிரம்மவஸ்து) இருக்கிறதோ அதைத் தேடவேண்டும், அறிய வேண்டும்.

2. இப்படிச் சொன்ன குருவைப் பார்த்து, 'இது என்ன, அளவிடப்பட்டிருக்கிற இந்தச் சரீரத்தில், அல்பமாயிருக்கிற ஒரு வீடு, அதில் மிகவும் அல்பமான ஆகாசம், அதற்குள் எப்படி ஒரு மஹத்தான பிரம்மவஸ்து இருக்கக்கூடும்; அதைத் தேடவாவது, அறியவாவது, எப்படிக் கூடும்' என்று சிஷ்யன் கேட்டால், அதற்குப் பதில் சொல்லப்படுகிறது.

3. அந்த ஹ்ருதயாகாசம் எப்படி யிருக்கிறதெனில், அளவுக்குட்பட்டு இதோ காணப்படுகிற பௌதிக ஆகாசத்தை யொப்பப் பெரிதாயிருக்கிறது; இன்னும் விஸ்தாரம், எப்படி

யெனில் இந்த ஸ்வர்க்கம், பூமி, அக்நி, வாயு, ஸூர்யன், சந்திரன், மின்னல், நக்ஷத்ரங்கள் இவைகளும், இவ்வுலகத்தில் இன்னும் தேஹமுள்ளவைகளா யிருக்கின்றனவோ அவைகளும், அப்படி எவை எவை யில்லாமல் எவைகளிருக்கின்றனவோ அவைகளும் அந்த ஹிருதயாகாசத்தில் அடங்கியிருக்கின்றன.

(இந்தச் சரீரத்திற்குள்ளிருக்கிற அல்பமான புண்டரீக ஆகாசத்தில் இந்த மஹத்தான பூதாதிகள் எப்படியிருக்கக்கூடு மென்றால், ஒரு ஸ்வச்சமான சிறிய கண்ணாடியில் அல்லது ஒரு பாத்திரஜலத்தில் இந்தப் பெரிய ஆகாசம், அதிலிருக்கிற சந்திர, ஸூர்ய, நக்ஷத்ராதிகளுடன் பிரதிபிம்பப்பட்டு எப்படிக் காணப் படுகிறதோ, அப்படிப்போல், ஸ்வச்ச அந்தக்கரணமாகிய கண்ணா டியில், அஃது அல்பமாயிருந்தபோதிலும், முன்சொல்லியவைக ளெல்லாம் பிரதிபிம்பப்பட்டு யோகிகளுக்குக் காணப்படுகிறது.)

4. இந்த பிரம்மபுரமாகிய தேஹத்தில், எல்லாப் பூதங் களும், எல்லாக் காமங்களும், மற்றுமுள்ள எல்லாம் இருக்கின்றன என்று சொல்லப்பட்டால், இந்தத் தேஹம் ஜரையை யடைந்து நசித்துப்போய்விட்டால், அப்பொழுது, அதற்குள்ளிருக்கின்ற வெல்லாம் போய்விடுமே, அப்பொழுது என்ன மிஞ்சியிருக்கும்? என்று சிஷ்யன் கேட்டால், அதற்கு குரு பதில் சொல்லுகிறார்.

5-6. இத்தேஹத்தின் ஜரையினால் அந்த பிரம்மம் ஜரையை யடைவதில்லை; தேஹம் அடிபட்டால் பிரம்மம் அடிபடுவதில்லை; இந்த பிரம்மபுரம் (பிரம்மமாகிறபுரம்) ஸத்யம்; தேஹமாகிற பிரம்மபுரம் ஸத்யமல்ல; இந்த ஸத்யமுள்ள பிரம்மபுரத்தில் இச்சைகளெல்லாம் வைக்கப்பட்டிருக்கின்றன; இந்த பிரம்மம் (ஆத்மா) பாபமற்றவர், ஜரையில்லாதவர், மிருத்யுவற்றவர், சோகமற்றவர், பசியற்றவர், தாஹமற்றவர், ஸத்யகாமர் (இச்சித்த பிரகாரம் நடக்கும்), ஸத்ய ஸங்கல்பர் (ஸங்கல்பித்தபடி நடக் கும்), இப்படி அந்த பிரம்மத்தை அறியவேண்டியது. அப்படி யறியாவிட்டால் என்ன தோஷமெனில், இவ்வுலகத்தில் பிரஜை கள் தங்களுக்கு அந்யமாக ஒரு ஸ்வாமி இருக்கிறதென்று நினைத்துக்கொண்டு (அஃதாவது, தானே பிரம்மமென்று அறியா

மல், அந்த ஸ்வாமியால் இடப்பட்ட கட்டளைகளிருக்கின்றன; அவைகளின்படி நடக்கவேண்டுமென்று, அவைகளை எப்படி அநுஸரிக்கிறார்களோ; அப்படி நடந்து எந்த முடிவை, எந்தத் தேசத்தை, எந்த ஸ்தலத்தை அடையவேண்டுமென்று இச்சிக்கிறார்களோ அப்படி அந்தமுடிவை, தேசத்தை, இடத்தை யடைகிறார்களே யல்லாது, (பிரம்மவித்தை ஒப்ப) எல்லாவற்றையும் ஸ்வதந்திரனாக அடையமாட்டார்கள்.

மேலும், இப்படிப்பட்டவர்களுக்கு இவ்வுலகத்தில் ஸேவாதி கர்மாவால் ஜயிக்கப்பட்ட (அடையப்பட்ட) பலனும், பராதீன உபயோகங்களும் க்ஷயத்தை யடையும்; அப்படியே பரலோகத்தில் யாகாதிகர்மாவால் அடையப்பட்ட ஸ்வர்க்காதி போகங்களும் க்ஷயித்துப்போய்விடும்; ஆகையால், இவ்வுலகத்தில் எவன் தன் ஆத்மா ஏற்கனவே சொல்லப்பட்டிருக்கிற லக்ஷணமுள்ளதென்றும், ஸத்யஸங்கல்பங்களும், இச்சைகளும் தன் ஆத்மஸ்தங்களாகவே இருக்கின்றன வென்றும் அறியாமல் ஸ்வசரீரத்தை விட்டுப் போகிறானோ அவன் ஸர்வலோகங்களிலும் அகாமசாரனாய் (இச்சைப்படி நடக்கக்கூடாதவனாய்) ஆகிவிடுவான். அவ்விதமாய் அறிந்தவன் எல்லா லோகங்களிலும் காமசாரனாயிருப்பான். (ஆகையால், ஆத்மவிசாரணை செய்யவேண்டியது அவச்யமாயிருக்கிறது.)

---

## கண்டம் 2.

1. அப்படி தஹராகாசத்தில் பிரம்மத்தைக் கண்டறிந்தவன் பிதிருலோகத்தை (பிதிரு ஸம்பந்தமான ஸுகத்தை; பிதாவாகிற லோகத்தை, ஸுகத்தை; ஒருவனுடைய புத்திரனாயிருந்து அதனால் அடையப்படும் ஸுகத்தை) இச்சிப்பானாகில், அவன் நினைத்தமாத்திரத்தில் அந்த ஸுகம் கிடைத்து அதனால் மஹிமையை யடைவான்.

2-9. அப்படியே மாதிரு, பிராதிரு, ஸ்வஸ்ரு, ஸகி (ஸ்நேஹ), கந்தமால்ய, அன்னபான, கீதவாதித்ர, ஸ்திரீ லோக ஸுகங்களை இச்சித்தால் அந்த அந்த ஸுகம் கிடைத்து அதனால் மஹிமையை அடைவான்.

10. எந்த எந்த பிரேதத்தை இச்சிக்கிருனே, இன்னும் எதை எதை இச்சிக்கிருனே அவையெல்லாம் அவனுக்கு ஸங்கல்பித்தமாத்திரத்தில் கிடைத்து அவைகளால் மஹிமைப்படுவான்.

---

## கண்டம் 3.

1. இந்த ஸத்யமாயிருக்கப்பட்ட காமங்கள் தன்னுத்மாவிலேயே கிடைக்கக் கூடியதாயிருந்தாலும் அவைகள் அநிருதத்தால் மூடப்பட்டிருக்கின்றன; அவைகட்கு அநிருதந்தான் மறைவு. (அநிருதம் என்ருல் எதனுல் பாஹ்ய விஷயங்களாகிற ஸ்திரீயாதிகளில் இச்சையும், அதனிமித்தம் இஷ்டப்படி நடவடிக்கைகளும் உண்டாகின்றனவோ அந்த மித்யாக்ஞாநம்; அவித்யை.) இந்த அக்ஞானம்தான் ஸத்யகாமங்களை மறைத்துக் கொண்டிருக்கிறது. (அக்ஞானம் இருந்தால் மேற்படி காமங்கள் எப்படிக் கிடைக்காவென்ருல்) அவித்வானுக்கு எவன் எவன் இஷ்டனே அவனவன் இறந்துபோய்விட்டால் அவனையவனை மறுபடியும் இவ்வுலகத்தில் பார்க்கவேண்டுமென்று நினைத்தால் கிடைக்குமா? கிடைக்காது (ஹிருதயாகாசத்தில் எல்லோரையும் பார்க்கலாம்.)

2. மேலும், இவ்வுலகத்தில் ஒருவன் ஜீவனுள்ள புத்திராதிகள், இறந்துபோனவர்கள் மறுபடியும் திரும்பிவரவேண்டுமென்றும், இன்னும் வேண்டிய வஸ்துக்களையும் இச்சித்தால் அவைகளை அடையாமலிருக்கிருன்; ஹிருதயாகாசத்தில் எல்லாம் போயடைந்திருக்கிறது. ஆனல் அநிருதத்தால் மறைக்கப்பட்டிருக்கிறது. அஃதெப்படியென்ருல், பூமியிலிருக்கிற ஸ்வர்ணப் புதையலின் ஸ்தலத்தை யறியாதவன் அந்தப் புதையிலிருக்கிற ஸ்தலத்தின்மேலேயே அடிக்கடி ஸஞ்சரிக்கிறவன் எப்படி அதை அறியாமலிருக்கிருனே அப்படிப்போல் இந்த பிரஜைகள், தினந்தோறும், ஸுஷுப்தி காலத்தில் பிரம்மத்தைத் தன்னிடத்திலே யடைந்தபோதிலும், அக்ஞானத்தால் இழுக்கப்பட்டவர்களாக அந்த பிரம்மலோகத்தை யறிவதில்லை.

3. அப்படிப்பட்ட இந்த ஆத்மா ஹிருதயத்தில் இருக்கிருர்; அதற்கு இது (இனிச் சொல்லப்படப்போகிறது) சப்தார்த்

தம்; ஹிருதி—அயம் (இந்த ஆத்மா) வென்று ஹிருதயமா யிற்று. இப்படியறிந்தவன் தினந்தோறும் ஸ்வர்க்கத்தை யடைகிறான் (பிரம்மத்தைச் சேருகிறேன்).

4. இப்படி அறிந்தவனுக்கு ஸம்ப்ரஸாத: என்று பெயர்; நன்றாய் ப்ரஸாதத்தைப் பெற்றவன் (பிரம்ம ப்ரஸாதத்தைப் பெற்றவன், பிரம்மத்துடன் கலந்து ஆநந்தப்பட்டவன்). அவன் இந்தச் சரீராத்மபாவம் முதலான அக்ஞானத்தை விட்டுவிலகி பரஞ்ஜயோதிஸை யடைந்து, தன் ரூபத்துடன், அதனுடன் சேர்ந்துவிடுகிறான். அதனால்தான் இந்த ஜீவனுக்கும் ஆத்மா வென்று சொல்லப்பட்டது. அந்த ஆத்மா அமிருதமாயும், அபயமாயும், பிரம்மமாயும் இருக்கிறது; இப்படிப்பட்ட இந்த பிரம்மத்திற்கு ஸத்யம் என்று பெயர்.

5. 'ஸத்யம்' என்ற இந்த மூன்று அக்ஷரங்களுக்கு அர்த்தம் சொல்லப்படுகிறது. ஸ—அமிருதம்; தி—மர்த்யம்; யம்—மேற்படி இரண்டையும் சேர்ப்பது, ஒன்று செய்வது, வசீகரம் செய்வது. (ஸ—ஜலம், சக்தி; த—அக்நி, சிவன்; யம்—வாயு. சேர்க்கை ஆனந்தம்.) இப்படியறிந்தவன் தினந்தோறும் ஸ்வர்க்க லோகத்தை யடைகிறான்.

---

## கண்டம் 4.

1-2. அப்படிப்பட்ட ஆத்மா ஸேது (கரையைப்போல, ஜலத்தைப் போகவொட்டாமல் அடைத்துக்கொண்டிருக்கிற கரையைப்போல் இருக்கிறது). மேலும், விதிருதியாயு மிருக்கிறது (எல்லாவற்றையும் தாங்கிக்கொண்டிருக்கிறது). (லோகங்களை அந்த அந்த வர்ணாச்ரம முதலிய தர்மங்களைவிட்டுத் தவறாமல்) கட்டுப்பாடாக வைத்துக்கொண்டிருப்பதால் (அதற்கு ஸேது என்று பெயர்). இந்த ஸேது வென்ற ஆத்மாவைப் பகல்ராத்திரி தாண்டுவதில்லை (காலத்தால் பரிச்சேதயமில்லை). அதை ஜரை அடையாது; மிருத்யு, சோகம், ஸுகிருதம், துஷ்கிருதம் இவைகளும் அடைவதில்லை. எல்லாப் பாவங்களும் போய்விடுகின்றன; ஆதலால், இந்த பிரம்மலோகமென்ற ஆத்மா (ஹிருதயாகாச ஆத்மா, ஸம்ப்ரஸாதத்தை யடைந்த ஜீவன்) பாபமற்றவர். ஆதலால், இந்த ஸேதுவைக் கடந்தால் (அறிந்தால்) அந்தன்

அநந்தனுய் விடுவான் (சரீரமுள்ளபோது அக்ஞானத்தால் மூடப் பட்டுக் குருடனுயிருப்பவன் ஞானம் கிடைத்துக் கண்தெரியும்); தேஹமிருக்கும்பொழுது அதனுடைய கார்யங்களால் அடிபட்டுத் தொந்திரவுபட்டவன், சரீரம்போன பிறகு அடிபடாதவனுகிறுன். ஸங்கடப்பட்டவன், ஸங்கடப்படாதவனுகிறுன். இந்த ஸேது வைக் கடந்தால் அவனுக்கு ராத்திரியும் பகல் ஆகிவிடுகிறது (அஃதாவது பிரகாசத்தைக் காண்கிறுன்). எப்பொழுதும் பிரகாசமுள்ளவனுய்ப் பிரம்மலோகமாகிறுன்.

3. எவர்கள் இந்த பிரம்மலோகத்தைப் பிரம்மசரியத்தி ஞல் அடைகிறுர்களோ, அவர்களுக்குத்தான் இந்த பிரம்மலோ கம் (மற்றவர்களுக்கு இல்லை) எல்லா லோகங்களில் காமசாரனுய் இருப்பான். (பிரம்மசரியம் என்றுல் ஸ்திரீவிஷயதிருஷ்ணுதி த்யாகம்; பிரம்மசரியம் இருந்தால்தான் பிரம்மலோகம் கிடைக் கும்; ஆதலால் பிரம்மவித்துக்கும் பிரம்மசரியம் அவசியம் வேண்டும்; பிரம்மத்தையறிந்த ஞானியாயிருந்தாலும் பிரம்ம சரியம் அவசியம் வேண்டும், பரலோகஸாதனம்).

---

## கண்டம் 5.

1. (ஞானத்திற்கு ஸாதனமாயிருக்கிற பிரம்மசரியம் என் பது யக்ஞம் முதலான சப்தத்திஞல் ஸ்துதிக்கப்படுகிறது; அதை அவசியம் அநுஷ்டிக்கவேண்டியதாயிருப்பதால் ஸ்துதிக்கப் படுகிறது).

யக்ஞமென்றதும் பிரம்மசர்யமே; ஞானி அந்த பிரம்மசர்யத் தால் யக்ஞபலத்தை யடைகிறுன். இஷ்டமும் (தேவபூஜை முத லானவை) பிரம்மசர்யமே; அந்த பிரம்மசர்யத்தால் ஆத்மாவை யடைகிறுன்.

2. ஸத்ராயனம் என்றதும் பிரம்மசர்யமே (ஆத்ம ரக்ஷ ணம், அல்லது, வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறதும் பல யஜமா னர்களுள்ளதுமான ஒருவித யாகம்); இந்த பிரம்மசர்யத்தால் ஸத்தாக விருக்கிற ஆத்மாவிற்கு ரக்ஷணத்தை யடைகிறுன். மௌனம் என்றதும் பிரம்மசர்யமே (சாஸ்திரம், குரு விடங்களி

விருந்து அறிந்து கொண்டு நினைத்துப் பார்த்துக்கொண்டு மௌனமாயிருத்தல், இந்த பிரம்மசர்யத்தால், ஆத்மாவை அறிந்து, நினைக்கிறான்.

3. அநாசகாயநம் என்றதும் பிரம்மசர்யமே (உபவாஸம் இருத்தல் முதலானது); இந்த பரம்மசர்யத்தால் எந்த ஆத்மா அடையப்படுகிறதோ அந்த ஆத்மாவிற்கு நாசமில்லை (இறப்பு பிறப்பில்லை). அரண்யாயநம் என்றதும் பிரம்மசர்யமே (அரண்யவாஸம் முதலானது). (இவ்விடத்தில் பிரம்மலோகம், ஹிருதயாகாசம் வர்ணிக்கப்படுகிறது, அதையடைகிறதற்கு ஒரு ருசி காட்டவேண்டிய நிமித்தம்); பிரம்மலோகத்தில் 'அர' என்றும், 'ண்ய' என்றும் இரண்டு ஸமுத்ரங்கள் உண்டு; மூன்றுவது லோகமாகிய, ஸ்வர்க்கமாகிய, பிரம்மலோகத்தில் அன்னமயமாயிருக்கிற மதரஸகுளம் இருக்கிறது; அச்வத்த விருக்ஷம் ஒன்றுமிருக்கிறது; அமிருதஸ்ரவமிருக்கிறது; அபராஜிதா (ஒருவராலும் ஜயிக்கப்படாத) என்ற ஒரு பட்டணமிருக்கிறது; பிரம்மலோகம் ஹிரண்மயமாயிருக்கிறது.

4. மேற்கண்ட இரண்டு ஸமுத்ரங்களையும் (அமிருதத்தை) பிரம்மசர்யத்தால் பிரம்மலோகத்தில் யடைகிறான். அப்படிப்பட்டவர்களுக்குத்தான் மேற்படி பிரம்மலோகம்; அப்படியறிந்தவன் எல்லாலோகங்களிலும் காமசாரனாயிருப்பான்.

---

## கண்டம் 6.

1. (ஹிருதயாகாச பிரம்மத்தை உபாஸிப்பவனுக்கு ஸுஷும்நா நாடிவழியாகக் கதியென்று சொல்லப்படுகிறது).

ஹிருதயபுண்டரீகத்திலின்றும் பரவிப்போகிற நாடிகள் நாநாவர்ணமுள்ள ஸூக்ஷ்மரஸத்தினால் நிறைந்திருக்கின்றன; அப்படியே சுக்லரஸத்தாலும், நீலரஸத்தாலும், மஞ்சள்வர்ணரஸத்தாலும், சிவப்புரஸத்தாலும் நிறைந்திருக்கின்றன. (பித்தத்துடன் கபம் கொஞ்சம் சேர்ந்தால் பிங்களவர்ணம்; பித்தத்துடன் வாயு அதியாய்ச் சேர்ந்தால் நீலம்; பித்தத்துடன் கபம் அதியாய்ச் சேர்ந்தால் சுக்லம; பித்தத்துடன் கபம் ஸமமா

யிருந்தால் பீதம்; பித்தத்துடன் ரக்தம் அதிகமாய்ச் சேர்ந்தால் லோஹிதம்). இந்த ஆதித்யன் பிங்கள, சுக்ல, நீல, பீத, லோஹித வர்ணமுள்ளவர். (ஸூர்யனுக்கு நாடிகள் எப்படி ஸம்பந்த மென்றால் சொல்லப்படுகிறது.)

2. ஒரு பெரிய விஸ்தாரமான ரஸ்தாமார்க்கம் ஒரு பக்கத்தில் ஸமீபத்திலுள்ள ஓர் ஊருக்கும், மற்றொரு பக்கத்தில் தூரத்திலுள்ள ஓர் ஊருக்கும், இந்த இரண்டு ஊர்களுக்கும் எப்படி மார்க்கமாய் இருக்கிறதோ, அப்படி விஸ்தாரங்களாயிருக்கிற ஸூர்ய கிரணங்கள், அந்த ஆதித்யலோகத்தையும், இந்தப் புருஷ லோகத்தையும் போய்ச் சேருகின்றன; ஆதித்யனிடத்திலிருந்து கிளம்பி, பரவி, இந்த புருஷ நாடிகளில் வந்து பிரவேசிக்கின்றன; மறுபடியும் அவைகள் இந்த நாடிகளிலிருந்து கிளம்பி, பரவி, ஆதித்ய னிடத்தில் பிரவேசிக்கின்றன.

3. இந்த புருஷன் ஸுஷுப்திதசையில் கரணமடங்கினவனாய், பாஹ்யவிஷயங்களினாலுண்டாகும் காலுஷ்யமற்றவனாய், எப்பொழுது ஸ்வப்னத்தை அநுபவிக்காம லிருக்கிறானோ, அப்பொழுது மேற்கண்ட நாடிகள் வழியாக ஹிருதயகமலத்தைப் போய்ச்சேருகிறான். அபபொழுது அவனைப் பாபம் தொடுவதில்லை; தேஜஸ்ஸுடன் ஸம்பந்நனாயிருக்கிறான்.

4. ஒரு புருஷன் அபலத்தை (மரணஸமயத்தை) யடைந்த பிறகு, அவனைச் சுற்றி ஞாதிகள் உட்கார்ந்துகொண்டு, 'என்னைத் தெரியுமா, என்னைத் தெரியுமா' வென்று கேட்கிறார்கள். சரீரத்திலிருந்து ஆத்மா வெளிப்படும்வரை தெரிந்துகொள்ளுகிறான்.

5. பிறகு, இந்த சரீரத்திலிருந்து கிளம்பி, ஸூர்ய கிரணங்களுடன் சேர்ந்து, உயரப்போகிறான். (அவித்வான் அவனுக்குத் தகுந்த லோகத்திற்குப்போகிறான்); வித்வானோ, ஓங்காரத்தால், ஆத்மாவை த்யாநம் செய்துகொண்டு, உயரப்போகிறான்: மனஸ் ஒழிந்தவுடன் ஆதித்யனைப்போய்ச் சேருகிறான்; அந்த ஆதித்யனே பிரம்மலோகத்திற்கு த்வாரம்; வித்வான்கள் யடைகிற இடம்; அவித்வான்கள் தடுக்கப்படுகிற விடம்.

6. இதைப்பற்றி ஒரு மந்திரம் இருக்கிறது ; அஃதாவது, 'ஹிருதயத்தில் நூற்றொரு நாடிகள் இருக்கின்றன ; அவைகளில் ஒன்று மூர்த்தாவைப்போய் அடைகிறது (அஃதாவது, ஸுஷும்ஞநாடி); அதன் வழியாக (வித்வான், ஞானி) உயரப்போய் அமிருதத்வத்தை யடைகிறான். மற்ற நாடிகள் குறுக்கும் நடுவுமாய் இருக்கின்றன; அவைகள் உத்கிரமண நிமித்தமாகமட்டும் இருக்கின்றன.'

---

## கண்டம் 7.

1. யாதொரு ஆத்மா உளதோ, அவர் அபஹதபாப்மா, விஜர:, விமிருத்யு, விசோகன், அவிஜிகத்ஸன், அபிபாஸன், ஸத்யகாமன், ஸத்யஸங்கல்பன், இப்படிப்பட்டவராயிருக்கிறார் ; இவரைத் தேடவேண்டியது; இவரை அறியவேண்டியது; இப்படி யறிந்தவன் எல்லாக்காமங்களேயும், எல்லா லோகங்களேயும் அடைவான், என்று பிரஜாபதி சொன்னார்.

2. இந்த பிரஜாபதி வசனத்தைத் தேவர்கள், அஸுரர்கள், இவ்விருவகையாரும் கேட்டறிந்தார்கள். எந்த ஆத்மாவைக் கண்டுபிடித்தால் எல்லா லோகங்களும், எல்லாக் காமங்களும் கிடைக்கின்றனவோ, அந்த ஆத்மாவைத் தேடுவோம் என்று, அவரவர் கூட்டத்தில் பேசிக்கொண்டு, தேவராஜனாகிய இந்திரனும், அஸுரராஜனாகிய விரோசனனும், ஒருவருக்கொருவர் தெரியாமல், ஸமித்பாணிகளாய் பிரஜாபதியிடம் சென்றார்கள்.

3. அவ்விடத்தில் முப்பத்திரண்டு வருஷங்கள் பிரம்மசரியத்தை அநுஷ்டித்துக்கொண்டு (குரு சுச்ரூஷை முதலானவை செய்துகொண்டு) வஸித்தார்கள்.

பிரஜாபதி:—எதற்காக வஸிக்கிறீர்கள்? இருவர்களும்—'எந்த ஆத்மா, அபஹதபாப்மா, விஜர:' முதலானவைகளைத் தாங்கள் சொன்னதாகப் பெரியோர்கள் சொல்லுகிறார்களே! அந்த ஆத்மாவை அறியவேண்டிய நிமித்தம் இவ்விடத்தில் வஸிக்கிறோம்.

4. பிரஜாபதி:—கண்ணில் எந்தப்புருஷன் தோன்றுகிறானே (எது கண்ணில் இருந்துகொண்டு பார்க்கும்படியான சக்தியை

கொடுக்கிறதோ ; எது பார்க்கிறதோ) அந்தப்புருஷன் ஆத்மா ; அதுவே அமிருதவஸ்து; அபயவஸ்து; பிரம்மம் என்று சொல்லப் பட்டது.

(இப்படிச் சொல்லப்பட்டதை சாயாபுருஷன், பிரதிபிம்ப புருஷன், அஃதாவது ஜீவன் என்று நினைத்துக்கொண்டு இருவர்களும் கேட்டார்கள்).

இருவர்கள்:—ஜலத்தில் ஆத்மப்ரதிபிம்பம் தோன்றுகிறதே ; தாங்கள் ஒன்று சொன்னீர்கள் ; இவைகளுக்குள் எது ஆத்மா ? அல்லது எல்லாவற்றிலும் தோன்றுகிறது ஒன்றுதானா ?

பிரஜாபதி:—எல்லாவற்றிலும் தோன்றுகிறது ஒன்றுதான், அந்த ஆத்மா.

---

## கண்டம் 8.

1. ஜலமுள்ள ஒரு பாத்ரத்தில் ஆத்மாவை (உங்கள் தேஹத்தை) பார்த்துக் கொள்ளுங்கள் ; ஒன்றும் தெரியாவிட்டால் பிறகு கேளுங்கள் ;

அவர்கள் அப்படி பார்த்தார்கள். பிரஜாபதி:—என்ன பார்த்தீர்கள் ? இருவரும்:—நகம் முதற்கொண்டு எல்லா அவயவங்களுடன் தேஹத்தை (ஆத்மாவை)ப் பார்த்தோம்.

2—3. பிரஜாபதி:—நல்ல வஸ்திரம் கட்டிக்கொண்டு, அலங்காரம்செய்துகொண்டு, க்ஷௌரம் முதலானவைகளால் பரிஷ்காரம் செய்து கொண்டு, பிறகு, உதசராவத்தை (ஜலமுள்ள பாத்ரத்தை)ப் பாருங்கள்.

இருவரும்:—அப்படிப் பார்த்தோம்.

பிரஜாபதி:—இப்பொழுது எதைப் பார்க்கிறீர்கள் ?

இருவரும்:—முன் அலங்காரமில்லை, இப்பொழுது அலங்காரத்துடன் தேஹத்தைப் பார்க்கிறோம்.

பிரஜாபதி:—அதுதான் ஆத்மா ! அமிருதம், அபயம், பிரம்மம்.

இப்படி இருவர்களும் கேட்டுக்கொண்டு சாந்த ஹிருதயமுள்ளவர்களாய்ப் போனார்கள்.

4. அப்படிப்போன இருவர்களைப் பார்த்து, பிரஜாபதி சொல்லுவதாவது:—ஆத்மாவை அறியாமல், அடையாமல், போகிறீர்கள்; இந்தப்படி தேஹம் ஆத்மாவென்ற கொள்கை இருந்தால் (அப்படி அபிப்பிராயப் படுகிறவர்கள்), தேவர்களாகட்டும் அல்லது அஸுரர்களாகட்டும், அவமானத்தை யடைவார்கள்.

இப்படிச் சொல்லியும் விரோசனன் சாந்த ஹிருதயனாய் அஸுரர்களிடம் சென்றான். இந்தத் தேஹமே ஆத்மாவென்றும், அதுவே பூஜிக்கப்படத் தகுந்ததென்றும், பரிசர்யம் செய்யப்படத் தகுந்ததென்றும், அப்படிச் செய்தால் இஹபர இரண்டுலோகங்களும் கிடைக்கும் என்றும் இப்படி உபநிஷத்தை அஸுரர்களுக்குச் சொன்னான்.

5. ஆதலாலே, அஸுரர்களின் கொள்கை பகுத்தறிவில்லாமையும், சிரத்தை யில்லாமையும், யாகாதிகர்மா இல்லாமையுமாய்ப் போய்விட்டது; ஜீவனற்ற சரீரத்தை அலங்கார முதலானவை செய்து கொண்டாடுகிறார்கள்; அதனால் அந்த லோகத்தை ஜயித்துப்போடலாமென்று எண்ணுகிறார்கள்.

---

## கண்டம் 9.

1. இந்திரன் தேவர்களிடம் போகாமலே யோசித்துப் பார்த்ததில் அவனுக்குப் பயம் (ஸந்தேஹம்) உண்டாயிற்று. உதசராவத்திலே இந்தப் பிரதிபிம்பம், சரீரம் அலங்காரம் செய்யப்பட்டால், அப்படியே காணப்படுகிறது; நொண்டி, பொட்டை எப்படி இருக்கிறதோ அப்படியே காணப்படுகிறது; அப்பொழுது சரீரத்திற்கு நாசமுண்டே! போக்யம் ஒன்றும் காணவில்லையே! என்று ஸந்தேஹித்தான்.

2. மறுபடியும், ஸமித்பாணியாக பிரஜாபதியிடம் வந்தான். சாந்தஹிருதயனாக, விரோசனனுடன், போய்விட்டீர்களே! நீ ஏன் திரும்பவந்தாய்? என்று அவர்கேட்டார். அதற்கு (முன் சொன்னபடி) தன் ஸந்தேஹத்தைச் சொன்னான்.

3. ஸரிதான்; ஹே! இந்திர! சாயாத்ம க்ஞானம் கூடாது தான்; நான் செவ்வையாக உபதேசம் செய்கிறேன்; இன்னும்

முப்பத்திரண்டு வருஷங்கள் பிரம்மசரியத்தை உபாஸி என்றார். அப்படியே முப்பத்திரண்டு வருஷங்கள் இருந்தான். பிறகு, பிரஜாபதி சொல்லுகிறார்.

---

## கண்டம் 10.

1—2. பிரஜாபதி:—எந்த ஆத்மா ஸ்வப்நதசையில் மஹிமையை யடைந்து, எல்லாபோகங்களையும் அநுபவிக்கிறானோ அவனே ஆத்மா ; அமிருதம், அபயம், பிரம்மம்.

இந்திரன் இதைக்கேட்டுச் சாந்தஹிருதயனாய்ப் போனான். தேவர்களிடம் போகாமலே, ஆலோசித்துப் பார்த்ததில், அவனுக்கு இந்த பயம் வந்தது. (எதுவென்றால்) இந்தச்சரீரம் பொட்டையாயிருந்தாலும், ஊனமாயிருந்தாலும் ஸ்வப்நாத்மா பொட்டையுமல்ல ஊனமுமல்ல) ; சரீரத்திற்குப்போல இந்த ஆத்மாவிற்குத் தோஷமில்லை ; அடியினால் அடிபடவுமில்லை ; ஊனத்தினால் பாதிக்கப்படவுமில்லை ; அப்படியிருந்தாலும், அது சிலரால் அடிக்கப்படுவது போலவும், துறத்தப்படுவது போலவும், அழுவதுபோலவும், காணப்படுகிறது ; (அப்படியிருக்க அதற்கு அமிருதத்வமும் அபயத்வமும் எவ்விதம் ஸித்திக்கும்). இந்த விஷயத்தில் போக்யத்தைப் பார்க்கவில்லை. (ஸ்வப்நாத்மா விஷயத்திலும் தோஷமிருக்கிறது என்று.)

3—4. (இந்த ஸந்தேஹத்தைத் தீர்த்துக்கொள்ள) மறுபடியும், இந்திரன், ஸமித்பாணியாக பிரஜாபதியிடம் சென்றான். ஏன் மறுபடியும் வந்தாய்? என்று அவர் கேட்டார். தான் ஸந்தேஹித்தபடி இந்திரன் சொன்னான். அதை மறுபடியும் உனக்குச் செவ்வையாகச் சொல்லுகிறேன். அப்பா ! கேள் !, ஆனால் இன்னும் உன்னிடத்தில் தோஷமிருக்கிறது. அதைப் போக்கடிக்க இன்னும் முப்பத்திரண்டு வருஷங்கள் பிரம்ம சர்யமாயிரு வென்று சொன்னார். இந்திரன் அப்படியே யிருந்தான். பிறகு பிரஜாபதி சொன்னார்.

---

## கண்டம் 11.

1. பிரஜாபதி:—எந்த ஆத்மா ஸுஷுப்தி தசையில், ஸமஸ்த கரணங்களும் அடங்கிப்போய், பாஹ்ய விஷயங்களால்

பாதிக்கப் படாமல், ஸம்ப்ரஸந்நமாயிருக்கிறதோ, ஸ்வப்ந விஷயங்களையும் அநுபவிப்பதில்லையோ அதுவே ஆத்மா; அபயம் அமிருதம், பிரம்மம்.

இதைக்கேட்டு இந்திரன் சாந்தஹிருதயனாய்ப் போனான்; தேவர்களிடம் செல்லாமல், யோசித்துப் பார்த்ததில், இந்த பயம் உண்டாயிற்று. எதுவென்றால்) இந்த ஸுப்தாத்மா, ஸுஷுப்தி காலத்தில் தான் இன்னான் என்றாவது, இந்த பூதங்களையாவது ஒன்றும் தெரிந்துகொள்ளவில்லை; நாசமடைந்துபோனவன்போல் இருக்கிறது. (அறிவேயில்லை, அறிவிருந்தாலன்றோ ஸத்பாவ மிருக்கும்; ஒன்றுமில்லையே; அப்படியிருக்க அதை எப்படி அமிருதாத்மா வென்று சொல்லலாம்?) (ஆதலால் ஸுப்தாத்மாவிஷயத்திலும் தோஷமிருக்கிறது என்று.)

2. இந்த ஸந்தேஹத்தைத் தீர்த்துக்கொள்ள, மறுபடியும். இந்திரன், ஸமித்பாணியாக, பிரஜாபதியிடம் சென்றான். ஏன் திரும்பிவந்தாய்? என்றார். இந்திரன் ஸந்தேஹித்தபடி சொன்னான்.

3. பிரஜாபதி:—ஸரிதான் அப்பா! ஜாக்ரத், ஸ்வப்ந, ஸுஷுப்தி இம்மூன்று தசை ஆத்மாவும் ஆத்மாவல்ல; இவைகளைத் தாண்டிவேறு வஸ்து இருக்கிறது; அதைப்பற்றி நன்றாய் உனக்குச் சொல்லப் போகிறேன், கேள். ஆனால், இன்னும் உன்னிடத்தில் கொஞ்சம் தோஷம் இருக்கிறது; அதைப் போக்கடிக்க இன்னும் ஐந்து வருஷங்கள் பிரம்மசர்யமாயிரு என்றார். அந்தப்படி இந்திரன் இருந்தான். இப்படி நூற்றொரு வருஷ காலம் இந்திரன் பிரம்மசர்யமாயிருந்தான். அதனால்தான் இந்திரன் பிரஜாபதியிடத்தில் நூற்றொருவருஷகாலம் பிரம்ம சர்ய உபாஸனைசெய்தான் என்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள். பிறகு பிரஜாபதி சொன்னார்.

---

## கண்டம் 12.

1. பிரஜாபதி:—இந்தச் சரீரம் நாசத்தையடையத் தகுந்தது; மிருத்யுவால் பீடிக்கப்பட்டதாயிருக்கிறது (மரணம் ஸித்

தம், எப்பொழுது ஸம்பவிக்குமோ, காலம் தெரியாது, க்ஷணம் தோறும் மரணம் வரும் என்று நினைக்கவேண்டும்). இந்தச்சரீரம், அமிருதமாயும் அசரீரமாயுமிருக்கிற ஆத்மாவிற்கு (பரபிரம் மத்திற்கு) இருப்பிடம். (எப்பொழுது அந்த வஸ்து சரீரத்தில் வந்து உட்காருகிறதோ, அஃதாவது சரீரத்துடன் கூடுகிறதோ அப்பொழுது அதற்கு ஜீவன் என்று பெயர்; ஸசரீரன் என்றும் சொல்லப்படுகிறது.) ஸசரீரன் பிரியாப்பிரியங்களால் (பாபபுண் யங்களுக்குக் காரணங்களாயிருக்கிற தர்மாதர்மங்கள், பாஹ்யவிஷ யஸம்யோகவியோகங்களால்) தொடப்படுகிறான். சரீரத்தோடி ருக்கிற ஸத்வஸ்துவைத் தொட்டிருக்கிற பிரியாப்பிரியங்களுக் குப் போக்குக் கிடையாது. அசரீரமுள்ள ஸத்வஸ்துவைப் பிரியாப்பிரியங்கள் தொடுவதில்லை.

2—3. வாயு, அப்ரம் (வெண்மேகம்), மின்னல், நீருண்ட மேகம் இவை (கோடைகாலத்தில்) சரீரமற்றவைகளாக ஆகாசத் தில் அடங்கிக் கட்டுப்பட்டு நிற்கின்றன. (மாரிக்காலத்தில்) இவை, ஆகாசத்திலிருந்து கிளம்பி, பரஞ்ஜ்யோதிஸை யடைந்து ஸுர்யபிரகாசத்தால் தபிக்கப்பட்டு), தன்தன் ரூபத்துடன் உண்டாகின்றன. (அஃதாவது, கீழ்காற்று முதலான வாயுரூபம்; மலையானை முதலான மேகரூபம்; சலிக்கிறஜ்யோதிக்கொடி மின் னல் ரூபம்; கர்ஜிதம், இடிமுதலான நீர்மேகரூபம்). இப்படி ப்போல், இந்தஸம்ப்ரஸாதநாயிருக்கிற ஆத்மா (கோடைகால மாகிய அவித்யா காலத்தில் கட்டுப்பட்டுக் கிடந்தவன்), இந்தச் சரீரத்தில் நின்றும் (மழைகாலமாகிய ஆத்மக்ஞாநகாலம் வந்த வுடன்) கிளம்பி, பரஞ்ஜ்யோதிஸையடைந்து (ஆத்மப்பிரகா சத்தை தர்சித்து), தன் தன் சொந்தரூபத்தோடு, அசரீர ஸச்சி தாநந்த ரூபியாய் ஆய்விடுகிறான். இவனே உத்தமபுருஷன்; எங்கும் போகிறான்; பக்ஷிக்கிறான் (நினைத்தமாத்திரத்தில் வேண் டியதை அநுபவிக்கிறான்); விளையாடுகிறான் (ஸங்கல்பமாத்தி த்தில் பாஹ்யலோக வஸ்துக்களுடன் சேர்ந்து விளையாடுகிறான்); ஸ்திரீ, வாஹனம், ஞாதிஜனம் இவர்களுடன் நினைத்தமாத்தி ரத்தில் ரமிக்கிறான் (ஸந்தோஷிக்கிறான்); மறுஜன்மத்தையும், இந்தச்சரீரத்தையும் நினைக்கிறதில்லை (அஃதாவது, ஜநநமரணத் திற்கு இடமில்லாமல் செய்துகொள்ளுகிறான், அஃதாவது

அவனுக்கு அவைகள் ஸம்பவியா); அப்படிப்பட்ட இந்த ஆத்மா, ரதத்தில் குதிரை கட்டப்படுவதுபோல், இந்தச்சரீரத்தில் (நடத்துவதற்காக) பிராணனாகக் கட்டப்பட்டிருக்கிறான்.

4. நேத்திரத்தில் தோணப்படுகிற கிருஷ்ணதாரகையால் உபலக்ஷிதமாயிருக்கிற ஓர் ஆகாசத்தில் (சிறிய வெளியில்) இருந்துகொண்டு, எந்த வஸ்து சக்ஷுஸ் என்று பெயர்கொண்டு பார்க்கிறதோ, அந்த வஸ்து சாக்ஷுஷ புருஷன் (சக்ஷுஸ்ஸம் பந்தமான ஆத்மா). (அஃதாவது, அந்த ஆத்மா அவ்விடத்தில் இல்லாவிட்டால் சக்ஷுஸுக்கு பார்வைசக்தி இருக்கமாட்டாது). (ஆனால்) பார்க்கும்பொருட்டு சக்ஷுரிந்திரியம் இருக்கிறது.

இதை முகர்ந்துபார்க்கிறேன் என்று எது அறிகிறதோ அஃது ஆத்மா; முகர்ந்து பார்க்கும்பொருட்டு க்ராணேந்திரியம்.

இதைச் சொல்லப்போகிறேன் என்று எது அறிகிறதோ அஃது ஆத்மா; சொல்லும்பொருட்டு வாக் இந்திரியம்.

இதைக் கேட்கப் போகிறேன் என்று எது அறிகிறதோ அஃது ஆத்மா; கேட்பதற்காக ச்ரோத்ரேந்திரியம்.

5—6. இதை நினைக்கிறேன் என்று எது அறிகிறதோ அஃது ஆத்மா; மனஸ்தான் தைவசக்ஷுஸ் (உயர்ந்த இந்திரியம்); இந்த மனஸினாலே பிரம்மலோகத்திலுள்ள எல்லாக்காமங்களையும் (ஸங்கல்ப மாத்திரத்தில் கிடைக்கிற போகங்கள்) அநுபவித்துக் கொண்டு ஸந்தோஷிக்கிறான்.

இப்படிப்பட்ட ஆத்மாவை உபாஸித்துத் தேவர்களெல்லாம், எல்லா லோகங்களையும், எல்லாக் காமங்களையும் அடைந்தார்கள். (அப்படியே மனுஷ்யர்களும் அடைவார்கள்). எந்த மனுஷ்யன் இப்படி ஆத்மாவை யறிகிறானோ அவன் (தேவர்களை ஒப்ப) எல்லா லோகங்களையும், எல்லக்காமங்களையும் அடைகிறான் என்று பிரஜாபதி சொன்னார்.

---

## கண்டம் 13.

1. ச்யாமத்தால் (பெரிய இருள் வர்ணத்தால், எளிதில் கண்டு பிடிக்கப்படக்கூடாத ஹிருதய பிரம்மக்ஞானத்தைக்

கொண்டு), சபலத்தை (பலவர்ணத்தை, சபலபிரம்மத்தை பிரகிருதிஸ்வரூப ஆத்மாவை, பிரம்மத்தை) அடைகிறேன் (அறிகிறேன்). சபலத்தால் (நாமரூப வ்யாகரணத்மாவால், பிரம்ம லோகத்தால்), ச்யாமத்தை (ஹ்ருதய பிரம்ம பாவத்தை) அடைகிறேன். எப்படி யென்றால், ஒரு குதிரை, மயிர்களை உதறிக் கொண்டு, தன் தேஹத்திலுள்ள சிரமம், புழுதி முதலிய வற்றைப் போக்கடிப்பதுபோல, பாபத்தைப் போக்கடித்து, ராஹு முகத்திலிருந்து சந்திரன் விடுபடுவதுபோல, சரீரத்தை விட்டு, கிருதகிருத்யனாய், நித்யமாயிருக்கிற பிரம்மலோகத்தை யடைகிறேன் ; (என்று இது வொருமந்திரம், பிரம்மஞானிகளின் அநுபவ மனனத்திற்காக உபயோகம்).

---

## கண்டம் 14.

1. அப்படிபட்ட பிரம்மத்திற்கு ஆகாசம் என்றும் பெயர் ; ஸூக்ஷ்மமாயும், (ஸர்வகதமாயுமிருப்பதால் அந்தப் பெயர்) அது நாமரூபங்களை வஹிக்கிறது; அதற்குள் நாமரூபங்கள் அடங்கிநிற்கின்றன; அதுதான் பிரம்மம் அமிர்தம் ஆத்மா.

"(இப்படியறிந்து) பிரம்மலோகத்தை யடைகிறேன்; (பிரம்ம வித்தையால் கிடைக்கும்) யசஸ் ஆக ஆகிறேன்; பிராம்மணர்களுடையவும், ராஜாக்களுடையவும் வைச்யர்களுடையவும் யசஸ் ஆக ஆகிறேன்; அப்படிப்பட்ட யசஸை அடைய விரும்புகிறேன்; அப்படிப்பட்ட நானே யசஸ்களுக்கெல்லாம் யசஸாயிருக்கிறேன்; வெளுப்பாகவும், (பல்லில்லாவிட்டாலும்) பக்ஷிக்கத் தக்கதாயும் (தேஜஸ், பலம், வீர்யம், விக்ஞானம், தர்மம் இவைகளை நாசம் செய்யத் தக்கதாயும்) இருக்கிற பிந்துவை (ஸ்திரீவ்யஞ்ஜனத்தை, ரேதஸை) நான் அடையவேண்டாம், நான் அடையவேண்டாம்! (மேற்கண்டபடி அநர்த்தகமாயிருக்கிற ஸ்திரீ இச்சை எனக்கு வரவேண்டாம்." (13-வது கண்டம்போல் இஃது ஒரு மந்திரம், மனனத்திற்கு உபயோகம்).

---

## கண்டம் 15.

1. இந்த பிரம்மவித்தையை, பிரம்மா, தன் புத்திரனாகிய காச்யபபிரஜாபதிக்குச் சொன்னார் ; அவர் மனுவுக்குச் சொன்

னர்; அவர் எல்லா மனுஷ்யர்களுக்கும் சொன்னர். (இந்தப் பிரகாரம் ஞானகாண்டமிருந்தபோதிலும் கர்மாவை விடக் கூடாது என்பதைப்பற்றிச் சொல்லப்படுகிறது.)

குருவிடத்தில், விதிப்படி, குருசுச்ரூஷாகாலம்போக மற்ற காலங்களில் வேதங்களை அத்யயநம்செய்து, ஸமாவர்த்தனம் (முடிவு) செய்து, பிறகு, குடும்பத்தில் (கிருஹஸ்தாச்ரமத்தில்) சேர்ந்து, சுத்தமானவிடத்தில் உட்கார்ந்துகொண்டு, நித்ய நைமித்திக கர்மாக்களைச் செய்துகொண்டு, தார்மிகர்களாயிருக்கிற புத்திர சிஷ்யாதிகளை யடைந்துகொண்டு, தன்னிடத்திலேயே இந்திரியங்களை யெல்லாம் அடக்கிக்கொண்டு, சாஸ்திரங்களால் சொல்லப்பட்டதைத் தவிர மற்ற விஷயங்களில் பிறருக்கு யாதொரு ஹிம்ஸையும் செய்யாமல்—இந்தப்படி எவன் ஆயுஸ்பரியந்தம் இருக்கிறானே அவன் பிரம்மலோகத்தை யடைவான் அவனுக்கு புனர்ஜனனமில்லை, புனர்ஜனனமில்லை.

ஓம். சாந்தி: சாந்தி: சாந்தி:

---

சாந்தோக்யோபநிஷத் முற்றிற்று.

---

# (IV) அதர்வணவேதம்.

---

9. ந்ருஸிம்ஹதாபநீ உபநிஷத்.
10. ப்ரச்நோபநிஷத்.
11. முண்டகோபநிஷத்.
12. மாண்டூக்யோபநிஷத்.

---

ஓம்

ஓம் தத்ஸத்

அதர்வண வேதீய

# நிருஸிம்ஹதாபநீ உபநிஷத்

## பூர்வதாபநீ

---

## முதலாவது உபநிஷத்

---

### கண்டம் 1.

1. (சாந்தி சொல்லப்படுகிறது.) நாம் தேவர்களாக (பிரகாசமுள்ளவர்களாக) விருந்து, கலியாணத்தை (சுபத்தை)க் காதுகளால் கேட்போமாக; யஜன சீலமுள்ளவர்களாக விருந்து மங்களத்தைக் கண்களால் பார்ப்போமாக; அங்கங்களோடு சேர்ந்த (அடியிற்கண்ட) மந்திரங்களால் தேவரை ஸ்தோத்திரம் செய்து (எல்லா ஸுகங்களையும்) அடையுவோமாக; (இந்த உபநிஷத்தில் பிரஸ்தாபிக்கப்படுகிற நிருஸிம்ஹதேவரை) ஸ்துதிக்க யோக்யமான ஆயுளை அடையுவோமாக.

பிருஹஸ்பதி யிடமிருந்து கேட்டு, அறிந்த இந்திரன் நமக்கு ஸ்வஸ்தியை (நாசமற்ற ஆயுளை) கொடுக்கட்டும்; எல்லாத் தேவர்களாயிருக்கின்ற ஸூரியன் நமக்கு ஸ்வஸ்தியை (உபாஸனை செய்வதில் முக்கியமாயிருத்தலை)க் கொடுக்கட்டும்; வஜ்ராயுதத்தாலடிபடாத கருடன் நமக்கு ஸ்வஸ்தியை (பூஜைசெய்ய யோக்யதையை)க் கொடுக்கட்டும், பிரஹஸ்பதிபகவான் நமக்கு ஸ்வஸ்தியை (சோபனத்தை)க் கொடுக்கட்டும்; ஓம், சாந்தி: சாந்தி: சாந்தி: (அடியிற்கண்ட வித்யையின் அநுஷ்டானத்தில் விக்னம் வராமலிருக்கவேண்டிய நிமித்தம், 'ஓம், சாந்தி:' என்று மூன்று தரம் சொல்லப்பட்டது.)

2. ஓம். (ஸ்ருஷ்டிக்குமுன்) இதோ காணப்படுகிற பலவித ஜலங்கள் (ஓரே மொத்த) ஜலமாகவிருந்தது. அந்த பிரஜா பதியானவர் (பிரம்மனுனவர்) ஒருவராக, தாமரை தலத்தில் (மஹாவிஷ்ணுவின் ஹிருதய கமலத்திலிருந்து) உண்டானூர். அவருக்கு (பிரம்மனுக்கு) ஸ்ருஷ்டிப்போமென்ற ஓர் இச்சை மனதில் உண்டாயிற்று.

அதனுல், ஒரு புருஷன் எதை மனஸால் இச்சிக்கின்ருனே அதை வாக்கால் சொல்லுகின்ருன்; அதைக் கர்மாவால் செய்கின்ருன்; இந்த விஷயத்தில் அடியிற்கண்ட ருக்கு (மந்திரம்) இருக்கின்றது.

"எக்காலத்தில் முந்தி ஜலமிருந்ததாகச் சொல்லப்பட்டிருக்கின்றதோ அக்காலத்தில் பிரஜாபதிக்கு மனஸில் மேற்படி இச்சை உண்டாயிற்று; வித்வான்கள் நிச்சயபுத்தியால் தங்கள் ஹிருதயத்தில் பிரத்யகாத்மாவைப் பார்த்தறிந்து, பிரம்மத்தினுடைய பந்துவாகிய (பிரம்மத்திலிருந்துண்டான) மேற்படி பிரஜாபதியை அஸத்தினிடம் அவ்யாகிருத வஸ்துவாகப் பார்க்கின்ருர்கள் (அறிகின்ருர்கள்)" (என்று ருக்கு.)

இவ்விதம் இச்சையடைந்த பிரஜாபதியினிடமிருந்து, இச்சிக்கப்பட்ட வஸ்து (ஜகத்) உண்டாகின்றது. அவர் தபஸைச் செய்தார் (மனஸையும் இந்திரியங்களையும் ஓரேயிடத்திலிருக்கும்படி செய்தார்). அப்படிச் செய்து, இந்த (அடியிற் கண்ட) பிரகரணத்திலுள்ள மந்திரங்களுக்கெல்லாம் முக்கியமானதும், நரஸிம்ஹ தேவ ஸம்பந்தமானதும், அநுஷ்டுப்பினுல் (முப்பத்திரண்டு அக்ஷரங்களுள்ள சுலோகத்தால்) சொல்லப்பட்டதுமான மந்திரத்தைக் கண்டார் (ஜபித்தார்). அதனுல், இதோ காணப்படுகின்ற, எது, எது உண்டோ அவைகள் எல்லாவற்றையும் ஸ்ருஷ்டித்தார். ஆகையால், இவைகள் எல்லாவற்றையும் அநுஷ்டுப் ஸம்பந்தமுள்ளதென்று (பெரியோர்கள்) சொல்லுகின்ருர்கள்.

அநுஷ்டுப்பில் நின்றும் இந்த பூதங்களெல்லாம் உண்டாயின; அதனுல் பிழைத்திருக்கின்றன; அதிலேயே லயத்தை யடை

கின்றன. இந்த விஷயத்தில் அடியிற்கண்ட ருக் (மந்திரம்) இருக்கின்றது.

"மேற் சொல்லப்பட்ட அநுஷ்டுப்பானது முதன்மையாகவும், உத்தமமாகவு மிருக்கின்றது; அநுஷ்டுப் என்பது வாக்குத்தான்; (எல்லாப் பூதங்களும்) வாக்கில் அடங்கியிருக்கின்றன: அதினின்றும் உண்டாகின்றன; வேதங்களுக்கெல்லாம் உத்தமமானது" (என்று ருக்.)

---

## கண்டம் 2.

அந்த ஸாம மந்திரத்தின் முதற்பாதமாக, ஸமுத்திரம், பர்வதம், ஏழுதீவு இவைகளுடன் கூடிய பூமியையும்; இரண்டாவது பாதமாக, யக்ஷர்கள், கந்தர்வர்கள், அப்ஸரஸ் கூட்டம் இவைகளுடன் கூடிய அந்தரிக்ஷத்தையும்; மூன்றாவது பாதமாக, வஸுக்கள், ருத்திரர்கள், ஆதித்யர்கள் இவர்களுடன் சேர்ந்த ஸ்வர்க்கத்தையும்; நான்காவது பாதமாக, நிரஞ்ஜனமாயும், பிரகாசமாகிய ஹிருதயாகாசத்திலுள்ளதுமான பிரம்ம ஸ்வரூபத்தையும் அறியவேண்டியது. இவ்விதமறிபவன் அமிருதத்வத்தையடைகின்றான். மேலும், அங்கங்களோடும், சாகைகளோடும் கூடிய ருக்கு, யஜுஸ், ஸாமாதர்வ வேதங்கள் அந்த மந்திரத்திற்கு நான்கு பாதங்களாயிருக்கின்றன.

அந்த மந்திரத்திற்கு, தியானம் எது? தைவம் என்ன? அங்கங்கள் எவை? அவ்வங்கங்களின் தேவதைகள் எவர்கள்? சந்தஸ் எது? ரிஷி எவர்? (இவைகளுக்கு உத்தரங்கள் பின் சொல்லப்படும்.)

---

## கண்டம் 3.

அந்தப் பிரஜாபதி சொல்லியதாவது:—ஸவிதிரு (ஸூர்ய) ஸம்பந்தமான எட்டு அக்ஷரங்களுள்ளதும், "ஸ்ரீ" என்ற பீஜாக்ஷரத்துடன் கூடிய மந்திரம் மேற்படி ஸாம மந்திரத்தின் ஓர் அங்கம்; இவ்விதம் அறிந்தவன் ஸ்ரீயுடன் சேருவான். எல்லா வேதங்களும் பிரணவத்தை முதன்மையாக வுடையன; அந்தப் பிரணவம் மேற்படி ஸாமாவிற்கு ஓர் அங்கம்; அதை யறிந்தவன் மூன்றுலகத்தையும் ஜயிக்கிறான். இருபத்துநான்கு அக்ஷரங்க

ளுள்ள மஹாலக்ஷ்மீ யஜுர்மந்திரம் மேற்படி ஸாமாவின் ஓர் அங்கம்; அதை யறிந்தவன் ஆயுள், கீர்த்தி, யசஸ், ஞானம், ஐசுவரியம் இவைகளை யடைகின்றான். ஆதலால், இந்த ஸாமாவை அங்கங்களுடன் இருப்பதாக அறியவேண்டியது. அங்ஙனமறிந்தவன் அமிருதத்வத்தையும் யடைகின்றான். மேற்படி மந்திரங்களை ஸ்திரீகளுக்கும், சூத்திரர்களுக்கும் சொல்லக் கூடாது. முப்பத்திரண்டு அக்ஷரங்களுள்ள ஸாமாவை அறிய வேண்டும்; அதை யறிந்தவன் அமிருதத்வத்தை யடைகின்றான். ஸ்திரீகளாவது சூத்திரர்களாவது ஸாவித்ரீ, லக்ஷ்மீ, யஜுஸ், பிரணவம் இவைகளை ஜபித்தால், இறந்தபின் நரகத்தை யடைவார்கள்; ஆதலால், அவர்களுக்கு ஒரு பொழுதும் சொல்லக் கூடாது. அவ்விதம் எவனுகிலும் சொல்லிக்கொடுத்தால் அவன் மிருதனுய் நரகத்தை யடைவான்.

---

## கண்டம் 4.

மேலும், பிர்ஜாபதி சொல்லியதாவது:—அக்நியே, இவ்வெல்லா வேதங்களாயும், எல்லா பூதங்களாயும், பிராணன்களாயும், இந்திரியங்களாயும், பசுக்களாயும், அன்னமாயும், அமிருதமாயும், ஸம்ராட்டாயும், ஸ்வராட்டாயும், விராட்டாயும், இவைகள் எல்லாமாயும் இருக்கின்றது; அப்படிப்பட்ட அக்நி மேற்படி ஸாமாவினுடைய முதல் பாதமாயிருக்கின்றது (அஃதாவது, முதல் பாதத்திற்கும், அதன் அங்கமாகிய பிரணவத்திற்கும் ஹிருதயமந்திரத்திற்கும் தேவதையாக இருக்கின்றது.)

ஸூர்யனே, ருக், யஜுஸ், ஸாம, அதர்வவேதங்களின் ஸ்வரூபமாகவும், அந்தராதித்யராகவும், ஹிரண்மய புருஷராகவுமிருக்கின்றார்; இவ்விதம் ஸூர்யன் மேற்படி ஸாமாவின் இரண்டாவது பாதமாயிருக்கின்றார். (அஃதாவது, இரண்டாவது பாதத்திற்கும், அதன் அங்கமாகிய ஸவிதாவுக்கும், சிரோமந்திரத்திற்கும் தேவதையாக இருக்கின்றது.)

சந்திரனே, ஒஷதிகளுக்கும், நக்ஷத்திரங்களுக்கும் பதியாக இருக்கின்றான்; அப்படிப்பட்ட சந்திரன் மேற்படி ஸாமாவின்

மூன்றாவதுபாதமாக விருக்கின்றார். (அஃதாவது, மூன்றாவது பாதத்திற்கும், அதன் அங்கமாகிய லக்ஷ்மீ மந்திரத்திற்கும், சிகா மந்திரத்திற்கும் தேவதையாக விருக்கின்றது.)

பிரம்மன், சிவன், விஷ்ணு, இந்திரன், அக்நி, அக்ஷரன், பரமன், ஸ்வராட் இத்தகைய பிரம்மவஸ்துவானது மேற்படி ஸாமாவின் நான்காவது பாதம் (அஃதாவது, நான்காவது பாதத்திற்கும், அதன் அங்கமாகிய நிருஸிம்ஹகாயத்ரீ மந்திரத்திற்கும், கவசமந்திரத்திற்கும் தேவதையாக விருக்கின்றது). இவ்விதம் இதை யறிந்தவன் அமிருதத்வத்தை யடைகிறான்.

அந்த ஸாமமந்திரத்தின்,

முதற் பாதத்தின் முதல் சப்தம்... உக்ரம்;
இரண்டாம் ,, ... ஜ்வலம்;
மூன்றாம் ,, ... நிருஸிம்ஹம்;
நான்காம் ,, ... மிருத்யு.

இதை யறிந்தவன் அமிருதத்வத்தையும் அடைகின்றான். ஆதலால், இந்த ரஹஸ்யமான ஸாமாவை ஒருவரிடமும் சொல்லக்கூடாது. அப்படி உபதேசிப்பதாயின், சுச்ரூஷைசெய்யும் புத்திரனுக்காவது, அல்லது அத்தகைய சிஷ்யனுக்காவது சொல்லவேண்டியது.

---

## கண்டம் 5.

மேற்படி ஸாமாவை, பாற்கடலில் படுத்திருப்பவராகவும், நரஸிம்ஹ மூர்த்தியாகவும், யோகிகளால் தியானம் செய்யப்பட்டதாகவு மிருக்கின்ற பரமபதமாக அறியவேண்டியது. அப்படி யறிந்தவன் அமிருதத்வத்தையும் யடைகின்றான்.

அந்த ஸாமமந்திரத்தின்,

முதற் பாதத்தின் பாதியின் முடிவு சப்தம்... வீரம்;
இரண்டாம் ,, ... தம்ஸ;
மூன்றாம் ,, ... ஹம்பீ;
நான்காம் ,, ... மிருதயும்.

இவ்விதம் ஸாமாவை யறியவேண்டியது.

அவ்வித மறிந்தவன் அமிருதத்வத்தை யடைகின்றான். ஆதலால், மேற்படி ஸாமாவை, எந்த ஆசார்ய முகமாய்க் கேட்ட போதிலும் ஒருவன் ஸம்ஸாரத்தினின்றும் விடுபடுகின்றான். மற்றவர்களுக்கும் உபதேசிக்கின்றான். மோக்ஷத்தையடைய விருப்பமுள்ளவனாகவு மிருக்கின்றான். அப்பொழுதிருக்கின்ற சரீரத்துடன் தேவதையைத் தர்சிக்கின்றான். ஆதலால், இம்மந்திரமே இக்கலியுகத்தில் மோக்ஷவழியாக விருக்கின்றது. ஆதல்பற்றி, இந்த ஸாமாவை அங்கங்களுடன் அறியவேண்டும். அப்படியறிந்தவன் முமுக்ஷுவாக ஆகின்றான் (அஃதாவது, ஸகுணபிரம்ம உபாஸன வித்யையானது மோக்ஷத்திற்கு வழி).

---

## கண்டம் 6.

மேற்கூறிய ஸாமாவை பிரணவ ஸ்வரூபராகவும், ருதமாகவும், ஸத்யமாகவும், பரபிரம்மமாகவும், புருஷனாகவும், நரஸிம்ஹ விக்ரஹமாகவும், கிருஷ்ண பிங்கள வர்ணமுள்ளவராகவும், ஊர்த்துவரேதஸ் உள்ளவராகவும், திரிணேத்திரராகவும், சங்கரராகவும், நீலலோஹிதராகவும், உமாபதியாகவும், பசுபதியாகவும், பிநாகம் என்ற தநுஸை யுடையவராகவும், அமிதமான பிரகாசத்தை யுடையவராகவும், ஸர்வவித்யைகளுக்கும் ஈசுவரராகவும், எல்லா பூதங்களுக்கும் ஈசுவரராகவும், தபஸுக்கு அதிபதியாகவும், பிரம்மனுக்கு அதிபதியாகவும், யஜுர்வேதத்தில் குறிக்கப்பட்டவராயு மிருக்கின்ற பிரம்மமாக அறியவேண்டியது. அவ்வித மறிந்தவன் அமிருதத்வத்தையும் அடைகின்றான்.

அந்த ஸாமமந்திரத்தின்,

| | | |
|---|---|---|
| முதற் பாதத்தின் பின்பாதியின் ஆதிசப்தம் | | ... மஹா; |
| இரண்டாம் | ,, | ... ர்வதோ; |
| மூன்றாம் | ,, | ... ஷணம்; |
| நான்காம் | ,, | ... நமா; |

என்றறியவேண்டியது.

அவ்வித மறிந்தவன் அமிருதத்தையு மடைகின்றான். ஆதலால் இந்த ஸாமாவை ஸத் சித் ஆனந்தமயமான பரபிரம்மமாக

அறியவேண்டியது. அங்ஙனமறிந்தவன் இவ்வுலகத்தில் மேன்மையுள்ளவனாக விருக்கின்றான். ஆதலால், இந்த ஸாமவை ஸாங்கமாக அறியவேண்டியது. அப்படி யறிந்தவன் அமிருதத்வத்தையடைகின்றான்.

பிரபஞ்சத்தை ஸ்ருஷ்டித்தவர்கள் இந்த ஸாமாவைக்கொண்டே அவ்விதம் ஸ்ருஷ்டித்தனர். ஆதலால், இதை உபாஸிக்கின்றவர்கள் பிரம்மத்தினுடைய ஸாயுஜ்யத்தையும், ஸாலோக்யத்தையும்யடைவார்கள். ஆதலால், இந்த ஸாமாவை அங்கங்களோடு அறியவேண்டியது. அப்படி யறிந்தவன் அமிருதத்வத்தையும்யடைகின்றான்.

மேற்படி ஸாமாவின்,

| | | |
|---|---|---|
| முதற் பாதத்தின் கடைப்பாக, சப்தம் | | ... விஷ்ணும் ; |
| இரண்டாம் | ,, | ... முகம் ; |
| மூன்றாம் | ,, | ... பத்ரம் ; |
| நான்காம் | ,, | ... ம்யஹம் ; |

என்றறியவேண்டியது.

அப்படி யறிந்தவன் அமிருதத்வத்தையு மடைகின்றான்.

இதைப் பிரஜாபதி யறிந்தவர். பிரம்மஸ்வரூபமாகிய தன்னிடத்திலேயே இந்த மந்திரத்தை யறியவேண்டியது. அப்படி யறிந்தவன் அமிருதத்வத்தையு மடைகின்றான். இவ்விதமறிந்த ஸ்திரீகளாகிலும், புருஷர்களாகிலும், இவ்வுலகத்திலிருக்க இச்சிக்கிறவர்களுக்கு எல்லா ஐசுவர்யங்களையும் கொடுக்கின்றார்கள். எவ்விடம் மரிக்கினும் மரணகாலத்தில் பிரம்மதாரகத்தை உபதேசிக்கின்றார். அதனால் அமிருதர்களாகின்றார்கள். ஆதலால், ஸாமவேத மத்தியிலிருக்கப்பட்ட இந்த மந்திரத்தை ஜபிக்க வேண்டும். ஆதலால், இந்த ஸாமாங்கத்தை எவனறிகின்றானோ அவனே பிரஜாபதி, அவனே பிரஜாபதி. இது மஹோபநிஷத். இதை யறிந்தவனும், இம்மந்திரத்தை உருவேற்றினவனும் மஹாவிஷ்ணுவாகின்றான், மஹாவிஷ்ணுவாகின்றான்.

---

# இரண்டாவது உபநிஷத்

## கண்டம் 1.

மிருத்யு, பாபம், ஸம்ஸாரம் இவைகளுக்குப் பயந்து தேவர்கள் பிரஜாபதியினிடம் ஓடினார்கள். அவர்களுக்கு இந்த முக்கிய மந்திரமான இந்த நரஸிம்ஹ அநுஷ்டுப் மந்திரத்தை உபதேசித்தார். அதனால் தேவர்களெல்லோரும் மிருத்யுவையும், பாபத்தையும், ஸம்ஸாரத்தையும் ஜயித்தார்கள். ஆதலால், (உலகத்தில்) எவன் மேற்படி மூன்றிற்கும் பயப்படுகின்றானோ அவன் மேற்படி மந்திரத்தைக் (குருமுகமாய்) கிரஹிக்கட்டும். அவன் அவைகளை ஜயிப்பான்.

(அந்த மந்திரத்திலிருக்கப்பட்ட பீஜாக்ஷரமாகிய) பிரணவத்திற்கு முதல் மாத்திரை, 'அ' காரம்; அது பிருதிவி, ஆகாசம், ருக்வேதம், பிரம்மன், வஸுக்கள், காயத்திரீ சந்தஸ், கார்ஹபத்யாக்நி, இப்படிபட்டது முதல் பாதம். இரண்டாவது மாத்திரை 'உ' காரம்: அஃது அந்தரிக்ஷம், யஜுர்வேதம், விஷ்ணு, ருத்திரர்கள், திருஷ்டுப்சந்தஸ், தக்ஷிணாக்நி, இப்படிப்பட்டது இரண்டாவது பாதம். மூன்றாவது மாத்திரை 'ம' காரம். அது த்யுலோகம்; ஸாமவேதம், ருத்திரன், ஆதித்யர்கள், ஜகதீசந்தஸ், ஆஹவநீயாக்நி, இப்படிப்பட்டது மூன்றாவது பாதம். கடைசி மாத்திரை நான்காவது அர்த்த மாத்திரை 'ஓம்' காரம்; அது சந்திரலோகம், அதர்வவேதம், ஏகரிஷி (பிரம்மம்), மருத்துக்கள். ஸம்வர்தக அக்நி, விராட் சந்தஸ், இப்படிப்பட்டது நான்காவது பாதம்.

---

## கண்டம் 2.

ஒவ்வொரு பாதமும் எட்டு அக்ஷரங்கள் அடங்கியது; இந்தப் பிரகாரம் (இந்த அநுஷ்டுப் மந்திரம்) முப்பத்திரண்டு அக்ஷரங்களுள்ளது; இப்படிப்பட்ட அநுஷ்டுப்பினால் எல்லாம் ஸ்ருஷ்டிக்கப்பட்டன; எல்லாம் அடங்கிப்போகின்றன: இதற்கு ஐந்து அங்

கங்களுண்டு ; மேற்படி நான்கு பாதங்களும், பிரணவம் ஒன்றும் (சேர்ந்து ஐந்து;) 'ஓம் ஹ்ருதயாய நம:', 'ஓம் சிரஸே ஸ்வாஹா, 'ஓம் சிகாயை வஷட்,' 'ஓம் கவசாய ஹூம்,' 'ஓம் அஸ்த்ராய பட்' என்ற ஐந்தில் ஒவ்வொன்றும் ஒவ்வோர் அங்கத்தோடு சேருகின்றது. இவ்வுலகங்கள் ஒன்றற்கொன்று ஸம்பந்தமுள்ளன ; அவ்விதமே அங்கங்களும் ஸம்பந்தமுள்ளன. 'ஓம்' என்றது எல்லாமாக இருக்கின்றது. ஆதலால், ஒவ்வோர் அக்ஷரத்திற்கும் இருபக்கத்திலும் 'ஓம்'காரம் வைக்கப்பட்டிருக்கின்றது. இந்தப் பிரகாரம் பிரம்மவித்துக்கள் அக்ஷரந்யாஸங்களைச் சொல்லுகின்றார்கள்.

---

## கண்டம் 3.

மூலமந்திரத்திற்கு 'உக்ரம்' முதலாவது ஸ்தாநம்; 'வீரம்' இரண்டாவது; 'மஹாவிஷ்ணும்' மூன்றாவது; 'ஜ்வலந்தம்' நான்காவது; 'ஸர்வதோமுகம்' ஐந்தாவது; 'நிருஸிம்ஹம்' ஆறாவது ; 'பீஷணம்' ஏழாவது ; 'பத்ரம்' எட்டாவது; 'மிருத்யு மிருத்யும்' ஒன்பதாவது ; 'நமாமி' பத்தாவது; 'அஹம்' பதினொன்றாவது: இப்படிப் பதினோரு ஸ்தானங்கள். இவ்விதமறிந்தவன் அமிருத்வத்தையும் அடைகின்றான். இந்தப் பிரகாரம் அநுஷ்டுப்பினால் எல்லாம் உண்டாகின்றது, நசிக்கின்றது ; ஆதலால், எல்லாம் அநுஷ்டுப்தான். இப்படி யறிந்தவன் அமிருத்வத்தையும் அடைகின்றான்.

தேவர்கள் பிரஜாபதியை அடியிற்கண்டபடி பிரச்னம் செய்தார்கள். ("இந்த மந்திரத்தில்) 'உக்ரம்' என்று எக்காரணத்தினால் சொல்லப்படுகிறது ?"

பிரஜாபதி (பதில்) சொல்லுவதாவது:—எக்காரணத்தால் நிருஸிம்ஹ மூர்த்தியானவர் தன் மஹிமை (மாயை)யினால் எல்லா உலகங்களையும், தேவர்களையும் ஆத்மாக்களையும், பூதங்களையும் உயரக் கிளப்புகின்றாரோ, எப்பொழுதும் ஸ்ருஷ்டிக்கின்றாரோ, வாஸம்செய்யும்படி செய்கிறாரோ கிரஹிக்கப்படுகிறாரோ, கிரஹிக்கப்படும்படி செய்கிறாரோ அக்காரணத்தால் 'உக்ரம்' என்று சொல்லப்படுகின்றது. இதற்குச் சுருதியில் சொல்லப்

பட்டிருப்பதாவது "கேட்கப்பட்டதும், குஹையிலிருப்பதும், சக்கரத்திற் குள்ளிருப்பதும், யுவாவாயும், பயமற்றதாயும், மிருக ரூபமாயும் உக்கிரமாயு மிருக்கிற மூர்த்தியை ஸ்தோத்திரம் செய். ஹே! ஸிம்ஹமே! அவ்விதம் ஸ்தோத்திரம் செய்யப்பட்ட நீ ஸ்தோத்திரம் செய்பவனை ஸுகப்படுத்து. உன் ஸேனைகள் எங்கள் விரோதிகளை நாசப்படுத்தட்டும்."

'வீரம்' என்று எக்காரணத்தால் சொல்லப்படுகின்றது?

எக்காரணத்தால் தன் மஹிமையினால் எல்லா உலகங்களை யும், தேவர்களையும், ஆத்மாக்களையும், பூதங்களையும் கொண்டு விளையாடுகிறாரோ, இடைவிடாமல் ஸ்ருஷ்டிக்கிறாரோ, விட்டு விடுகிறாரோ, வஹிக்கும்படிசெய்கிறாரோ அக்காரணத்தால் சொல்லப்பட்டது. (இதற்குச் சுருதி) வீரராயும் (சூரராயும் அல்லது பலவித அவதாரங்கள் எடுப்பதால் விளையாடுகிறவரா யும்,) (அந்த அந்த அவதாரத்திற்குரிய) கர்மாக்களைச் செய்யக் கூடியவராயும், ஸோம யாகத்தில் அத்வர்யு முதலான ரூபராயும், தேவகாமனும் (பிரம்மாதி தேவர்களைத் தன் ஸ்வரூபத்தின் பிரகாரம் அவதரிக்கும்படி செய்ய இச்சையுள்ளவராயும்) ஆகிறார். எக்காரணத்தால் 'மஹாவிஷ்ணு' என்று சொல்லப்படுகின்றது?

எக்காரணத்தால் எல்லா உலகங்களிலும் வியாபித்திருக்கின் றாரோ, வியாபிக்கும்படி செய்கின்றாரோ, மாம்ஸபிண்டத்தில் கலந்த எண்ணெய்போல எதிலேயும் ஸம்பந்தப்பட்டுக் கலந்திருக் கின்றாரோ, எவரைக்காட்டிலும் அந்யவஸ்து ஒன்றுமில்லாம லிருக்கின்றதோ, எல்லா பூதங்களிலும் பிரவேசித்திருக்கின்றாரோ அக்காரணத்தால் சொல்லப்பட்டது. (இதற்கு ருக் மந்திரம்) "பிரஜாபதியானவர் பிரஜையுடன்கூட மூன்று அக்நிகளையும் ஸேவித்துப் பதினாறுவது கலையாகின்ற நிராகார பிரம்மமாகவே ஆனார்."

'ஜ்வலந்தம்' என்று எக்காரணத்தால் சொல்லப்படுகிறது?

எக்காரணத்தால் தன்னுடைய மஹிமையாகிற மாயையால் எல்லா உலகங்கள் முதலியவைகளைத் தன் தேஜஸைக்கொண்டு

ஜ்வலிக்கின்றாரோ, ஜ்வலிக்கும்படியும் செய்கின்றாரோ அக்கார ணத்தால் சொல்லப்பட்டது. (இதற்கு ருக் மந்திரம்) "ஸௌர்யா காரராயும், எல்லாக் கர்மாக்களுக்கும் அநுக்ஞை கொடுக்கின்ற வராயும், வருத்தப்படுத்தாதவராயும், இச்சையை உண்டுபண்ணு கிறவராயும், சோபனராயும், சோபனமானவராயும், கலியாண ராயு மிருக்கிறார்."

'ஸர்வதோமுகம்' என்று எக்காரணத்தால் சொல்லப்படு கிறது?

எக்காரணத்தால் இந்திரியமற்றவராயிருந்தாலும் எங்கும் பார்க்கிறாரோ, எங்கும் கேட்கிறாரோ, எங்கும் போகிறாரோ, எங்கும் கிரஹிக்கிறாரோ, எங்கு மிருக்கிறாரோ அக்காரணத்தால் சொல்லப்படுகிறது. (இதற்கு ருக் மந்திரம்) 'எந்த ஒருவரே முதலில் இந்த ஜகத்தானாரோ, எவரிடமிருந்து இப்புவனத்திற்குக் கோப்தாவான விஷ்ணுவாக வானாரோ, பிரளய காலத்தில் எதில் இப்புவனம் போய்ச்சேருகின்றதோ அப்படிப்பட்ட ஸர்வதோ முகரை நமஸ்கரிக்கின்றேன்."

'நிருஸிம்ஹம்' என்று எக்காரணத்தால் சொல்லப்பட்டது?

எக்காரணத்தால் எல்லாப் பூதங்களுக்குள் நரனும் ஸிம்ஹ மும் வீரியதமமாயும், சிரேஷ்டதமமாயும் இருக்கின்றாரோ அக்காரணத்தால் சொல்லப்படுகின்றது. ஆதலால் பரமேசுவரர் உலகத்தின் ஹிதத்தின்பொருட்டு இந்த நிருஸிம்ஹரூபத்தை எடுத்தார். (இதற்கு ருக் மந்திரம்) "விஷ்ணுவானவர் தன் வீரியத்தால் ஸிம்ஹமாக ஸ்துதியை அடைகின்றார். பயங்கர மில்லாதவர், எங்கும் போகின்றவர், பர்வத குஹையிலிருக்கின்ற வர், தன்னுடைய பிரம்மன், விஷ்ணு, மஹேசுவரன் என்ற மூன்று பெரிய ஸ்வரூபங்களிலிருந்துகொண்டு புவனங்களை வஸிக்கும் படி செய்கின்றவர்."

"பீஷணம்" என்று எக்காரணத்தால் சொல்லப்படுகிறது?

எக்காரணத்தால் இவருடைய மஹாபிரகாசமுள்ள ரூபத் தைப் பார்த்து எல்லா உலகங்களும், தேவர்களும், பூதங்களும்

பயந்து ஓடுகின்றார்களோ, தான் ஒன்றற்கும் பயப்படாமலிருக்கின்றாரோ அக்காரணத்தால் சொல்லப்படுகிறது. (இதற்கு ருக் மந்திரம்) 'இவரிடத்தினின்றும் பயத்தினால் வாயு வீசுகிறார்; ஸூர்யன், உதயமாகிறான். அக்நி, சந்திரன், மிருத்யு தத்தம் காரியத்தைச் செய்கின்றார்கள்.''

'பத்ரம்' என்று ஏன் சொல்லப்படுகிறது ?

எக்காரணத்தால் தான் கல்யாணகரராயிருந்து எப்பொழுதும் கல்யாணத்தைக் கொடுக்கின்றாரோ, ரோசனராயும், ரோசமானராயும், சோபனராயும், சோபமானராயும், கல்யாணராயும் இருக்கின்றாரோ அக்காரணத்தால் சொல்லப்படுகிறது, (இதற்கு ரிக் மந்திரம்) இவ்வுபநிஷத்திற்குச் சொல்லப்பட்ட சாந்தி மந்திரம்.

'மிருத்யு மிருத்யும்' என்று ஏன் சொல்லப்படுகிறது ? எக்காரணத்தால் ஈசுவரன் தன் பக்தர்களால் தான் ஸ்மரிக்கப்பட்ட மாத்திரத்தில் அவர்களுடைய மிருத்யுவையும், அபமிருத்யுவையும், நாசப்படுத்துகின்றாரோ அக்காரணத்தால் சொல்லப்படுகிறது. (இதற்கு ருக்) "எவர் தேவர்களுக்குத் தத்தம் ஸ்வரூபத்தைக் கொடுக்கின்றாரோ, ஸாமர்த்தியத்தையும் கொடுக்கின்றாரோ எவருடைய மஹாசக்கிரத்தை எல்லா தேவர்களும் உபாஸிக்கின்றார்களோ எவர் மிருத்யுவிற்கும் மிருத்யுவாக விருக்கின்றாரோ அவர்பொருட்டு ஹவிஸைக் கொடுக்கின்றோம்.''

'நமாமி' என்று ஏன் சொல்லப்பட்டது ?

எக்காரணத்தால் அவரை எல்லாத் தேவர்களும், முமுக்ஷுக்களும், பிரம்மவாதிகளும் வணங்கி நமஸ்காரம் செய்தார்களோ அக்காரணத்தால் சொல்லப்படுகிறது. (இதற்கு ருக் மந்திரம்.)

"பிரம்மணஸ்பதியா யிருக்கின்ற மந்திரத்திற்கும் தேவர்கள் வணங்குகிறார்கள். அந்த மந்திரத்தில் இந்திரன் முதலான தேவர்கள் உபாஸனையின்பொருட்டு கிருஹங்களை உண்டுபண்ணிக் கொள்ளுகிறார்கள்''

"அஹம்" என்று ஏன் சொல்லப்பட்டது ?

உபாஸிக்கப்படுகிற ஈசுவரனைத் தானாக பாவிக்கவேண்டுமாதலால் 'அஹம்' என்று சொல்லப்பட்டது (இதற்கு ருக்) "நான் முந்தியிருந்தவன்; மூர்த்தா மூர்த்தமாகிய ஜகத்திற்கு முந்தியவன்; பிராணிகளுடைய நாபியில் அமிருதத்திற்கிடம்; என்னை யார் அன்னமாக ஸ்வீகரிக்கின்றார்களோ அவருக்கு அன்னம் கொடுப்பேன். நான் எல்லா புவனமாயும், ஸூர்யஜ்யோதீ ரூபமாயும் இருக்கின்றேன்."

---

# மூன்றாவது உபநிஷத்

---

'மந்திரராஜனாகிய அநுஷ்டுப் மந்திரத்தின் பீஜத்தையும், சக்தியையும் எங்களுக்குச் சொல்லும்' என்று பிரஜாபதியைத் தேவர்கள் வினவினார்கள்.

அதற்குப் பிராஜாபதி சொல்லுவதாவது:—

இந்த நரஸிம்ஹ ஸம்பந்தமாகிய மாயையானது மேற்படி மந்திரத்தின் சக்தியாக இருக்கின்றது. அஃது எல்லாவற்றையும் ஸ்ருஷ்டிக்கின்றது, ரக்ஷிக்கின்றது, ஸம்ஹரிக்கின்றது. ஆதலால் இந்த மாயையே சக்தி. இவ்விதமறிந்தவன் பாபத்தைத் தாண்டு கிறான், மிருத்யுவைத் தாண்டுகிறான், அமிருதத்வத்தையு மடை கின்றான். மஹத்தான ஸம்பத்தை யடைகிறான். பிரம்மவித்துக் கள் அடியிற் கண்டபடி விசாரநிர்ணயம் செய்கின்றார்கள். இந்த சக்தி ஹ்ரஸ்வமாயும், தீர்க்கமாயும், ப்லுதமாயும் இருக்கின்றது. ஹ்ரஸ்வமாக உச்சரித்தால் பாபத்தைப் போக்கி அமிருதத்வத் தையுமடைகின்றான். தீர்க்கமாக உச்சரித்தால் மஹத்தான ஸம் பத்தையும் அமிருதத்வத்தையும் அடைகின்றான். ப்லுதமாக உச்சரித்தால் ஞானவானாகி அமிருதத்வத்தை யடைகின்றான்.

இதைக் குறித்து வேதத்தில் அடியிற்கண்ட பிரகாரம் நிதர்சனமாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றது.

" எவன் ருஜுமார்க்கத்திலிருக்கின்றானோ, ஸம்ஸார ஸாக ரத்தைத் தாண்ட வல்லமையுள்ளவனோ அவன் 'ஈம்' சக்தியைக் காப்பாற்றுகின்றான். விஷ்ணுசக்தியாகிய ஸ்ரீயையும், நரஸிம்ஹ சக்தியாகிய லக்ஷ்மியையும், பரமேசுவரசக்தியாகிய கௌரியை யும், பிரம்மனின் சக்தியாகிய ஸரஸ்வதியையும் ஸுப்ரமண்ய சக்தியாகிய இந்திரஸேனையையும், பிரம்மயோநியாகிய வித்யையை யும் ஆயுளின்பொருட்டு நான் சரணமடைகின்றேன்".

இவ்வெல்லாப் பூதங்களுக்கும் ஆகாசம் இருப்பிடம். ஏனெ
னின், இவை ஆகாசத்திலிருந்து உண்டாகின்றன. ஆகாசத்தில்
பிழைத்திருக்கின்றன. ஆகாசத்திலேயே சேருகின்றன. ஆதலால்,
ஆகாச வாசகமான 'ஹ' என்ற அக்ஷரம் இந்த மந்திரத்
திற்கு பீஜம் (மூலகாரணம்) என்று அறியவேண்டியது.
இது நிதர்சனமாய் வேதத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது.
"ஹம்ஸ: (பரமாத்மா) புத்தியிலிருக்கின்றவர், தேவன், அந்த
ரிக்ஷத்திலிருப்பவர், யாககர்த்தா, யாக வேதியில் (மேடையில்)
இருப்பவர், தாண்டக்கூடாத இடங்களில் இருப்பவர்,
மனுஷ்யனிடத்திலிருப்பவர், சிலாக்யமான இடங்களிலிருப்பவர்,
ஸத்யத்திலிருப்பவர், ஹிருதயாகாசத்திலிருப்பவர், ஜலத்தி
லுபாஸிக்கப்பட்டவர், வாக்குகளில் உபாஸிக்கப்பட்டவர், ஸத்
யத்தில் உண்டானவர், மேகத்திலுண்டானவர், ஸத்யவஸ்து,
பெரிதான வஸ்து என்றறிந்தவன்" என்று சொல்லப்பட்டிருக்
கின்றது.

---

# மூன்றாவது உபநிஷத்

---

'மந்திரராஜனாகிய அநுஷ்டுப் மந்திரத்தின் பீஜத்தையும், சக்தியையும் எங்களுக்குச் சொல்லும்' என்று பிரஜாபதியைத் தேவர்கள் வினவினார்கள்.

அதற்குப் பிராஜாபதி சொல்லுவதாவது:—

இந்த நரஸிம்ஹ ஸம்பந்தமாகிய மாயையானது மேற்படி மந்திரத்தின் சக்தியாக இருக்கின்றது. அஃது எல்லாவற்றையும் ஸ்ருஷ்டிக்கின்றது, ரக்ஷிக்கின்றது, ஸம்ஹரிக்கின்றது. ஆதலால் இந்த மாயையே சக்தி. இவ்விதமறிந்தவன் பாபத்தைத் தாண்டு கிறான், மிருத்யுவைத் தாண்டுகிறான், அமிருதத்வத்தையு மடை கின்றான். மஹத்தான ஸம்பத்தை யடைகிறான். பிரம்மவித்துக் கள் அடியிற் கண்டபடி விசாரநிர்ணயம் செய்கின்றார்கள். இந்த சக்தி ஹ்ரஸ்வமாயும், தீர்க்கமாயும், ப்லுதமாயும் இருக்கின்றது. ஹ்ரஸ்வமாக உச்சரித்தால் பாபத்தைப் போக்கி அமிருதத்வத் தையுமடைகின்றான். தீர்க்கமாக உச்சரித்தால் மஹத்தான ஸம் பத்தையும் அமிருதத்வத்தையும் அடைகின்றான். ப்லுதமாக உச்சரித்தால் ஞானவானாகி அமிருதத்வத்தை யடைகின்றான்.

இதைக் குறித்து வேதத்தில் அடியிற்கண்ட பிரகாரம் நிதர்சனமாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றது.

" எவன் ருஜுமார்க்கத்திலிருக்கின்றானோ, ஸம்ஸார ஸாக ரத்தைத் தாண்ட வல்லமையுள்ளவனோ அவன் 'ஈம்' சக்தியைக் காப்பாற்றுகின்றான். விஷ்ணுசக்தியாகிய ஸ்ரீயையும், நரஸிம்ஹ சக்தியாகிய லக்ஷ்மியையும், பரமேசுவரசக்தியாகிய கௌரியை யும், பிரம்மனின் சக்தியாகிய ஸரஸ்வதியையும் ஸுப்ரமண்ய சக்தியாகிய இந்திரஸேனையையும், பிரம்மயோநியாகிய வித்யையை யும் ஆயுளின்பொருட்டு நான் சரணமடைகின்றேன்".

இவ்வெல்லாப் பூதங்களுக்கும் ஆகாசம் இருப்பிடம். ஏனெனின், இவை ஆகாசத்திலிருந்து உண்டாகின்றன. ஆகாசத்தில் பிழைத்திருக்கின்றன. ஆகாசத்திலேயே சேருகின்றன. ஆதலால், ஆகாச வாசகமான 'ஹ' என்ற அக்ஷரம் இந்த மந்திரத்திற்கு பீஜம் (மூலகாரணம்) என்று அறியவேண்டியது. இது நிதர்சனமாய் வேதத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது. "ஹம்ஸ: (பரமாத்மா) புத்தியிலிருக்கின்றவர், தேவன், அந்தரிக்ஷத்திலிருப்பவர், யாககர்த்தா, யாக வேதியில் (மேடையில்) இருப்பவர், தாண்டக்கூடாத இடங்களில் இருப்பவர், மனுஷ்யனிடத்திலிருப்பவர், சிலாக்யமான இடங்களிலிருப்பவர், ஸத்யத்திலிருப்பவர், ஹ்ருதயாகாசத்திலிருப்பவர், ஜலத்திலுபாஸிக்கப்பட்டவர், வாக்குகளில் உபாஸிக்கப்பட்டவர், ஸத்யத்தில் உண்டானவர், மேகத்திலுண்டானவர், ஸத்யவஸ்து, பெரிதான வஸ்து என்றறிந்தவன்" என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

---

## நான்காவது உபநிஷத்

---

### கண்டம் 1.

ஓம்! 'ஹே! பகவானே! மந்திரராஜனுகிய நாரஸிம்ஹ அநுஷ்டுப் மந்திரத்தின் அங்க மந்திரங்களை எங்களுக்குச் சொல்லும்' என்று தேவர்கள் பிரஜாபதியைக் கேட்டார்கள்.

பிரஜாபதி சொன்னதாவது:— 'பிரணவம், ஸாவித்ரி, காயத்ரி, யஜுர்லக்ஷ்மீ காயத்ரீ, ந்ருஸிம்ஹ காயத்ரீ இவைகளை அங்கங்களாக அறியவேண்டியது.' இப்படி யறிபவன் அமிருதத் வத்தை யடைகிருன்.

இவையெல்லாம் (காணப்படுகின்ற பதார்த்தங்கள் எல்லாம்) 'ஓம்' என்ற எழுத்து. அதனுடைய அர்த்தத்தைத் தெரிந்து கொள்ளவேண்டும். உண்டானது, இருப்பது, உண்டாகப்போவது எல்லாம் 'ஓம்' காரம். மூன்றுகாலத்தையும் தாண்டியது எது உண்டோ (அவ்யக்ததத்வம், பிரகிருதி) அதுவும் 'ஓம்' காரம் தான். இந்த எல்லா ஜகத்தும் பிரம்மம். இந்த ஜீவாத்மாவும் பிரம்மம். இந்த ஆத்மா நான்குபாதங்களாக (பங்குகளாக) விருக்கின்றது. ஒன்று, ஜாக்ரத் காலத்திலுள்ளவர்: வெளியில் பிரக்ஞையை யுடையவர்; ஏழு சக்திகளை யுடையவர்; பத்தொன்பது முகங்களை யுடையவர்; ஸ்தூலமான (பிருதிவியை) புஜிப்பவர் (ஸேவிப்பவர்), வைச்வாநரனென்று பெயர் (எல்லாநரரிடத்திலுமிருந்தும் அவர்களை நடத்துகின்றவர்). இப்படிபட்ட ஆத்மா முதலாவது பங்கு.

இரண்டாவது, ஸ்வப்னவஸ்தையில் உள்ளவர்; உள்பிரக்ஞை யுடையவர்; ஏழு சக்திகள் (அங்கங்கள்) உள்ளவர்; பத்தொன்பது முகமுள்ளவர்; தனித்தனியாய்ப் புஜிப்பவர்; தைஜஸரென்று பெயர்; இப்படிபட்ட ஆத்மா இரண்டாவது பங்கு.

மூன்ருவது, எந்த அவஸ்தையில் ஒரு காமத்தையும் இச்சிப்பதில்லையோ, ஒரு ஸ்வப்னத்தையும் காண்பதில்லையோ அந்த

அவஸ்தை ஸுஷுப்தி; அதில் இருக்கப்பவர்; ஒன்முகச் சேர்ந்தவர்; கனமான பிரக்ஞானமுள்ளவர்; ஆனந்தத்தை யநுபவிப்பவர்; சேதனை முகமாக யுடையவர்; பிராக்ஞரென்று பெயர்; இப்படிப்பட்ட ஆத்மா மூன்ருவது பங்கு. இவரே ஸர்வேசுரர், ஸர்வக்ஞர், அந்தர்யாமி, எல்லாவற்றிற்கும் காரணவஸ்து, பூதங்களுக்கு உத்பத்தி ஸ்தானமும், லயஸ்தானமும்.

நான்காவது, வெளி பிரக்ஞனுமன்று, உள் பிரக்ஞனுமன்று, இரண்டுமல்லன், பிரக்ஞனுமன்று, அப்ரக்ஞனுமன்று, பிரக்ஞானகனமுமன்று, பார்க்கப்படாதது, வியவஹரிக்கமுடியாதது, கிரஹிக்கப்படாதது, லக்ஷணமில்லாதது, சிந்திக்கப்படாதது, வ்யபதேசிக்கப்படாதது, ஏகாத்மபிரத்யயஸாரம், பிரபஞ்சத்திற்கு உபசமஸ்தானம், மங்களகரம், அத்வைதம், இப்படிபட்ட வஸ்து நான்காவது பங்கு. இந்த ஆத்மா அறியப்படவேண்டியது.

(இதனுல் பிரணவத்தின் மஹிமை சொல்லப்பட்டது. 'ஓம்' என்றது பிரணவம்; அதில் முதல் பாகம் 'அ'காரம் மேற்சொன்ன விசுவாத்மா; இரண்டாம் பாகம் 'உ'காரம் தைஜஸாத்மா; மூன்ரும் பாகம் 'ம'காரம் பிராக்ஞாத்மா; நான்காம் பாகம் எல்லாம் சேர்ந்தது, பரபிரம்மம்; ஆதலால், பிரணவம் பிரம்ம ஸ்வரூபம்.)

---

## கண்டம் 2.

பிறகு ஸவிதா ஸம்பந்தமான மந்திரம் சொல்லப்படுகிறது. அதற்கு ஸாவித்ரீ என்று பெயர்; அது காயத்ரீ சந்தஸ்; யஜுர் வேதத்தால் சொல்லப்படுகிறது; அதனுல் இவையெல்லாம் வியாபிக்கப்பட்டிருக்கிறது. அந்த மந்திரமானது, 'க்ருணி ஸூர்யாதித்ய ஓம்' என்றது. 'க்ருணி' என்றது இரண்டு அக்ஷரங்க ளடங்கியது; 'ஸூர்ய' என்றது மூன்று அடங்கியது; 'ஆதித்ய:' என்றது மூன்று அடங்கியது; ஆக எட்டு அக்ஷரங்களுள்ள பதம் இந்த மந்திரம்; 'ஸ்ரீம்' என்ற பீஜாக்ஷரத்தோடு சேர்ந்திருக்கின்றது. இப்படி யறிந்தவன் ஸம்பத்தால் நிறைக்கப்படுவான். இச்சங்கதி அடியிற்கண்ட ருக்கினுல் சொல்லப்பட்டிருக்கிறது.

'நசிக்காததாயும் உயர்ந்ததாயு மிருக்கின்ற எந்த தஹராகாசத்திலே எந்த வஸ்துவை எல்லாத் தேவர்களும், வேதங்களும் இருப்பதாக ஸேவிக்கின்றார்களோ அதை யறியாதவனுக்கு வேத்தால் என்ன பிரயோஜனம்? அறிந்தால் ஸுகியாயிருப்பான். இந்த ஸாவித்ரீ மந்திரத்தை யறிந்தவனுக்கு ருக், யஜுஸ், ஸாமாக்களினால் யாதொரு பிரயோஜனமுமில்லை (அஃதாவது இம்மந்திரம் மிகவும் சிலாக்கியமானது)'.

மஹாலக்ஷ்மீய மந்திரம் இருபத்துநான்கு அக்ஷரமுள்ளது. 'ஸத்தாயும்' பிரம்மத்தினுடைய வியாபகசக்தியாகவும், பிரம்மத்தின் காரணமாத்திர சக்தியாகவும், பிரம்மத்தின் எங்கும் தன் ரூபமாக விருக்கும் சக்தியாகவு மிருக்கின்ற மஹாசக்தியானது எங்களை ஏவுக. இந்த காயத்ரீ எல்லாமாக விருக்கின்றது. இதை உபாஸித்தவன் மஹத்தான ஸம்பத்தை யடைகின்றான்.

(பிறகு ந்ருஸிம்ஹ காயத்ரீ சொல்லப்படுகிறது.) 'அந்த பரமேசுவர ஸம்பந்தமான கவசாங்கத்தைத் தியானிக்கின்றேன்; அது ந்ருஸிம்ஹதேவரின்பொருட்டென்று அறிகின்றோம்; அப்படிப்பட்ட தேவர் எங்களை ஏவட்டும்.' இந்த காயத்ரீ தேவர்களுக்கும் வேதங்களுக்கும் காரணமாக விருக்கிறது. இப்படி இதை ஸேவிப்பவன் காரணமுள்ளவனாவன்.

---

## கண்டம் 3.

'எந்த மந்திரங்களால் நரஸிம்ஹ தேவர் ஸ்தோத்திரம் செய்யப்பட்டுப் பிரீதியுள்ளவராகித் தன்னைத் தரிசிப்பிவிக்கின்றாரோ அந்த மந்திரங்களை எங்களுக்குச் சொல்லும்' என்று தேவர்கள் பிரஜாபதியைக் கேட்டார்கள்.

அதற்குப் பிரஜாபதி சொல்லுவதாவது:—'எந்த நரஸிம்ஹ தேவர் பிரம்மன் ஸ்வரூபமாக விருக்கின்றாரோ அவருக்கு நமஸ்காரம்' என்பது முதலான முப்பத்திரண்டு மந்திரங்கள். (அடியில் குறிக்கப்படும் பெயர்களை வரிசையாக 'பிரம்மன்' என்றதற்குப் பதிலாகச் சொல்லிக்கொள்ளவேண்டியது.) விஷ்ணு, மஹேசுவரன்

புருஷன், ஈசுவரன், ஸரஸ்வதீ, ஸ்ரீ, கௌரி, பிரகிருதி, வித்யா, ஓங்காரம், வேதங்கள், பஞ்சாக்ஷிகள், ஏழு வியாஹ்ருதிகள், எட்டு உலகபாலர்கள், ஆதித்யர்கள், எட்டு வஸுக்கள், எட்டு கிரஹங்கள், ஐந்து மஹா பூதங்கள், மூன்று உலகங்கள், காலன், மனு, மிருத்யு, யமன், அந்தகன், பிராணன், ஸூர்யன், ஸோமன், ஜீவன், விராட், எல்லாம்.

இந்த முப்பத்திரண்டு மந்திரங்களால் தேவர் ஸ்துதிக்கப் பட்டுப் பிரீதியுள்ளவராகத் தன்னைத் தரிசிப்பிவிக்கின்றார். ஆதலால், எவன் தினந்தோறும் இம்மந்திரங்களால் தேவனை ஸ்தோத்திரம் செய்கின்றானோ அவன் அவரை அடைகின்றான்; அமிருதத்வத்தையும் அடைகின்றான்.

---

# ஐந்தாவது உபநிஷத்

1. பிறகு தேவர்கள் பிரஜாபதியை அடியில் வருமாறு கேட்டார்கள்.

"எல்லாக் காமங்களையும் கொடுக்கின்றதாயும், மோக்ஷத்திற்குத் துவாரமாயும், எதை யோகிகள் சொல்லுகின்றார்களோ அந்த மஹா சக்கர மென்று பெயருள்ள சக்கரத்தை எங்களுக்குச் சொல்லும்."

அதற்குப் பிரஜாபதி சொல்லுவதாவது:—இந்த மஹாசக்கரம் ஆறு அரங்களுள்ளது; 'ஸுதர்சனம்' என்று பெயர் கொண்டது; ஆறு ருதுக்களும் ஆறு பத்திரங்களாக விருக்கின்றன ; மத்தியில் நாபி யிருக்கின்றது; அந்த நாபியில் இந்த அரங்கள் கோக்கப் பட்டிருக்கின்றன. மாயையினால் இவை எல்லாம் சூழப்பட்டிருக்கின்றது. மாயை ஆத்மாவைத் தொடுவதில்லை. ஆதலால், இந்த ஜகத் மாயையால் வெளியில் சூழப்பட்டிருக்கின்றது.

அந்தச் சக்கரம் எட்டு அரங்களுள்ளதாகவும், எட்டு பத்திரமுள்ளதாகவும் இருக்கின்றது. காயத்ரீ எட்டு அக்ஷரமுள்ளது; அதனுடன் சேர்ந்திருக்கின்றது. ஆகையால் வெளியில் மாயையால் எல்லாம் சூழப்பட்டிருக்கின்றது. இந்த மாயை எல்லா இடங்களையும் அடைகின்றது.

இந்தச் சக்கரம் பன்னிரண்டு அரங்களுள்ளதாகவும், பத்திரங்களுள்ளதாகவும் இருக்கின்றது. புருஷன் பதினாறு கலைகளுடையவன். இவையெல்லாம் புருஷன் ; புருஷனுடன் சேர்ந்திருக்கின்றன. வெளியில் மாயையால் சூழப்பட்டதாக விருக்கின்றது.

இந்தச் சக்கரம் முப்பத்திரண்டு அரங்களும் பத்திரங்களுமுள்ளது. அநுஷ்டுப் மந்திரம் முப்பத்திரண்டு அக்ஷரங்களுள்ளது. அதனுடன் சேர்ந்திருக்கிறது. வெளியில் மாயையால் சூழப்பட்டிருக்கின்றது.

இந்த ஸுதர்சனசக்கரம் அரங்களால் ஸ்திதியுள்ளது. தேவர்கள்தான் அரங்கள்; இந்தச் சக்கரம் பத்திரங்களால் சேர்ந்திருக்கின்றது. பத்திரங்கள் சந்தஸ்கள்.

2. இந்தச் சக்கரமே ஸுதர்சனமென்று பெயருள்ள மஹாசக்கரம். அதன் மத்யத்தில், நாபியில், தாரகம் (பிரணவம்) இருக்கின்றது. நாரஸிம்ஹமாகின்ற ஏகாக்ஷரம் ஏதுவுண்டோ அதுவாகவே இருக்கின்றது. அந்தச் சக்கிரத்தின் ஆறு பத்திரங்களில் ஆறு அக்ஷரமுள்ள ஸுதர்சன மந்திரமிருக்கின்றது. எட்டு பத்திரங்களில் எட்டு அக்ஷரங்களுமுள்ள நாராயணமந்திரம் இருக்கின்றது. பன்னிரண்டு பத்திரங்களில் பன்னிரண்டு அக்ஷரங்களுள்ள வாஸுதேவமந்திர மிருக்கின்றது. பதினாறு பத்திரங்களில், பிந்துக்களுடன் கூடிய பதினாறு மாத்ருகா அக்ஷரங்களான பதினாறு கலைகளிருக்கின்றன. முப்பத்திரண்டு பத்திரங்களில் முப்பத்திரண்டு அக்ஷரங்களுள்ள மந்திரராஜ நரஸிம்ஹ அநுஷ்டுப் மந்திரம் இருக்கின்றது.

இதுதான் ஸர்வகாமங்களையுங் கொடுப்பதாகவும், மோக்ஷ துவாரமாகவும், ருக், யஜுஸ், ஸாம, அதர்வவேத மயமாகவுமிருக்கின்ற மஹாசக்கரம். இதற்கு முன்பக்கத்தில் விச்வேதேவர்களும், நடுப்பக்கத்தில் பிரம்மன், விஷ்ணு, மஹேசுவரர்களும் இருக்கின்றார்கள். ஸூர்ய சந்திரர்கள் பக்கத்திலும் இருக்கின்றார்கள்.

இதற்கு ருக், முன் 5-வது உபநிஷத்தின் இரண்டாவது கண்டத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது.

இந்த மஹாசக்கரத்தை அறிகின்ற பாலனாகட்டும், யுவாவாகட்டும் அவன் மஹானாயும், குருவாயும், எல்லா மந்திரங்களையும் உபதேசிக்கக் கூடியவனாகவு மாகின்றான். இந்த அநுஷ்டுப் மந்திரத்தால் ஹோமம் செய்யவேண்டும். இது ராக்ஷஸர்களை நாசம் செய்கின்றது; மிருத்யுவைத் தாண்டச் சக்தியைக் கொடுக்கின்றது. குருவிடமிருந்து கிடைத்த இந்தச் சக்கரத்தைக் கழுத்திலாவது, கைகளிலாவது, சிகையிலாவது கட்டிக்கொள்ளவேண்டும்.

இதற்கு ஏழு தீவுகளுள்ள பூமியே தக்ஷிணையாக ஏற்படும். ஆதலால் இதற்காக சிரத்தையுடன் எதைக் கொடுப்பினும் அது தக்ஷிணையாகும்.

3. 'இம் மந்திரத்தின் பலனைச் சொல்லும்' என்று பிரஜா பதியைத் தேவர்கள் கேட்டார்கள். அவர் சொல்லுவதாவது:— இந்த மந்திரத்தைத் தினந்தோறும் அத்யயநம் செய்பவன் அக்நி, வாயு, பிரம்மன், விஷ்ணு, ருத்ரன், ஆதித்யன், ஸோமன், ஸத்யம், உலகம், தேவன், எல்லாம் இவர்களால் பரிசுத்தப் படுகிறான்.

4. இந்த மந்திரத்தைத் தினந்தோறும் அத்தியயநம் செய் பவன் பாபம், மிருத்யு, கர்ப்பஹத்தி பிரம்மஹத்தி, ஸர்வஹத்தி, ஸம்ஸாரம், ஸர்வம் இவைகளைத் தாண்டுகிறான்.

5. அக்நி, வாயு, ஆதித்யன், ஸோமன், உதகம், தேவர்க ளெல்லாம், கிரஹங்களெல்லாம், விஷம் இவைகளை ஸ்தம்பனம் செய்கிறான்.

6. பூலோகம், புவர்லோகம், ஸுவர்லோகம், 'மஹோ-ஜநோ-தபோ-ஸத்ய உலகங்களையும், மற்றைய பாதால முதலிய கீழ் உலகங்களையும் ஜயிக்கின்றான்.

7. மனிதர்கள், தேவர்கள், நரர்கள், கிரஹங்கள், யக்ஷர்கள் முதலான எல்லோரையும் வசப்படுத்திக்கொள்ளுகிறான்.

8. அக்நிஷ்டோமம் முதலிய எல்லா யாகங்களையும் செய்கின்றான் (அஃதாவது, எல்லா யாகங்களின் பலன்கள் இவனுக்குக் கிடைக்கின்றது).

9. ருக் முதலான எல்லா வேதங்களையும் அத்யயநம் செய்தவனாகிறான். பிரணவத்தையும் அத்யயநம் செய்தவனாகி றான். பிரணவத்தை அத்யயநம் செய்தவன் எல்லாவற்றையும் அத்யயநம் செய்தவனாகிறான் (இதனால் பிரணவமும் நாரஸிம்ஹ மந்திரமும் ஸமம் என்று காட்டப்படுகிறது).

10. நூறு அபிரம்மசாரிகளுக்கு ஒரு பிரம்மசாரி ஸமம். நூறு பிரம்மசாரிகளுக்கு ஒரு கிருஹஸ்தன் ஸமம். நூறு கிருஹஸ்தர்களுக்கு ஒரு வாநபிரஸ்தன் ஸமம். நூறு வாநபிரஸ் தர்களுக்கு ஒரு யதி ஸமம். நூறு யதிகளுக்கு ஒரு ருத்திரஜபம்

செய்பவன் ஸமம். நூறு ருத்திரஜப்தாக்களுக்கு ஓர் அதர்வண சிகாமந்திரங்களை ஜபிப்பவன் ஸமம். நூறு அதர்வணசிகாமந்திர ஜப்தாக்களுக்கு ஓர் இந்த மந்திரராஜனை ஜபிப்பவன் ஸமம். இந்தப் பிரகாரம் நாரஸிம்ஹ மந்திரம் நிரம்ப உயர்ந்தது. இந்த மந்திரத்தை ஜபிப்பவனுக்கு மேலான பதவி கிடைக்கும். (எப்படிபட்ட பதவி யெனில்) எந்த ஸ்தானத்தில் ஸூர்யன் தபிக்கவில்லையோ, வாயு வீசுவதில்லையோ, சந்திரன் தபிக்கவில்லையோ, நக்ஷத்திரங்கள் பிரகாசிப்பதில்லையோ, அக்நி தஹிக்கவில்லையோ, மிருத்யு பிரவேசிப்பதில்லையோ, துக்கம் உண்டாவதில்லையோ, எது ஸதாநந்தமாயும், பரமாநந்தமாயும், சாசுவதமாயும், சாந்தமாயும், ஸதாசிவமாயும், பிரம்மன் முதலானவர்களால் வந்திக்கப்பட்டதாயும், யோகிகளால் தியானிக்கப்பட்டதாயும், எதனிடத்தில் சென்று யோகிகள் திரும்பி வருவதில்லையோ அப்படிப்பட்ட ஸ்தானமாயிருக்கின்றது.

இதற்கு ருக்மந்திரம் சொல்லப்பட்டிருக்கின்றது. "விஷ்ணுவின் பரமபதத்தை உபாஸகர்கள் எப்பொழுதும் பார்க்கின்றார்கள். (எத்தகைய பதம் எனில்) ஆகாசத்தில் விஸ்தாரமாக வைக்கப்பட்டிருக்கின்ற ஸூர்ய மண்டலம்போலிருக்கின்றது. இப்படிப்பட்ட பதத்தை மேதாவிகளாகவும், ஜாக்ரத்முதலிய அவஸ்தைகளைக் கடந்தவர்களாகவும், பிராமணர்களுமான உபாஸகர்கள் பூர்ணமாக அடைகின்றார்கள். நிஷ்காமனுக்கே இப்பதமுளது."

---

## பூர்வதாபநீ முற்றிற்று

---

[இவ்வுபநிஷத்தின் பின்பாகமான உத்தரதாபநீ உபநிஷத்தில் அநேகமாக பூர்வதாபநீயில் சொல்லப்பட்டதே இருப்பதாலும், ஆசார்யரவர்களால் பாஷ்யம் செய்யப்படாமலிருப்பதாலும் மொழிபெயர்க்கப்படவில்லை.]

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:

---

## ந்ருஸிம்ஹதாபநீ முற்றிற்று

ஓம்

## அதர்வண வேதீய

# ப்ரச்நோபநிஷத்

---

### சாந்தி:

(இஃது அதர்வணவேத உபநிஷத்தானபடியால் முன் நிருஸிம்ஹதாபநீ உபநிஷத்தின் சாந்தியே இதற்கும் சாந்தியாகும்.)

---

### முதல் ப்ரச்நம்

---

1. பாரத்வாஜர் என்ற ஸுகேசர் (i), சைப்யர் என்ற ஸத்யகாமர் (ii), ஸௌர்யாயணீ என்ற கார்க்யர் (iii), கௌசல்யர் என்ற ஆச்வலாயனர் (iv), பார்க்கவர் என்ற வைதர்பி (v), கபந்தி என்ற காத்யாயனர் (vi), இந்த ஆறு பெயர்களும் அபரபிரம்மபரர்களாகவும் (பரபிரம்மத்தை அறியாமல் கர்மபரர்களாகவும்), அந்த பிரம்மநிஷ்டர்களாவும் (கர்மடர்களாகவும்), பரபிரம்மத்தை யறியவேண்டு மென்று இச்சையுள்ளவர்களாகவும், கைகளில் ஸமித்துக்களை எடுத்துக்கொண்டு பிப்பலாத ரிஷியிடத்திற்கு, இவர் எல்லாம் சொல்லத்தகுந்தவர் என்று நினைத்து, போனார்கள்.

2. அந்த (பிப்பலாத) ரிஷி அவர்கட்குச் சொன்னதாவது:—'மறுபடியும் தபஸுடனும் (இந்திரிய நிக்ரஹத்துடனும்), ச்ரத்தையுள்ள பிரம்மசர்யத்துடனும் (ஆஸ்திக்யபுத்தியுடனும்) ஒருவருஷகாலம் (குரு சுச்ரூஷைசெய்துகொண்டு) இருங்கள்; (பிறகு) இஷ்டப்படி கேட்டால் தெரியப்படுத்துகிறோம்; எல்லாவற்றையும் சொல்வோம்' என்று.

3. பிறகு (அப்படி ஒரு வருஷம் சென்ற பிறகு) கபந்தீ காத்யாயனர் வந்து கேட்டதாவது:—ஹே! பகவானே! இந்தப் பிரஜைகள் எதனிடத்தில் நின்றும் உத்பத்தியாயினர்?

4. அவர் பதில் சொன்னதாவது:— பிரஜாபதியானவர் (பரமாத்மா) பிரஜைகளை ஸ்ருஷ்டிக்கவேண்டுமென்ற இச்சை யுள்ளவராக, (அப்படி யாகட்டும் என்று) தபித்தார் (நினைத்தார்); தபித்து ரயி, ப்ராணன் (சந்திரன், ஸூர்யன்) ஆகிற இரட்டையை, இவர்கள் எனக்குப் பலவிதமான பிரஜைகளை உண்டுபண்ணப் போகிறூர்கள் என்று (நினைத்து), ஸ்ருஷ்டித்தார்.

5. ப்ராணன் என்றது ஸூர்யன், (அக்நி, தின்பவன்); ரயி என்றது சந்திரன் (தாஹ்யவஸ்து, அன்னம்); ரயியானது எது எது ஸ்தூலமாயும், ஸூக்ஷ்மமாயுமிருக்கிறதோ அந்த இவை யெல்லாம் (இந்த ஜகத்தெல்லாம்) ஆக விருக்கிறது; ஆதலால் ரயி மூர்த்த முள்ளது (உருப்படியுள்ளது).

6. ஸூர்யன் உதயமாகி, எதனுலே (எந்த தன் பிரகாசத்தால்) கிழக்கு திக்கைப் பிரகாசப்படுத்துகிறூரோ, அதனுல் (அந்த பிரகாசத்தால்) அந்த திக்கிலுள்ள ப்ராணன்களை (தன்) கிரணங்களில் தரிக்கிறூர் (அந்த திக்கிலுள்ள ப்ராணிகளுக்குத் தன் கிரணங்களால் ப்ராணனைக் கொடுக்கிறூர்); அப்படியே தெற்கு, மேற்கு, வடக்கு, கீழ், மேல், மூலை இந்த திக்குகளிலுள்ளவர்களுக்கும், (இன்னும் மற்ற) எல்லாவற்றிற்கும் (கொடுக்கிறூர்).

7. இவரே (ஸூர்யனே) ஸர்வாத்மா, விச்வரூபர்; ப்ராணன்; அக்நியாக உயரக் கிளம்புகிறூர்.

8. (இவரை) விச்வரூபராகவும், கிரணமுள்ளவராகவும், ஞானமுள்ளவராகவும், ஸர்வப்ராண ஆச்ரயராகவும், ஜ்யோதிஸாகவும், ஏகராயும், (பெரியோர்கள்) பார்க்கிறூர்கள். (இவர்) அநேக கிரணமுள்ளவர்; அநேகவிதமாய் இருக்கப்பட்டவர்; ப்ராணன்; பிரஜைகளுக்கு உதயமாகிறவர் (பிரஜைகளுக்காக உதயமாகிறவர்).

9. ஸம்வத்ஸரம் என்பது (வருஷம்) பிரஜாபதி (காலாத்மா, பிரம்மம்); அதற்கு இரண்டு அயனங்கள் (மார்க்கங்கள்), தக்ஷிணாயநம், உத்தராயணம் என்று; எவர்கள் அதை (வருஷத்தை) இஷ்டம் பூர்த்தம் இவைகளைச் செய்து உபாஸிக்கிறூர்களோ

அவர்கள் சந்திரலோகத்தை யடைகிறார்கள்; அவர்கள் மறுபடியும் திரும்புகிறார்கள்; ஆதலால் இந்த ரிஷிகள் (பெரியவர்கள்) பிரஜாகாமர்களாக தக்ஷிணாயநத்தை (தக்ஷிணாயந உபலக்ஷித சந்திரனை) அடைகிறார்கள். இந்த ரயி (சந்திரனே) பிதிருயாநம் (பிதிருலோக மார்க்கம்).

(இஷ்டமென்பது:—அக்நிஹோத்ரம், தபஸ், ஸத்யம், தேவபூஜை, அதிதி பூஜை வைச்வதேவம்; பூர்த்தமென்பது—வாபீ கூப தடாகங்கள் வெட்டுவது, கோவில் கட்டுவது, அன்ன தானம்.)

10. பிறகு, உத்தாரயணத்தால் (உத்தராயணத்தில்) தபஸினாலேயும், பிரம்மசர்யத்தினாலும், ச்ரத்தையினாலும், ஆத்ம வித்யையினாலும் ஸூர்யனை பஜிக்கிறார்கள்; இதுதான் (ஸூர்யன்) ஸர்வப்ராணிகளுடைய இருப்பிடம்; இதுதான் அமிருதம், அபயம், பராயணம்; இதனிடத்தில் நின்றும் மறுபடி திரும்ப மாட்டார்கள்; இது (அவித்வான்களுக்குத்) தடை (அவித்வான்கள் இதை அடையமாட்டார்கள்); இந்த விஷயத்தில் இந்த ச்லோக முள்ளது.

11. ஐந்து பாதங்களுள்ளவரும் (ஆறு ருதுக்களில் ஹேமந்த சிசிரருதுக்களை ஒன்றாய்வைத்து, பாக்கி ஐந்து ருதுக்களாகிறபாதங்கள்); பன்னிரண்டுவிதமான ஆகிருதியை உடையவரும் (12 மாதங்கள் ஆகிருதிகள்); பிதாவாயும் (எல்லோரையும் ஜனிப்பிவிக்கிறவர்), உதகமுள்ளவராயும் இருக்கிறவரை (காலாத்மாவையே) தேவலோகத்திற்கு மேலே (எல்லாவற்றிற்கும் உயர) இருப்பதாக (இருக்கிற பரமாத்மாவென்று) காலத்தை யறிந்த சிலர் சொல்லுகிறார்கள்; மற்ற சிலர் ஸர்வக்ஞராயிருக்கிறவரை ஆறு ஆரங்களையுடைய (6 ருதுக்கள்), ஏழு குதிரைகள் கட்டின சக்கரத்தில் (ரதத்தில்) வைக்கப்பட்டிருக்கும் வஸ்துவாக (ஆதித்யனாகிற காலாத்மாவாக)ச் சொல்லுகிறார்கள்.

(பிரம்மமாகிய, பிரஜாபதியாகிய, காலாத்மாவாகிய, ஸூர்ய சந்திர மிதுனமாகிய ஐந்து வஸ்துவே ஜகத்திற்குக் காரணம் என்று கேள்விக்கு உத்தரம்.)

12. மாஸமே பிரஜாபதி (காலாத்மா, ஆதித்யன், பிரம்மம்); அதனுடைய கிருஷ்ணபக்ஷம் ரயி (சந்திரன், அன்னம்); சுக்லபக்ஷம் ப்ராணன் (ஸூர்யன், அத்தா); ஆதலால் இந்த ரிஷிகள் (ப்ராணதர்சிகள்) சுக்ல பக்ஷத்தில் முக்யமாய் யாகத்தைச் செய்கிறார்கள்; அப்படியே மற்றவர்கள் மற்ற பக்ஷத்தில் செய்கிறார்கள்.

13. பகல் ராத்திரியுள்ள தினமும் பிரஜாபதிதான்; அதன் பகல் ப்ராணன்; ராத்திரி ரயி; எவர்கள் பகலிலே ரதிகாரணபூதையாயிருக்கிற ஸ்திரீயுடன் சேருகிறார்களோ அவர்கள் ப்ராணனை வெளிக்கிளம்பிப் போகும்படி செய்கிறார்கள் (அல்ப ஆயுஸுடையவர்களாய்ப் போகிறார்கள்); எவர்கள் ராத்திரியில் அப்படிச்செய்கிறார்களோ அவர்களுக்கு பிரம்மசர்யம், ஞானம் கிடைக்கும்.

14. அன்னமே பிரஜாபதி; அதிலிருந்து ரேதஸ் உண்டாகிறது: அதனின்றும் இந்தப் பிரஜைகள் உண்டாகிறார்கள்.

15. எந்த கிருஹஸ்தர்கள் அந்த பிரஜாபதி விரதத்தை (ருதுகாலங்களில் பார்யாகமனத்தை)ச் செய்கிறார்களோ, அவர்கள் மிதுனத்தை (புத்ரன், புத்ரியை) உண்டுபண்ணுகிறார்கள். எவர்களிடத்தில் தபஸும், பிரம்மசர்யமும் இருக்கிறதோ, எவர்களிடத்தில் ஸத்யம் ஸ்தாபித்திருக்கிறதோ, அவர்களுக்கு இந்த பிரம்ம லோகம் (சந்திரலோகம் பிதிருயாநம்) கிடைக்கும்.

16. எவர்களிடத்தில் ஜிஹ்மம் (வக்ரபாவம்), அநிருதம் (பொய்), மாயை (வஞ்சனை) இல்லையோ அவர்களுக்குச் சுத்தமாயிருக்கிற பிரம்மலோகம்(ஸூர்யலோகம், தேவயாநம்)கிடைக்கும்.

(கேவல கர்மிகளுக்குச் சந்திரலோகம்; ஞானத்தோடு கூடின கர்மிகளுக்கு ஸூர்யலோகம்.)

---

# இரண்டாவது ப்ரச்நம்

---

1. பிறகு, இவரை பார்கவர் என்ற வைதர்பியானவர் கேட்டார்:—ஹே! பகவானே! சரீரவத்தாயிருக்கிற பிரஜையை எத்தனை தேவர்கள் தரிக்கிறார்கள்? (ஆதரிக்கிறார்கள்?); இவர்களில் எவர்கள் (எந்தத் தேவர்கள்) இந்தச் சரீரத்தைப் பிரகாசப் படுத்துகிறார்கள்? மேற்படி தேவர்களுக்குள் ச்லாக்யன் யார்?

2. இவர் பதில் சொன்னதாவது:—ஆகாசம், வாயு, அக்நி, ஜலம், பிருதிவி இந்த மஹாபூதங்கள் ஐந்து, கர்மேந்திரியங்கள் ஐந்து, ஞாநேந்திரியங்கள் ஐந்து, அந்தக்கரணங்கள் நான்கு, ஆக பத்தொன்பது தேவர்கள் (தத்வங்கள் சரீரத்தைத் தாங்கு கிறார்கள்); (இவர்களுக்குள் ஐந்து பூதங்களைத் தவிர மற்ற 14 தத்வங்கள்) பிரகாசித்துக்கொண்டு சொல்லுவதாவது—நாங்கள் இந்தச் சரீரத்தைப் பிடித்துக்கொண்டு தாங்குகிறோம்.

3. (இப்படி கர்வம் கொண்ட) இவர்களைப் பார்த்து, ச்லாக்யனு யிருக்கிற ப்ராணன் (வாயு) சொன்னதாவது:—(இப்படி) தெரியாத்தனத்தை யடையவேண்டாம்; நானே என்னை ஐந்து விதமாக பாகித்துக்கொண்டு இந்தச் சரீரத்தைப் பிடித்துக் கொண்டு தாங்குகிறேன்.

4. (அப்படிச் சொல்ல) இவர்கள் (கவனிக்காமல்) அலக்ஷ்ய மாயிருந்தார்கள். அவர் (ப்ராணன்) அவர்களிடமிருக்கிற அபி மானத்தால் (சரீரத்தைவிட்டு, தான்) உயரக் கிளம்பிப் போய் விட்டதுபோல் (காண்பித்தார்); அப்படிச்செய்த அளவில் மற்றவையெல்லாம் (மற்ற தத்துவங்களெல்லாம்) உயரக் கிளம்பி விட்டன; (மறுபடியும்) அவர் (ப்ராணன்) சரீரத்தை வந்த டைந்தவுடன் மற்றவைகளும் வந்து சேர்ந்தன; அஃது எப்படிப் போல வென்றால், தேனீக்கள், அவைகளின் தலைவன் (புஷ்பத்தை

விட்டு) வெளிக்கிளம்பிப் போகும்பொழுது, கூடவே போகின் றன; மறுபடியும் அது வந்து சேரும்பொழுது அவைகளும் வந்து சேருகின்றன; இப்படிப்போல்; (இப்படி வாயு காட்டிக் கொடுத்த பிறகு இந்த 14 இந்திரியங்களும் வாயுவின் மஹிமையை அறிந்து) விசுவாஸமுள்ளவர்களாக ப்ராணனை ஸ்தோத்ரம் செய்கிறார்கள்.

5. "இவர் (ப்ராணன், வாயு) அக்நியாயிருந்து தபிக்கிறார்; இவரே ஸூர்யன்; இவரே மேகம்; இவரே இந்திரன்; இவரே வாயு; இவரே பிருதிவி; இவரே சந்திரன்; இவரே, இருக்கிற வஸ்து (உருப்படியாய்த் தெரிகிறவஸ்து); இவரே இல்லாத வஸ்து (அப்படித் தெரியாத வஸ்து")).

6. "சக்கரத்தின் குடத்தில் ஆரங்கள்போல, ப்ராண னிடத்தில் எல்லாம் வைக்கப்பட்டிருக்கிறது; இவர்தான் ருக் வேதம், யஜுர்வேதம், ஸாமவேதம், யக்ஞம் (பூஜை,) க்ஷத்ரம் (யாகம்), பிரம்மம்."

7. "நீர்தான் பிரஜாபதி; கர்ப்பத்திலிருப்பவர்; ப்ரதியாய்வந்து பிறப்பவர்; ஹே! ப்ராண! இந்த பிரஜைகள் உமக்கு பலியை (இந்திரியங்கள் வழியாக)க் கொண்டுவந்து கொடுக்கிறார்கள்; ப்ராணன்கன் (இந்திரியங்கள்) ஸஹிதமாய் இருக்கிறீர்."

8. "தேவர்களுக்கு உத்தம அக்நியாயும் (அக்நி முகமாய்த் தேவர்கள் ஹவிஸை அடைகிறார்கள்), பிதிருக்களுக்கு முந்தின ஸ்வதாவாயும் (பிதிருக்கள் அக்நி முகமாய் ஸ்வதா கொடுக்கும் அன்னத்தைப் புஜிக்கிறார்கள்), ரிஷிகளுக்கு (இந்திரியாதிகளுக் கு)த் தொழிலாயும் (தொழிலைச் செய்யும்படி ஏவுகிறதா யும்), அதர்வவேதத்திற்கு ஸத்யமாயும் (அதர்வவேதமாயும்) இருக்கிறீர்."

9. "ஹே! ப்ராண! தேஜஸால் நீர் இந்திரன்; ருத்ரனா யிருக்கிறீர்; ரக்ஷிப்பவர் நீர்; நீரே ஜ்யோதிஸ்களுக்குப் பதியாக, ஸூர்யனாக, ஆகாசத்தில் ஸஞ்சரிக்கிறீர்."

10. "எப்பொழுது நீர் வர்ஷிக்கிறீரோ, அப்பொழுது, ஹே! ப்ராண! உம்முடைய இந்த பிரஜைகள் ஆநந்த ரூபர்களாக ஆகிறார்கள்; அவர்களுடைய இச்சையின்பொருட்டு அன்னம் கிடைக்கிறது."

11. "ஹே! ப்ராண! நீ ஸ்வபாவ சுத்தன்; (அதர்வ வேதங்களுக்குப் பிரஸித்தமாயிருக்கிற) ஏக ரிஷி; அத்தா (தின்கின்றவன், அக்நி;) ஜகத்திற்கு ஸத்பதி; நாங்கள் உனக்குத் தின்னப்படும் வஸ்துவைக் கொடுப்பவர்கள்; ஹே! வாயோ! நீ எங்களுடைய பிதாவாயிருக்கிறாய்."

12. "வாக்கில் (அபாந ரூபமாக) எந்த உன்னுடைய சரீரம் வைக்கப்பட்டிருக்கிறதோ, ச்ரோத்ரத்தில் (வ்யாந ரூபமாக), நேத்திரத்தில் (ப்ராண ரூபமாக,) மனஸில் (ஸமான ரூபமாக) எது சேர்ந்திருக்கிறதோ அந்தச் சரீரத்தைச் சிவமாக (மங்களகரமாக, சாந்தமாக)ச் செய்; உயரக் கிளம்பிப் போய் விடாதே!"

13. "இந்த ஜகத் முழுவதும், தேவலோகத்திலிருப்பதும் (தேவர்களும்), ப்ராணனுடைய வசத்திலிருக்கிறது; தாயைப் போல் புத்திரர்களை (எங்களை) ரக்ஷி; ஸம்பத்தையும், ஞானத்தையும் எங்களுக்குக் கொடு."

---

# மூன்ருவது ப்ரச்நம்

1. பிறகு, இவரை (பிப்பலாதரை) கௌசல்யர் என்ற ஆச்வலாயநர் கேட்டதாவது:—ஹே! பகவானே! இந்த ப்ராணன் எங்கிருந்து உண்டாளுன்? இந்தச் சரீரத்தில் எப்படி வருகிருன்? தன்னை எப்படிப் பிரித்துக்கொண்டு இருக்கிருன்? எதனுல் உயரக் கிளம்புகிருன்? வெளிப்பட்டதை (அதிபூதம், அதிதைவம்—பூதங்களிடத்திலும், தேவர்களிடத்திலும்) எப்படி அடைந்திருக்கிருன்? அத்யாத்மத்தை (ஜீவனை) எப்படி அடைந்திருக்கிருன்? (என்று ஆறு கேள்விகள் கேட்டார்).

2. அவர் பதில் சொன்னதாவது:—அதிகக் கேள்விகள் கேட்கிருய்! பிரம்மவித்தாயிருக்கிருய்! ஆதலால், உனக்கு நான் சொல்லுகிறேன்.

3. இந்த ப்ராணன் ஆத்மாவினிடத்தினின்றும் (பிரம்மத்தினிடத்திலிருந்து) உண்டாகிருன்; புருஷனிடத்தில் நிழல்போல் பிரம்மத்தினிடத்தில் இது (ப்ராணனென்று பெயருள்ள நிழலாகிற ஒரு பொய்ரூபம்) வைக்கப்பட்டிருக்கிறது; மனவின் தொழிலால் (ஸங்கல்பம், இச்சை இவைகளாலுண்டான கர்ம நிமித்தத்தினுல்) இந்தச் சரீரத்தில் வருகிருன்.

4. ஒரு ராஜா, கீழ்ப்பட்ட அதிகாரிகளை, 'இந்த இந்த கிராமத்தில் நீங்கள் இருந்து அதிகாரத்தை நடத்துங்கள்' என்று உத்தரவு கொடுப்பதுபோல, இந்த ப்ராணன் மற்ற ப்ராணன்களைத் தனித்தனியாக ஆக்ஞாபிக்கிறது.

5. பாயு, உபஸ்தம் இவைகளில் அபாநவாயுவும்; கண்கள் காதுகள், மூக்குகள், வாய் இவைகளில் தானே ஸ்வயமாய் ப்ராண

வாயுவும்; மத்தியில் (நாபியில்) ஸமான வாயுவும் வைக்கப்பட்டிருக்கின்றன; இது (ஸமானவாயு)வும் புஜித்த அன்னத்தை ஸமானப்படுத்திவிடுகிறது (மூத்ர புரீஷங்களாகப் பக்குவப்படுத்தி விடுகிறது); ஆதலால், இவைகள் (மேற்படி நேத்ரங்கள் முதலான ஏழு இந்திரியங்கள்) ஏழு ப்ரகாசங்களாக வெளிப்பட்டிருக்கின்றன.

6. ஹ்ருதயத்தில் (புண்டரீகாகார மாம்ஸ பிண்டத்தில்) இந்த ஆத்மா (லிங்காத்மா, ஜீவாத்மா) இருக்கிறார். இவ்விடத்தில் (ஹ்ருதயத்தில்) நூற்றொன்று பிரதான நாடிகள் உள; அவைகளில் ஒவ்வொன்றிற்கும் 100, 100 பேதங்கள் (சாகா நாடிகள்); இவைகளில் ஒவ்வொன்றிற்கும் 72,000, 72,000 பேதங்கள் (ப்ரதிசாகா நாடிகள்); இவைகளில் வ்யாநவாயு ஸஞ்சரிக்கிறது (எங்கும் வ்யாபித்துக்கொண்டிருப்பதால் வ்யாநவாயு என்று பெயர்).

7. இந்த நாடிகளில் முக்யமான ஒன்றாகிய ஸுஷும்நா நாடி வழியாய் உதானவாயு (உயரக் கிளம்புகிற வாயு) ஸஞ்சரிக்கிறது; புண்யம் செய்தவர்களைப் புண்யலோகத்திலும், பாபம் செய்தவர்களை நரகத்திலேயும் (திர்யக்ஜன்ம ரூபமாயும்), இரண்டையும் ஸமமாய்ச் செய்தவர்களை மனுஷ்யலோகத்திலேயும் (மனுஷ்ய ரூபமாயும்) இந்த வாயு சேர்ப்பிக்கிறது.

8. ஸூர்யன் (அக்நி மண்டலம்) வெளிப்பட்ட ப்ராணன்; (ப்ராணன்களுடைய ஆதிதைவதம் சொல்லப்படுகிறது); உயரக் கிளம்புகிறான்; சக்ஷுஸ் ஸம்பந்தமான (அத்யாத்மமான) ப்ராணனை (பார்வை, கேள்விமுதலான சக்தியைக் கொடுத்து) அநுக்கிரஹிக்கிறான்; பூமிதேவதை (பூமண்டலம்) அபாநவாயு; சரீரத்திலுள்ள அபாநவாயுவை (கீழே விழாமலும் உயரப் பறந்துபோகாமலும் மனுஷ்யனைப் பிடித்து இழுத்துக்கொண்டு) அநுக்கிரஹிக்கிறது; அந்தரிக்ஷம் (வெளி) ஸமாநவாயு; சரீரத்திலுள்ள ஸமாநவாயுவை (வெளிக் கொடுத்து) அநுக்கிரஹிக்கிறது; வாயு (காற்று) வ்யாநவாயு சரீரத்திலுள்ள வ்யாநவாயுவை (எங்கும் புகச் செய்து) அநுகிரஹிக்கிறது.

9. தேஜஸ் (நக்ஷத்ரம், மின்னல் முதலான தேஜஸ்கள்) உதானவாயு; (சரீரத்திலுள்ள உதானவாயுவை அநுக்கிரஹிக்கிறது); உதானவாயு போனவுடனே தேஜஸ் போய்விட்டதென்று சொல்லுகிறார்கள். (தேஜஸ் என்றால் களை; உதானவாயு பிரிந்த உடனே உயிர்போய்விட்டது, ப்ரேதமாய்விட்டதென்று சொல்லப்படுகிறது); இந்த தேஜஸ்தான் மனவிேல் அடக்கப்பட்ட வாகாதி இந்திரியங்களோடுகூட மறுபடியும் ஜனிக்கிறது.

10. மரண காலத்தில் எந்த ஸங்கல்பத்துடன் உயிரை விடுகிறானோ, அந்த ஸங்கல்ப ஸஹிதமாய் முக்கிய ப்ராண விருத்தியோடு சேருகிறான்; (ப்ராணவாயுவிடத்தில் அடங்கியிருக்கிறான்); அந்த ப்ராணவாயு தேஜஸுடன் (உதான வாயுவுடன்) சேர்ந்துகொண்டு மஹாத்மாவினால் ஏற்படுத்தப்படும் லோகத்தை யடைகிறான் (அஃதாவது, மரணகாலத்தில் அவனவனுடைய ஸங்கல்பத்துக்குத் தக்கபடி லோகம் கிடைக்கிறது).

11 ப்ராணனை இந்தப்படி அறிந்தவனுக்குப் பிரஜைகள் குறையமாட்டா; அமிருதத்தை யடைவான்; இந்த விஷயத்தில் (அடியிற்கண்ட) இந்த மந்திரம் இருக்கிறது.

12. இப்படி ப்ராணனுடைய (பரமாத்மா விடத்திலே நின்றும்) உத்பத்தியையும், (மனஸ் ஸங்கல்பத்தால்) வரவையும், (சக்ஷுஸ் முதலான) இருப்பிடத்தையும், (அதன் அதன் தொழிலால் உண்டான) அதிகாரத்தையும், ஐந்து விதமாகப் பிரிந்து இருத்தலையும், அத்யாத்மத்தையும் யார் அறிகிறானோ அவன் அமிருதத்தை யடைவான், அவன் அமிருதத்தை யடைவான்.

---

# நான்காவது ப்ரச்நம்

1. பிறகு, இவரை (பிப்பலாதரை) ஸௌர்யாயணர் என்ற கார்க்யர் கேட்டதாவது :—ஹே! பகவானே! இந்தப் புருஷனிடத்தில் எவை தூங்குகின்றன ? எவை விழித்துக்கொண்டிருக்கின்றன ? எந்த தேவன் ஸ்வப்நத்தைப் பார்க்கிறான் ? யாருக்கு இந்த ஸுகம் (ஸுஷுப்தி ஸுகம்) இருக்கிறது ? யாரிடத்தில் எல்லோரும் அடங்கியிருக்கிறார்கள் ? (ஐந்து கேள்விகள்.)

2. இவர் பதில் சொன்னதாவது :—எப்படி அஸ்தமயத்தையடையும் ஸூர்யனுடைய கிரணங்கள் ஒன்றாய்ச் சேர்ந்து போய் ஸூர்ய மண்டலத்தை யடைகின்றனவோ, எப்படி மறுபடியும் ஸூர்யன் உதயமாகும்பொழுது கிரணங்கள் பரவுகின்றனவோ, அப்படி எல்லாம் (தசேந்திரியங்களும்) உத்க்ருஷ்டமான தேவனாகிய (தத்வமாகிய) மனஸிலே ஒன்றாய்ப் போய்ச் சேருகின்றன. அதனால்தான் இந்தப் புருஷன் கேட்பதில்லை; பார்ப்பதில்லை; முகருவதில்லை; ருசிபார்ப்பதில்லை; தொடுவதில்லை, பேசுவதில்லை; எடுப்பதில்லை; ஆனந்தப்படுவதில்லை; கீழே விடுவதில்லை; போவதில்லை; அப்பொழுதுதான் தூங்குகிறான் என்று சொல்லப்படுகிறது.

3. இந்தப் பட்டணத்தில் (நவத்வாரமுள்ள சரீரத்தில்), ப்ராணன்களாகிற (ஐந்து ப்ராணன்கள்), அக்நிகள் விழித்துக் கொண்டிருக்கின்றன ; (ஒருவன் தூங்கும் காலத்தில்கூட இந்த ப்ராணன்கள்மட்டும் அதன் அதன் வேலையைச் செய்துகொண்டிருக்கின்றன). அபாநவாயுவுக்கு கார்ஹபத்யாக்நி என்று பெயர் (யாகத்தில் யஜமானன் ஸமீபத்திலிருக்கிற அக்நி); எப்படி யாகத்தில் கார்ஹபத்யாக்நியினிடத்திலேநின்றும் ஆஹவநீயாக்நி எடுக்கப்படுகிறதோ அப்படி அபாநவாயுவினிடத்திலேயிருந்து கிளம்பி, ப்ராணவாயுவகிய ஆஹவநீயாக்நி, வாய், மூக்கு இவைகள் வழியாக, ஸஞ்சரிப்பதனால் ப்ராணனுக்கு ஆஹவநீயாக்நி

என்று பெயர்; வ்யாநவாயு ஹ்ருதயத்திற்கு வலதுபுறமுள்ள துவாரத்தின் வழியாய் எங்கும் நிறைந்திருக்கிறதோ, அதனால் வ்யாநவாயுவுக்கு தக்ஷிணாக்நி என்று (யாகத்தில் தெற்கே வைக்கப் பட்டிருக்கிற அக்நி யென்று) பெயர்.

4. உச்வாஸ நிச்வாஸங்களாகிற இரண்டு ஆஹுதிகளை ஸமமாக நயிப்பிவிக்கிறபடியால் ஸமாநவாயு (அக்நி ரூபமாயிருந் தாலும்) (யாகத்தில்) ஹோதாவாயிருக்கிறது; மனஸ்தான் (யாகத்தில்) யஜமானன்; உதானவாயு யாகத்தின் பலன்; இது தான் யஜமானனை (மனஸை) நாள்தோறும் பிரம்மத்தினிடத்தில் கொண்டுபோய்ச் (ஸுஷுப்தி காலத்தில்) சேர்க்கிறது; (அஃதா வது, தூக்ககாலத்தில் பஞ்சப்ராணன்களும், மனஸும் மாத்திரம் தொழிலைச் செய்கின்றன.)

5. இவர்களுக்குள் இந்த தேவன் (மனஸ்) ஸ்வப்நத்தில் மஹிமையை அநுபவிக்கிறது; பார்க்கப்பட்டதைப் பார்க்கிறது, கேட்கப்பட்டதைக் கேட்கிறது. எந்த எந்த இடத்திலும் எந்த எந்த திக்கிலும் எது அநுபவிக்கப்பட்டதோ அதை அநுபவிக் கிறது. மேலும், பார்க்கப்பட்டதையும், பார்க்கப்படாததையும், கேட்கப்பட்டதையும், கேட்கப்படாததையும், அநுபவிக்கப்பட்ட தையும், அநுபவிக்கப்படாததையும் எல்லாவற்றையும் எல்லாமாக விருந்து ஸ்வப்நத்தில் (மனஸ்) பார்க்கிறது.

6. அவன் (மனஸ்) எப்பொழுது (சித்ரூபமான பிரம்ம மாகிற தேஜஸினால் எங்கும் பரவப்பட்டுப்போகிறதோ (அப் பொழுதுதான் ஸுஷுப்திகாலம்); அப்பொழுது இந்த தேவன் (மனஸ்) ஸ்வப்நத்தைப் பார்ப்பதில்லை; அப்பொழுதுதான் இந்தச் சரீரத்தில் இந்த ஸுகம், ஸுஷுப்திஸுகம், உண்டாகிறது.

7. எப்படி பக்ஷிகள் வஸிக்கும்பொருட்டு விருக்ஷத்தை யடைகின்றனவோ அப்படி (அடியில்கண்ட) எல்லாம் பரமாயிருக் கிற ஆத்மாவிடத்தில் (ஜீவாத்மாவிடத்தில்) போய்ச் சேருகின்றன.

8. (அவைகளாவன) பஞ்சபூதங்களும், அதன் அதன் மாத் திரைகளும் (ஸூக்ஷ்ம பூதங்கள்), தசேந்திரியங்களும் அதன்

அதன் விஷயங்களும், நாலு அந்தக்கரணங்களும், அதன் அதன் விஷயங்களும், தேஜஸூம் (தேஹத்தின் பளபளப்பு, உஷ்ண பாவம்) அதன்விஷயமும், ப்ராணனும் அதன் விஷயமும், எல்லாம் (கார்யகாரண ஸங்காதம்); (ஜீவாத்மாவிடத்தில் போய்ச் சேருகின்றன.)

9. இந்தப் புருஷன்தான் பார்ப்பவன், கேட்பவன், முகர்பவன், ருசிபார்ப்பவன், நினைப்பவன், அறிபவன், செய்பவன், விக்ஞாநாத்மா (ஜீவாத்மா), இவன் பரமாயும், அக்ஷரமாயுமிருக்கிற (பரபிரம்மத்தினிடத்தில்) வைக்கப்பட்டிருக்கிறான்.

10. எவன் இவரை (பரபிரம்மத்தை) அக்ஞானமில்லாதவனையும், அசரீரனையும், குணரஹிதனையும், சுப்ரனையும், நாசரஹிதனையு மிருப்பதாக அறிகிறானோ அவன் பரபிரம்மத்தையடைகிறான்; ஸர்வக்ஞனையுமிருக்கிறான்; எல்லாமாயிருக்கிறான்; இந்த விஷயத்தில் இந்த (அடியில்கண்ட) மந்திரம் இருக்கிறது.

11. விக்ஞாநாத்மா (ஜீவாத்மா) எல்லாத் தேவர்களோடும் (சக்ஷூராபிமாநியாகிய அக்நிமுதலான தேவர்களுடன்) கூட, ப்ராணன்களும், பூதங்களும் எதனிடத்தில் வைக்கப்பட்டிருக்கின்றனவோ அதை அக்ஷரமாகிய பிரம்மமென்று எவன் அறிகிறானோ அவன் ஸர்வக்ஞன், எல்லாவற்றிலும் பிரவேசிக்கிறான்.

---

# ஐந்தாவது ப்ரச்நம்

1. பிறகு, இவரை (பிப்பலாதரை) சைப்யர் என்ற ஸத்ய காமர் கேட்டதாவது:—ஹே! பகவானே! மனுஷ்யர்களுக்குள் எவன் ஆயுள் பர்யந்தம் ஓம்காரத்தை த்யாநம் செய்கிறானோ அவன் எந்த லோகத்தை யடைகிறான்?

2. இவர் பதில் சொன்னதாவது:—ஹே! ஸத்யகாமா! எக்காரணத்தால் ஓம்காரமானது பரபிரம்ம ஸ்வரூபமாயும், அபர பிரம்ம (ஜீவாத்மா) ஸ்வரூபமாயு மிருக்கிறதோ, அக்காரணத்தால் இந்த ப்ரணவமாகிற, பிரம்ம இருப்பிடத்திலேலே, முக்கியமா யிருக்கிற லோகத்தை யடைகிறான்.

3. ஏக மாத்திரையுள்ள ஓம்காரத்தை எவன் த்யாநம் செய்கிறானோ அவன் அதனால் செவ்வையாகப் போதிக்கப்பட் டவனாகச் சீக்கிரத்தில், ஜகத்திலேயே அடைகிறான்; அதாவது ப்ரணவ ஏகமாத்ரா ஸ்வரூபமாகிய ருக்வேதம் இவனை மனுஷ்ய லோகத்தில் சேர்க்கிறது (உத்தம மனுஷ்ய ஜன்மாவை யடையும் படி செய்கிறது); அவ்விடத்திலிருந்து, தபஸோடும், பிரம்மசர்யத் தோடும், ச்ரத்தையோடும் ஸம்பன்னனாகி (மனுஷ்யலோக) மஹி மையை அநுபவிக்கிறான்.

4. இரண்டு மாத்திரைகளுள்ள ஓம்காரத்தை மனஸிலே எவன் த்யானிக்கிறானோ அவன் அப்படிப்பட்ட ஓம்கார ஸ்வரூப மாகிய யஜுர்வேதமானது, அந்தரிக்ஷமாகிய சந்திரலோகத்தை யடையும்படி செய்கிறது. அந்தரிக்ஷமாகிய சந்திரலோகத்தி லிருந்து அவன், அதற்குரிய ஐச்வர்யங்களை அநுபவித்து, மறு படியும் திரும்புகிறான் (பிறக்கிறான்.)

5. எவன் இந்தப் பரமபுருஷனை (பிரம்மத்தை) மூன்று மாத்திரைகளுள்ள ஓம்காரத்தால் த்யானிக்கிறானோ அவன் ஸூர்ய தேஜஸில் ஸம்பன்னனாகி (ஸூர்யலோகத்தை யடைந்து)

ஸர்ப்பம் தோலை உரிப்பதுபோல், பாபத்திலேநின்றும் விடுபட்டவனாகி (மூன்றுமாத்திரை ஓம்கார ஸ்வரூபமாகிய) ஸாமவேதத்தால் பிரம்மலோகத்துக்கு அனுப்பப்படுகிறான். அவன் அந்த ஜீவகனமாகிய ஹிரண்யகர்ப்பரிடத்திலே நின்றும் பராபரமாகிய புருஷனை அறிவான்; இந்த விஷயத்தில் இரண்டு மந்திரங்கள் இருக்கின்றன.

6. (மேற்படி ஓம்காரத்தின்) மூன்று மாத்திரைகள் மிருத்யு வுடன் கூடினவை; ஆத்மத்யாநத்தில் சேர்ந்தவை; ஒன்றுக் கொன்று ஸம்பந்தமுள்ளவை; விட்டுப்பிரியாதவை; செவ்வையாகச் சேர்க்கப்பட்டிருக்கிற வெளி, உள், நடு இவைகளி லுள்ள கிரியைகளிலே (யோககிரியைகளில்) தெரிந்தவன் நடுங்க மாட்டான் (பயப்படமாட்டான்).

7. ருக்வேதத்தால் இந்த (மனுஷ்ய) லோகத்தையும், யஜுர்வேதத்தால் அந்தரிக்ஷலோகத்தையும், ஸாமவேதத்தால் அந்த பிரம்மலோகத்தையும் அடைவதாக, எந்த ஓம்காரத்தின் மஹிமையைப் பெரியோர்கள் தெரிந்துகொள்ளுகிறார்களோ, அந்த ப்ரணவமாகிய பிரம்ம இருப்பிடத்தால் தெரிந்தவன், எது சாந்தமாயும், அஜரமாயும், அமிருதமாயும், அபயமாயும், பரமாயு மிருக்கிறதோ அந்த பிரம்மத்தை யடைகிறான்.

---

# ஆருவது ப்ரச்நம்

1. பிறகு, இவரை (பிப்பலாதரை) ஸுகேசர் என்கிற பரத்வாஜர் கேட்டதாவது:—ஹே! பகவானே! கோஸல தேசியா கிய ஹிரண்யநாபன் என்ற (ஒரு) ராஜபுத்திரன் என்னிடத்தில் வந்து 'பதினாறு கலைகளுள்ள புருஷனை அறிவீரா என்ற இந்தக் கேள்வியைக் கேட்டான்; அதற்கு 'அவனை நான் அறியமாட்டேன்' என்றும், 'அறிந்திருந்தால் எப்படி உனக்குச் சொல்லாமலிருப்பேன்' என்றும், 'யார் பொய் பேசுகிறானோ (தெரியாமலிருக்கத் தெரிந்ததாய்ச் சொல்லுகிறானோ) அவன் அடியோடு நாசத்தை யடைவான்' என்றும், 'ஆதலால் நான் பொய்சொல்லமாட்டேன்' என்றும் பதில் சொன்னேன். பிறகு, அவன் பேசாமல் ரதத்தில் ஏறிக்கொண்டு போய்விட்டான். இப்பொழுது அந்தக் கேள்வியை உம்மைக் கேட்கிறேன். அந்தப் புருஷன் எங்கு இருக்கிறார்?

2. இவர் பதில் சொன்னதாவது:—எந்தப் புருஷனிடத்தில் இந்த (அடியில்கண்ட) பதினாறு கலைகள் உண்டாயினவோ, அந்தப் புருஷன் இவ்விடத்திலேயே, சரீரத்திற்குள்ளேயே, இருக்கிறார்.

3. 'எந்த கர்த்தாவினிடத்திலே (யாரைக் கர்த்தாவாக வைத்துக்கொண்டு) நாம் (தேஹத்திலிருந்து) உயரக் கிளம்புகிறோம், (அல்லது) உயரக் கிளம்பப்போகிறோம்; பிரதிஷ்டிதமாயிருக்கிற எந்தச் சரீரத்தில் பிரதிஷ்டிதனாயிருக்கப்போகிறோம்' என்று அவர் (அந்தப் புருஷன்) பார்த்தார் (யோசித்தார்).

4. அவர் (ஹிரண்யகர்பர் என்று பெயருள்ள) ப்ராணன், சிரத்தை, ஆகாசம், வாயு, அக்நி, ஜலம், பிருதிவி, இந்திரியம் (தசேந்திரியங்கள்), மனஸ், அன்னம், பலம், தபஸ், வேதங்கள், கர்மா, (அதன் பலனாகிய) ஸ்வர்காதி லோகங்கள், நாமா இவைகளை (இந்தப் பதினாறு கலைகளை) ஸ்ருஷ்டித்தார்.

5. எப்படி, ஸமுத்திரத்திலிருந்து உத்பத்தியான இந்த நதிகள் பெருகாநின்றுகொண்டு, மறுபடியும் ஸமுத்ரத்தையடைந்து பெயர், ரூபம் இவைகள் இல்லாமல் செய்து,(அப்படிக் கலந்தபிறகு) ஸமுத்திரமென்றே சொல்லப்படுகிறதோ, அப்படி புருஷனிடத்திலேநின்றும் உண்டான இந்தப் பதினாறு கலைகளும், மறுபடியும் புருஷனை யடைந்து அதன் அதன் நாமரூபங்களைப் போக்கடித்து, பிறகு புருஷன் என்றே சொல்லப்படுகின்றன. அந்த இந்தப் புருஷன் அகலனாயும், அமிருதனாயும் இருக்கிறான்; அதற்கு இந்த ச்லோகம் இருக்கிறது.

6. 'ரதசக்கரத்திலுள்ள ஆரங்கள்போல இந்தக் கலைகள் எந்தப் புருஷனிடத்தில் வைக்கப்பட்டிருக்கின்றனவோ, வேத்யனாயிருக்கிற அந்தப் புருஷனை அடையுங்கள்! உங்களை மிருத்யு பீடிக்காமல் இருக்கட்டும்!'

7. இவர் (பிப்பலாதர்) அவர்களுக்கு (மேற்கண்ட ஆறு ரிஷிகளுக்கு)ச் சொன்னதாவது:—இந்த பரபிரம்மத்தை இது வரையில்தான் நான் அறிந்திருக்கிறேன்; அதற்குமேல் ஒன்றும் இல்லை.

8. அவர்கள் சொன்னதாவது:—எவர் எங்களை அவித்யையில் நின்றும் (மோக்ஷமாகிற) கரையைத் தாண்டுவித்தார்களோ, அவர்களாகிய நீங்கள் எங்களுக்குப் பிதா.

பிரம்மரிஷிகளின்பொருட்டு நமஸ்காரம்! பிரம்மரிஷிகளின் பொருட்டு நமஸ்காரம்!

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:

---

பரச்நோபநிஷத் முற்றிற்று

---

ஓம்

## அதர்வண வேதீய

# முண்டகோபநிஷத்

---

## சாந்தி:

(இதுவும் அதர்வண வேதத்தில் சேர்ந்தபடியால் முன் ந்ரு ஸிம்ஹதாபநீ உபநிஷத்தின் சாந்தியே இதற்குச் சாந்தியாகும்.)

---

## முதல் முண்டகம்

---

### கண்டம் 1.

1. (இந்திராதி) தேவர்களுக்கு முந்தினவர் பிரம்மா; எல்லா ஜகத்தையும் படைத்தவர்; புவனத்தை ரக்ஷிக்கிறவர்; அவர், எல்லா வித்யைகளுக்கும் இருப்பிடமாகிய 'பிரம்மவித்யையை', தன்னுடைய ஜ்யேஷ்ட புத்ரனாகிய அதர்வர் என்பவருக்குச் சொன்னார்.

2. அதர்வர் அங்கி என்றவருக்குச் சொன்னார்; அங்கி பாரத்வாஜ வம்சஸ்த்தரான ஸத்யவாகருக்குச் சொன்னார்; இவர் அங்கிரஸுக்குச் சொன்னார்.

3. சௌநகர் என்பவர் மேற்படி அங்கிரஸரிடத்தில் சென்று கேட்டதாவது; 'எது அறியப்பட்டால் இந்த ஜகத் எல்லாம் அறியப்படும்?'

4. அங்கிரஸ் பதில் சொன்னதாவது:—'பரா' என்றும், 'அபரா' என்றும் எதைப் பிரம்மவித்துக்கள் சொல்லுகிறார்களோ, அந்த இரண்டு வித்யையும் அறியப்படவேண்டும், ('பரா' என்றது பிரம்மத்தைக்குறித்த உபநிஷத்; 'அபரா' என்றது ஸ்வர்க்கம் முதலான பலனைக் கொடுக்கும் கர்மகாண்டம்.)

5. அதில் அபரா வித்யையானது என்னவெனில்—ருக் வேதம், யஜுர்வேதம், ஸாமவேதம், அதர்வணவேதம், சிக்ஷா

(அக்ஷரங்களுடைய உத்பத்தி முதலியவற்றைப்பற்றிய சாஸ்திரம்), கல்பம் (கர்மாக்களுக்கு விதிகள்,) வ்யாகரணம், நிருக்தம் (வேத வ்யாக்யாநம்,) சந்தஸ் சாஸ்திரம், ஜ்யோதிஷ சாஸ்திரம், இவைகளே, பராவென்றது, எதனால் அந்த அக்ஷரம் (பிரம்மம்) அடையப்படுகிறதோ, அதுதான்.

6. (அந்த அக்ஷரபென்பது எதுவெனில்) எது பார்க்கப் படாததோ (ஞானேந்திரியங்களுக் கெட்டாததோ), கிரஹிக்கப் படாததோ (கர்மேந்திரியங்களுக் கெட்டாததோ), கோத்ரமில் லாததோ (மூலமில்லாததோ), வர்ணமில்லாததோ (குணமில்லா ததோ), கண்காதில்லாததோ (ஞானேந்திரியமில்லாததோ), கைகால் இல்லாததோ (கர்மேந்திரியமில்லாததோ), நித்தியவஸ்து வோ, விபுவோ (நாநாவித பிராணிபேதங்கள் உள்ளதோ,) எங்கும் நிறைந்ததோ, அதி ஸூக்ஷ்ம வஸ்துவோ, நாசமில்லாத தோ, பூதங்களுக்குக் காரணமோ அதை, புத்திசாலிகள், எங்கும் பார்க்கிறார்கள்.

7. எப்படி பட்டுப்பூச்சி நூல்களை ஸ்ருஷ்டிக்கிறதோ, (மறுபடியும்) இழுத்துக்கொள்ளுகிறதோ; பூமியில் எப்படி ஓஷதிகள் முளைக்கின்றனவோ; எப்படி உயிருள்ள புருஷனிடத் தில் மயிர்கள் முளைக்கின்றனவோ; அப்படி மேற்படி அக்ஷர பிரம்மத்தினிடமிருந்து இந்த ஜகத் உண்டாகிறது.

8. பிரம்மம் (முதலில்) ஞானத்தோடு (உத்பத்திசெய்ய வேண்டுமென்ற அறிவுடன்) ஸம்பந்தப்பட்டது; (அஃதா வது, ஸ்ருஷ்டி செய்ய வேண்டுமென்ற இச்சை உண்டா யிற்று; அஃதாவது நிர்க்குண பிரம்மம் ஸகுண பிரம்மம் ஆயிற்று); அப்படிப்பட்ட பிரம்மத்தினிடமிருந்து அவ்பாகிருத தத்வம் (அன்னம்) (மாயை, சக்தி) உண்டாயிற்று; அதில்நின் றும் ஹிரண்யகர்ப்பர் (பராணன்) உண்டானு; அவரிடமிருந்து மனஸ் உண்டாயிற்று; அதிலேநின்றும் ஸத்யம் என்று பெய ருள்ள பஞ்சபூதங்கள் உண்டாயின; அதிலே நின்றும் பூராதி லோகங்கள் உண்டாயின; அவைகளில் (மனுஷ்யர்களுக்குத் தகுந்த) கர்மாக்கள் உண்டாயின; அவைகளில் (ஸ்வர்க்காதி கர்ம பலனுகிற) அமிருதம் உண்டாயிற்று.

9. எவர் (எந்த பிரம்மம்) (பொதுவாய்) எல்லாவற்றையும் அறிந்தவரோ, (விசேஷித்து) எல்லாவற்றையும் அறிந்தவரோ, யாருடைய தபஸ் ஞானமயமோ, அவரிடத்திலிருந்து மேற்படி ஹிரண்யகர்ப்பரும், நாமமும், ரூபமும், (நெல், யவம் முதலான) அன்னமும் உண்டாயின.

---

## கண்டம் 2.

1. இது ஸத்யம் (இப்பொழுது சொல்லப்படுவது நிச்சயம்); எந்தக் கர்மாக்கள் வேதங்களால் சொல்லப்படுகின்றனவோ, எவைகளைப் புத்திசாலிகள் அநுஷ்டிக்கிறார்களோ, எவைகள் (ஹோதா, அத்வர்யு, உத்காதா வென்று) மூன்று அதிகாரிகளிடமிருந்து பலவிதமாய் ப்ரவிருத்திக்கின்றனவோ அந்தக் கர்மாக்களைப் பல இச்சையுள்ளவர்களாக நியதமாய்ச் செய்யுங்கள், ஸுகிருதத்தின் பலவிஷயத்தில் (கர்மபலன் அடைவதற்கு) இதுதான் வழி.

2. செவ்வையாக மூட்டப்பட்ட அக்நியில், எப்பொழுது கொழுந்துவிட்டு எறிகிறதோ, அப்பொழுது விதிப்படி, ஆஜ்யம் (நெய்) முதலான ஆஹுதிகளை அதில் போடவேண்டியது (ஹோமம் செய்யவேண்டியது).

3. எவனுடைய அக்நிஹோத்ரம், அமாவாஸ்யை, பௌர்ணமி, சாதுர்மாஸ்யம், சரதாதிகாலம் இவைகளில் செய்யப்படாததாயும், அதிதிவர்ஜிதமாயும், காலத்தில் செய்யப்படாததாயும், விதிப்படி செய்யப்படாததாயும் இருக்கிறதோ அஃது அவனுக்கு ஏழு லோகங்களையும் தடைப்படுத்தும்.

4. அக்நிக்கு ஏழு நாக்குகள் (ஜ்வாலைகள்). (அவைகளாவன): காலீ, கராலீ, மனோஜவா, ஸுலோஹிதா, ஸுதூம்ரவர்ணா, ஸ்புலிங்கிநீ, விச்வரூபி (என்பனவாம்).

5. இவைகள் ஜ்வலித்துக்கொண்டிருக்கும்பொழுது, காலப்படிசெய்யப்படும் ஆஹுதிகள், ஸூர்யகிரணங்களாக, யஜமானனைத் தூக்கிக்கொண்டுபோய் இந்திரனிருக்கிற ஸ்வர்க்கலோகத்தில் சேர்க்கும்.

6. நல்ல வர்ச்சஸ் உள்ள இந்த ஆஹுதிகள் யஜமானனை வா! வா! என்று அழைத்து, ஸூர்யகிரணங்களைக்கொண்டு வஹித்துக்கொள்ளுகின்றன; நல்ல வார்த்தையைச் சொல்லுகின்றன; மரியாதை செய்கின்றன; இந்த ஸ்வர்க்கம் உங்களுடைய புண்யம் என்று சொல்லுகின்றன.

7. யக்ஞரூபமாயிருக்கப்பட்ட இந்த கர்மாக்கள் நாசமுள்ளன; பதினெட்டு அதிகாரிகளுள்ள கர்மா (யாகம்) ச்லாக்யமில்லாதது; (ஞானமார்க்கத்தை யபேக்ஷித்து ச்லாக்யமில்லாதது என்று அர்த்தம்; ருத்விக் முதலானவர்கள் 16; யஜமானன் 1; பத்னி 1; ஆக 18); இதை (இந்தக் கர்மாவை) ச்ரேயஸ் என்று எந்த மூடர்கள் நினைக்கிறார்களோ அவர்கள் ஜனன மரணத்தையடைகிறார்கள்.

8. அவித்யா மத்தியிலிருக்கப்பட்டவர்களும், பண்டிதர்கள் என்று தாங்களே கொண்டாடிக்கொண் டிருக்கப்பட்டவர்களுமான மூடர்கள், (ஜரை முதலியவற்றால்) பீடிக்கப்பட்டவர்களாய்க்கொண்டு, குருடனுக்குக் குருடன் வழிகாட்டுவது போல் அலைகிறார்கள்.

9. அவித்யையில் பல பிரகாரமாக இருப்பவர்களும், தாங்கள் கிருதார்த்தர்களாகிவிட்டோமென்று சொல்லிக் கொள்ளுகிறவர்களும், கர்மாவை விடாதவர்களுமான அவிவேகிகள் வருத்தப்பட்டவர்களாகவும், கர்மபலன் குறைந்துபோனவர்களாகவும் ஆகி ஸ்வர்க்கத்தில்நின்றும் நழுவி விழுந்துவிடுவார்கள்.

10. இஷ்டா பூர்த்தத்தை (ச்ரௌதகர்மாவையும், ஸ்மார்த்த கர்மாவையும்) ச்லாக்யமென்றும், வேறு ஒன்றும் ச்லாக்யமில்லையென்றும் நினைக்கிற முழு மூடர்கள் ஸ்வர்க்கதில் அநுபவித்துப் போட்டு மறுபடியும் ஹீனதரமாயிருக்கிற லோகத்திற்குத் திரும்புவார்கள்.

11. எந்த வித்வான்கள் அரண்யவாஸிகளாகவும், சாந்தர்களாகவும், பிக்ஷாசர்யமுள்ளவர்களாகவு மிருக்கிறார்களோ அவர்

கள் (வானப்ரஸ்த, ஸந்யாஸாச்ரமிகள்) ஸூர்யன் வழியாக, (விரஜர்களாய் புண்ணிய பாப கர்மாக்களில்லாதவர்களாய்), எவ்விடத்தில் அமிருதராயும் அவ்யய ஆத்மாவாயிருக்கிற புருஷனிருக்கிருனே அந்த இடத்திற்கு (பிரம்மலோகத்திற்கு)ப் போகிருர்கள்.

12. பிராம்மணன், கர்மாவினுலே ஸம்பாதிக்கப்பட்ட லோகங்களைப் பரீக்ஷித்துப் பார்த்து, இந்த ஸம்ஸாரத்தில் பதார்த்தம் ஒன்றுமில்லை என்று ஒழித்து, வைராக்யத்தை யடையவேண்டியது. அவன் அதை (பிரம்மத்தை) அறியவேண்டியதற்காக ஸமித்பாணியாக, ச்ரோத்ரியராயும் பிரம்மநிஷ்டனுயுமிருக்கிற குருவைப்போய் அடையவேண்டியது.

13. அப்படி ஸமீபத்தில்போனவனுயும், சாந்த சித்தமுள்ளவனுயும், சமத்தோடுகூடினவனுயுமிருக்கிற இந்தச் சிஷ்யனுக்கு, அந்த குரு, எதனுல் அக்ஷரமாயும் ஸத்யமாயுமிருக்கிற பிரம்மம் அறியப்படுகிறதோ அந்த பிரம்மவித்யையைச் சொல்லவேண்டியது.

---

# இரண்டாவது முண்டகம்

## கண்டம் 1.

1. அது (அந்த பிரம்மவஸ்து) ஸத்யம்; எப்படி மிகவும் ஜ்வாலையுள்ள அக்நியிலிருந்து அக்நிப்பொறிகள் அநேகங்களாகக் கிளம்புகின்றனவோ, அப்படி அக்ஷர பிரம்மத்திலிருந்து நாநாவித ஜீவர்கள் உண்டாகின்றன; அதிலேயே அடங்குகின்றன.

2. அந்தப் புருஷன் திவ்யர், அமூர்த்தர், உள்ளும் புறமும் இருப்பவர், பிறக்காதவர், பிராணனில்லாதவர், மனவில்லாதவர், சுத்தர், அக்ஷரமாகிய அவ்யாகிருதத்திற்கு மேற்பட்டவர்.

3. இவரிடத்தில்நின்றும் பிராணன், மனஸ், எல்லா இந்திரியங்கள், ஆகாசம், வாயு, அக்நி, ஜலம், விச்வத்தைத் தாங்கிக்கொண்டிருக்கிற பூமி, இவைகள் உண்டாயின.

4. இவருக்குத் தலை அக்நி; நேத்திரம் சந்திர ஸூர்யர்கள்; காதுகள் திக்குகள்; வாக் வேதங்கள்; ப்ராணன் வாயு; ஹிருதயம் ஜகத்; பாதங்களிலிருந்து பிருதிவி உண்டாயிற்று (பாதங்கள் பிருதிவி); இவர் ஸர்வபூத அந்தராத்மா.

5. அவரிடத்திலிருந்து அக்நி (உண்டாயிற்று); அதற்கு ஸமித் ஸூர்யன்; (அதனிடமிருந்து உண்டான) சந்திரனிடத்திலிருந்து மேகம்; அதனிடமிருந்து பூமியில் ஓஷதிகள்; அவைகளிடமிருந்து புருஷரேதஸ்: அது ஸ்திரீயினிடத்தில் ஸம்பந்தப்பட்டு அநேக பிரஜைகள்; இப்படிப் புருஷனிடத்திலிருந்து (ஆத்மாவினிடத்திலிருந்து) உண்டாகிறார்கள்.

6. அவரிடத்திலிருந்து ருக்வேதம், ஸாமவேதம், யஜுர் வேதம், தீக்ஷாவிதிகள், யக்ஞங்கள் (அக்நிஹோத்ராதிகள்), க்ரதுக்கள் (யாகங்கள்), தக்ஷிணைகள், காலங்கள், யஜமானன், ஸூர்ய சந்திர லோகங்கள் இவைகள் உண்டாயின.

7. அவரிடத்திலிருந்து தேவர்கள், ஸாத்யர்கள் என்கிற தேவர்கள், மனுஷ்யர்கள், மிருகங்கள், பக்ஷிகள், ப்ராண-அபான வாயுக்கள், வ்ரீஹி-யவங்கள் (தான்யங்கள்), தபஸ், சிரத்தை, ஸத்யம், பிரம்மசரியம், விதிகள் இவைகளும் உண்டாயின.

8. அவரிடத்திலிருந்து ஏழு பிராணன்கள் (இந்திரியங்கள், காது 2, கண் 2, மூக்குத்துவாரம், 2, வாய் 1, ஆக 7); அவைகளின் ஏழு அர்ச்சிஸ்கள் (பிரகாசங்கள்); ஏழு ஸமித்துக்கள் (விஷயங்கள்); ஏழு ஹோமங்கள் (மேற்படி விஷய ஞானங்கள்); ஏழு லோகங்கள் (இடங்கள்) உண்டாயின. அவைகள் ஹிருதயத்தில் எவ்வேழாக வைக்கப்பட்டன.

9. அவரிடத்திலிருந்து ஸமுத்ரங்கள், பர்வதங்கள், பலவித நதிகள், எல்லா ஒஷதிகள், ரஸம் (ருசி) இவைகளும் உண்டாயின; ரஸத்தால் பூதங்களோடு அந்தராத்மா இருக்கிறார் (அவைகளால் தெரிகிறார்).

10. புருஷனே (பரமாத்மாவே) இந்த ஜகத், கர்மா, தபஸ்; பிரம்மம் என்றது பரமாமிருதம் என்றது; எல்லாம் அதுவே; அப்படிப்பட்ட ஆத்மா (நம்முடைய) ஹிருதயத்தில் இருப்பதாக யார் அறிகிறானோ அவன், இவ்விடத்திலேயே, அவித்யா முடிச்சை அவிழ்த்துவிடுகிறான்.

---

கண்டம் 2.

1. (அந்த பிரம்மமானது) ஜ்யோதிஸ்; ஹிருதயத்தில் இருப்பது; குஹாசரன் என்று பெயருடையது; மஹத்தான பதம்; அதில் இந்த ஜகத் வைக்கப்பட்டிருக்கிறது; சலிக்கின்றவை (பக்ஷிகள்) அதுவே; பிராணிகள் அதுவே; கண் இமைக்கொட்டுள்ளவைகளும் அதுவே; மூர்த்தமுள்ளதும் அதுவே; மூர்த்தம் இல்லாததும் அதுவே; ச்லாக்யமுள்ளது; பிரஜைகளுடைய விக்ஞானத்தைக்காட்டிலும் பரமானது; மிகவும் உயர்ந்த வஸ்து; இப்படிப்பட்ட வஸ்துவை அறியுங்கள்.

2. எது காந்தியுள்ளதோ, அணுவைக்காட்டிலும் அணுவோ, எதில் இந்த லோகங்களும் ஜனங்களும் வைக்கப்பட்டிருக்கின்றவோ, அஃது அக்ஷரமாயிருக்கிற பிரம்மம்; ப்ராணன், வாக், மனஸ், ஸத்யம், அமிருதம் (எல்லாம் அதுவே); அதை (மனஸால்) அடிக்கவேண்டும்(அறியவேண்டும்); அறி.

3. உபநிஷத்திலே நின்றுமுண்டான தநுவைப் பிடித்து, மஹாஸ்திரமும், உபாஸனையால் தீட்டப்பட்டதுமான பாணத்தை அதில் வைத்து, அந்த பிரம்மத்திலே பாவனையுள்ள அறிவினாலே இழுத்து அந்த அக்ஷர வஸ்துவாகிய லக்ஷ்யத்தைப் பேதி.

4. மேற்படி தநுஸ் ப்ரணவம்; பாணம் ஆத்மா (ஜீவன்); லக்ஷ்யம் பிரம்மம்; தைரியமாக அடிக்க வேண்டியது; பாணம் போல் ஆத்மா லக்ஷ்யமயமாய்ப் போகும்.

5. எதனிடத்தில் ஸ்வர்க்கம், பிருதிவி, அந்தரிக்ஷம், எல்லா பிராணன்களுடன் மனஸ், இவைகள் கோக்கப்பட்டிருக்கின்றனவோ, அந்த ஏகமாயிருக்கிற ஆத்மாவை அறியுங்கள்; மற்ற வார்த்தைகளைத் தள்ளுங்கள். இஃது அமிருதத்தை யடைவதற்குப் பாலம்.

6. எதனிடத்தில் நாடிகள், சக்கர ஆரங்கள் போலச் சேர்க்கப்பட்டிருக்கின்றனவோ, அது பலப் பிரகாரமாக உண்டாகி, உள்ளே ஸஞ்சரிக்கிறது; ஆத்மாவை ஓம் என்று த்யாநம் செய்; தமஸைத் தாண்டுவதில் உங்களுக்கு மங்களகரம் இருக்கட்டும்.

7. எவர் ஸர்வக்ஞரோ, ஸர்வவித்தோ, எவருக்குப் பூமியில் இப்படிப்பட்ட மஹிமையிருக்கிறதோ, அவர் திவ்யமான பிரம்ம புரமாகிய மனவிலே, தஹராகாசத்திலே, ப்ரதிஷ்டையாயிருக்கிறார்; மனோமயர்; ப்ராணனையும் சரீரத்தையும் நடத்துபவர்; அன்னத்தி லிருப்பவர்; புத்தியை நிதானித்து அதை அறிவதனால் விவேகிகள் ஆநந்த ரூபமாய் விளங்குவதை எங்கும் பார்க்கிறார்கள்.

8. அந்தப் பராவரவஸ்து(கார்ய காரணாத்மா)பார்க்கப்பட்டவுடன் ஹிருதய முடிச்சு (காமம்) பிளந்துபோகிறது; ஸம்சயங்கள் நிவிருத்தியாகிவிடுகின்றன; கர்மாக்கள் நசித்துப்போகின்றன.

9. ஜ்யோதிர்மயமான கூட்டிலே (ஹிருதயத்திலே) இருப்பவரும், அவித்யாதி தோஷரஹிதராயும், நிரவயவராயும், சுத்தராயும், ஜ்யோதிஸ்களுக்கெல்லாம் ஜ்யோதிஸாயும் இருக்கிற பிரம்மத்தை எவர்கள் அறிகிறார்களோ அவர்கள் ஆத்மவித்துக்கள்.

10. அதனிடத்தில் ஸூர்யன் பிரகாசிக்கமாட்டாது; அப்படியே சந்திர, நக்ஷத்திரங்கள்; அப்படியே மின்னல் கொடியும்; அக்நி எந்த மூலே; இவைகள் அதை யநுஸரித்து விளங்குகின்றன; அதனாலே இந்த ஜகத் விளங்குகிறது.

11. இந்த ஜகத்தும் பிரம்மம்; அமிருதம் பிரம்மம்; முன்னேயும் பிரம்மம்; பின்னேயும் பிரம்மம்; வலது பக்கமும் பிரம்மம்; இடது பக்கமும் பிரம்மம்; கீழும் பிரம்மம்; மேலும் பிரம்மம்; இந்த விச்வமும் பிரம்மம்; அது எங்கும் பரவியிருக்கிறது, வரிஷ்டமாயிருக்கிறது.

---

## மூன்றாவது முண்டகம்

---

### கண்டம் 1.

1. இரண்டு பக்ஷிகள் (ஜீவாத்மா, பரமாத்மா) எப்பொழுதும் விட்டுப் பிரியாதவை; ஸமான க்யாதியுள்ளவை; ஒரே விருக்ஷத்தை (சரீரத்தை) அடைந்திருக்கின்றன. அவைகளில் ஒன்று (ஜீவன்), (புண்ய பாப) பலனை ருசியோடு புஜிக்கிறது; மற்றொன்று அப்படி புஜிக்காமல் தனிப்பட்டு விளங்குகிறது.

2. ஸமான விருக்ஷத்தில் முழுகி ஜீவன் மாயையால் மோஹத்தை அடைந்தவனாய்க்கொண்டு துக்கப்படுகிறான்; எப்பொழுது இவன் மற்றொரு ஈசனை (பரமாத்மாவை)ப் பார்க்கிறானோ, அப்பொழுது துக்கமற்றுப் போனவனாக பரமாத்மாவின் மஹிமையை யடைகிறான்.

3. எப்பொழுது பார்க்கிறவன் (ஸாதகன், யோகீ) ஜ்யோதிர்மயமாயும், கர்த்தாவாயும், ஈசனாயும், பிரம்மயோனியாயுமிருக்கிற புருஷனை (பரமாத்மாவை)ப் பார்க்கிறானோ, அப்பொழுது அந்த வித்வான் புண்ணியபாபங்களை உதறிவிட்டு, நிர்லேபனாய், பரம ஸாம்யத்தை யடைகிறான்.

4. எவர் பூதமயங்களாய் விளங்குகிறாரோ, அவர் ப்ராணன். அவரை அறிந்தவன் அதிவாதி (அவரைத் தவிர மற்றொன்றையும் பேசமாட்டான்) ஆகமாட்டான்; ஆத்மாவினிடத்திலேயே விளையாட்டையுடையவன்; ஆத்மாவினிடத்திலேயே விச்வாஸத்தையுடையவன்; (ஆத்மஸம்பந்தமான) தொழிலையே செய்பவன்; பிரம்மவித்துகளுக்குள் ச்லாக்யன்.

5. இந்த ஆத்மா நித்யமுள்ள ஸத்யத்தினாலேயும், நித்யமுள்ள தடவினாலேயும் (இந்திரிய நிக்ரஹத்தால்) நித்யமுள்ள நல்லறிவினாலேயும், நித்யமுள்ள பிரஹ்மசரியத்தினாலேயும் அடையத்தக்கவர்; எவரை, பாபமற்ற யதிகள் பார்க்கிறார்களோ, அந்த ஆத்மா, சரீரமத்தியில், ஜ்யோதிர்மயராயும், சுத்தராயுமிருப்பவர்.

6. ஜயிப்பவன் ஸத்யவானே யல்லாது பொய்யன் அல்லன்; ஸத்யத்தின் பரமநிதாநமாகிய அந்த (மோக்ஷத்திற்கு) ஆசை யற்ற ரிஷிகள் எந்த மார்க்கத்தால் போகிறார்களோ, அந்த தேவ யாந மார்க்கமானது ஸத்யத்தால் விஸ்தாரம் செய்யப்படுகிறது.

7. (அந்த பிரம்மம்) பெரிது; ஸ்வயம் பிரகாசமுள்ளது; எண்ணமுடியாத ரூபமுள்ளது; ஸூக்ஷ்மத்தைக்காட்டிலும் ஸூக்ஷ்மம்; (அவித்வான்களுக்கு) தூரத்தில் இருப்பது; (வித்வான் களுக்கு) ஸமீபத்திலிருப்பது; பார்ப்பவர்களிடத்தில் ஹ்ருத யத்தில் வைக்கப்பட்டிருக்கிறது.

8. கண்ணாலாவது, வாக்காலாவது, மற்ற இந்திரியங்க ளாலாவது, தபஸினாலாவது, கர்மாவினாலாவது கிரஹிக்கப்படத் தக்கதல்ல; சுத்த அந்தக்கரணமுள்ளவனாக த்யானிப்பவன் நிரவயவமாயிருக்கிற அதை (பிரம்மத்தை)த் தெளிவான ஞானத் தைக் கொண்டு பார்க்கிறான்.

9. இந்த ஆத்மா அணு; எதில் ப்ராணன் ஐந்துவிதமாக ப்ரவேசிக்கிறதோ அந்தச் சரீரத்தில் சித்தத்தினால் அறியத்தக் கது; (எப்படிப்பட்ட சித்தம் என்றால்) பிரஜைகளின் எந்த எல்லா சித்தமும், ப்ராணன்களுடன், ஒன்றாய்ச் சேருகிறதோ, எந்த விசுத்தமாயிருக்கிற சித்தத்தில் ஆத்மா விளங்குகிறாரோ (அந்த சித்தத்தால் அறியப்படத் தகுந்தது).

10. விசுத்த அந்தக்கரணத்தையுடையவன் எந்த எந்த லோகத்தை மனஸால் ஸங்கல்பிக்கிறானோ அந்த அந்த லோகத் தையும், காமங்களையும் ஜயிக்கிறான் (அடைகிறான்). ஆதலால் பூதிகாமன் (ஐச்வர்யத்தை இச்சிப்பவன்) ஆத்மக்ஞனைப் பூஜிக்க வேண்டியது.

---

கண்டம் 2.

1. அவர், இந்த பரபிரம்மம் (ஸர்வகாமங்களுக்கும்) இருப்பிடம்; அவரிடத்தில் விச்வம் வைக்கப்பட்டிருக்கிறது; சுப்ரமாய் விளங்குகிறார்; அவரையும், அவரையறிந்த புருஷனை யும் இச்சையற்ற எவர்கள் உபாஸிக்கிறார்களோ அவர்கள் சுக்ரத் தை (நர பீஜத்தை)த் தாண்டிவிடுவார்கள் (பிறப்பில்லை).

2. எவன் காமங்களை நினைத்துக்கொண்டு எந்த எந்த விஷயத்தை இச்சிக்கிறானோ அவன் அந்த அந்த விஷயத்தில் காமங்களை யடைகிறான். எல்லாக் காமத்தையும் அடைந்தவனும், ஆத்மாவை அறிந்தவனுமாயிருக்கப்பட்டவனுக்கு இவ்விடத்திலேயே காமங்கள் நசித்துப்போகின்றன.

3. இந்த ஆத்மா வேத சாஸ்திர படிப்பினாலாவது, ஞாபக சக்தியினாலாவது, அதிகமாய்க் கேட்பதனாலாவது, அடையத்தக்கவர் அல்லர்; இந்த வித்வான் எதை அடையவேண்டுமென்று இச்சிக்கிறானோ அந்த ஆத்மக்ஞானத்தினாலேயே அடையத்தக்கவர்; அந்த ஆத்மா இவனுக்குத் தன்னுடைய ஆத்மதத்வ ரூபமாயிருக்கிற தேஹத்தைப் பிரகாசப்படுத்திவைக்கிறார்.

4. இந்த ஆத்மா பலஹீனனாலாவது (ஆத்மக்ஞானத்தில் வீர்யமில்லாதவனாலாவது,) பிரமாதத்தினால்ாவது (லோக இச்சைகளைவிட்டு விட்டோமென்கிற மலைப்பினாலாவது), ஸந்யாஸமில்லாத ஞானத்தினாலாவது அறியப்படமாட்டார். எந்த வித்வான் இவைகளால் (பலம், அப்ரமத்தம், ஸந்யாஸ ஸஹித ஞானம்) பிரயத்னம் செய்கிறானோ அவனுடைய பிரம்மஸ்தானத்தில் ஹ்ருதயத்தில்) பிரவேசிக்கிறார் (தர்சனம் கொடுக்கிறார்).

5. ஞாந திருப்தியுள்ளவர்களும், ஆத்மமயமாய்த் தங்களை ஆக்கினவர்களும், இச்சையற்றவர்களும், இந்திரியங்களை யடக்கினவர்களும், தீரர்களும், ஆத்மாவுடன் கலந்தவர்களுமான ரிஷிகள், ஆத்மாவைச் செவ்வையாக அறிந்து, எங்குமுள்ள வஸ்துவை எங்கும் அடைந்து, எல்லாவற்றிலும் பிரவேசிக்கிறார்கள் (பிரம்மமாகவே ஆய்விடுகிறார்கள்).

6. வேதாந்த விக்ஞாநத்தால் உண்டான அர்த்தத்தை (ஆத்மாவை) நிச்சயமாய் அறிந்தவர்களும், ஸந்யாஸத்துடன் கூடினவர்களும், சுத்த ஞாநமுள்ளவர்களுமான எல்லோரும் அந்தக் காலத்தில் பிரம்மத்தினிடம் ஐக்யமாகி விடுபட்டுப்போகிறார்கள்.

7. (மோக்ஷகாலத்தில்) பதினைந்துகலைகளும் அதன் அதன் இருப்பிடத்தை (காரணத்தை) அடைகின்றன; எல்லா இந்திரியங்

களும் அதன் அதன் தேவதையைப் போய்ச்செல்லுகின்றன; கர்மாக்கள், விஞ்ஞாநமயமான ஆத்மா (ஜீவன்) எல்லாம் பரபிரம்மத்தினிடத்தில் ஒன்றாய்ச்சேர்ந்து போகின்றன.

8. எப்படி ஓடுகிற நதிகள் நாமரூபங்களைவிட்டு ஸமுத்ரத்தில் அப்பிரகாசத்தை யடைகின்றனவோ அப்படி வித்வான் (மோக்ஷகாலத்தில்) நாமரூபங்களில் நின்றும் விடுபட்டுப்பரத்தைக் காட்டிலும் (அவ்யக்த தத்வத்தைக்காட்டிலும்) பரமாயிருக்கிற திவ்ய புருஷனை அடைகிறான்.

9. எவன் அந்த பிரம்மத்தையடைகிறானோ அவன் பிரம்மமாகவே ஆகிறான். அவன் குடும்பத்தில் அப்பிரம்மவித்து இருக்கமாட்டான். சோகத்தைத் தாண்டுகிறான். பாபத்தைத் தாண்டுகிறான். ஹிருதய முடிச்சிலிருந்து (ஆசையிலிருந்து) விமுக்தனாகிறான்; அமிருதனாகிறான்.

10. இந்த விஷயம் வேதத்தினாலே சொல்லப்பட்டிருக்கிறது. கர்மாநுஷ்டான முள்ளவர்களுக்கும், வேதாத்யயநம் செய்தவர்களுக்கும், பிரம்மநிஷ்டர்களுக்கும், சிரத்தையுள்ளவர்களுக்கும், ஏகரிஷி என்ற அக்நி ஹோமம் செய்கிறவர்களுமாயிருக்கப்பட்டவர்களுக்கும், விதிப்படி சிரோவிரதம் (அக்நியைத் தலையில் போட்டுக்கொள்ளுவது, விபூதி பூசிக்கொள்ளுவது முதலானவை) செய்தவர்களுக்கும் பிரம்மவித்யையைச் சொல்ல வேண்டியது.

11. அதுதான் (அந்த பிரம்மம்தான்) ஸத்யம்; இப்படி அங்கிரஸ் என்ற ரிஷி முன்னாலே சொன்னார்; விரதத்தை அநுஷ்டிக்காதவன் இதை அத்யயநம் செய்யக்கூடாது. பிரம்மரிஷிகளுக்கு நமஸ்காரம்; நமஸ்காரம்.

ஓம்: சாந்தி: சாந்தி: சாந்தி:

---

முண்டகோபநிஷத் முற்றிற்று.

---

ஓம்

## அதர்வண வேதீய:

# மாண்டூக்யோபநிஷத்

---

### சாந்தி:

(முன் ந்ருஸிம்ஹதாபநீ உபநிஷத்தின் சாந்தி, அதர்வண வேத உபநிஷத் ஆனதால், இதற்குச் சாந்தியாகும்.)

1. இது எல்லாம் (காணப்படுகிற பதார்த்தங்கள் எல்லாம்) 'ஓம்' என்ற எழுத்து. (பிரணவநாதத்தில் அடக்கம்; ஓம் என்ற நாதம் பிரம்மசரீரம்; அதற்குள்ளிருக்கிற ஜ்யோதிஸ் பிரம்மம்; 'ஓம்' என்ற அக்ஷரத்திலிருந்து உலகத்தில் எல்லாச்சப்தங்களும் உண்டாயின; அந்தச் சப்தங்களால் எல்லாப் பதார்த்தங்களும் பெயரிடப்பட்டிருக்கின்றன; 'ஓம்' ஆகிற சப்தங்கள் வாசகங்கள்; அந்த வாசகங்களுக்கும் வாச்யங்களுக்கும் அபேதம்; ஆதலால், எல்லாம் 'ஓம்' என்று சொல்லப்பட்டது). அதனுடைய அர்த்தம் தெரிந்து கொள்ளவேண்டும். உண்டானது, இருப்பது, உண்டாகப்போவது எல்லாம் ஓம்காரம்; மூன்றுகாலத்தையும் தாண்டியிருப்பது எது எது உண்டோ (அவ்யக்தம், பிரகிருதி) அதுவும் ஓம்காரந்தான்.

2. ஓம்காரம் என்று சொல்லப்பட்ட இவை எல்லாம் பிரம்மம்; இந்த ஆத்மாவும் (ஜீவனும்) பிரம்மம்; அப்படிப்பட்ட இந்த ஆத்மா நான்கு பங்குள்ளவர்.

3. ஜாக்ரத் தசையிலிருக்கப்பவர்; தன்னுத்மாவுக்கு வேறாக வெளியிலிருக்கிற விஷயங்களில் பிரக்ஞையுடையவர்; ஏழு அங்கமுள்ளவர் (i. ஸ்வர்க்கம்-தலை; ii. ஸூர்யன்-நேத்திரம்; iii. வாயு-ப்ராணன்; iv. ஆகாசம்-உடல்; v. அன்னம்-ஜலம்,

மூத்ரஸ்தானம்; vi. ப்ருதிவி-பாதம்; vii. ஆஹவனீயாக்நி-முகம்); பத்தொன்பது முகமுள்ளவர் (இந்திரியங்கள் பத்து, ப்ராணன்கள் ஐந்து; அந்தக்கரணங்கள் நான்கு, ஆகப் பத்தொன்பது) சப்தாதி ஸ்தூலவிஷயங்களைப் புஜிப்பவர்; வைச்வாநரன் என்று பெயருள்ளவர் (எல்லா நரர்களையும் நடத்துபவர்); இவர் தான் முதல்பங்கு;

4. ஸ்வப்ன அவஸ்தையிலுள்ளவர்; உள் அறிவுள்ளவர் (வெளியறிவற்றவர்); ஏழு அங்கங்களுள்ளவர்; பத்தொன்பது முகங்களுள்ளவர்; ஸூக்ஷ்மத்தைப் பார்ப்பவர்; தைஜஸர் (தேஜஸ் ஸம்பந்தமுள்ளவர்) என்று பெயருள்ளவர்; இவர்தான் இரண்டாவது பங்கு;

5. எந்தக்காலத்தில் ஸுப்தனாக ஒரு காமத்தையும் இச்சிப்பதில்லையோ, ஒரு ஸ்வப்நத்தையும் பார்ப்பதில்லையோ அது தான் ஸுஷுப்தி என்ற தசை; இந்த ஸுஷுப்தி அவஸ்தையுள்ளவர்; ஒன்றாய்ச்சேர்ந்துபோனவர். பிரக்ஞானச்சேர்க்கையாகவே இருக்கப்பட்டவர்; ஆனந்தமயர்; ஆனந்தத்தைப் புஜிப்பவர் (துக்கமில்லாதவர்); சித்தத்தை முகமாய்க்கொண்டவர் (அஃதாவது சித்தத்தின் வழியாய் ஸ்வப்நம், ஜாக்ரத் இவ்வவஸ்தைகளுக்கு வந்து போக போக்யங்களை அநுப்பவிப்பவர்); ப்ராக்ஞரென்று (ப்ரக்ஞையாய் மாத்திரம் கலப்பின்றி நிற்பவர்) பெயருள்ளவர்; இவர்தான் மூன்றாவது பங்கு;

6. இவர்தான் ஸர்வேச்வரர்; ஸர்வக்ஞர்; அந்தர்யாமி; எல்லாப் பூதங்களுடைய உத்பத்தி நாசம் இவை விஷயத்தில் எல்லாவற்றிற்கும் காரணபூதர்.

7. தைஜஸனுமல்ல, விச்வனுமல்ல, இருவருக்கும் மத்தியிலுள்ள அவஸ்தையுள்ளவனுமல்ல, ப்ராக்ஞனுமல்ல, ப்ரக்ஞனுமல்ல, அப்ரக்ஞனுமல்ல, (ஆனால் எப்படிபட்டவன் என்றால்) காணப்படாதவன், வ்யவஹரிக்கப்படக்கூடாதவன், (கர்மேந்திரியங்களுக்கு) எட்டாதவன், அடையாளமில்லாதவன், நினைக்கப்படக்

கூடாதவன், குறிப்பிட்டுச்சொல்லப்படக்கூடாதவன், ஒரே ஆத்மா வென்ற நம்பிக்கை ஸாரத்தையுடையவன், உலக வ்யவ ஹாரமற்றவன், சாந்தன், மங்களகரன்; ஒன்றுயிருப்பவன், இவர் தான் நான்காவது பங்கு. அந்த ஆத்மாதான் அறியப்படத்தகுந் தவன்.

8. அப்படிப்பட்ட ஆத்மாவானவர் அக்ஷரத்தினுல் சொல் லப்பட்டவர்; அந்த அக்ஷரம் ஓம் காரம்; அது மாத்திரைகள் உள்ளது; மாத்திரைகளாவது பாதங்கள் (பங்குகள்); (அவைகளா வன) 'அ'கார, 'உ'கார, 'ம'காரங்கள்.

9. ஜாக்ரதஸ்தானரான வைச்வாநரர்தான் 'அ'காரம்; முதல் மாத்திரையுள்ளது (முதல் பாகம்), வ்யாபித்துக்கொண் டிருப்பதால் ('அ'காரம் எல்லா வாக்கையும், விச்வன் எல்லா ஜகத் தையும் வ்யாபித்துக்கொண்டிருப்பதால்); அல்லது, முதன்மையால் ('அ'காரம் எல்லா அக்ஷரத்திற்கும், விச்வன் எல்லா ஸ்ருஷ்டிக் கும் முதன்மையால்). இவ்விதமாய் எவன் அறிகிறுனே அவன் எல்லா இச்சைகளையும் அடைகிறுன்; (மஹான்களுக்குள்) முதல்வனுகிறுன்.

10. ஸ்வப்நஸ்தானரான தைஜஸர்தான் 'உ'காரம்; இரண் டாவது மாத்திரையுள்ளது (இரண்டாவது பாகம்); உத்கர்ஷ முள்ளதாயிருப்பதால் ('அ'காரத்தைத்தைக்காட்டிலும் 'உ' காரமும், விச்வனைக்காட்டிலும் தைஜஸனும் மேலானது); அல்லது இரட்டையுள்ளதாயிருப்பதால் ('உ'காரம், 'அ'காரத்திற்கும் 'ம'காரத்திற்கும் மத்தியிலும், தைஜஸன் விச்வனுக்கும் ப்ராக்ஞ னுக்கும் மத்தியிலுமாக இரண்டை யுடையதாயிருப்பதால்). இவ் விதமாய் எவன் அறிகிறுனே அவன் ஞானக் கூட்டத்தை விருத்தி செய்கிறுன் (அதிக ஞானத்தை யடைகிறுன்); ஸமானன் ஆகிறுன் (ஒருவனுக்கும் சத்ருவில்லாதவனுக ஆகிறுன்); இவன் குலத்தில் அப்பிரம்மவித்து இருக்கமாட்டான்.

11. ஸுஷுப்த ஸ்தானரான ப்ராக்ஞன்தான் 'ம'காரம்; மூன்றுவது மாத்திரையுள்ளது (மூன்றுவது பாகம்;) அளப்ப தால் (முதலில் இழுத்து, பிறகு விடுவதால்), (ப்ரணவத்தைப் பல

தடவை உச்சரிக்கும்பொழுது 'அ'காரங்கள் 'ம'காரத்தில் முடிவை அடைவது போலும், பிறகு அதில் நின்றும் புறப்படுவதுபோலும், தோற்றப்படுகிறது; அப்படியே, விச்வனும் தைஜஸனும் ப்ராக்ஞனிடத்தில் அடங்கி மறுபடியும் வெளிப்படுகிறார்கள்); அல்லது, லயப்படுத்திக்கொள்வதால் ('அ' 'உ' இவை 'ம' காரத்தில் போய் அடங்கி ஒன்றாய்ப்போகின்றன; அப்படியே விச்வனும் தைஜஸனும் ப்ராக்ஞனிடத்தில் போய் அடங்கி ஒன்றாய் போகிறார்கள்). இவ்விதமாய் எவன் அறிகிறானோ அவன் இந்த ஜகத்தை முழுதும் அளக்கிறான் (அறிகிறான். ஜகத்காரண ஆத்மாவாக ஆகிறான்).

12. நான்காவது பங்காகிய ஆத்மா மாத்திரையில்லாதவன் (அளவுக்கெட்டாதவன்) வ்யவஹரிக்கப்படத்தகாதவன், ப்ரபஞ்ச ஒழிவிடம், மங்களகரன், ஒன்றுபட்டவன், இப்படிப்பட்ட 'ஓம்' கார ஸ்வரூபன். எவன் இப்படி அறிகிறானோ அவன் ஆத்மாவினிடத்திலேயே ஆத்மாவாகக் கலந்து போய்விடுகிறான்.

ஓம்: சாந்தி: சாந்தி: சாந்தி:

---

மாண்டூக்யோபநிஷத் முற்றிற்று

---

த்வாதசோபநிஷத் முற்றிற்று

---

PRINTED AT THE MADRAS LAW JOURNAL PRESS, MYLAPORE.